தொல்காப்பியம்-சொல்லதிகாரம் உரைக்கொத்து

# இடையியல்
# உரியியல்
# எச்சவியல்



உரையாசிரியர்கள் உரை

மற்றும்

பண்டிதமணி தி. வே. கோபாலய்யர் விளக்க உரையுடன்



தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர்

# தொல்காப்பியம் சொல்லதிகாரம் உரைக்கொத்து

## இடையியல், உரியியல், எச்சவியல்





பதிப்பாசிரியர்

பண்டிதமணி தி.வே. கோபாலய்யர்

(விளக்கவுரையுடன்)






தமிழ்ப் பல்கலைக்கழகம்

தஞ்சாவூர் - 613 010

ISBN : 978-81-7090-444-1

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடு : 401

திருவள்ளுவராண்டு 2033, கார்த்திகை-நவம்பர் 2013

| | | |
|---|---|---|
| நூல் | : | தொல்காப்பியம் சொல்லதிகாரம் உரைக்கொத்து இடையியல், உரியியல், எச்சவியல் |
| பதிப்பாசிரியர் | : | தி.வே. கோபாலய்யர் |
| மொழி | : | தமிழ் |
| பொருள் | : | இலக்கணம் |
| பதிப்பு | : | முதற்பதிப்பு - நவம்பர் 2013 |
| பக்கம் | : | 8 + 633 |
| தாள் | : | டிஎன்பிஎல் மேப்லித்தோ 16 கிலோ |
| அளவு | : | டெம்மி 1/8 |
| நூற்கட்டுமானம் | : | சாதாக்கட்டுமானம் |
| விலை | : | உரூ. 450.00 |
| படிகள் | : | 1000 |
| கணினியச்சு | : | கபிலர் கணினியகம், தஞ்சாவூர். |
| அச்சு | : | கே.ஆர். பிரிண்டர்ஸ், தஞ்சாவூர். |



முனைவர் ம. திருமலை
துணைவேந்தர்

தமிழ்ப் பல்கலைக்கழகம்
தஞ்சாவூர் - 613 010

## அணிந்துரை

தமிழ்மொழியின் தனிப்பெருஞ் சிறப்பு வாய்ந்த இலக்கணக் கருவூலமாய் இலங்குவது ஒல்காப் பெரும் புகழ்த் தொல்காப்பியமாகும். பழந்தமிழ்ச் சங்க இலக்கியங் களுக்கும் சான்றாகும் சால்புடைய தொல்காப்பியத்தின் வழி நூல்களாகவே பின்னை இலக்கண நூல்கள் பெரும்பாலும் தோன்றியுள்ளன. ஏனைய மொழிகளுக்கும் பொதுவான எழுத்திலக்கணம் சொல்லிலக்கணங்களோடும் தமிழ் மொழிக்கே சிறப்பாய் அமைந்த பொருளிலக்கணங்களை யும் விளக்கும் தொல்காப்பியம் எழுத்ததிகாரம், சொல்லதி காரம், பொருளதிகாரம் எனும் மூன்று அதிகாரங்களையும் ஒவ்வோர் அதிகாரத்திற்கும் ஒன்பது இயல்களென இருபத் தேழு இயல்களையும் கொண்டிலங்குகிறது.

தொல்காப்பியத்தின் சிறப்புக்களுக்கு மேலும் சிறப் புக்கள் சேர்ப்பன அதற்கு அமைந்த உரைகள். இவற்றுள் இன் றைய நிலையில் நூல் முழுமைக்கும் உள்ள முதன்மையுரை யாகத் திகழ்வது உரையாசிரியர் எனும் தனிச்சிறப்பிற்குரிய இளம்பூரணரின் உரையே. அவருரைக்குப் பின் சொல்லதி காரத்திற்கு மட்டும் அமைந்த சிறப்புரை சேனாவரையருரை. இளம்பூரணருரை போன்றே முழுமையுற அமைந்தாலும் காலவெள்ளத்தில் பொருளதிகார மெய்ப்பாட்டியல், உவம வியல், மரபியல் ஆகிய மூன்றொழிந்து ஏனைய பகுதி களுக்கு உள்ளது நச்சினார்க்கினியருரை சேனாவரையருரை போலச் சொல்லதிகாரத்திற்கே அமைந்தவை தெய்வச்சிலை யாருரையும், கல்லாடனாருரையும். இவற்றுள், கல்லாட

னாருரை சொல்லதிகாரத்தில் முதலியலாகிய கிளவியாக்கம் முதல் ஏழாமியலாகிய இடையியலின் பத்தாம் நூற்பா முடியவே கிடைத்துள்ளது; அதன் பின்னுரை கிடைக்கவில்லை. இவை தவிரப் பேராசிரியரெனும் பெருமைக்குரிய உரையாசிரியரின் உரை பொருளதிகாரத்தின் பின்னான்கு இயல்களுக்கு மட்டும் உள்ளது; முன்னைய பகுதிகள் கிடைத்தில.

இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார் ஆகிய பழைய உரையாசிரியர்கள் ஐவரோடு பெயர் புலப்படாத ஒருவரது பழையவுரையும் அமைந்த சிறப்புடைய சொல்லதிகாரத்திற்கு இருபதாம் நூற்றாண்டில் பி.சா. சுப்பிரமணிய சாத்திரியார் உரைக்குறிப்புகளும் பாவலரேறு ச. பாலசுந்தரனாரின் உரையும் உள்ளன.

சொல்லதிகாரத்தின் பழைய, புதிய உரைகளையும் உரைக்குறிப்புகளையும் தொகுத்து, தொல்காப்பியம் - சொல்லதிகாரம் உரைக்கொத்து எனும் தலைப்பில் நான்கு தொகுதி நூல்களைப் பெரும்புலவர் பண்டிதமணி தி.வே. கோபாலய்யர் அவர்கள் உருவாக்கியுள்ளார்.

தஞ்சாவூர், சரசுவதி மகால் நூலக ஏட்டுச் சுவடிகளோடு முந்தைய பதிப்புகளையும் ஆராய்ந்து ஆசிரியர் இந்நூற்றொகுதிகளை அமைத்துள்ளார். இவற்றுள் முதல் இயலாகிய கிளவியாக்கப் பகுதி மட்டும் ஒரு பெருந்தொகுதியாய் முன்னமே தஞ்சை, சரசுவதி மகால் வெளியீடாக வந்துள்ளது. எஞ்சிய எட்டு இயல்களின் உரைக்கொத்து நூல்கள் மூன்று பெருந்தொகுதிகளாய்த் தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடுகளாக இப்பொழுது வருகின்றன.

சரசுவதி மகால் வெளியிட்ட முதல் தொகுதியாகிய கிளவியாக்க உரைக்கொத்து நூலில் தொல்காப்பியர், சொல்லதிகார உரையாசிரியர்களாகிய இளம்பூரணர், சேனாவரையர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார்

மற்றும் பழையவுரையாசிரியர் ஒருவர் ஆகியோர் பற்றிய செய்திகளைப் பதிப்பாசிரியர் வரைந்துள்ளமையால் அதனைத் தொடர்ந்து வரும் இத் தொகுதிகளில் அவை இடம்பெறவில்லை.

கிளவியாக்க உரைக்கொத்து நூலில் அவ்வியலின் ஒவ்வொரு நூற்பாவிற்கும் இளம்பூரணர் உரை, இளம்பூரணர் உரைவிளக்கம், நச்சினார்க்கினியர் உரை, நச்சினார்க்கினியர் உரைவிளக்கம் எனத் தொடர்ந்து ஒவ்வொரு உரையாசிரியரின் உரையையும் உரை விளக்கத்தையும் கொடுத்து, அவற்றின் முடிவில் பதிப்பாசிரியர் குறிப்பு என்று அந்நூற்பா மற்றும் அவ்வுரைகள் பற்றிய தம் கருத்துக்களையும் வரைந்துள்ளார் பதிப்பாசிரியர். உரைக்கொத்து நூலின் முடிவில் ஒத்த நூற்பாக்கள் எனும் தலைப்பில் தொல்காப்பிய நூற்பாக்களை ஒத்தமைந்த நேமிநாதம் முதலிய பின்னூல்களின் நூற்பாக்களனைத்தும் நூற்பெயர் எண்களோடு அமைந்துள்ளன. இறுதியில் நூற்பா முதற்குறிப்பு நிரலும் இடம்பெற்றுள்ளது.

தமிழ்ப் பல்கலைக்கழக வெளியீடுகளாய் வருகின்ற எட்டு இயல்களுக்கான இவ்வுரைக்கொத்து நூல்கள் வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு ஆகிய மூன்றியல்களைக் கொண்ட ஒரு தொகுதியும், பெயரியல், வினையியல் என்னும் இரண்டியல்களைக் கொண்ட ஒரு தொகுதியும், இடையியல், உரியியல், எச்சவியல் என்ற மூன்றியல்களைக் கொண்ட ஒரு தொகுதியும் என மூன்று தொகுதிகளாய்த் தற்போது வெளியிடப்படுகின்றன.

இவற்றுள் வேற்றுமையியல், வேற்றுமை மயங்கியல், விளிமரபு ஆகிய மூன்றியல்களையுடைய தொகுதியும், பெயரியல், வினையியல் ஆகிய இரண்டியல்கள் அடங்கிய தொகுதியும் ஒரு முறையில் அமைந்துள்ளன. இவற்றுள், முதல் தொகுதியில் ஒவ்வொரு நூற்பாவிற்குமன்றி உரை

யாசிரியர்களின் வரிசையில் ஒவ்வோர் இயலுக்கும் ஒருவ ருரையும் உரைவிளக்கமுமாகத் தொடர்ந்து மூன்றியல்களுக் கும் ஒருவருரை முடிந்தபின் மற்றொருவருரையும் உரை விளக்கமும் வருகின்றன. அதாவது, இளம்பூரணர் உரை வேற்றுமையியல், இளம்பூரணர் உரை விளக்கம் வேற்றுமை மயங்கியல், இளம்பூரணர் உரை விளிமரபு, இளம்பூரணர் உரைவிளக்கம் விளிமரபு என்ற முறையில் தொடர்ந்து மூன்றியல்களும் முடிவுற்றபின் அம்முறையே சேனாவரை யர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார், கல்லாடனார், பழைய உரையாசிரியர் ஒருவர், சாத்திரியார், பாலசுந்தரனார் ஆகியோர் உரைகளும் உரைவிளக்கங்களும் அமைந்துள் ளன. அவற்றின் பின்னர் இலக்கண நூல்களின் ஒத்த நூற் பாக்கள் மூன்றியல்களுக்கும் ஒருசேர அமைந்து, இறுதியில் தொல்காப்பிய நூற்பாக்களின் முதற்குறிப்பு அகர வரிசைப் பட்டியல் எல்லோர் உரைகளுக்குமாய் வருகின்றது. இதே முறையில் பெயரியல், வினையியல் அடங்கிய தொகுதியும் இயல்கின்றது. இடையியல், உரியியல், எச்சவியல் மூன்றும் அடங்கிய தொகுதியும் இம்முறையே அமைந்துள்ளது. ஆயி னும், உரையாசிரியர்கள் ஒவ்வொருவருடைய உரைகளுக் கும் முன்தொகுதிகளில் இயல்தோறும் அமைந்தவாறான உரைவிளக்கம் இத்தொகுதியில் இல்லையென்பது மட்டுமே வேறுபாடாம்.

இத்தொகுதிகள் அனைத்திலும் இடம்பெற்றுள்ள 'ஒத்த நூற்பாக்கள்' எனும் இறுதிப்பகுதி சிறப்புறக் குறிப் பிடத்தக்கதாகும். தொல்காப்பிய நூற்பாக்கள் ஒவ்வொன்றிற் கும் ஒத்த கருத்துடைய வீரசோழியம், நேமிநாதம், நன்னூல், இலக்கண விளக்கம், இலக்கணக்கொத்து, பிரயோக விவே கம், தொன்னூல் விளக்கம், முத்துவீரியம், சாமிநாதம் ஆகிய இலக்கண நூல்களின் நூற்பாக்கள் இப்பகுதியில் இடம் பெற்றுள்ளன. இவை இலக்கண ஒப்பாய்வுக்கு அருந் துணைக் கருவூலங்களாய் அமைந்துள்ளன; தொல்காப்பியத் தின் முதன்மைக்கும் தலைமைக்கும் சான்றாகவும் விளங்கு கின்றன.

காலத்திற்கும் நின்று நிலைக்கும் ஒப்பற்ற இவ்விலக்கண உரைக்கொத்து நூற்றொகுதிகைளைத் தம் இலக்கணப் புலமையாலும் நுண்மாண் நுழைபுலத்தாலும் உருவாக்கி அளித்துள்ள பண்டிதமணி தி.வே. கோபாலய்யர் அவர்களுக்குத் தமிழுலகம் நன்றிக்கடன் பட்டிருக்கிறது. இத்தொகுதிகளாலும் மற்றைய தமிழ்ப்பணிகளாலும் இப்பெரும்புலவர் நம்மோடு வாழ்ந்துகொண்டிருக்கிறார். அவரை வணங்குகிறேன்.

இந்நூல்கள் வெளிவர வேண்டுமென்பதில் ஆர்வங்காட்டி வித்தூன்றிய தமிழ்ப் பல்கலைக்கழகத்தின் முன்னைத் துணைவேந்தர் முனைவர் ம. இராசேந்திரன் அவர்களுக்கு மிக்க நன்றி!

பண்டிதமணி தி.வே. கோபாலய்யர் அவர்களின் இளவல்கள் வித்துவான் தி.வே. சீனிவாசன், வித்துவான் கங்காதரன் ஆகியோர் இந்நூற்றொகுதிகளுக்குரிய மூலப்படிகளை அளித்ததோடு மெய்ப்புத் திருத்தமும் செய்து உதவினர். இவற்றைப் பெற்றளிப்பதில் முதுமுனைவர் தி.ந. இராமச்சந்திரன் அவர்கள் பெருமுயற்சி எடுத்துக் கொண்டார். இப்பேருள்ளங்களுக்கு என் நெஞ்சார்ந்த நன்றி உரியதாகும். தமிழ்ப் பல்கலைக்கழக இலக்கியத்துறையின் முன்னைப் பேராசிரியர் - தலைவர் முனைவர் வ. குருநாதன் அவர்கள் கண்ணுங்கருத்துமாய் எழுத்தெண்ணிப் படித்து மூன்று தொகுதிகளையும் ஒப்புநோக்கி மெய்ப்புத் திருத்தப் பணியைச் செம்மையாய்ச் செய்தளித்துள்ளார். இப்பேராசிரியரைப் பாராட்டி மகிழ்கிறேன். நூலாக்கப்பணியில் ஆர்வத்துடன் ஈடுபட்ட பதிப்புத்துறை இயக்குநர் திரு வை. கண்ணபுரக்கண்ணன், அலுவலர்கள், பணியாளர்கள், கணினி நிறுவனத்தார், அச்சகத்தினர் அனைவருக்கும் என் வாழ்த்துக்கள்! இவ்வரிய நூல் தொகுதிகளின் முழுப்பயன்களையும் தமிழுலகம் இனிதே பெற்றுச் சிறக்கும் என்பது என் நம்பிக்கை.

# பொருளடக்கம்

## இளம்பூரணர் உரை

## 7. இடைச் சொல்லியல்

244. இடை எனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற் றியலும் தமக்கியல் பிலவே.

என்பது சூத்திரம்.

இவ்வோத்து என்ன பெயர்த்தோவெனின், இடைச் சொல்லியல் என்னும் பெயர்த்து.

இச்சூத்திரம் இடைச்சொற்கெல்லாம் பொதுவாயதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

*(உ..ம்)* அதுமன் *(புறநா.147)* என்பது பெயரொடு நடைபெற்றது.

வருகதில் அம்மஎம் சேரி சேர *(அகநா.276)* என்பது வினையொடு நடைபெற்றது.

தமக்கியல் பிலவே என்றதனான், இடைச்சொற்கள் பகவின்றியே நின்றிசைப்பனவும் உள என்றவாறு.

*(உ..ம்)* உண்டான் என்னுந் தொடக்கத்தன. *(1)*

245. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருணிலைக் குதநவும்
வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபா குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பின் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியாற் பொருள்செய் குநவுமென்று
அப்பண் பினவே நுவலுங் காலை.

புணரியனிலையிடைப் பொருள்நிலைக்குஉதவுவன. இன்னேவற்றே (எழுத்.புணரி.17) என்னுந் தொடக்கத்தன.

வினைசெயல் மருங்கில் காலமொடு வருவன. அன், ஆன், அம், ஆம் (சொல்.வினை.8,5) என்னுந் தொடக்கத்தன.

வேற்றுமைப் பொருள்வயின் உருபாகுவன ஐ, ஒடு, கு, இன், அது, கண், விளி (சொல்.வேற்.37) என்னும் தொடக்கத்தன.

அசை நிலைக்கிளவி, கேண்மியா, கண்டிகும் (ஐங்குறு.121) என்னுந் தொடக்கத்தன.

மற்றையன முன்னே விரிக்கின்றார். (2)

246. அவைதாம்,
முன்னும் பின்னும் மொழியடுத்து வருதலும்
தம்ஈறு திரிதலும் பிறிதுஅவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப.

பெயரை முன்னும் பின்னும் அடுத்து வருவன அது மன் (புறநா.147) கொன்னூர் (குறுந்.138) என்பன.

வினையை முன்னும் பின்னும் அடுக்குமாறு :
வருகதில் லம்மவெஞ் சேரி சேர (அகநா.276)
ஓ தந்தார், ஓ கொண்டார் என்பன.

தம்மீறு திரிந்தவை : கொன்னை, மன்னை (சொல். இடை.6,7) என்பன.

பிறிதவண் நிலையிற்று : மகவினை என்பது. (3)

247. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன் றென்ப மன்னைச் சொல்லே.

(எ..ன்) இடைச்சொற்களை எழுவகையென விரித்தார். அவற்றுள் மூன்றுவகை மேலே உணர்த்தி, ஒழிந்த நான்கு வகையுள் தத்தங் குறிப்பிற் பொருள் செய்குநவற்றை விரிப்பான் தொடங்கினார். அது கருத்து.

சிறியகட் பெறினே எமக்கீயு மன்னே (புறநா.235) என்பது, அஃது இப்பொழுது கழிந்ததெனக் கழிவின் கண் வந்தது.

பண்டு காடுமன் என்பது, இனிக்கயல் பிறழும் வயலாயிற்று என ஆக்கத்தின் கண்வந்தது.

கூரியதோர் வாள்மன் என்பது, இனி, இற்று என்னும் ஒருசொல் ஒழிவுபட வந்தமையின் ஒழியிசை என்பது. (4)

248. விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்
றம்மூன் றென்ப தில்லைச் சொல்லே.

வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் லம்ம யானே (குறுந்.14)

இது விழைவின்கண் வந்தது.

பெற்றாங் கறிகதில் லம்மவிவ் வூரே (குறுந்.14)

இது காலம் பற்றி வந்தது.

வருகதில் லம்மவெஞ் சேரி சேர (அகநா.276)

என்பது வந்தக்கால் இன்னதொன்று செய்வல் என்னுஞ் சொல் ஒழிந்து நின்றமையான், ஒழியிசைக்கண் வந்தது.

யாதானும் ஒருசொல் ஒழிவுபடவரின், அஃது ஒழியிசை எனப்படும் என்றவாறு. (5)

கொன்முனை யிரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே (குறுந்.91)

என்பது அச்சத்தின்கண் வந்தது.

கொன்னே வந்து கொன்னே போயினார்
என்பவை பயமின்றி வந்தன.

கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனோ
என்று நலியுங்காலை அறிந்துவந்தவாடை என்றவாறு. இது காலத்தின் கண் வந்தது.

கொன்னூர் துஞ்சினு மியான்துஞ் சலனே (குறுந்.138)
என்பது பெருமைக் கண்வந்தது. (6)

250. எச்சம் சிறப்பே ஐயம் எதிர் மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்
றப்பா லெட்டே உம்மைச் சொல்லே.

சாத்தனும் வந்தான் என்றால், அவனையன்றிப் பிறரையும் வரவு விளக்குமாகலின் இஃது எச்சவும்மை. தேவரே தின்னினும் வேம்பு கைக்கும் (நாலடி.மெய்.2) என்பது சிறப்பும்மை. குறவரும் மருளும் குன்றத்துப்படினே (மலைபடு.275) என்பதும் அது. பத்தானும் எட்டானும் கொடு என்பது ஒன்று துணியாமை மேல் நின்றமையின் ஐயத்தின்கண் வந்தது. கொற்றன் வருதற்கும் உரியன் எனின் வாராமை செப்பி நிற்குமாகலின் எதிர்மறை உம்மையாயிற்று. தமிழ்நாட்டு மூவரும் வந்தார் என்பது முற்றும்மை. நிலனும் நீரும் தீயும் வளியும் என்பது எண்ணும்மை. நன்றும் அன்று தீதும் அன்று; இடைநின்தாயிற்று என்பது தெரிநிலையும்மை. இடை நிகர்த்தானமை தெரிந்து ஒழிந்தனம்; அவ்விரண்டும் அத்துணைத்து ஒழிய நின்றிலாமையின்.

நெடியனும் வலியனும் என்பது ஆயினான். என்னும் ஆக்கத்துக் கண் வந்தது. ஆக்கவும்மை. (7)

251. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப ஓகா ரம்மே.

பிரிநிலை : இவருள் அவனோ கொண்டான் என்பது

வினா : அவன் அவனோ என்பது

எதிர்மறை : யானோ கொண்டேன் என்பது

ஒழியிசை : கொளலோ கொண்டான் என்பது

கோடற்குத்தகுமாயினும் கொண்டுய்யப் போயினானல்லன் என ஒரு சொல் ஒழிவுபட வந்தமையின் ஒழியிசையாயிற்று.

தெரிநிலை; நன்றோ அன்று; தீதோ அன்று; இடை நிகர்த்ததாயிற் றென்பது.

சிறப்பு; ஓஒ பெரியன் என்பது. (8)

252. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந் தேகா ரம்மே.

தேற்றம் : அவனே கொண்டான் என்பது.

வினா : நீயே கொண்டாய் என வினாவிச் சொல்வது.

பிரிநிலை : அவனே கொண்டான் என்பது
பலருள் ஒருவனைப் பிரித்துச் சொல்லுவது.

எண் : நிலனே நீரே தீயே வளியே ஆகாயமே என வரும்.

ஈற்றசை : கடல்போற் றோன்றல காடிறந் தோரே
(அகநா.1)

எனவரும் ஈற்றின்கண் என்றவாறு. (9)

253. வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோ டவ்வறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனவென் கிளவி.

வினை : கொள்ளெனக் கொண்டான் என்பது.
குறிப்பு : விண்ணென விசைத்தது என்பது.
துண்ணெனத் துடித்தது என்பதும் அது.
இசை : ஒல்லென ஒலித்தது என்பது.
பண்பு : வெள்ளென விளர்த்தது என்பது.
எண் : நிலனென...வளியென வரும்.
பெயர் : ஊரெனப்படுவது உறையூர் எனவரும்.

நாடெனப்படுவது சோணாடு என்பதும் அது. *(10)*

254. என்றென் கிளவியு மதனோ ரற்றே.

வினை : கொள்ளென்று கொண்டான் என்பது.
குறிப்பு : விண்ணென்று விசைத்தது என்பது.
துண்ணென்று துடித்தது என்பதும் அது.
இசை : ஒல்லென்று ஒலிக்கும் (ஐந்திணை ஐம்.28) என்பது.
பண்பு : வெள்ளென்று விளர்த்தது என்பது.
எண் : நிலனென்று...வளியென்று வரும்.
பெயர் : ஊரென்று சொல்லப்படுவது உறையூர் எனவரும்.

255. விழைவின் தில்லை தன்னிடத் தியலும்.

மேல் தில் என்னும் இடைச்சொல் மூன்றன் பொருட்கு உரித்தென்று போந்தான்; அவற்றுள் விழைவின் தில்லை தன்மை இடத்திற்கே ஆவது.

**(உ..ம்)** பெறுகதில் அம்ம யானே (குறுந்.14) எனவரும். எனவே, மற்றைய இரண்டும் எல்லாவிடத்திற்கும் உரிய. *(12)*

256. தெளிவின் ஏவும் சிறப்பின் ஓவும்
அளவின் எடுத்த இசைய என்ப

*(எ..ன்)* மேற் கூறிப்போந்த ஏகார ஓகாரங்களில் வேறுபாடு கண்டு, ஈண்டு உணர்த்துதல் நுதலிற்று.

*(உ..ம்)* நீயேஎ கொண்டாய்
ஓஒ பெரியன் என வரும். *(13)*

257. மற்றென் கிளவி வினைமாற் றசைநிலை
அப்பா லிரண்டென மொழிமனார் புலவர்.

*(எ..ன்)* மேல் தத்தங் குறிப்பிற் பொருள் செய்குவன உணர்த்தினார்; இனி மற்று என்பதோர் இடைச்சொல் வினைமாற்றும் அசை நிலையுமாய் வரும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

*(உ..ம்)* இஃது உண் என்றார்க்கு; மற்று உண்பல். என வினை மாற்றாயிற்று.

யாவரோ டாயினும் சொல்லாடா நின்றுழி மற்றோ மற்று என்னும் இடையே; அஃது அசைநிலைக் கட்டுரை. *(14)*

258. எற்றென் கிளவி இறந்த பொருட்டே

*(எ..ன்)* இதுவும் தத்தங் குறிப்பிற் பொருள் செய்குவனவற்றின் மேல் உணர்த்துதல் நுதலிற்று.

எற்று என்பது இறந்தபொருள் விளக்கி நிற்கும் என்றவாறு.

*(உ..ம்)* எற்றென் னுடம்பின் எழில் நலம் எனவரும்.

எற்றேற்ற மில்லாருள் யானேற்ற மில்லாதேன் என்பதும் அது. இஃது இரக்கப் பொருள் மேற்று. *(15)*

259. மற்றைய தென்னுங் கிளவி தானே
சுட்டுநிலை யொழிய இனங்குறித் தன்றே.

பல புத்தகங் கிடந்தவழி, ஒருவன், ஏவலாளனைப் பார்த்துப் புத்தகங்கொண்டுவா என்றால் அவன் ஒரு புத்தகங் கொண்டுவந்த விடத்துத் தான் கருதிய புத்தகம் அன்றெனில், மற்றையது கொணா என்னும்; என்றக்கால், இக்கொணர்ந்த தனை ஒழிக்குஞ் சொல் இக்கொணர்ந்த புத்தகம் சுட்டிற்றாகலான், கொணர்ந்ததனை ஒழிக்குஞ் சுட்டு நிலை அதனை ஒழித்து ஒழிந்ததென்று அவ்வினத்ததல்லது, பிறிதொன்று குறித்தது கொல்லோவெனிற் குறியா; மற்று அப்புத்தகத்துள் ஒன்றே பின்னுங் குறித்தது எனப்படும். *(16)*

260. மன்றவென் கிளவி தேற்றஞ் செய்யும்.

**(உ..ம்)** கார்மன்ற என்பவள் கண்ணுள்ளே காதலர்
தேர்மன்றத் தோன்றியது என்றக்கால் கார்காலம்
எனத் தெளிந்தாள் அவள் என்றவாறு. *(17)*

261. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.

**(உ..ம்)** ஏனோரரோ தஞ்சம் இருபிறப்பி னோர்வெகுளின்
வானோர்க்கும் வாழ்த லரிது (நேமி.இடை.4) *(18)*

262. அந்தில் ஆங்கு அசைநிலைக் கிளவியென்
றாயிரண் டாகும் இயற்கைய என்ப.

**(எ..ன்)** இதுவும் தத்தங் குறிப்பிற் பொருள் செய்குவனவற்றையும், அசை நிலையையும் உணர்த்துதல் நுதலிற்று.

*(உ..ம்)* இடஞ்சுட்டி வந்தது. வருமே சேயிழை அந்திற் கொழுநற் காணிய *(குறுந். 293)* எனவரும்.

அசைநிலை,

அந்திற் கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன் (அகநா.19) எனவரும். *(19)*

263. கொல்லே ஐயம்.

*(உ..ம்)* குற்றிகொல்லோ மகன்கொல்லோ; நாய்கொல்லோ நரிகொல்லோ என வரும். *(20)*

264. எல்லே விளக்கம்.

*(உ..ம்)* எல்வளை *(புறநா.24)* எனவரும். *(21)*

265. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே.

*(எ..ன்)* ஆர் என்னும் இடைச்சொல் பெயர் முன்னல்லது வாரா என்பது உணர்த்துதல் நுதலிற்று.

*(உ..ம்)* அரசனார் வந்தார்; பார்ப்பார் வந்தார் என வரும்.

விலங்கின் மேலும், யானையார் வந்தார்; நரியார் வந்தார் எனவரும்.

பெயர்முன் ஆரைக் கிளவி பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிதல் இயல் என எல்லாப் பெயரும் அடங்க மொழிமாற்றி உரைக்க. *(22)*

266. அசைநிலைக் கிளவி யாகுவழி யறிதல்.

**(உ..ம்)** இது செல்ல மன்னார் நெடுந்தகை எனவரும். *(23)*

267. ஏவுங் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய என்ப.

ஏ - இசைநிறை; குரை - அசை நிலை என, நிரனிறையாகக் கொள்க.

**(உ..ம்)** ஏஎ அம்பன் மொழிந்தனள் யாயே
ஏஎ இசைநிறை யாயினவாறு.

பல்குரைத் துன்பங்கள் சென்றுபடும் (குறள்.1045) எனக் குரை அசைநிலை. *(24)*

268. மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

**(உ..ம்)** மாயக் கடவுட் குயர்கமா வலனே - உயர்க என்னும் வியங்கோட்கண் மா என்னுஞ்சொல் அசைநிலையாய் வந்தது. *(25)*

269. மியாயிக மோமதி இகுஞ்சின் என்னும்
ஆவயின் ஆறு முன்னிலை யசைச்சொல்.

முன்னிலைக்கண் அசைச்சொல்லாய் வருவன இவை என்றவாறு.

**(உ..ம்)**

மியா – கேண்மியா
இக – தண்டுறை யூரயாங் கண்டிக

மோ – காமஞ் செப்பாது கண்டது மொழிமோ (குறுந்.2)

மதி – சென்மதி பெரும

இகும் – மெல்லம் புலம்ப கண்டிகும்

சின் – காப்பும் பூண்டிசின் கடையும் போகலை (அகநா.7)

எனவரும். *(26)*

270. அவற்றுள்,
இகுமுஞ் சின்னும் ஏனை இடத்தொடுந்
தகுநிலை உடைய என்மனார் புலவர்.

**(உ..ம்)** இகும் : தன்மைக்கண் வருமாறு
*கண்டிகு மல்லமோ கொண்க (ஐங்குறு.121)*
என வரும்.

*படர்க்கை : புகழந்திகு மல்லளோ பெரிதே எனவரும்.*
*சின் : தன்மைக்கண் வருமாறு.*
*கண்ணும் படுமோ என்றிசின் யானே (நற்.61)*
*படர்க்கைக்கண் வருமாறு : யாரஃ தறிந்திசினோரே*
எனவரும். *(27)*

271. அம்ம கேட் பிக்கும்.

**(உ..ம்)** *அம்மவாழி தோழி என்றவழி அதுகேளாய் வாழிதோழி*
என்றவாறாம். *(28)*

272. ஆங்க உரையசை.

ஆங்க என்னும் இடைச்சொல் கட்டுரைத் தொடர்பினிடை அசைப்பொருள் படவரும் என்றவாறு.

**(உ..ம்)** ஆங்கக் குயிலும் மயிலுங் காட்டிக்
கேள்வனை விடுத்துப் போகியோளே.
எனவரும். *(29)*



273. ஒப்பில் போலியும் அப்பொருட் டாகும்.

**(எ..ன்)** மேல், இடைச்சொல் எழுவகைய என்று நிறுத்தவற்றுள், ஒப்பில்போலி என்னும் இடைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

ஒப்பில் போலியாவது, ஒப்பில்லாதவழி ஒப்பித்த வாசகம் பட வருவ தென்பது.

**(உ..ம்)** மங்கலம் என்பதோர் ஊர் உண்டு போலும் மழநாட்டுள் என, ஒப்பில்லாதவழிப் போலும் என்னும் இடைச்சொல் வந்தவாறு. *(30)*

274. யாகா,
பிறபிறக்கு அரோபோ மாதென வருஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி.

**(எ..ன்)** அசைக்கும் இடைச்சொற்களைத் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

**(உ..ம்)** யா பன்னிருவர் உளர் போலும் மாணாக்கர் அகத்தியனார்க்கு என யா வந்தவாறு.

கா - உதுகா எனவரும்.

பிற - அது பிற, இது பிற, உது பிற எனப்பிற வந்தவாறு.
அது பிறக்கு எனப் பிறக்கு வந்தவாறு
கொடியுவணத்தவ ரரோ என அரோ வந்தவாறு.

பிரியேன் வாழேன் போதெய்ய எனப் போ வந்தவாறு.
நீ போ நேரிகை புகன் என்பதும் அது.

விளிந்தன்று மாதவர்த் தெளிந்தவென் னெஞ்சம் (நற்.178) என மாதுவந்தவாறு.

275. ஆகஆகல் என்ப தென்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை.

**(உ..ம்)** நீ இன்னை, இனையை என்று ஒருவனை ஒருவன் ஒன்று சொல்லுமிடத்து, அமையும், அமையும் என்றற்கு ஆகஆக என்னும். அவ்விடத்து ஆக என்னும். இடைச்சொல் பிரிவின்றி இரட்டித்தவாறு கண்டு கொள்க.

யான் உனக்கியாதும் ஆகேனோ என்றக்கால் ஆகல் ஆகல் என்னும். அவ்விடத்து ஆகல் என்னும் இடைச்சொல் பிரிவின்றி வந்தவாறு காண்க.

ஒருவனை ஒருவன் ஒன்று சொன்னால், கேட்டு நின்றானொருவன் என்பது என்பது என்னும்; அது புகழ்ச்சியிடத்துப் பயிற்சி உடைத்து; அறிந்து கொள்க. *(32)*

276. ஈரளபிசைக்கும் இறுதியி லுயிரே
ஆயியல் நிலையுங் காலத் தானும்
அளபெடை நிலையுங் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வருங் காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்.

**(எ..ன்)** ஔ என்னும் இடைச்சொல் மூன்று வகையாற் பொருள்படும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

ஆயியல் நிலையுங் காலத்தான், வருதலாவது மேற்கூறிய மூன்றும் போல் வருதல் (இடை.32). ஒன்று உரைக்குங்கால் இரட்டித்து ஔ ஔ என வரும்.

அளபெடை நிலையுங் காலத்தால் வந்து அது பொருள் படுமாறு ஔஉ எனவரும்.

யாதானும் ஒரு துன்புறவின்கண் அளபெடையின்றித்தான் வருமாறு ஔ என ஒரு குறிப்புப் பொருள்கண் வருவது என்றவாறு.

இம்மூன்று பொருட் பகுதியும் குறிப்பினான் வேறுபடுத்தி அறிந்து கொள்க. *(33)*

277. நன்றீற் றேயும் அன்றீற் றேயும்
அந்தீற் றோவும் அன்னீற் றோவும்
அன்ன பிறவுங் குறிப்பொடு கொள்ளும்.

**(எ..ன்)** இதுவும், சொல்லுதற் குறிப்பினால் பொருள் வேறுபடும் இடைச்சொற்களை உணர்த்துதல் நுதலிற்று.

**(உ..ம்)** நன்றீற்றே; நன்றே நன்றே எனவரும்.
அன்றீற்றே; அன்றே அன்றே என வரும்.
அந்தீற்றோ; அந்தோ அந்தோ எனவரும்.
அன்னீற்றோ; அன்னோ அன்னோ எனவரும். *(34)*

278. எச்ச உம்மையும் எதிர் மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடனிலை யிலவே.

எச்சவும்மையும் எதிர்மறை யும்மையும் தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே என்பது தம்முள் மயங்கி உடனிற்குந்தன்மை இல என்றவாறு. *(35)*

**(உ..ம்)** சாத்தனும் வந்தான், கொற்றனும் வரும் என்பது எச்சவும்மை; அதனைச், சத்தனும் வந்தான், கொற்றனும் வரலும் உரியன் என, எதிர்மறையும்மையொடு கூட்டிச் சொல்லப்படா தென்றவாறு.

279. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

எஞ்சு பொருட் கிளவி என்பது - எச்சவும்மை என்றவாறு. செஞ்சொல் ஆயின் என்பது. செவ்வெண்ணாயின் என்றவாறு. பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல் என்பது காலமுன்னாகச் சொல்லார் இடமுன்னாகச் சொல்லுவர் என்றவாறு.

***(உ..ம்)*** அடகுபுலால் பாகு பாளிதமும் உண்ணான்.
கடல்போலும் கல்வி யவன் (நன்.மயிலை.426)

என்பதனுள், அடகு புலால் பாகு என்று செவ்வெண்ணாலே எண்ணிப் பின்னைப் பாளிதமும் என்று எச்சவும்மையை இடமுன்னாக்கி வைத்து எண்ணினவாறு கண்டு கொள்க. *(36)*

280. முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும்.

***(உ..ம்)*** பத்துங் கொடான் என்றக்கால் எல்லாங் கொடான் என்றுமாம்.

தொகைச்சொல் என்றதனான், எல்லாம் கொண்டாம், கொண்டார் என்றும்; எல்லாரும் வாரார் என்றும், வருவார் என்றும் கொள்ளப்படும்.

எச்சவும்மை ஒழிவுப் பொருளை உடைத்தானது போல, முற்றும்மையும் ஒழிவுப் பொருள்பட வரும் என்று கொள்க. *(37)*

281. ஈற்றுநின் றிசைக்கும் ஏயெ னிறுதி
கூற்றுவயின் ஓரள பாகலும் உரித்தே.

(எ..ன்) மேற் சொல்லப்பட்ட ஐந்து ஏகாரத் துள்ளும் ஈற்றசை ஏகாரம் ஓரளபாம் என்றவாறு.

(உ..ம்) கடல்போ தோன்றல காடிறந் தோரே எனவரும். (அகம்.1)

உம்மை எதிர்மறையாகலான் குறையாது நிற்றலே பெரும்பான்மை. (38)

282. உம்மை எண்ணும் எனவென் எண்ணுந்
தம்வயின் தொகுதி கடப்பா டிலவே.

(உ..ம்) நிலனும், நீரும், தீயும் வளியும் வெளியும் நல்லவெனினும் அமையும்; தொகை கொடுத்தெண்ணினும் ஆம்.

என வென் எண்ணிற்கும் தொகை கொடுத்தும் கொடாதும் சொல்லி உம்மை எண் போல ஒட்டிக்கொள்க. (39)

283. எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித் தியலும் என்மனார் புலவர்.

எண்ணேகாரம் இடை நின்று ஒழிந்த எண்ணால் வந்தனவற்றையும் ஏகார எண்ணால், எண்ணினவே என்றவாறு.

ஏகாரம் எண்ணிடையே நின்றதெனினும் எண்ணி வருகின்ற எண்ணேயாம் என்றுமாம் எனக் கொள்க.

(உ..ம்) தோற்றம் இசையே நாற்றம் சுவையே
உறலோ டாங்கைம் புலனென மொழிப.

இதனுள் செவ்வெண் ஓடாநின்றே ஏகாரம் எண்ணிடையே புகுந்தவாறு கண்டு கொள்க. (40)

284. உம்மை தொக்க எனாவென் கிளவியும்
ஆவீ றாகிய என்றென் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.

**(உ..ம்)** உம்மை தொக்க எனா என் கிளவி வருமாறு : நிலனெனா, நீரெனா, தீயெனா, காலெனா எனவரும்.

ஆவீறாகிய என்றென் கிளவி; நிலனென்றா, நீரென்றா, தீயென்றா வளியென்றா என வரும். *(41)*

285. அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குரி மரபின் செவ்வெண் இறுதியும்
ஏயி னாகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினுந் தொகையின்றியலா.

**(உ..ம்)** எனா, சாத்தனெனா, கொற்றனெனா, பூதனெனா, அம்மூவரும் வந்தார் என, எனாவென்னும் எண்ணிறுதிக்கண் மூவரும் எனத் தொகை கொடுத்து எண்ணிணவாறு.

சாத்தன் என்றா, கொற்றன் என்றா, பூதன் என்றா, மூவரும் வந்தார் எனவரும் என்றா எண்.

சாத்தன், கொற்றன், பூதன் என மூவரும் வந்தார் எனவரும் செவ்வெண்.

சாத்தனே, கொற்றனே, பூதனே என மூவரும் வந்தார் எனவரும் ஏகார எண்.

இவை தொகை பெற்று முடிந்தவாறு கண்டுகொள்க. *(42)*

286. உம்மை எண்ணின் உருபு தொகல் வரையார்

**(உ..ம்)** யானையுந் தேரும் ஆளும் எறிந்தார் என்பது, யானையையும், தேரையும், ஆளையும் எறிந்தார் என்றவாறு. உம்மை எண்ணின்கண் உருபு தொக்கவாறாயிற்று. *(43)*

287. உம்உந் தாகும் இடனுமா ருண்டே.

**(உ..ம்)** நீர்க்கோழி கூய்ப்பெயர்க் குந்து (புறநா.395) என்பது.

எட்டுவகைப்பட்ட உம்மையுள் ஓர் உம்மை எனப்படாது, வினைசெயல் மருங்கிற் காலமொடு வந்தது. *(44)*

288. வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றவற் றியல்பே.

**(எ..ன்)** மேலே எண்ணுக்களைக் காட்டின வழியெல்லாம் பெயரொடு படுத்தே காட்டினார்; இனி வினையொடு அவ்வெண்களைக் காட்டுகின்றார்.

**(உ..ம்)** அறுத்துக் குறைத்துச் சுகிர்ந்து வகிர்ந்திட்டான், எனச் செவ்வெண் வினையான் எண்ணினவாறு. அறுத்தும் குறைத்தும் சுகிர்ந்தும் வகிர்ந்தும் இட்டான் என உம்மை எண் வினையொடு கூட்டி எண்ணினவாறு.

பல எண்ணும் வினைக்குவாரா; வருமிடத்து இத்தொடக்கத்தனவே வருவன கொள்க.

மண்டில மழுங்க மலைநிறங் கிளர
வண்டின மலர்பாய்ந் தூத மீமிசைக்
கண்டற் கானற் குருகின மொலிப்ப (அகநா.290)

எனவினையொடு கூடிச் செவ்வெண் வந்தவாறு.

நினையல் வேண்டும் என்பது, அவ்வெண்ணுக்களெல்லாம் தொகை பெற்றே நடக்கும் என்றவாறு.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான், அம்மூவரும் வந்தார், அம்மூவரும் வந்தமையால் கலியாணம் பொலிந்தது எனத் தொகை பெற்று வந்தவாறு. *(45)*

**289. என்றும் எனவும் ஒடுவுந் தோன்றி**
**ஒன்றுவழி யுடைய எண்ணினுட் பிரிந்தே.**

**(உ..ம்)** உயர்திணைப் பெயரே அஃறிணைப் பெயரென்
றாயிரண் டென்ப *(தொல்.புணரி.15)*
என்புழி என்று என்பதனை முன்னுங் கூட்டி உரைக்க.

கண்ணிமை நொடியென அவ்வே மாத்திரை *(தொல்.நூன்.7)* என்புழி எனவெண்பதனை முன்னுங் கூட்டி உரைக்க.

நிலனே நீரே தீயே வளியே
ஆகா யத்தோடு ஐந்தே பூதம்
என்புழி ஒடுவினை எங்கும் கூட்டி உரைக்க. *(46)*

**290. அவ்வச் சொல்லிற் கவையவை பொருளென**
**மெய்பெறக் கிளந்த இயல வாயினும்**
**வினையொடும் பெயரொடும் நினையத்தோன்றித்**
**திரிந்துவேறு வரினுந் தெரிந்தனர் கொளலே.**

மேல் ஓதப்பட்ட சொற்கள் கூறப்பட்ட இலக்க கணத்தவன்றிப் பிற பொருள்பட்டு வருப உளவேனும் கொள்க.

**(உ..ம்)** சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ *(அகநா.46)*
என்புழி ஓகாரம் ஈற்றசையும் ஆயிற்று.
கலங்கொண்டன கள்ளென்கோ
காழ்கோத்தன சூட்டென்கோ
நெய்யணிந்த வறையென்கோ
குய்கொண்ட துவையென்கோ *(யா.வி.கழ.பக்.368)*
என ஓகாரம் எண்ணோகாரம் ஆயிற்று.

ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே. (நற்.145)

மா முன்னிலை அசைச்சொல் ஆயிற்று (இது) வியங்கோட்கு ஓதிய அசைச்சொல் (இடை.25)

அதுமற் கொண்கன் தேரே என்புழி மன், அசைச்சொல் ஆயிற்று. (47)

291. கிளந்த வல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற் றியலான் உணர்ந்தனர் கொளலே.

**(எ..ன்)** இவ்வோத்திற் கெல்லாம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

(இது) மேல் சொல்லப்பட்டனவன்றி வரும் இடைச் சொல்லும் கொள்ளப்படும் என்றவாறு.

அவை, காரம் கரம் கான் ஆனம் ஏனம் ஓனம் எனவும்.
மாள, ஆம், ஆர், ஆல் தெய்ய எனவும் வரும்.

புறனடை என்பது நூலுள் எடுத்தோதாதவற்றைப் பாதுகாத்து நூற்குமுட்டாகாமை உணர்தற் பொருட்டாக வைத்து உரைப்பது. (48)

**இடைச்சொல்லியல் முற்றும்.**




# இளம்பூரணர் உரை
## 8. உரிச்சொல்லியல்

292. உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்
பயிலாத வற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் ஆயினும் பொருள்வேறு கிளத்தல்.

என்பது சூத்திரம்.

இவ்ஓத்து என்ன பெயர்த்தோ எனின், உரிச்சொல் உணர்த்தினமையின் உரிச்சொல் ஓத்து என்னும் பெயர்த்து.

இத்தலைச் சூத்திரம் என் நுதலிற்றோ எனின், உரிச்சொற்கு எல்லாம் பொதுவாயதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

உரிச்சொற்கள் தோன்றும் இடத்து இசையும் குறிப்பும் பண்பும் பற்றிப் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் சென்று பொருள்களை விளக்கும் என்றவாறு.

மெய் என்பது பொருள். தடுமாறுதல் என்பது பெயர் பற்றியும் வினை பற்றியும் வரும் வரவினை நோக்கி; அவ்வாறு தடுமாறுங்கால், ஒருசொல் பலபொருட்கு உரிமைப் பட்டுத்தடுமாறுதலும், பலசொல் ஒரு பொருட்கு உரிமைப் பட்டுத் தடுமாறுதலும் உடைய. அவை அவ்வாறு தடுமாறித் தோன்றுதல் அவற்றிற்கு இலக்கணம். அவ்வாறு தோன்றுங்கால் பயிலாத உரிச்சொற்களை பயின்ற உரிச்சொல்லொடு சார்த்தி உணரப்படும். அவ்வாறு சார்த்திச் சொல்லவே எவ்வகைப்பட்ட சொல்லாயினும் பொருள் விளங்கும்.

உறுகால் (நற்.300) என்றக்கால் உறு என்பதனை வழக்கினுள்ளார் பயிலாமையின் மிகுகால் என்று சொல்லுப. மிகு என்பதூஉம் உரிச்சொல். அதனை நடையுள்ளார் பயின்றாராதலான், அந்நிகரனவற்றான் பொருத்திச் சொல்ல அவை விளங்கித் தோன்றும் என்பது.

இசை பற்றி நிற்பனவற்றிற்கு, இசை சென்று நிலை மருங்கு எனவும், குறிப்புப்பற்றித் தோன்றுவனவற்றிற்குத் தத்தம் குறிப்புச் சென்று நிலை மருங்கு எனவும், பண்பு பற்றித் தோன்றுவ்னவற்றிற்குப் பண்பு சென்று நிலை மருங்கு எனவும் படும் என்பது.

இசை பற்றித் தோன்றின; துவைத்தலும் சிலைத்தலும் (தொல்.உரி.61) என்னும் தொடக்கத்தன.

குறிப்புப் பற்றி வந்தன ; கறுப்பும் சிவப்பும் (தொல்.உரி.75) என்னும் தொடக்கத்தன.

நிறத்துஉரு உரைத்தற்கும் உரிய (தொல்.உரி.75) என்றார் ஆகலின், ஆண்டுப் பண்பு எனவும் வரும்.

ஒரு சொல்லாகப் பல பொருட்கு உரியன : கடி என் கிளவி (தொல்.உரி.86) என்னும் தொடக்கத்தன.

பலசொல் ஒரு பொருட்கு உரியன : உறு தவ நனி (தொல்.உரி.3) என்னும் தொடக்கத்தன.

முன், இடைச்சொற் கிளவியும் உரிச்சொல் கிளவியும் அவற்றுவழி மருங்கின் தோன்றும் என்ப (பெயரியல்.5) என்புழி நிரல்நிறை வாய்பாட்டது ஆகலான், அது நீக்குதற்குப் பெயரினும் வினையினும் மெய்தடுமாறி என்றார் என்பது. (1)

293. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொன் மேன.

இருவகைய உரிச்சொல் வெளிப்படுவனவும் வெளிப் படாதனவும் என; அவற்றுள் வெளிப்பட்ட உரிச் சொற்களது பொருள் சொல்ல வேண்டா; அறிந்த பொருள்பெற்றியான் பொருள் சொல்லுதல் என்பது உணர்த்தியவாறு; அவ்வாறு வெளிப்பட்ட உரிச் சொற்கள் ஆவன; கலித்தது, குழைத்தது என்னும் தொடக்கத்தன; இனி வெளிப்பட வாராதனவற்றை விரிக்கின்றார். *(2)*

294. அவைதாம்,
உறுதவ நனிஎன வரூஉ மூன்று
மிகுதி செய்யும் பொருள என்ப.

*குறிப்புப் பற்றித் தோன்றும் உரிச்சொற்கள் பல ஆகலான், அவற்றுப் பகுதி முன்கூறிய தொடங்கினார்.*

இக் கூறப்பட்ட மூன்று உரிச்சொல்லும் மிகுதிப் பொருண்மையை விளக்கும் என்றவாறு.

உறுகால் ஒற்ற ஒல்கி (நற்.300) என்பது, மிகுகால் ஒற்ற ஒல்கி என்பதாம்.

தவச் சேய் நட்டார் ஆயினும் (நற்.115) என்பது மிகச் சேய நட்டார் என்பதாம்.

நனிச் சேய்த்து அன்றவன் பழவிறன்மூதூர் (மலைபடு.48) என்பது மிகச் சேய்த்து அன்றவன் பழவிறன் மூதூர் என்பதாம்.*(3)*

295. உருஉட்கு ஆகும் புரைஉயர்பு ஆகும்.

இதுவும் குறிப்பு.

உருவக் குதிரை (அகநா.1) என்றக்கால் உட்கத் தக்க குதிரை என்பதாம். புரைய மன்ற புரையோர் கேண்மை (நற்.1) என்பது உயர உயர்ந்தோர் கேண்மை என்பதாகும். (4)

296. குருவும் கெழுவும் நிறன் ஆகும்மே.

(உ..ம்) குருத்துளி பொழிந்தது
கேழ்கிளர் அகலத்து (மதுரைக்காஞ்சி.493)
என்றக்கால் அவை இரண்டினும் நிறம் சொன்னவாறு. (5)

297. செல்லல் இன்னல் இன்னா மையே.

இதுவும் குறிப்பு.

இவை இரண்டும் நோய்ப் பொருண்மைய ஆகும் என்றவாறு.

(உ..ம்) மணங்கமழ் வியன்மார் பணங்கிய செல்லல் (அகநா.22) என்புழி நோய் என்பதாம்.

வெயிற்புறம் தரூஉம் இன்னல் இயக்கத்து (மலைபடு.374) என்ற இடத்தும் அதுவாம். (6)

298. மல்லல் வளனே ஏபெற் றாகும்.

(உ..ம்) மல்லன் மாமலை என்றக்கால் வளனுடைய மாமலை என்பதாம்.

ஏகல் அடுக்கும் (அகநா.52, நற்.116) என்றக்கால் பெற்றிய கல்லடுக்கம் என்பதாம். (7)

299. உகப்பே உயர்தல் உவப்பே உவகை.

நாடு காண மேன்மேல் உகமின் என்பது நாடு காணக் கன்மேல் ஏறினால், மேன்மேல் உயர்மின் என்பதாம். உவக்குநள் ஆயினும் ஊடினள் ஆயினும் (அகம்.203) என்புழி உவந்தனள் ஆயினும் என்பதாம். *(8)*

300. பயப்பே பயனாம்.

இவை எல்லாம் குறிப்பு.

(உ..ம்) ஆன பயமும் தூக்கின் என்புழிப் பயன் கூறியவாறு. *(9)*

301. பசப்பு நிறன் ஆகும்.

இது பண்பு பற்றி வந்தது.

(உ..ம்) பசப்பித்துச் சென்றார் என்புழி நிறம் கூறியவாறு. *(10)*

302. இயைபே புணர்ச்சி.

இதுவும் குறிப்பு.

இயைந்து ஒழுகும் என்றக்கால் பொருந்தி ஒழுகும் என்பதாம். *(11)*

*303.* இசைப்பு இசை ஆகும்.

இஃது இசைபற்றி வந்தது.

(உ..ம்) இசைந்து ஒழுகும் என்றக்கால், இசையத் தோன்றி விடும் என்பதாம். *(12)*

304. அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி.

இதுவும் குறிப்பு.

*(உ..ம்)* அலமரல் ஆயம் *(ஐங்.64)* என்றக்கால் சுழன்றுவரல் ஆயம் என்பதாம்.

தெருமரல் உள்ளம் என்பது சுழன்றுவரும் உள்ளம் என்பதாம். *(13)*

305. மழவும் குழவும் இளமைப் பொருள.

இதுவும் குறிப்பு.

*(உ..ம்)* குழக்கன்று கடிதியாத்தாள் என்றக்கால், இளங்கன்று கடிதியாத்தாள் என்பதாம்.

மழக்களிறு *(புறநா.103)* என்றக்கால் இளங்களிறு என்றவாறாம். *(14)*

306. சீர்த்தி மிகுபுகழ்.

*(உ..ம்)* வயக்கஞ்சால் சீர்த்தி என்றக்கால் மிக்க புகழ் என்பதாம். *(15)*

307. மாலை இயல்பே.

*(உ..ம்)* இரவரன் மாலையன் *(குறிஞ்சி.பாட்டு.23)* என்றக்கால் இரவின் வரும் இயல்பினன் என்பதாம். *(16)*

308. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்.

*(உ..ம்)* உப்புக் கூர்ந்தது; உப்புக் கழிந்தது என்பன சிறப்புச் சொல்லாயவாறாம். *(17)*

309. கதழ்வும் துனைவும் விரைவின் பொருள.

*(உ..ம்)* அண்டர் கயிறரி எருத்தின் கதழும் துறைவன் (குறுந்.117) என்றக்கால் விரையுந் துறைவன் என்பதாம்.

துனைபறை நிவக்கும் புள்ளினமான (மலை.55)
என்றக்கால் விரைந்து பறக்கும், என்பதாம். *(18)*

310. அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்.

இவை எல்லாம் குறிப்பு.

*(உ..ம்)* அதிர்கண் முரசம் என்றக்கால் நடுங்குகண் முரசம் என்பதாம்.

விதிர்ப்புற்றுக் கண்ணிமையார் என்றக்கால் நடுங்குற்று என்பதாம். *(19)*

311. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள.

இது பண்பு பற்றி வந்தது.

*(உ..ம்)* வார்கயிற்று ஒழுகை என்றக்கால், நேர்கயிற்று ஒழுகை என்பதூஉம், நெடுங்கயிற்று ஒழுகை என்பதூஉம் ஆம்.

போகு கொடி, ஒழுகு கொடி என்புழியும் அவ்இருபொருளும் படும். *(20)*

312. தீர்தலும் தீர்த்தலும் விடற் பொருட்டாகும்.

இதுவும் குறிப்பு.

(உ..ம்) ஊரின் தீர்ந்தான் என்றக்கால் ஊரின் பற்றுவிட்டான் என்பதாம்.

பேய் தீர்த்தான் என்றக்கால் பேய் விடுவித்தான் என்பதாம். (21)

313. கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு.

(உ..ம்) கெடவரல் ஆயம் என்றக்கால் விளையாட்டு ஆயம் என்பதாம்.

பண்ணைத் தோன்றிய எண்நான்கு பொருளும் (தொல்.மெய்ப்பா.1) என்றக்கால் விளையாட்டுள் தோன்றிய பொருள் என்பதாம். (22)

314. தடவும் கயவும் நளியும் பெருமை.

(உ..ம்) தடந்தோள், கயவெள் அருவி (அக.35)
நளிமலை நாடன் (புறம்.150) (23)

315. அவற்றுள்,
தடஎன் கிளவி கோட்டமும் செய்யும்.

தட என்பது பெருமையேயன்றிக் கோட்டப் பொருளினையும் விளைக்கும் என்றவாறு.

(உ..ம்) தடமருப் பெருமை (நற்.120). (24)

316. கயஎன் கிளவி மென்மையும் செய்யும்.

கய என்னும் சொல் பெருமையே அன்றி மென்மைப் பொருளும் படும்.

(உ..ம்) கயந்தலை மடப்பிடி (நற்.137) எனவரும். (25)

317. நளி என் கிளவி செறிவும் ஆகும்.

நளி என்னும் சொல் பெருமையே அன்றிச் செறிவுப் பொருளும் படும் என்றவாறு.

(உ..ம்) நளி இருள் என்றக்கால் செறிஇருள் என்பதாம். மூன்று இடத்து உம்மையும் இறந்தது தழீஇயின. (26)

318. பழுதுபயம் இன்றே.

பழுதே வந்தார் என்றக்கால் பயம் இன்றியே வந்தார் என்பதாம். (27)

319. சாயன் மென்மை.

(உ..ம்) சாரன் நாடன் சாயன் மார்பு (பதிற்று.16) என்றக்கால் மெல்லிய மார்பு என்றதாம். (28)

320. முழுதுஎன் கிளவி எஞ்சாப் பொருட்டே.

முழுக்கறை பெய்தான் என்றக்கால் எஞ்சாமை பெய்தான் என்பதாம். (29)

321. வம்பு நிலையின்மை.

(உ..ம்) *வம்ப வடுகர். (அகம்.375)*
*வம்ப நாரை. (அகம்.190)*
என்றக்கால் நிலையில்லாமை கூறியவாறாம். *(30)*

321. மாதர் காதல்.

(உ..ம்) மாதர் வண்டொடு சுரும்பு இசைத்தது என்றக்கால் காதல் வண்டு என்பதாம். *(31)*

323. நம்பு மேவு நசையா கும்மே.

(உ..ம்) நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி (அகம்.198) என்றக்கால் நச்சி என்பதாம். பேரிசை நவிரம் மேஎ உறையும் (மலை.82) என்றக்கால் நயந்து உறையும் என்பதாம். *(32)*

324. ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.

(உ..ம்) ஓய்கலை ஒருத்தல் என்றக்கால் நுணுகிய கலை ஒருத்தல் என்பதாம்.

கையும் மெய்யும் ஆய்ந்து இருந்தார் என்றக்கால் சுருங்கி இருந்தார் என்பதாம்.

*நிழத்த யானை மேய்புலம் படர (மதுரை.303)*
என்றக்கால் மெலிந்து நுணுகிய என்பதாம்.

*கயல்அறல் எதிரக் கடும் புனல் சாஅய் (நெடு.18)*
என்றக்கால் சுருங்கி என்பதாம். *(33)*

325. புலம்பே தனிமை.

(உ..ம்) புலம்புவிட்டு இருந்தார் (மலைபடு.49) என்றக்கால் தனிமை துறந்து இருந்தார் என்பதாம். *(34)*

326. துவன்று நிறைவு ஆகும்.

ஆரியர் துவன்றிய பேரிசை மூதூர் (பதிற்று.11) என்றக்கால் நிறைந்த மூதூர் என்பதாம். *(35)*

327. முரஞ்சன் முதிர்வே.

(உ..ம்) கோடுபல முரஞ்சிய கோளி யாலம் (மலை.268) என்றக்கால் முதிர்ந்த ஆலம் என்பதாம். *(36)*

328. வெம்மை வேண்டல்.

(உ..ம்) நீ வெம்மையள் என்றக்கால் நீ வேண்டப்படுவாள் என்பதாம். *(37)*

329. பொற்பே பொலிவு.

(உ..ம்) அணிகலம் பொற்ப என்றக்கால் பொலிய என்பதாம். *(38)*

330. வறிது சிறிதாகும்.

(உ..ம்) வறிது நெறியொரீஇ என்றக்கால் சிறிது நெறியொரீஇ என்பதாம். *(39)*

331. எற்றம் நினைவும் துணிவும் ஆகும்.

*(உ..ம்)* எற்றத்து இருந்தார் என்றக்கால் நினைத்து இருந்தார். என்பதூஉம், துணிந்து இருந்தார் என்பதூஉம் ஆம். *(40)*

332. பிணையும் பேணும் பெட்பின் பொருள.

பெட்டல் என்பது புறந்தருதல் என்றவாறு

*(உ..ம்)* அரும்பிணை யக்கற்றி வேட்ட ஞான்று என்றக்கால் அரும்புறந்தருவாரகற்றி வேட்ட போழ்து என்பதாம்.

பேணி னென் அல்லனோ மகிழ்ந (அகம்.*16*) என்றக்கால் பெட்டேன் அல்லனோ மகிழ்ந என்பதாம். *(41)*

333. பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும்.

இவை எல்லாம் குறிப்புச் சொல்.

*பணைத்துப் போய் வீழ்ந்தது என்றக்கால் பிழைத்துப்போய் வீழ்ந்தது என்பதாம்.*

*பணைத்தோள் (அகம்.1) என்றக்கால் பெருந்தோள்* என்பதாம். *(42)*

334. படரே உள்ளல் செலவும் ஆகும்.

*(உ..ம்)* படர்மலி வெற்பர் என்றக்கால் உள்ளல்மலி வெற்பர் என்பதாம்.

*அவ்வாறு படர்ந்தார் என்றக்கால், சென்றார் என்பதாம். (43)*

335. பையுளும் சிறுமையும் நோயின் பொருள.

*(உ..ம்)* பையுள் நல்யாழ் என்றக்கால், நோய்செய்யும் நல்யாழ் என்பதாம். சிறுமை உறுப செய்பறி யலர் *(நற்.1)* என்றக்கால் நோய் உறுப செய்யார் என்பதாம். *(44)*

**336. எய்யாமை அறியாமை.**

*(உ..ம்)* எய்யாமை அலை *(குறிஞ்.8)* என்றக்கால் அறியாமையலை என்றவாறாம். *(45)*

**337. நன்று பெரிதாகும்.**

**338. தெவுக் கொளற் பொருட்டே.**

இரண்டு சூத்திரமும் உரை நோக்கி ஒன்றாய் எழுதப்பட்டன.

*(உ..ம்)* நன்றும் அரிதுஉற்றனையாற் பெரும *(அகம்.10)* என்றக்கால் பெரிதுற்றனையால் என்பதாம்.

நீர்த்தெவு நிரைத்தொழுவர் *(மது.காஞ்.89)* என்றக்கால் நீர் கொள்ளும் நிரைத் தொழுவர் என்பதாம். *(46,47)*

**339. தாவே வலியும் வருத்தமும் ஆகும்.**

தாவின் நன்பொன் *(அகம்.211)* என்றக்கால் வலியின் நன்பொன் என்பதாம். பொன்னுக்குப் போக்குடைமை வலியது. *(48)*

*(உ..ம்)* கருங்கண் தாக்கலை *(குறுந்.69)* என்றவழி வருந்திய கலை என்பதாம்.

**340. தெவ்வுப் பகை ஆகும்.**

*(உ..ம்)* தெவ்வுத் தேயத்து என்றக்கால் பகைதேயத்து என்பதாம். *(49)*

**341. விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே.**

இவை எல்லாம் குறிப்பு.

*(உ..ம்)* விறந்த காப்பொடு என்றக்கால் செறிந்த காப்பொடு என்பதாம்.

உறந்த விஞ்சி உயர்நிலை மாடம் என்புழி செறிந்த இஞ்சி என்பதாம். வெறுத்தார் என்றக்கால் செறிந்தார் என்பதாம். *(50)*

**342. அவற்றுள்,**
**விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும்.**

*(உ..ம்)* கோடு முற்றி அளந்த காரொடு விறந்தே என்றக்கால், வெரீஇ என்பதாம். *(51)*

**343. கம்பலை சும்மை கலியே அழுங்கல்**
**என்றிவை நான்கும் அரவப் பொருள.**

இவை இசைபற்றி வந்தன.

*(உ..ம்)* ஊர் கம்பலை உடைத்து என்றக்கால் அரவம் உடைத்து என்பதாம்.

ஊர் சும்மை உடைத்து என்பதும் அது.

கலிகெழு மூதூர்; அழுங்கன் மூதூர் என்பனவும் ஒக்கும். **(52)**

**344. அவற்றுள்,**

**அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்.**

(உ..ம்) மகனை இழந்து அழுங்கினார் என்றக்கால் இரங்கினார் என்பதாம்.

செலவு அழுங்கினார் என்றக்கால் செலவு கெடுத்தார் என்பதாம். இப்பொழுது இவை குறிப்புப் பற்றி வந்தன. (53)

**345. கழும்என் கிளவி மயக்கம் செய்யும்.**

(உ..ம்) கழுமிய ஞாட்பினுள் மைந்திழந்தார் இட்ட (களவழி.11) என்றக்கால் மயங்கிய ஞாட்பு என்பதாம். (54)

**346. செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்.**

(உ..ம்) செழும் செந்நெல் என்றக்கால் வளம் செந்நெல் என்பதாம்.

செழுந்தடி தின்ற செந்நாய் ஏற்றை என்பது கொழுந்தடி தின்ற என்பதாம்.

வளம் என்பது ஆக்கம். கொழுப்பு என்பது ஊன் பற்றிய நிணம். (55)

**347. விழுமம் சீர்மையும் இடும்பையும் செய்யும்.**

(உ..ம்) விழுமியர் என்றக்கால் சீரியர் என்பதாம். விழுமம் உற்று இருந்தார் என்றக்கால் இடும்பை உற்று இருந்தார் என்பதாம். (56)

**348. கருவி தொகுதி.**

(உ..ம்) கருவி வானம் கதழுறை சிதறி (அகம்.4)

என்றக்கால், ஈண்டு, மின்னும் முழக்கும் காற்றும் என இத்தொடக்கத்தன ஆயின. *(57)*

349. கமம் நிறைந்து இயலும்.

**(உ..ம்)** கமம்சூன் மாமழை இசைக்கும் என்றக்கால் நிறைந்த சூன் மா மழை என்பதாம். *(58)*

350. அரியே ஐமை.

**(உ..ம்)** அரிமயிர்த் திரண் முன்கை (புறம்.11) என்றக்கால் ஐம்மயிர்த்திரண் முன்கை என்றவாறாம். *(59)*

351. கவவகத்திடுமே.

இவை எல்லாம் குறிப்பு.

**(உ..ம்)** கொடும்பூண் கவைஇய கோல மார்பு என்றக்கால் கொடும்பூண் அகத்திட்ட கோல மார்பு என்பதாம். *(60)*

352. துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும் இசைப்பொருள் கிளவி என்மனார் புலவர்.

இவை நான்கும் இசை பற்றி வந்தன என்றல்.

**(உ..ம்)** வரிவளை துவைப்ப (புறம்.158) என்றக்கால், சங்கு இசைப்ப என்பதாம். கலையின் இரலை சிலைப்ப என்றக்கால் அதனது குரலிசைப்பைச் சொல்லிற்றாம். ஏறு சிலைக்கும் என்பதும் அது. இயமரம் இயம்பும் எனவே ஒலிக்கும் என்பதாம். முரசிரங்கு முற்றம் என்றக்கால் இசைக்கும் என்பதாம். *(61)*

353. அவற்றுள்,

இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

*(உ..ம்)* உடையது இழந்து உயிர் இரங்கி இருந்தார் என்றக்கால் கழிவினை விளக்கும்; ஈண்டு இரக்கம். *(62)*

354. இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை.

*(உ..ம்)* இலம்படு புலவர் *(மலை.57)* என்றக்கால் வறுமைப்படும் புலவர் என்பதாம்.

ஊரை ஒற்கம் தீர்க்கும் என்றக்கால் வறுமை தீர்க்கும் என்பதாம். *(63)*

355. நெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.

*(உ..ம்)* தண்பெரும் பந்தர்த் தருமணல் நெமிரிய *(அகம்.86, நற்.143)* என்றக்கால் பரப்பிய என்பதாம்.

புண்ணுமிழ் குருதிப் புனல் பாய்ந்து *(குறி.172)* என்றக்கால் பரந்து என்பதாம். *(64)*

356. கவர்வு விருப்பு ஆகும்.

*(உ..ம்)* கொள்ளை மாந்தரி னானாது கவரும் *(அகம்.2)* என்றக்கால் விரும்பும் என்பதாம். *(65)*

357. சேரே திரட்சி.

*(உ..ம்)* சேர்ந்து செறி குறங்கு *(நற்.170)* என்றக்கால் திரண்டு செறி குறங்கு என்பதாம். *(66)*

358. வியல்என் கிளவி அகலப் பொருட்டே.

(உ..ம்) வியல் இரு வானம் என்றக்கால் அகலிருவானம் என்பதாம். *(67)*

359. பேநாம் உரும்என வரூஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.

(உ..ம்) மன்ற மராத்த பேமுதிர் கடவுள் (குறுந்.87) என்பது அச்சமுதிர் கடவுள் என்பதாம்.

நாம் வருந்துறை பேர்தந்து (அகம்.18) என்பது அச்சமுடைய துறை சேர்ந்து என்பதாம்.

உருமில் சுற்றம் (பெரும்.447) என்பது அச்சமில் சுற்றம் என்பதாம். இவை எல்லாம் குறிப்பு. *(68)*

360. வயம் வலி ஆகும்.

(உ..ம்) வாள்வரி வேங்கை வயப்புலி என்பது வன்புலி என்பதாம்.*(69)*

361. வாள் ஒளி ஆகும்.

(உ..ம்) கண்ணே நோக்கி வாள் இழந்தனவே (குறுந்.44) என்பது ஒளி இழந்தன என்பதாம். *(70)*

362. துய என் கிளவி அறிவின் திரிவே.

(உ..ம்) அறிவு துயஉறுத்தார் என்பது அறிவு திரிவுறுத்தார் என்பதாம். *(71)*

363. உயாவே உயங்கல்.

(உ..ம்) பருந்திருந் துயாவிளி பயிற்று மியாவுயர் நனந்தலை (அகம்.19) என்றக்கால் உயங்குவிளி பயிற்றி என்பதாம். (72)

364. உசாவே சூழ்ச்சி.

(உ..ம்) நாம்உசாக் கொள்ளாமோ என்பது சூழ்ந்து கொள்ளாமோ என்பதாம்.

இவை குறிப்பு. (73)

365. வயா என்கிளவி வேட்கைப் பெருக்கம்.

(உ..ம்) சூழ்கண்டு வயாவினர் என்பது வேட்கையர் என்பதாம்.(74)

366. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள.

(உ..ம்) கறுத்து வந்தார் என்பது வெகுண்டு வந்தார் என்பதாம். சிவந்து நோக்கினார் என்பது வெகுண்டு நோக்கினார் என்பதாம். (75)

367. நிறத்து உரு உணர்த்தற்கும் உரிய என்ப.

அதுவே அன்றிப் பண்புப்பொருளும் படும் என்றவாறு.

(உ..ம்) உடம்பு கறுத்தது; கண் சிவந்தன என்பன நிறத்தின் மேலும் செல்லும். (76)

368. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.

இவை பண்பு பற்றி வந்தன.

(உ..ம்) நொசி மருங்குல் (கலி.60) என்பது நுண்மருங்குல் என்பதாம்.

நுழை மருங்குல் என்பதும் அது. நுணங்கு மருங்குல் என்பதும் அது. (77)

369. புனிறு என் கிளவி ஈன்றணிமைப் பொருட்டே.

(உ..ம்) புனிற்றுஆப் பாய்ந்துஎனக் கலங்கி யாழ்இட்டு (அகம்.56) என்பது ஈன்றணிய ஆப் பாய்ந்தது என என்பதாம். (78)

370. நனவே களனும் அகலமும் செய்யும்.

(உ..ம்) நனவுப்புகு விறலியின் தோன்று நாடன் (அகம்.83) என்றக்கால் களம்புகு விறலியின் தோன்று நாடன் என்பதாம்.

நனந்தலை உலகு (குறுந்.6) என்றக்கால் அகன்தலை உலகு என்பதாம். (79)

371. மதவே மடனும் வலியும் ஆகும்.

(உ..ம்) மாதர் வாண்முகம் மதைஇய நோக்கே (அகம்.130) என்பது மடம்பட்ட நோக்கு என்பதாம்.

மத களிறு என்றக்கால் வலிய களிறு என்பதாம். (80)

372. மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே.

அவையே அன்றி இவ்இரு பொருளும்படும் என்றவாறு

(உ..ம்) மதகளிறு என்றக்கால் மிகுகளிறு என்பதூஉம், மதப்புலி என்றக்கால் வனப்புலி என்பதூஉம் ஆம்.

இளம் பாண்டில் தேர் ஊரச் செம்மாந்தது போலமதைஇயினள் (கலி.106) என்பது வனப்புடையள் ஆயினள் என்பதாம். (81)

373. புதிதுபடற் பொருட்டே யாணர்க் கிளவி.

(உ..ம்) அறாஅ யாணர் அகன்தலை நன்னாடு (அகம்.44) என்றக்கால் அறாத புதுவருவாயுடைய நாடு என்பதாம். (82)

374. அமர்தல் மேவல்.

(உ..ம்) கூழ் அமர்ந்து உண்டாள் என்பது கூழை மேவி உண்டாள் என்பதாம். (83)

375. யாணுக் கவினாம்.

(உ..ம்) யாண்அது பசலை என்றனள் (நற்.50) என்றக்கால், வனப்பின் கண்ணது பசலை என்பதாம். (84)

376. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.

(உ..ம்) கடவுள் பரவினார் என்றக்கால் வழுத்தினார் என்பதாம்.

கை தொழூஉப் பழிச்சி (மதுரை.694) என்றக்கால் வழுத்தி என்பதாம். (85)

377. கடிஎன் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை

விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்தேற் றாய்ஈர் ஐந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.

கடி என்பது இப்பத்துப் பொருளும்படும் என்றவாறு.

(உ..ம்) ஊர் கடிந்தார் என்றக்கால் ஊரை வரைந்தார் என்பதாம்.

வாள்வாய் கடிது என்றக்கால் வாள்வாய் கூரிது என்பதாம்

கடிகா என்பது (களவழி.39) காப்புடையகா என்பதாம்.

கடித்தளிர் என்பது புதுத்தளிர் என்பதாம்.

கடிது வந்தார் என்பது, விரைந்து வந்தார் என்பதாம்.

கடிது பகல் (கலி.நெய்.28) என்பது விளங்கும் பகல் என்பதாம்.

கடும்புனல் (குறு.103) என்பது, மிக்க புனல் என்பதாம். அது சிறந்த புனல் என்பதூஉம் ஆம்.

கடுங்கண் யானை என்பது அஞ்சத்தக்க யானை என்பதாம்.

கடுஞ்சூள் தருகுவன் (அகம்.110) என்றக்கால் முன்னின்று தேற்றந்தருகுவன் நினக்கு என்பதாம். *(86)*

378. ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே.

இவ்இரு பொருளும் படுதற்கும் உரித்து என்றவாறு.

(உ..ம்) கடுத்தனள் அல்லளோ அன்னை என்றக்கால் ஐயுற்றனள் என்பதாம்.

கடிமிளகு தின்ற கல்லா மந்தி (மயிலை.நன்.456) என்றக்கால் கரிப்பு ஆர் மிளகு தின்ற என்பதாம். *(87)*

379. ஐவியப் பாகும்.

(உ..ம்) ஐதே காமம் யானே (நற்.143) வியக்கத்தக்க காமம் என்பதாம். (88)

380. முனைவு முனிவாகும்.

(உ..ம்) சேற்றுண் நிலை முனைய (அகம்.46) என்றக்கால் சேற்று நிலை முனிந்த என்பதாம். (89)

381. வையே கூர்மை.

(உ..ம்) வை இலை நெடுவேல் என்றக்கால் கூர்இலைவேல் என்பதாம். (90)

382. எறுழ் வலியாகும்.

(உ..ம்) வாள்உடை எறுழ்த்தோள் (அக.24) என்றக்கால் வலிஉடையதோள் என்பதாம். (91)

383. மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியான் புணர்ந்தனர் உணர்த்தல்
தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே.

இது புறனடை.

பொருண்மேன் சொல்லப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றையும் முன்னைச் சொல் பின்னைச் சொல் நோக்கி அதற்கு இயைந்த மொழிநாடி, அவற்றொடு புணர்த்து உணர்த்துக; அவ்வாறு உணர்த்தவே தத்தம் மரபின் திரியாப் பொருளவாய்த் தோன்றும், அவ்வாறு தெரிந்துணராக்கால் கொள்ளார்தாம் கருதிய பொருள் என்பது.

யாதோ கொள்ளாதவாறு எனின்? கடியுடை வியனகர் என்றக்கால் கடி என்பது கூர்மையும் விரைவும் படுமால் என்று நகரத்துக்கண் அவை ஏற்றற்க; காப்புடை நகர் என்று கொள்க, அதற்கு ஒத்த மொழியாகலின் என்பது. *(92)*

384. கூறிய கிளவிப் பொருள்நிலை அல்லது
வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே.

இதுவும் புறனடை.

சொல்லிப் போந்த உரிச்சொற்கள் அவ்வுரிய எனப்பட்ட பொருளின ஆகாது. வேறுவேறுபட்ட பொருளினவாய்த் தோன்றினும் அச்சொல்லப்பட்ட பொருளொடு படுத்துப் பொருள்படுமாறு அறிந்து கொள்க என்பதாம்.

புரைபட்ட என்புழிப் புரை என்பது ஈண்டுப் பிளவுப் பொருண்மையை விளக்கிற்று ஆகலின், இதனையும் உயர்வுப் பொருண்மையொடு புணர்த்து இரு பொருளும் அச்சொற்குப் பொருள் என்று கொள்க என்பதாம்.

இனிக் கண்கதழ எழுதினார் என்றக்கால் ஆண்டு விரைந்து எழுதினார் என்று விரைவின் பொருள் கொள்ளற்க; சிறப்ப எழுதினார் என்று கொள்க.

பிறவும் அன்ன. *(93)*

385. பொருட்குப் பொருள்தெரியின் அதுவரம்பு இன்றே.

இதுவும் புறனடை.

மேற் கூறப்பட்ட உரிச்சொல்லுள் உளவன்றே; அப்பொருட்கும் இப்பொருட்கும் உரிய என்று ஓதப்பட்டன; அவை உறு தவ நனி (தொல்.உரி.3) என்னும் தொடக்கத்தன. மற்றவற்றை மிகுதிப்பொருள என்றார்; அது பற்றி மிகுதி என்னை

எனப் பிறிது ஒன்றைவிடப் பெரிதாகல் என்பவால் எனின், அதனானே ஒழியான்; பெரிது ஆவது என்னை என்றான், எனச்சால ஆதல் என்றான். என்பதனானும் ஒழியான் சாலஆதல் எனப்படுவது என்னை? என்றான்; என எத்துணையும் பிறங்குதல் என்றான்; என, அத்துணையும் என்னை? என்று இவ்வாறு பிரித்துச் சொற்களால் தெரிபு கூறுமேல்; அது வேண்டா என்று விலக்கினவாறு. (94)

386. பொருட்குத் திரிபு இல்லை உணர்த்த வல்லின்.

இது மேல் சூத்திரத்திற்குப் புறனடை.

உரிச்சொல் பிறிது அலது, பொருள் உணருமாறு வல்லார்க்குப் பிறசொல் கொணர்ந்து பொருள் உணர்த்தல் வேண்டா; திரிபு இன்றி அச்சொல்லினானே உணரப்படும் என்றவாறு.

உறு என்ற பதம் மிகுதிப்பொருட்டு என்றக்கால் அம் மிகுதியையும் அதனானே உணரலாம், உணருமாறு வல்லார்க்குப் பிறசொல் கொணர்ந்து உரைத்தல் வேண்டா என்பது. (95)

387. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.

இதுவும் புறனடை.

யாம் சொல்லிய சொல்வாயிலே பற்றி உணர்த்துக; அத்துணையால் உணர்வார்க்கு அதுவே உணர்ச்சி வாயிலாம்; அல்லாக்கால் அவ்உணர்வோரை வலித்து ஆமாற்றால் உணர்த்துக என்பதாம்.

என்னை? பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள (தொல்.உரி) என்பதனால் உணராத மடவோரை மற்றொரு வாய்பாட்டான் உணர்த்துக. அல்லாக்கால், மேல் நோக்கிச் சில மலர்கொடு தூவிக்காட்ட உணருமேல், அஃதே உணர்ச்சி வாயிலாக அறிக. என்பது. (96)

388. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.

இதுவும் புறனடை.

மொழிப் பொருள்கள் என்பன அச்சொல்லப்பட்ட பொருள் அப்பொருள்கட்கே. *(97)*

389. எழுத்துப் பிரிந்து இசைத்தல் இவண்இயல்பு இன்றே.

*(எ..ன்)* புறனடை போல்வதொருவிதி கூறுதல் நுதலிற்று.

உரை - எழுத்துக்கள் பிரிந்து இசைக்கப்படா எ-று உரிச்சொல் என்றன பிறிது இலக்கணம் உடைய என்பது போந்ததாம்.

என்னை பிறிது இலக்கணம் எனின்? தம் ஈறு திரிதலும் பிறிது அவண் நிலையலும் *(தொல்.இடை.3)* உடைய இவையும் என்பது.

யாதோ எனின் கடிஎன் கிளவி *(தொல்.உரி.86)* கடும் புனல் *(குறுந்.103)* என்றாயிற்று. நம்பு *(தொல்.உரி.32)* எனப்பட்டது நம்பி என்றாயிற்று பிறவும் அன்ன (இவை தம்ஈறு திரிதல்)

இனி உருகெழு தோற்றம் *(புறம்.58,17)* என்புழி, உரு என்பதூஉம் கெழு என்பதூஉம் உரிச்சொல். *(இது பிறிது அவண் நிலையல்)* *(98)*

390. அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருள்குறை கூட்ட
வியன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்பு தமக்கு இன்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையின் கிளந்தவற்று இயலான்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்.

இதுவும் ஒரு புறனடை.

அச்சொல்லிப் போந்த உரிச்சொற்கள் அன்றி, அவை போல்வன பிறவும் உலகத்துப் பலவாற்றானும் பரந்து வரும் உரிச்சொல் எல்லாவற்றையும் இசையும் குறிப்பும் பண்பும் என்னும் மூன்று வகைப்பட்ட பொருளையும் சார்த்தி உணர்த்துதல் குறை கூட்ட, அம் மூன்று பொருண்மைக்கண்ணும் அவை இத்துணையே என்று வரையறுக்கும் வரையறை இன்மையின் முன்னர் உரிச்சொற்கு ஓதப்பட்ட இலக்கணத்தின் பிழையாமல் ஓம்படை ஆணையின் கிளந்தவற்றியலான் உணர்க என்றவாறு.

ஓம்படை ஆணை என்பது பாதுகாவல் பற்றிய ஆணை. அருமை இருமை தொன்று கருமை சேண்மை என்னுந் தொடக்கத்தனவற்றைப் பிறநூலார் இருமை பெருமையும் கருமையும் செய்யும் என்றும் தொன்றென் கிளவி தொழிற்பயில் வாகும் என்றும் எடுத்துஓதுப என்பதும் அது. (99)

**உரிச் சொல்லியல் முற்றும்**

## இளம்பூரணர் உரை
## 9. எச்சவியல்

391. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.

என்பது சூத்திரம்.

இவ்ஓத்து என்ன பெயர்த்தோ எனின், எல்லா ஓத்தினுள்ளும் எஞ்சிய பொருள்களை உணர்த்தினமையின் எச்சஇயல் என்னும் பெயர்த்து.

இனி, இத்தலைச் சூத்திரம் என் நுதலிற்றோ எனின் இத்துணைப்பட்ட சொல்லினான் செய்யுள் செய்யப்பெறும் என்பது உணர்த்துதல் நுதலிற்று.

இயற்சொல்லும் திரிசொல்லும் திசைச்சொல்லும் வடசொல்லும் என நான்கும் செய்யுள் செய்தற்கு உரிய சொல் ஆதல் உடைய என்றவாறு.

இயற்சொல் என்பது, தமிழ் வழங்கு நாட்டு விகாரம் இன்றித் தமிழ் இயற்கை இலக்கணப்பாடு செவ்வனுடைய சொல்; அவை முன்னர் உணர்த்துப.

திரிசொல் என்பது, செய்யுள் இன்பம் நோக்கி அவ் இயற்சொற்களை அவ்வாய்பாடு திரித்து வேறுவாய் பாட்டவாக்கும் செய்யுள் உடைய சொல்.

என்னை?

சேரிச் சொல்லின் முட்டுஉறல் அஞ்சிச்
செய்யுட்குப் புலவர் செய்துகொண் டன்றே.

என்பது புறச்சூத்திரம். அவைதாம் வழக்கினுள் இன்மை காரணம் அமைதல் என்பஆகலின் அவையும் முன்னர் உணர்த்துப.

திசைச்சொல் என்பது, செந்தமிழ்நாட்டை அடையும் புடையுங்கிடந்த திசைநாட்டார் வழங்கும் சொல்; அவையும் முன்னர் உணர்த்துப.

வடசொல் என்பது ஆரியச் சொல் போலும் சொல்; அவை முன்னர் விரித்து உரைப்ப.

பெயர் வினை இடை உரி எனப்பட்ட நான்கு சொல்லுமே இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் எனப்பட்டன. பிற இல்லை.

திரிசொல் செய்யுட்கே உரிய. ஒழிந்த மூன்றும் வழக்கிற்கு உரியவாகிச் செய்யுட்கும் புகும் என்றவாறு. (1)

392. அவற்றுள்,
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே.

(எ..ன்) மேல், நிறுத்த முறையானே இயற்சொல்லை இன்ன என்று இலக்கண முறைமையான் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

மேற் சொல்லப்பட்ட நான்கு சொல் உள்ளும் இயற்சொல் என்று கூறுப்படுவன, செந்தமிழ் நிலத்தார் வழங்கும் வழக்கத்திற்குப் பொருந்தித் தத்தம் பொருளின் வழாமல் நடக்கும் சொல் என்றவாறு.

அவை சோறு, கூழ், பால், பாளிதம் என்னும் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலம் என்பது வையை ஆற்றின் வடக்கு; மருத ஆற்றின் தெற்கு; கருவூரின் கிழக்கு மருவூரின் மேற்கு. மற்று இவற்றைத் தம்பொருள் வழாமை இசைக்கும் என்பது என்னை? ஒழிந்தன தம்பொருள் வழுவுமோ எனின் அற்று அன்று; நாயை ஞமலி என்ப பூமிநாட்டார் என்றக்கால் அச்சொல் எல்லா நாட்டாரும் பட்டாங்கு உணரார்; நாய் என்பதனை ஆயின் எவ்வெத்திசை நாட்டாரும் உணர்ப என்பது. (2)

393. ஒரு பொருள் குறித்த வேறுசொல் ஆகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
இருபாற்று என்ப திரிசொல் கிளவி.

(எ..ன்) முறையானே, திரிசொல் இவைஎன்று இலக்கணத்தான் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

ஒருபொருளைக் கருதிப் பல சொல்லான் வருதலும், பலபொருளைக் கருதி ஒரு சொல்லான் வருதலும் என இரு கூற்றன ஆகும் திரிசொற்கள் என்றவாறு.

ஒரு பொருளைக் குறித்த வேறு சொல்லாகி வருவன, அடுக்கல், பிறங்கல், விண்டு, ஓங்கல் என இவை.

வேறுபொருள் குறித்த ஒருசொல் உந்தி என்பது; ஆற்றிடைக்குறையும், கொப்பூழும், தேர்த்தட்டும்; யாழ் அகத்ததோர் உறுப்புமான ஞெழிலும் என இவைஎல்லாம் விளங்கி நிற்கும்.

இனிக் கிள்ளை மஞ்ஞை என்னும் தொடக்கத்தன, ஒரு கூறு நிற்ப ஒரு கூறு திரிந்தன. உந்தி அடுக்கல் என்னும் தொடக்கத்தன முழுவதூஉம் வேறுபடத் திரிந்தன; பிறவும் அன்ன. *(3)*

394. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தினும்
தங்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

(எ..ன்) நிறுத்த முறையானே திசைச்சொல் இவை என்று இலக்கணத்தான் பகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

செந்தமிழ் நாட்டை அடையும் புடையும் கிடந்த பன்னிரு நிலத்தார் தங்குறிப்பினையே இலக்கணமாக உடைய திசைச் சொல் கிளவிகள் என்றவாறு.

(உ..ம்) தாயைத் தள்ளை என்ப குட்டநாட்டார். நாயை ஞமலி என்ப பூழிநாட்டார், பிறவும் அன்ன.

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலம் ஆவன; பொதுங்கர் நாடு, தென்பாண்டிநாடு, ஒளிநாடு, குட்டநாடு, பன்றிநாடு, கற்காநாடு, சீதநாடு, பூழிநாடு, மலைநாடு, அருவா நாடு, அருவா வடதலை நாடு, குடநாடு என இவை.

தங்குறிப்பினவே என்றது, அவை ஒரு வாய்பாட்டவே அல்ல. தத்தம் மரபினும் பின் வேறு வேறு வாய்பாட்ட என்றற்கும், அவர் எவ்வாறு குறித்து வழங்கினாரோ அஃதே அவற்றிற்கு இலக்கணம் என்றற்கும் என்பது. *(4)*

395. வடசொல் கிளவி வடஎழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.

(எ..ன்) நிறுத்த முறையானே வடசொல் இவை என்றவற்றை இலக்கணத்தான் அறியக் கூறுதல் நுதலிற்று.

வடசொற் கிளவி என்று சொல்லப்படுவது ஆரியத்திற்கே உரிய எழுத்தினை ஒரீஇ, இருதிறத்தார்க்கும் பொதுவாய எழுத்தினை உறுப்பாக உடைய ஆகும் சொல் என்றவாறு.

அவை உலகம் குங்குமம் நற்குணம் என்னும் தொடக்கத்தன.

குங்குமம் என்ற இடத்து இரு சார்க்கும் பொது எழுத்தினான் வருதல் உடைமையும் ஆரியத்தானும் தமிழானும் ஒரு பொருட்கே பெயராகி வழங்கி வருதலும் உடைமையும் அறிக. (5)

396. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.

இதுவும் வடசொற்கிளவியாமாறு கூறுகின்றது.

இருசார் எழுத்திற்கும் ஒத்த வழக்கினான் வாராது சிதைந்து வந்தன ஆயினும் பொருந்தி வந்தன வரையப்படா வட சொல் ஆதற்கு என்பது.

அவை, நிதியம் துஞ்சும் (அகம்.227) எனவும், தசநான்கு எய்திய பணைமருள் நோன்றாள் (நெடுநல்.11) எனவும் வரும். (6)

397. அந்நாற் சொல்லும் தொடுக்கும் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர்.

அந்நான்கு வகைச் சொல்லானும் செய்யுள் செய்யும் இடத்து இவ்அறுவகைப்பட்ட விகாரமும்படச் செய்யுள் செய்யப் பெறுப என்பது உணர்த்தியவாறு.

நாட்டல் வலிய என்றது ஒருவரால் நாட்டுதல் வன்மை இலக்கணத்தினை அவை உடைய என்றவாறு.

வலிக்கும்வழி வலித்தல்; குறுந்தாள் கோழி என்பதனைக் குறுத்தாள் கோழி என வலித்தல்

தட்டை எனற்பாலதனைத் தண்டை என மெலிக்கும் வழி மெலித்தல்.

விரிக்கும்வழி விரித்தல்; தண்துறைவர் எனற்பாலதனைத் தண்ணந் துறைவர் (குறுந்.296) என விரித்தல்.

தொகுக்கும் வழித் தொகுத்தல் மழவரை ஓட்டிய என்பதனை மழவர் ஓட்டிய (அகம்.1) எனத் தொகுத்தல்.

நீட்டும்வழ நீட்டல் ; பச்சிலை எனற்பாலதளைப் பாசிலை (புறம்.54) என நீட்டல்.

குறுக்கும்வழிக் குறுக்கல்; உண்டார்ந்து என்பதனை உண்டருந்து எனக் குறுக்கல்.

பத்துவகை விகாரத்துள் அறுவகை விகாரம் ஈண்டுக் கூறினார்.

இனம் இல்லதனை இனம் உடையது போலச் சொல்லுதலும், இனம் உடையதனை இனம் இல்லது போலச் சொல்லுதலும் இனச் சுட்டு இல்லாப் பண்பு கொள் பெயர்க் கொடை (கிளவி.18) என்பதனுள் சொல்லிப் போந்தாம்.

இனி, இடைச்சொல் போக்கல் புடைச்சொல் புகுத்தல் என இரண்டும் நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று (எச்ச.8) எனப்பட்டு அடங்கும். (7)

398. நிரனிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவை நான்கு என்ப மொழிபுணர் இயல்பே.

என்பது நிரனிறை, சுண்ணம், அடிமறி, மொழிமாற்று என நான்கு வகையான் மொழிகள் தம்முள் புணரும் செய்யுள் அகத்து என்பது உணர்த்தியவாறு.

அவையாமாறு அவையவற்றின் சிறப்புச் சூத்திரங்களால் அறிக. (8)

399. அவற்றுள்,
நிரனிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

நிரனிறைப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இச் சொல்லப்பட்டவற்றுள் நிரனிறை என்று சொல்லப் படுவது யாதோ எனின், வினையின்னானும் பெயரினானும் ஆராயத் தோன்றிச் சொல்வேறு நிற்பப் பொருள்வேறு நின்று உணரப்படும் என்றவாறு.

அவற்றுள் வினையின் தோன்றியது :
உடலும் உடைந்து ஓடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடல் இருள் ஆம்பல் பாம்பு என்னக் - கெடல் அடுஞ்சீர்த்
திங்கள் திருமுகமாய்ச் சேர்ந்து

என்பது, உடலும் உடைந்தோடும் மலரும் பார்க்கும் என்ற வினைச்சொற்கள் தம்முள் பொருள் இயைபு இன்றி வேறு நின்றன. இனிக் கடல் இருள் ஆம்பல் பாம்பு எனநின்ற பெயர்ச்சொற்களும் அவ்வாறே நின்றமை அறிக. அவை தம்முள் பொருள் இயையுமாறு : உடலும் கடல், உடைந்து ஓடும் இருள், மலரும் ஆம்பல், பார்க்கும் பாம்பு எனக் கூட்டுக.

இனிப்பெயர் நிரனிறை வருமாறு : கொடிகுவளை கொட்டை நுசுப்பு உண்கண்மேனி எனவரும். இனி, அவை பொருள்கொள்ளுமாறு கொடி நுசுப்பு, குவளை உண்கண், கொட்டை மேனி எனவரும்.

நினையத் தோன்றும் என்றதனான் மொழிமாற்றுப்போல நிற்கும் நிரல்நிறையும் உள என்பது. களிறும் கந்தும் போல நளிகடல் கூம்பும் கலனும் தோன்றும் எனவரும். களிறும் கந்தும் முறையானே கலனும் கூம்பும் எனற்பால; அவ்வாறு கூறாது கூம்பும் கலனும் என்றமையான் மயக்க நிரல் நிறை ஆயிற்று என்க. *(9)*

400. சுண்ணந்தானே
பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்.

**(எ..ன்)** நிறுத்த முறையானே சுண்ணம் என்னும் பொருள் கோளாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

சுண்ணம் எனப்படுப இரண்டு அடியால் எட்டுச்சீரால் பொருந்துமாறு அறிந்து துணித்து இயற்றவரும் என்றவாறு.

**(உ..ம்)** சுரையாழ அம்மி மிதப்ப வரையனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலைஎன்ப
கானக நாடன் சுனை - எனவரும்.

இதனை ஒட்டுமாறு; மொழிகளைத் துணித்து இயற்றிச் சுரைமிதப்ப, அம்மிஆழ, யானைக்குநிலை, முயற்கு நீத்து எனக் கூட்ட இயைந்தவாறு கண்டுகொள்க.

பட்டாங்கு அமைந்த என்பது இயைபுடைய செய்யுள் நடைக்கு ஒத்த அடியாதல் வேண்டும் என்றற்கு என்பது. *(10)*

401. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

**(எ..ன்)** நிறுத்த முறையானே அடிமறிப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

அடிமறி என்று சொல்லப்படுவது சீர் கிடந்துழியே கிடப்ப, அடிகள் முதலும் இடையும் கடையும்படச் சொல்லிக் கண்டு கொள்க.

402. பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரியும்
தோற்றமும் வரையார் அடிமறி யானே.

**(எ..ன்)** எய்தியது விலக்குதல் நுதலிற்று.

அடிமறிப் பொருள்கோள் ஆராயும் இடத்து, ஈற்றடியின் இறுதிச்சீர் எருத்தத்துச் சீராய்க் கிடந்தும் வரையப்படாது என்றவாறு.

சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூரர மகளிர் ஆரணங்கினரே
சாரன் நாடநீ வரல் ஆறே
வாரல் எனினே யான் அஞ்சுவலே

என்புழி, அஞ்சுவல்யான் என் இறுதிச்சீர் எருத்துவயின் திரிந்தவாறு கண்டு கொள்க. இவ்வாறு எங்கும் மாற்றுக. *(12)*

403. மொழி மாற்று இயற்கை
சொன்னிலை மாற்றிப் பொருள்எதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளால்.

(எ..ன்) ஒழிந்து நின்ற மொழிமாற்றுப் பொருள்கோள் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

மொழிமாற்றினது தன்மை ஆவது நின்ற சொல்லை மொழிமாற்றி, முன்னும் பின்னும் கொள்ளும் இடம் அறிந்து கொள்க என்றவாறு.

(உ..ம்) குன்றத்து மேல குவளை குளத்துஉள
செங்கொடு வேரி மலர்

இதனைக் குவளை குளத்துஉள, செங்கொடு வேரிமலர் குன்றத்து உள என மொழி மாற்றுக.

மற்றுச் சுண்ணத்தோடு இதனிடை வேற்றுமை என்னை எனின், சுண்ணம் ஈரடி எண் சீருள் அவ்வாறு செய்யப்படும்; இதற்கு அன்னதோர் வரையறை இல்லை என்றவாறாம். *(13)*

404. தநநு எஎனும் அவைமுதல் ஆகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா.

(எ..ன்) ஐயம் அறுத்தல் நுதலிற்று.

த, ந, நு, எ என்று சொல்லப்பட்ட நான்கு எழுத்தினையும் முதலாகவுமாய் ன,ள,ர என்னும் மூன்று எழுத்தினையும் ஈறாகவுமாய் உடைய ஆகிய தொடர்ச்சிக் கிழமை கருதிவரும் பெயர் அவற்றைப் பிரித்து இடை அறுத்து உணரலாம் கொல்லோ எனின், அவை பிரிப்பப் பிரியா, நின்ற ஆற்றானே நின்று பொருள் படின் அன்றி என்பது.

*(உ..ம்)* அவை தமன், தமள், தமர்; நமன், நமள், நமர், நுமன், நுமள், நுமர், எமன், எமள், எமர் எனவரும்.

உம்மையால் பிறவும் பிரிப்பாப் பிரியாதன உள; அவை தாய், ஞாய், யாய் எனவரும்.

வில்லி, வாளி என்பனவும், பிறவும் அவ்வாறு வருவன பிரிப்பப் பிரியா என்று கொள்க.

இவை ஒட்டுச்சொன் பொருளொடு நிற்பன என்றும், இவற்றை ஒரு சொல்லாகாது என்றும் மயங்கற்க; ஒரு சொல் என்பதே கருத்து. *(14)*

405. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று
அவைமூன்று என்ப ஒருசொல் அடுக்கே.

*(எ..ன்)* இதுவும் வழக்கிற்கும் செய்யுளிற்கும் பொதுவாயதோர் முடிபு கூறுதல் நுதலிற்று.

ஒரு சொல் பலகால் அடுக்கி மூன்று காரணமும் படச் சொல்லப்படும் என்றவாறு.

இசைநிறை எனவே, அது செய்யுள் இலக்கணம் என்பது போந்ததாம்.

*(உ..ம்)* ஏஎ! ஏஎ! அம்பன்! மொழிந்தனள்! எனவரும் ஒழிந்தன இரண்டும் வழக்கினுள் அடுத்துவரும். அசைநிலை : ஒக்கும்ஒக்கும் எனவும், மற்றோ மற்றோ எனவும் வரும். பொருளொடு புணர்தல்: பாம்பு பாம்பு, கள்ளர் கள்ளர், படை படை, தீத்தீ எனவரும்.

அவற்றை இணைத்தால் அடுக்கிவரும் என்பதனை முன்னர்ச் சொல்லுதும். (15)

406. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகை என்று
அவ்வாறு என்ப தொகைமொழி நிலையே.

(எ..ன்) தொகைச் சொற்களைப் பெயரும் முறையும் தொகையும் உணர்த்துதல் நுதலிற்று.

பெயரும் முறையும் தொகையும் அதுவே. வேற்றுமைத் தொகையை முன்வைத்தார்; அதுபகுதிப்படும் ஆதலின். அன்மொழித் தொகையைப் பின் வைத்தார்; அஃது எல்லாவற்றையும் பற்றிப் பிறக்கும் ஆகலான். (16)

407. அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல.

(எ..ன்) நிறுத்த முறையானே வேற்றுமைத் தொகையது இலக்கணம் கூறுதல் நுதலிற்று.

வேற்றுமை உருபு தொக்குநின்ற தொகைச் சொற்கள், அவ்உருபு இருந்தாங்கே பொருள்படும் என்றவாறு.

அவையாவன நிலம்கடந்தான், தாய்மூவர் கரும்புவேலி, வரைவீழ் அருவி, யானைக்கோடு, குன்றக் கூகை என இவை.

இவற்றையும் அவ்உருபு விரிந்தாங்கே பொருள்படுமாறு அறிந்து கொள்க.

அத்தொகுதிக்கண் உருபுகள் பலவகையும் புலப்படாதே நின்றன என்பர் ஒரு சாரார். ஒரு சாரார் இல்லை என்ப. (17)

408. உவமத் தொகையே உவம இயல.

(எ..ன்) நிறுத்த முறையானே உவமத்தொகை உணர்த்துதல் நுதலிற்று.

உவமத் தொகைக்கண் அவ்உருபு தொக்கு நின்றாலும் அவ்உருபு விரிந்தாங்கே பொருள்படும் என்றவாறு.

உவமம் தொகுங்கால் வினை, பயன், மெய், உரு என்ற நான்கும் பற்றித் தொகும்.

வினை உவமம் - புலிப்பாய்த்துள் என்பது
பயன் உவமம் - மழை வண்கை என்பது
மெய் உவமம் - துடிநடு என்பது
உரு உவமம் - முத்து முறுவல் என்பது

முத்து - போலும் முறுவல் என்று உவம உருபு விரிந்து நின்றாங்கே அவ்உருபு தொக்க நிலைமைக்கண்ணும் பொருள் ஒக்கும் என்பது.

மற்று, இவ்உவமத்தொகை என்று காட்டின எல்லாம் வேற்றுமை உருபு பற்றி அன்றி வாரா, என்னை? துடிநடு என்ற இடத்துத் துடியை ஒக்கும்நடு, துடிநடு என்று இரண்டன் உருபு பற்றி வரும் ஆதலின் உவமத்தொகை என்றது என்னை எனின்?

அதற்கு ஒரு சாரார் சொல்லுவது : துடிநடு என்புழி உவமஉருபும் வேற்றுமை உருபும் என இரண்டும் தொக்க எனினும்; துடிபோலும் நடு எனத் தொகைக்கு உவமப் பொருளே

சிறப்புடைத்தாகலின் அது தொகை என்பது; ஐகார உருபு அவ் உவம உருபினை நோக்கி வந்தது என்ப. என்னை, துடியை நடுவாகக் கொள்ளாதகலின் என்பது.

இனி, அதற்கு மெய்யுரை வல்லாரவாய்க் கேட்டு உணர்க.

409. வினையின் தொகுதி காலத்து இயலும்.

உரை : வினைச்சொல் தொகுங்கால் காலம் தோன்றத் தொகும் எ..று காலத்து இயலும் என்பது எக்காலும் காலம் உடையவாய் இயலும் என்றவாறு.

(உ..ம்) கொல்யானை என்பது கொன்றயானை, கொல்லாநின்ற யானை கொல்லும் யானை, என மூன்று காலத்திற்கும் அதுவே வாய்ப்பாடு, பிறிது இல்லை. மற்றுக் கொல்யானை என்றானேல் நிகழ்காலமும் அறியலாம். கொல்லிய ஓடுவதனைக் கண்டு கொல்யானை என்றானேல் எதிர்காலம் என்பது அறியலாம். பிறவும் அன்ன. *(19)*

410. வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று
அன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்னது இதுஎன வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே.

பண்பு தொகும் இடத்து இந்நான்கும் பற்றித் தொகும் என்பது கருத்து.

வண்ணம் பற்றித் தொக்கது. கருங்குதிரை என்பது, இது விரியும் காலை கரியது குதிரை என விரியும். கரியதும் அதுவே, குதிரையும் அதுவே; கருமை உடைமையின் குதிரை கரியது எனப்பட்டது. இன்னது இது என நிற்றல் அதற்கு இலக்கணம் இன்னது என்பது கரியது என்றால்; இது என்பது குதிரை என்றல்.

இனி, வடிவு பற்றித் தொகுத்தல் வட்டப்பலகை என்பது; அது விரியும் காலை, வட்டம் ஆகியது பலகை என விரியும் ஆண்டும் இன்னது இது என்னும் குணம் நுதலி நிற்கும்.

இனி, அளவு பற்றித் தொக்கது குறுங்கோல் என்பது; அது விரியுங்கால், குறியது கோல் என விரியும். இன்னது இது என நிற்கும்.

இனிச் சுவை பற்றித் தொக்கது. தீங்கரும்பு என்பது; அது விரியுங்கால், தீவியது கரும்பு என விரியும். ஆண்டும் இன்னது இது எனும் குணம் நுதலிற்று.

இனி, அன்ன பிறவும் என்றதனால், தண்ணீர், நறும்பூ, நன்னுதல், பருநூல், மெல்லிலை, நல்லாடை என எத்துணை உளமன் அப்பொருள் குணம். அக்குணம் நுதலி இன்னது இது என வரும்; அவை எல்லாம் பண்புத்தொகையே என்று கொள்க என்பதாம்.

இனி, என்ன கிளவியும் என்றதனால் கேழற்பன்றி, வேழக்கரும்பு, சகரக்கிளவி (தொல்.எழுத்து.62) அகரமுதல் (தொல்.எழுத்.1) மாமரம் என இனவும் கொள்க. இவை ஒரு பொருட்கண் இருபெயர்பட வரும். இவற்றுக்கண்ணும் இன்னது இது என நிற்றல் ஒக்கும். கேழல் எனப்பட்டது அதுவே பன்றியும் அதுவே. பிறவும் அன்ன.

மற்று, வேற்றுமைத் தொகையும் உவமத்தொகையும் வேற்றுமை உருபும் உவமஉருபும் தொக்கமயின் தொகை என்றல் அமையம்; ஒழிந்த வினைச்தொகையும், பண்புத் தொகையும் அவ்வாறு தொக்கு நின்றிலவால் எனின், அவ்வாறு தொகுதலேயன்று தொகையாவது.

கொல்யானை என்புழிக் கொல்லும் என்னும் வினைச்சொல் ஒரு கூறு நிற்ப ஒரு கூறு தொக்கமையின் வினைத்தொகை ஆயிற்று. கருங்குதிரை என்புழிக் கரியது எனினும் பண்புப்பெயர் ஒரு கூறுநிற்ப ஒரு கூறு தொக்கமையின் பண்புத்தொகையாயிற்று.(20)

411. இருபெயர் பலபெயர் அளவின்பெயரே
எண்ணியல் பெயரே நிறைப்பெயர்க்கிளவி
எண்ணின் பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலத்தே உம்மைத் தொகையே.

என்பது இவ் ஆறிடத்தும் உம்மை தொகற்பாலது என்று உணர்த்திற்று.

இருபெயர்க்கண் தொக்கது, உவாப் பதினான்கு, என்பது. அது விரியுங்கால் உவாவும் பதினான்கும் என விரியும்.

பல பெயர்க்கண் தொக்கது புலிவில் கெண்டை, என்பது. அது விரியுங்கால் புலியும் வில்லும் கெண்டையும் என விரியும்.

அளவு பற்றித் தொக்கது, தூணிப்பதக்கு என்பது. அது விரியுங்கால் தூணியும் பதக்கும் என விரியும்.

எண்ணியற்பெயர் பற்றித் தொக்கது, பதினைவர் என்பது. அது விரியுங்கால் பதின்மரும் ஐவரும் என விரியும்.

நிறைப்பெயர் பற்றித் தொக்கது, தொடியரை; என்பது. தொடியும் அரையும் என விரியும்.

எண்ணின்பெயர் பற்றித்தொக்கது, பதினொன்று, என்பது. அது விரியுங்கால் பத்தும் ஒன்றும் என விரியும்.

மற்றும், பல பெயர் என அமையாதே இருபெயர் என வேண்டியது என்னை, இரண்டையும் பல என்பவால் எனின், அற்று அன்று; இரண்டையும் பன்மை என்று வேண்டான் இவ் ஆசிரியன் என்பது.

ஆயின், மேல் ஒன்றறி சொல்லே பலவறிசொல் (தொல். கிளவி.3) என்புழி இரண்டையும் பல என்று வேண்டினனால் எனின், அது விகாரம்; என்னை, இரண்டும், இரண்டின் இறந்த பன்மையும் வந்தன போயின என, ஒரு பன்மைச் சொல்லே ஏற்கும் ஆகலின், ஆண்டு இரண்டினைப் பலவற்றுள் அடக்கிக் கூறினான் என்பது. *(21)*

412. பண்புதொக வரூஉங் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்று நின்று இயலும் அன்மொழித் தொகையே.

*(எ..ன்)* மேல் நிறுத்த முறையானே ஒழிந்து நின்ற அன்மொழித் தொகையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

உரை : அக்கூறப்பட்ட மூன்று தொகைச்சொல் ஈற்றுக் கண்ணே நின்று நடக்கும் அன்மொழித்தொகை. எ-று.

பண்புத் தொகைப் புறத்துப் பிறந்தது வெள்ளாடை என்பது. அதனைப் படுத்தல் ஓசையால் சொல்லவெண்மை மேலும் ஆடை மேலும் கிடவாது, அவ்ஆடை உடுத்தாள் மேல் கிடக்கும் என்பது. அந்நிறைமொழி ஓசையன்றிப் பிறிதொரு மொழி ஓசைபட்டுப் பொருள் கொள்ளும் ஆகலான் அம்மொழி அன்மொழி ஆயிற்று என்பது. அஃது அன்மொழித்தொகை ஆயக்காலும் வெளியது ஆடை என்றே விரியும்; பிறிது இல்லை.

உம்மைத் தொகை பற்றிப் பிறந்தது தகர ஞாழல், என்பது. அது விரியுங்கால் தகரமும் ஞாழலும் என விரியும். அன்னதன் தொகைக்கண் ஓசை வேறுபடச் சொல்லத் தகரத்தின் மேலும் ஞாழலின் மேலும் கிடவாது அவை உடையாள் மேல் நிற்கும்.

இனி வேற்றுமைத் தொகைப் பற்றிப் பிறந்தது பொற்றாலி என்பது. அது விரியுங்கால், பொன்னான் ஆய தாலி பொற்றாலி என்பதாம். பிறிதானும் விரியும். பின்னர் அத்தொகை பொன்மேலும் தாலிமேலும் கிடவாது பொற்றாலி உடையாண்மேல் நிற்கும், ஓசை வேறுபட்டான் என்பது.

அன்மொழித்தொகை இம் மூன்று தொகையும் பற்றிப் பிறத்தலின், ஓர் மிகுதி குறை இல்லை ஒக்கும் என்றவாறு.

மற்றுத்தொகை அதிகாரத்தின்முன் வைக்கப்பட்டதூஉம் சிறப்புடையதுஉம் வேற்றுமைத் தொகையாதலின், ஈண்டு அதனை முற்கூறாது. பண்புத்தொகை முன் கூறியது என்னை எனின் அதனான் பிறவும் உள கொள்ளப்படுவன; அவை யாவையோ எனின், ஒழிந்து நின்ற உவமத்தொகை, வினைத்தொகை பற்றியும் பிறக்கும் அன்மொழித் தொகை என்பது.

உவமத்தொகை பற்றிப் பிறந்தது, அறல் கூந்தல் என்பது. அது விரியுங்கால் அறல்போலும் கூந்தல் என விரியும் அதுதொக்குழி அறல் மேலும் கூந்தல் மேலும் கிடவாது அறல் கூந்தல் உடையாள் மேல் நிற்கும்.

வினைத்தொகை பற்றித் தோன்றியது திரிதாடி என்பது. அது விரியுங்கால் திரிந்ததாடி என விரியும். அது தொக்குழித் திரிவின் மேலும் தாடி மேலும் கிடவாது திரிதாடி உடையான் மேல் நிற்கும்.

இவை இரண்டும் வழக்குப் பயிற்சி அவை போல அக்காலத்து இன்மையின் இலேசு பற்றி எடுத்துக்கொண்டார் என்பது. (22)

413. அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்கு உடன் நிலையலும்
அம்மொழி நிலையா தன்மொழி நிலையலும்
அந்நான்கு என்ப பொருள்நிலை மரபே.

(எ..ன்) இதுவும் அத்தொகைக் கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

தொகுவன இருவகை மொழிகள் ஆவன; இவ் இருவகை மொழியும் இருபொருளின; பின் தொக்க இடத்து அவற்றைச் சொல்லுவான் அத்தொகைக்கண் முன்னதன் பொருள் உணர்தல் உற்றுச் சொல்லுதல், பின்னதன் பொருள் உணர்தல் உற்றுச் சொல்லுதல், இரண்டன் பொருள் உணர்தல் உற்றுச் சொல்லுதல், இரண்டின் மேலும் நில்லாது பிறிதோர் பொருள் உணர்தல் உற்றுச் சொல்லுதல் என நால்வகை இலக்கணத்தான் பொருள் உணர நிற்கும் என்றவாறு.

அவற்றுண், முன்மொழிப் பொருள் உணர நின்றது வேங்கைப் பூ என்பது.

முன்மொழி பின்மொழியாதல், இடமும் காலமும் என இரு வகையால் உணரப்படும். அவற்றுள் இடத்தான் முன்மொழிப் பொருள் ஆயிற்று; காலவகை நோக்கிப் பின்மொழிப் பொருளாம்.

வேங்கை என்பதூஉம் பொருள் இல்லாதது அன்றுமன்: அப்பொருளுடன் அவன் அறியல் உற்றது பூவினை. அதனைச் சிறப்பிப்பான் வந்தது வேங்கை என்னும் சொல் என்பது.

இருமொழிப் பொருள் உணரநின்றது உவாப்பதினான்கு என்பது. பிறவும் உம்மைத்தொகையான் வருவன எல்லாம் இருமொழிப் பொருள்பட நிற்கும் என உணர்க.

அம்மொழி நிலையாது அன்மொழிப் பொருள்பட நின்றன முன், அன்மொழித்தொகைப்படக் காட்டினஎல்லாம் என்பது. அவை வெள்ளாடை என்னும் தொடக்கத்தன.

மற்று, இன்னுழிப் பொருள் நிற்கும் எனின் ஒழிந்துழி எல்லாம் பொருள் இல்லாமையாம் ஆகும் ஆகவே, எல்லாச் சொல்லும் பொருள்குறித் தனவே (தொல்.பெயரி.1) என்பதனொடு மலைக்கும் பிறஎனின், மலையாது; என்னை, மற்றையுழிப் பொருள் இல்லை என்பது அன்று. அவன் உணர்தலுறவு நோக்கி இது சொல்லினார் என்பது. *(23)*

414. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய.

(எ..ன்) இதுவும் ஒட்டுச்சொற்கண்ணே கிடந்ததோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

அறுவகைத் தொகைச் சொல்லும் எழுவாய் வேற்றுமை இயல்பாம் என்று ஈண்டு எய்துவித்தார் என்றவாறு.

மற்று, ஒட்டுச்சொற்களை ஒரு சொன் நடையன எனப்போந்த இலேசு என்னைஎனின், அவை பல சொன்மைப்படப் பொருள் இசையா, ஒருசொல் விழுக்காடுபடத் திரண்டு இசைக்கும் என்பது கருத்து.

அதனை யானைக்கோடு, வேங்கைப்பூ என்பனவற்றான் அறிக. கற்சுனைக் குவளை இதழ் என்பதும் அது. *(24)*

415. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்துஎன மொழிமனார் புலவர்.

(எ..ன்) உம்மைத்தொகையுள் ஒரு சாரனவற்றுக்கண் படுவதோர் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

உயர்திணை மருங்கின் உம்மைத் தொகைச் சொல்லுக்கு இறுதி பலரைச் சொல்லும் சொல் நடைத்தாக என்று சொல்லுப ஆசிரியர் என்றவாறு.

(உ..ம்) கபிலபரணர்.

இவ்வாறு அத்தொகைச் சொல்இறுதி பலர் சொல் நடைத்து அன்றிக் கபிலன்பரணன் என னகர ஈறாய் நிற்பின், அது வந்தான், போயினான் என்னும் ஒருமை - வினை ஏற்பின் அல்லது, வந்தார், போயினார் என்னும் பன்மை வினை ஏலாது.

இனிப் பலர் சொல் நடைத்து எனவே, இவ்இருவர் மேலும் வினை ஏற்கும்; அதனான் இது சொல்லினார் என்பது.

மற்றுத் தொகைச் சொற்கண் தொகுவது தொக்கு நின்றக்கால், தம் ஈறு கருதின பொருட்கு ஏற்கும் முடிவினை நின்றாங்கே நின்றுகொள்ளும்; இதுவாயின் இறுதி நின்றாங்கே நிற்பப் பொருட்கு ஏற்ப முடிபு ஏலாமையான் இறுதிபோதல் வேண்டிற்று என்பது. (25)

416. வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றுஅவற்று இயலான்
இன்ன என்னும் குறிப்புரை ஆகும்.

(எ..ன்) மேல் தொகை அதிகாரம் கூறினார்; அவை எல்லாம் விட்டு, இனி ஒரு சொன்மரபு வழூஉக்காத்தல் நுதலிற்று.

இயங்காதவற்றை இயங்குவதுபோலச் சொல்லுதலும், சொல் நிகழாதவற்றைச் சொல் நிகழ்த்துவன போலச் சொல்லுதலும், அவ்வப் பொருள் இயல்புபற்றி அவை அன்ன செய்கை உடையவற்றைப் போலச் சொல்லல் உற்றான்; அது மனக் குறிப்பினான் ஆய்ந்து, அவற்றது உரை அன்று என்பது கொள்க.

அன்னவை எல்லாம் என்பது அவ் வாராமரபினவும் பல வகைய; ஒரோ ஒன்றே அல்ல என்றற்கு என்பது.

வாரா மரபின வரக்கூறுதல் வகுமாறு : மலை வந்து கிடந்தது, நெறி வந்து கிடந்தது எனவரும். மலைக்கும் நெறிக்கும் அன்ன செய்கை இன்று ஆகலின் என்பது.

இனி, என்னா மரபின எனக் கூறுதல் வருமாறு : நிலம் வல் என்றது, நீர் தண் என்றது, இலை பச்சென்றது எனவும், செங்கானாராய்! எனவும் வரும்.

விலங்கும் மரனும் புள்ளும் உள்ள நோய் உற்றார்க்கு மனக்குறைக்கு மறுதலை மாற்றம் கூறுவனபோலும் குறிப்பினவாகப் புலப்படுதலான் இது சொல்லப்பட்டது என்பது. (26)

417. இசைபடு பொருளே நான்குவரம்பு ஆகும்.

418. விரை சொல் அடுக்கே மூன்றுவரம்பு ஆகும்.

இவை இரண்டு சூத்திரமும் இயைபு நோக்கி உடன் எழுதப்பட்டன.

மேல் இசை நிறை அசை நிலை பொருளொடு புணர்தல் என்ற அவை மூன்று என்ப ஒரு சொல் அடுக்கு (எச்ச.15) என்புழி மூன்று வகையான் அடுக்கிவரப் பெறும் என்றவை எல்லையின்மையான் அவை இத்துணை என்னும் வரையறை கூறினார் ஈண்டு என்பது.

அம் மூன்றனுள் இசை நிறைத்தற்கு அடுக்கப்படும் பொருள் நான்கு வரம்பாகும் என்றவாறு.

இரண்டும் அடுக்கும், மூன்றும் அடுக்கும், நான்கும் அடுக்கும், நான்கு இறந்து அடுக்கா என்பது கருத்து, அது பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ என வரும். இவை நான்கு அடுக்கி வந்தன; இசைநிறை எனவே அது செய்யுட்கு என்பது முடிந்தது.

இனி, அம் மூன்றுடன் பொருளொடு புணர்தலை விரை சொல் அடுக்கு என்பது; அது தான் மூன்று வரம்பு இறவாது என்பது. அது பாம்பு பாம்பு பாம்பு தீத்தீத்தீ எனவரும்.

மற்று, அசைநிலை இனைத்தால் அடுக்கும் என்பது எற்றாற் பெறுதும் எனின்? மூன்று அடுக்கும் பொருளொடு புணர்தலை முன்கூறற்பாலார்; என்னை மூன்று நான்கு என்னும் எண்ணும் முறைமை நோக்கி. அவ்வாறு சொல்லாது மயங்கக் கூறியவதனான், மூன்றின் கீழ்க்கு முதல், இரண்டு அல்லது இல்லை அன்றே; அவ் இரண்டு எண்ணினால் கூறப்படும் அசைநிலை என்பது கொள்க என்றவாறு.

உதாரணம் : மற்றோ, மற்றோ, அஃதே அஃதே எனவரும். இரண்டு இறவாது என்பதனை இலேசினாற் கொண்டார். இடைச்சொல் அடுக்கு ஆகலான் என்பது. ஒழிந்த நால் வகைச்சொல்லும் அடுக்கும். *(27,28)*

419. கண்டீர் என்றா கொண்டீர் என்றா
சென்றது என்றா போயிற்று என்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி இசைக்கும் கிளவி என்ப.

இவை வினைஇயலுள் ஒழிந்து நின்ற ஒழிபு கட்டுரை எடுத்தது.

வினைச் சொற்கள் இங்ஙனம் வினாவொடு பட்டு நின்ற வழி ஆயக்கால் அசைச் சொல்லாய் நிற்கும் என்பது கருத்து.

உதாரணம் : கண்டீரோ கண்டீரோ கொண்டீரோ கொண்டீரோ சென்றதே சென்றதே போயிற்றே போயிற்றே என வினாவொடு பட்டவழி அடுக்கி அசைநிலையாய் நிற்கும்.

அவ்வினாவொடு சிவணாக்கால் வினைச்சொல்லேயாம் என்பது.

அன்றிஅனைத்தும் என்பது, அவையிற்றைத் தொகை கொடுத்துக் கூறியவாறு.

வினாவொடு சிவணி என்பது, ஆ, ஓ என்னும் வினாக்களைக் கடையாத்து நின்றவழி என்றவாறு. (29)

420. கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்உறக் கிளந்த இயல்பா கும்மே.

இவை முன்னைய நான்கும்போல வினாவொடு படாது, வாளாதே நின்றுழி, இவையும் அசைச் சொல்லாய் நிற்கும் என்பது கருத்து. முன் நின்றவற்று நிலைமை அல்வழி என்பார், முன்னிலை யல்வழி என்றார் என்பது.

(உ..ம்) கேட்டை கேட்டை நின்றை நின்றை காத்தை காத்தை கண்டை கண்டை எனவரும்.

இவையும் கட்டுரைக்கண் வரும் இடம் அறிந்துகொள்க.

இனி, இவை வினாவொடு பட்டுழி ஆயக்கால், அசைநிலை ஆகா என்பது.

421. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ விடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் இவ்இரண் டாகும்
அவ்ஆறு என்ப முற்றியன் மொழியே.

(எ..ன்) இவை வினைஇயலுள் ஓதப்பட்டன. சில சொற்கள் முற்றுச்சொல் என்னும் குறி எய்துதல் நுதலிற்று.

அதனான் பயந்தது என்னை எனின், அச்சொற்கு முன்பு, முடிபுகூறி, ஈண்டுக் குறியிட்டான் என்பது பயன் என்பது.

இதன் பொழிப்பு இறந்தகாலம் எதிர்காலம் நிகழ்காலம் என்னும் மூன்று காலமும் உடையவாய்த் தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்தும் வினையும் வினைக் குறிப்பும் பற்றி அம் மூன்று இடங்கள் தொறும் வினையும் வினைக்குறிப்பும் என இரண்டாம்; அவ் அறு கூற்றுச் சொற்களை முற்றுச் சொல் என்று கூறுப ஆசிரியர் என்றவாறு.

அவ்ஆறு என்றது தன்மை இரண்டு ப்குப்பவாயும், முன்னிலை இரண்டு பகுப்பவாயும், படர்க்கை இரண்டு பகுப்பவாயும் வருதல் நோக்கி என்பது.

(உ..ம்) உண்டேன் கரியென் எனவும், உண்டாய் கரியை எனவும், உண்டான் கரியன் எனவும் வரும். பிறவும் அன்ன. முற்றுச்சொல்

என்றது, செய்கையும் பாலும் காலமும் செயப்படுபொருளும் தோன்றி நிற்றலின் முற்றுச்சொல் என்பாரும், மற்றொருசொல் நோக்காது முடிந்து நிற்றலின் முற்றுச் சொய் என்பாரும், எக்கால் அவை தம் எச்சம் பெற்றுநின்றன அக்கால் பின் யாதும் நோக்காவாய்ச் செப்பு மூயிற்றுப்போல அமைந்து மாறுதலின் முற்றுசொல் என்பாரும் என இப்பகுதியர் ஆசிரியர் என்பது. *(31)*

422. எவ்வயின் வினையும் அவ்வயின் நிலையும்.

(எ..ன்) இது முற்றுச் சொல் ஒழித்து ஒழிந்த பெயரெச்ச வினையெச்சங்கட்கு ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

மேற் கூறப்பட்ட முற்றுச்சொல்லே அன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமும் மூன்று காலமும் மூன்று இடமும் உடையவாய் வினையும் வினைக்குறிப்பும் பற்றி வரும் என்பான் எவ்வயின் வினையும் அவ்வயின் நிலையும் என்றான் என்பது.

மற்று, வினை எனப்படுவது வேற்றுமை கொள்ளாது நினையுங் காலைக் காலமொடு தோன்றும் (தொல்.வினை.*1*) என்புழி, எல்லா வினைச்சொல்லும் மூன்று காலத்திற்கும் உரிய எனப்பட்டது.

இனி, எஞ்சிய கிளவி இடத்தொடு சிவணி
ஐம்பாற்கு உரிய (வினை.*26*)

என்புழி, எவ்இடத்திடத்திற்கும் உரிமையும் கூறப்பட்டது பிற எனின், மேல், அங்ஙனம் கூறினாரே எனினும், அது விலக்கப் பட்டது; ஈண்டுப் போதந்து முற்றுச் சொல்லையே விதந்து மூன்று இடத்திற்கும் உரிய என்றமையால், அது நோக்கி ஈண்டு இது கூறினார் என்பது. *(32)*

423. அவைதாம்,
தத்தம் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர்முடி பினவே.

*(எ..ன்)* இது முற்றுச் சொல் என்று மேற்கூறப்பட்டனவற்றிற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

மேற் சொல்லப்பட்ட முற்றுச் சொற்கள்தாம் எத்துணைச் சொல்லையும் அடுக்கிப் பலவாய்வயினும் பெயர் கொண்டு முடிதல் இலக்கணத்தன என்றவாறு.

*(உ..ம்)* உண்டான் தின்றான் ஓடினான் பாடினான் சாத்தன் எனவரும் இது வினை.

நல்லறிவு உடையன் செவ்வியன் சான்றார் மகன் எனவும் வரும் இது வினைக குறிப்பு.

மற்று, எத்திறத்தானும் என்றது என்னை எனின், உண்டான் சாத்தன் என்பது பெயரை முன் அடுத்தும், சாத்தன் உண்டான் என்பது பெயரைப் பின் அடுத்தும் வரும் என்பது அறிவித்தற்கு எத்திறத்தானும் என்றார் என்பது. பிறரும் சொல்லுப, முன்னும் உரிய முற்றுச்சொல் என்றா - என்பது. *(33)*

424. பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீர் ஐந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருள் கிளவி.

*(எ..ன்)* மேல், வினைஇயலுள்ளும், இடைச்சொல் இயலுள்ளும் முடிபு கூறப்படாது நின்ற எச்சங்கட்கு முடிபு உணர்த்துவான் தொகுத்து உணர்த்துதல் நுதலிற்று.

எல்லாவற்றையும் எச்சம் என்பதனைக் குறைத்துப் பின்னை எஞ்சுபொருள் கிளவி என்றார் இறுதி விளக்காக.

பிரிநிலை எச்சம் முதலாகக் கூறப்பட்ட பத்துவகை எச்சங்களும் முன்பு முடிபு கூறப்படாது நின்றனவேனும், இனி நெறிப்படத் தோன்றும் அவை என்றவாறு. *(34)*

425. அவற்றுள்,

பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.

(எ..ன்) நிறுத்த முறையானே பிரிநிலை எச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

பிரிநிலை என்ப இருவகைய, ஏகாரப் பிரிநிலையும் ஓகாரப் பிரிநிலையும் என; அவை பிரிக்கப்பட்ட பொருள் தன்னையே கொண்டு முடிக என்றவாறு.

(உ..ம்) அவனே கொண்டான், அவனோ கொண்டான் என வரும். அவனே எனப் பிரிநிலை எச்சம் ஏகாரந்தான் நின்று; அவனே எனப் பிரிக்கப்பட்டானையே கொண்டு முடிதல்; இவை அவற்றுக்கு முடிபு என்றவாறு. *(35)*

426. வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபுஆ கும்மே
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே.

(எ..ன்) நிறுத்த முறையானே வினைஎச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

வினையெச்சம் முடியுங்கால் வினையும் வினைக்குறிப்பும் கொண்டு முடியும். அவ்இடத்துக் குறிப்பு வினைச்சொல் ஆக்கச் சொல்லொடு வரும். (எ-று)

(உ..ம்) உழுதுவந்தான் என்பது வினையெச்சம் தெரிநிலை வினை கொண்டு முடிந்தது. மருந்து உண்டு நல்லன் ஆயினான் என்பது வினையெச்சம் வினைக்குறிப்புக் கொண்டு முடிந்தது அவ்விடத்து வினைக் குறிப்பு ஆக்கமொடு வந்தவாறு கண்டுகொள்க.

இனி நினையத் தோன்றிய என்றதனான் உழுது வருதல், உழுது வந்தான் எனத் தொழிற்பெயரானும் முடியும் என்றவாறு.

மற்று இச்சூத்திரத்தால் வினையெச்சத்திற்கு முடிபு கூறவேண்டியது என்னை?

வினை இயலுள், முதல்நிலை மூன்றும் வினை முதன் முடிபின (31) என்றும், ஒழிந்தனவற்றுக்கு, ஏனை எச்சம் வினைமுதலானும் ஆன்வந்து இயையும் வினை நிலையானும் (33) முடியும் என்றும் கூறியதே அமையும் பிறஎனின், அதற்கு விடை : ஆண்டு வினைமுதலானும் முடியும் என்புழிப் பெயர் வினைமுதலானும் முடியும் என்பது பட்டது; என்னை, வினை வினைமுதல் என்றும் பெயர் வினைமுதல் என்றும் பகராது, பொது வகையான் கூறினார் ஆகலின். இச்சூத்திரம் வேண்டும், இது கூறாக்கால், உழுது சாத்தன் எனப் பெயர் வினைமுதலானும் முடிவான் செல்லும் என்பது.

அன்றியும், வினையெச்சத்திற்கு வினைக்குறிப்பு முடிபாங்கால், ஆக்கமொடு வருதல் எடுத்துஓத வேண்டும் என்பது. (36)

427. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

**(எ..ன்)** நிறுத்த முறையானே பெயரெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று. பெயரெச்சம் பெயர்கொண்டு முடியும் என்றவாறு.

**(உ..ம்)** உண்ணும் சாத்தன், உண்ட சாத்தன் என வரும் உண்ணும், உண்ட என்பன பெயரெச்சம். மற்று, இது கூறவேண்டியது என்னை?

நிலனும் பொருளும் காலமும் கருவியும்
வினைமுதற் கிளவியும் வினையும் உளப்பட
அவ்அறு பொருட்கும்ஓர் அன்ன உரிமைய (வினை.**35**)

எனப் பெயர்கொண்டு முடிதல் கூறப்பட்டது பிற எனின், அதற்கு விடை; ஆண்டு வினைமுதற் கிளவியும் வினையும் எனவே, வினைச்

சொல்லும் முடியும் என்பதுபட்டது. வினைமுதற்கிளவி என்றக்கால், வினை வினைமுதலும் வினைமுதல் ஆகலானும், இனி, வினை என்றக்கால் வினைப் பெயரே அன்றி வினைச் சொல்லும் ஆகலானும் இச்சூத்திரம் வேண்டும் என்பது. (37)

428. ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின.

(எ..ன்) நிறுத்த முறையானே ஒழியிசை எச்சம் உணர்த்துதல் நுதலிற்று.

ஒழியிசை எச்சம் ஆவன மூன்று. அவை, மன்னை ஒழியிசையும், தில்லை ஒழியிசையும், ஓகார ஒழியிசையும் என; அவை மூன்றும் ஒழியிசைப் பொருள் கொண்டு முடியும் என்றவாறு.

(உ..ம்) கூரியதோர் வாள்மன் என, வாள் கோடிற்று; இற்றது எனப்பின்னும் வாள் மேலே முடிபு சென்றது.

இனி, வருகதில் கொண்கன் என, வருக எனப்பட்டானும் அவனே, கொண்கன் எனப்பட்டானும் அவனே, அதனால் அதுவும் அப்பொருள்கொண்டு முடிந்தது.

இனிக்கொளலோ கொண்டான் என்புழிக் கொளலோ எனப் பட்டானையே கொண்டான் என்பது. அதனாள் அதுவும் அவ்ஒழிசைப் பொருள் கொண்டு முடிந்தது. (38)

429. எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின.

(எ..ன்) நிறுத்த முறையானே எதிர்மறை எச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

எதிர்மறை எச்சம் என்பன இரண்டு, ஓகார எதிர்மறையும் உம்மை எதிர்மறையும் என; அவை, அவைதம் எதிர்மறைப் பொருள்கொண்டு முடியும் என்றவாறு.

(உ..ம்) யானோ கொண்டேன் என்பது யானோ அன்றே கொண்டேன் என்றாகும், அதனால் அப்பொருள் கொண்டு முடிந்தது எனப்படும். நீயே கொண்டாய் என்றாற்கு எதிர்மறுத்தவாறு; யான் கொண்டிலென் என்பது.

இனி, உம்மை எதிர்மறை வரலும் உரியன் என்பது. ஆண்டு வரலும் எனப்பட்ட உம்மை எதிர்மறை. உரியன் எனப் பின்னும் அவனையே கொண்டு முடிந்தது. வாராமையும் உரியன் என்பது அதற்கு எதிர்மறை. அவை ஒன்று ஒன்றனை நோக்க எதிர்மறை என்றவாறு ஆயிற்று. (39)

430. உம்மை எச்சம் இரு வீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபுஆ கும்மே.

(எ..ன்) இது முறையானே உம்மை எச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

உம்மை எச்சம் என்பது எச்ச உம்மை ஆயிற்று; இரு வீற்றானும் என்றது தானும் தான்னான் தழுவப் பட்டதுவும் என இரண்டினையும் ஆயிற்று; அவை இரண்டும் ஒன்றிய வினையே கொண்டு முடியும் என்றவாறு.

(உ..ம்) சாத்தனும் வந்தான் என்றக்கால் பின்னைக் கொற்றனும் வந்தான் என்றானும், கொற்றனும் வரும் என்றானும் ஒன்றிய வினையே கொண்டு முடிக என்பது. சாத்தனும் வந்தான் என்றக்கால், கொற்றனும் போயினான் என்றுவிடின் அமையாது என்பதாம். (40)

431. தன்மேற் செஞ்சொல் வரூஉங் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

(எ..ன்) இஃது, அவ்வெச்ச உம்மையது மயக்கம் கூறுதல் நுதலிற்று.

தன் என்பது எச்ச உம்மை, செஞ்சொல் என்பது உம்மையில் சொல்; எச்சவும்மைச் சொல்லின் மேல் உம்மையில் சொல் வந்தக்கால் நிகழ்காலமும் எதிர்காலமும் மயங்கும்; இறந்த காலமும் எதிர்காலமும் மயங்கும்; மயங்கப்படும் முறை இலக்கணம் ஆகலான் வரையார் என்றவாறு.

*(உ..ம்)* கூழ் உண்ணாநின்றான், சோறும் உண்பன் எனவரும். கூழ் உண்ணாநின்றான் என்பது செஞ்சொல், சோறும் உண்பன் என்னும் உம்மைச் சொல்லின்மேல் வந்தது.

உண்ணா நின்றான் என்னும் நிகழ்காலம் தன் நிகழ்காலமே கொள்ளாது, சோறும் உண்பன் என்னும் எதிர்காலம் கொண்டமையின் வழு ஆயிற்று ஆயினும் அமைக என்பது.

இறந்தவும் எதிர்வும் மயங்குமாறு; கூழ் உண்டான் சோறும் உண்பான் எனவரும்.

இனி, முறைநிலையான என்றதனான் இறந்ததெனாடு நிகழாநின்றதூஉம் மயங்கும்; எதிர்வதனொடு இறந்ததுவும் மயங்கும் என்றவாறு.

*(உ..ம்)* கூழ் உண்டான் சோறும் உண்ணாநின்றான் என வரும். சோறு உண்பான் கூழும் உண்டான் என வரும். பரிமாறிக் கொள்க. *(41)*

432. எனஎன் எச்சம் வினையொடு முடிமே.

*(எ..ன்)* நிறுத்த முறையானே எனஎன் எச்சத்திற்கு முடிபு உர்த்துதல் நுதலிற்று.

எனஎன நின்ற எச்சம் பெயர் கொண்டு முடியாது வினைகொண்டு முடியும் என்றவாறு.

*(உ..ம்)* கொள்ளெனக் கொண்டான் எனவரும்.

பிறவும் அன்ன.

தன்வினையையோ பிறவினையையோ எனின் இன்ன வினை என்பது ஒன்று இல்லை; ஏற்ற வினையான் முடியும் என்ப. *(42)*

433. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலஎன மொழிப.

**(எ..ன்)** ஒழிந்து நின்ற எச்சங்கள் திறத்துப் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

எஞ்சிய மூன்றும் என்பன அவை மூன்றும் முந்தையவற்றைப் போலத் தம்மை இன்ன வந்து முடிப்பன என்று காட்டப்படும் எச்சச்சொல் இல்லை என்றவாறு.

மூன்றும் மேல்வந்து முடிக்கும் எச்சச்சொல் இல என, ஒன்று உடைத்து என்பதாம். அஃது யாதோ எனின், சொல் எச்சம்; அதனை முன்னர்ச் சொல்லுதும். *(43)*

*434.* அவைதாம்,
தத்தங் குறிப்பின் எச்சம் செப்பும்.

இது குறிப்பே இசையே (எச்ச.34) என்று கூறப்பட்ட இரண்டு எச்சமும் தங்குறிப்பின் பற்றிய எச்சத்தானே முடிபு கூறப்படும். பிறிது இல்லை என்பது.

**(உ..ம்)** விண்ணென விசைத்தது குறிப்பெச்சம் அதுதன் குறிப்பினையே கொண்டு முடிந்தது.

விண் என்றதே விசைத்தது எனப்பட்டது. அதனால் தத்தங் குறிப்பின் எச்சந்தானே முடிந்தது என்பது.

இனி இசையெச்சம், ஒல்லென ஒலித்தது. இடைச்சொல் ஒத்துள் அறு பகுதிய என்று ஓதப்பட்ட என (இடைச்சொல்.10) என்பதை விகற்பித்து இரண்டு முடிபு கூறப்பட்டது என்பது. மற்று,

ஆண்டுச் சொல்லெச்சம் என்பது இல்லையால் எனில் விடை: எனவென் எச்சம் வினையொடு முடிமே (எச்ச.42) என்று முடித்தார்.

வினை என, வினை பின்னும் தன்கண்ணதே சொல்லெச்சம் அது கொண்டு முடிதல் இவ்வாய்பாடு. அவ்வேற்றுமை நோக்கி, வேறு சொல்லெச்சம் என வேண்டினார் என்பது.

முன்னர் மூன்றும் மேல்வந்து முடிக்கும் எஞ்சுபொருட்கிளவி இலஎன (எச்ச.43) ஒன்று உடைத்து என்பதுபட்டு நின்றது. அஃது யாதோ எனின சொல்லெச்சம் என்பது. இனி அதற்கு முடிபு கூறுகின்றார். *(44)*

435. சொல்லென் எச்சம் முன்னும் பின்னும்
சொல் அளவு அல்லது எஞ்சுதல் இலவே.

(எ..ன்) சொல்லெச்சத்திற்கு முடிபு கூறுதல் நுதலிற்று.

சொல் என் எச்சம் முன்னாயினும் பின்னாயினும் சொல் என்னும் சொல்கொண்டு முடிதல் அல்லது பிறிது இல்லை என்றவாறு.

(உ..ம்) பசித்தேன் பழஞ்சோறு தா என நின்றாள் என்பது சொல்லெச்சம். இது தா எனச் சொல்லி நின்றாள் எனச் சொல்லி என்பதனைக் கொண்டது. மற்றுத்தா என நின்றாள் பிறளே எனின், தாஎனச் சொல்ல நின்றாள் என்பதாம். அவற்றுள் சொல் என்பது சொல்லி என்றானும் சொல்ல என்றானும் ஆக இரண்டனுள், ஒன்றனான் முடியும் அது என்பது.

முன்னும் பின்னும் என்றது தா எனச் சொல்லி நின்றாள் என்று முன் கொணர்ந்து முடிப்பின் அது பின் முடிவுபட நின்றதாம் என்பது. *(45)*

436. அவையல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

(எ..ன்) இது தகுதியும் வழக்கும் (கிளவி.17) என்பதனுள் கூறப்படாது ஒழிந்து நின்றதோர் மரபு வழூஉக்காத்தல் நுதலிற்று.

நன்மக்களுள் கூறப்படாத சொல்லைக் கிடந்தவாறே சொல்லற்க, பிறிது வாய்பாட்டான் மறைத்துச் சொல்லுக என்றவாறு.

(உ..ம்) கான்மேல் நீர்பெய்து வருதும், வாய்பூசி வருதும் என வரும். *(46)*

437. மறைக்கும் காலை மரீஇய தொரால்.

இறந்தது காத்தது.

மேல், அவைக்கு உரிய அல்லவற்றை மறைத்தே சொல்லுக என்றார்; இனி, அவைதாம் மரீஇ அடிப்பட்டவழி ஆயக்கால் மறைக்க வேண்டுவதன்று; அவை ஒழித்து ஒழிந்தன மறைத்தே சொல்லுக என்றது என்பது.

இனி, அவ்வாறு மரீஇ வந்தன, யாட்டுப் பிழுக்கை, ஆப்பி என வரும். *(47)*

438. ஈதா கொடு எனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைத்தே.

(எ..ன்) இதுவும், கிளவி ஆக்கத்துக் கூறப்படாது ஒழிந்து நின்றதோர் மரபு இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இக் கூறப்பட்ட மூன்றும் இரப்போர் சொல்லுதற்கு உரிய என்றவாறு. *(48)*

439. அவற்றுள்,
ஈஎன் கிளவி இழிந்தோன் கூற்றே

மேல் கூறப்பட்ட மூன்றனுள் ஈ என்னும் சொல் இரக்கப்படுவேரை இழிந்தோர் கூறி இரக்கும் சொல் என்றவாறு.

(உ..ம்) உடுக்கை ஈ, மருந்து ஈ எனவரும். (49)

440. தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே.

இரக்கப்படுவானை ஒப்பான் இரக்குங்கால் தா என்னும் சொல்சொல்லி இரக்கும் என்பது உணர்த்தியவாறு.

(உ..ம்) சோறு தா, ஆடை தா எனவரும். (50)

441. கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே.

கொடு என்னும் சொல், உயர்ந்தோனான் கூறப்படும் சொல் என்றவாறு.

(உ..ம்) இவற்கு ஊண் கொடு, ஆடைகொடு எனவரும். (51)

442. கொடு என் கிளவி படர்க்கை ஆயினும்
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்
தன்இடத்து இயலும் என்மனார் புலவர்.

(எ..ன்) மேல் சூத்திரத்திற்குப் புறனடையாமாறு உணர்த்துதல் நுதலிற்று.

கொடு என்பது தன்மைக்கு ஏற்றது அன்று; படர்க்கைக்கு உரியதோர் சொல் ஆயிற்று. உயர்ந்தோன் இழிந்தோனை இரக்கும் கால் தமன் ஒருவனைக்காட்டி இவற்குக் கொடு என்பது; ஆண்டுப் படர்க்கை இடத்திற்கு உரித்தாகக் கூறினான்மன்; ஆயினும், அது தன்மை இடத்து இயல்பேகாட்டடப் படர்க்கை இடத்தாற்கு உரித்து

ஆகாது; அவ் இரக்கப்படுபொருளும் அக்கொடு எனச் சொல்லும் என்பது. தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின் தனக்குக் கொடு என்றது வாய்பாடு அன்றதேனும் அது தனக்கே சொல்லியவாறு.

உம்மையான் பிறகிளவியும் படர்க்கை ஆயினும் தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பில் தன் இடத்து இயலும் என்றவாறு. ஆண்டு இரவின் கிளவி அல்வழி என்பது.

அங்ஙனம் சொல்லுவானோ பெருஞ்சாத்தன் தந்தை; அங்ஙனம் சொல்லப்படுவாளோ பெருஞ்சாத்தன் தாய் என்னும் தன்னைப் பிறன்போல் கூறுவது. அது தன் இடத்து இயலும் என்றவாறு. *(52)*

443. பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
சினைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொல்நெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே.

**(எ..ன்)** ஒருசார் வழூக்காத்தல் நுதலிற்று.

இவை மேல் கூறப்பட்ட இலக்கணத்தினை இன்றியமையாமை இல என்றவாறு.

பெயர்நிலைக் கிளவியின் என்பது ஈண்டு உயர்திணைப் பெயரை ஆயிற்று. அவ் உயர்திணைப்பெயர் உயர்திணைப் பெயர்மேல் வழங்கப்படுதல் இன்றியும் அமையும் என்றவாறு. நம்பி என்னும் உயர்திணைப் பெயர் ஒருயானை மேலானும், ஒருகோழிமேலானும், பிறவற்றின் மேலானும் நிற்கும். நங்கை என்ப ஒருகிளியையும் என்பது.

இனிச் சினைக்கிளவியின் ஆவனகடப்பாடு இன்றி வருமாறு: வெண்கொற்றப் படைத்தலைவன், வெள்ளேறக் காவிதி என்பன. இவற்றை முன்னர்க் கிளவியாக்கத்துச் சிறப்புப்பெயர் நின்றவழி இயற்பெயர் வைத்துக்கூறுக என்றார். இனிச்சினைச் சொற்கண் ஆயின் அது வேண்டுவது அன்று என்பது கருத்து.

தொன்னெறி மொழிவயின் ஆகுநவும் என்பது முந்தைச் சொல் அவற்றையும் இவ்வாறே சொல்லப்படுதலின் இப்பொருள என்று ஒருகடப்பாடு இல என்றார்.

(உ..ம்) ஆற்றுள்செத்த எருமை ஊர்க் குயவற்கு இழுத்தல் கடன், எனவும், யாட்டுளான் இன்னுரை தாரான் எனவும் வரும். பிறவும் அன்ன.

மெய்ந்நிலை மயக்கின் ஆஅகுநவும் எனபது மேல் தகுதியும் வழக்கும் தழீஇயின ஒழுகும் (சொல்.17) என்புழி, மங்கல மரபினானும் குழுவின்வந்த குறிநிலை வழக்கினானும் கூறப்படும் என்றார் அன்றே. இனி, அவை அவ்வாறு அன்றித் தத்தம் இலக்கணத்தானும் சொல்லப்படும் என்றவாறு.

(உ..ம்) சுடுகாட்டை நன்காடு என்னாது சுடுகாடு என்றும் செத்தாரைத் துஞ்சினார் என்னாது செத்தார் என்றும் கூறவும் அமையும் என்றவாறு.

இனி, மந்திரப் பொருள்வயின் ஆகுநவும் என்பது, நிறைமொழி மாந்தர் ஆணையின் கிளந்த, மறைமொழிதானே மந்திரம் என்ப (செய்யுள் இயல் : 17). அவை கூறப்பட்ட எழுவகை வழுவின் தீர்த்து வருக என்ற கடப்பாடில என்றவாறு

(உ..ம்) அவை

திரி திரி திரிதிரி சுவாகா

கன்றுகொண்டு கறவையும் வர்த்திக்க சுவாகா என்றால்போல வரும்.

இச்சூத்திரத்திற்குப் பிறிதுமொரு பொருள் உரைப்பாரும் உளர். அதுவும் மெய்யுரை போலும் என்பது. *(53)*

444. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே.

*(எ..ன்)* இது, வினைஇயலுள் ஒழிந்து நின்ற ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

செய்யாய் என நின்ற முன்னிலை வினைச்சொல், செய் என்னும் சொல்லும் ஆமிடன் உடைத்து என்றவாறு.

இந்நாள் எம் இல்லத்து உண்ணாய் என்பது; அது செய்யாய் என்பது, அது செய் இனி என்றும் ஆம். *(54)*

445. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே.

*(எ..ன்)* இடைச்சொல் ஒத்தினுள் ஒழிந்து நின்ற ஒழிபு உணர்த்துதல் நுதலிற்று.

முன்னிலைக்கண்ணான ஈகார ஏகார இடைச்சொற்கள் முன்னிலைக்குப் பொருந்திய மெய்யை ஊர்ந்து வரும் என்றவாறு.

*(உ..ம்)* சென்றீ பெரும நிற்றகைக்குநர் யாரோ (அகநா.46) எனவும்,

அட்டில் ஓலை தொட்டனை நின்மே (நற்.300) எனவும் வரும் இவை இரண்டும் தத்தம் குறிப்பின் பொருள் செய்யும் இடைச்சொல் என்பது. ஈண்டு, எப்பொருளை விளக்கி நின்றனவோ எனின், புறத்து உறவு நீர்மைப் பொருள்பட வந்த என்றவாறு. (55)

446. கடிசொல் இல்லைக் காலத்துப் படினே.

(எ..ன்) மேல் கூறப்பட்டனவற்றுக்கு எல்லாம் பொதுவாயதோர் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

அழான் புழான் என்பன, அக்காலத்து அவை உண்மையான், ஆசிரியன் ஓதி முடிபு கூறப்பட்டன.

இனி, சுட்டுச்சினை நீடிய ஐகார ஈற்றுப்பெயர் (தொல். தொகைமரபு) உறழ்ந்து முடிக என்றான் ஆசிரியன். அக்காலத்து அவை உண்மையான்; இப்பொழுது அவற்றிற்கு உதாரணம் இல்லை. பிறவும் அன்ன.

இனி, ஆசிரியனால் ஆகாளன ஓதப்பட்டன தோன்றுவ உள, அவை ஞெண்டு என்றும், நீர் கண்டக என்றும், சம்பு, சள்ளை என்றும் வரும். (56)

447. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்
குறைத்தன ஆயினும் நிறைப்பெயர் இயல.

(எ..ன்) செய்யுட்கு ஆவதோர் முடிபு கூறுதல் நுதலிற்று.

முன் செய்யுள் ஈட்டும் தன்மையானே கடியப்படும் என்றே அறியக்கிடந்தது. இனி, அவற்றை முழுவதூஉம் கிடை சுடாவாது, குறைத்துக் கடாவப்படுதலும் உடைய ஒரோவழி; அங்ஙனம் குறைக்கப்பட்டதேனும், குறையாது நின்ற இடத்து இயலுமாறே புலப்பட்டு இயலும் செவிக்கு என்றவாறு.

இனி, அவை குறைக்கும் இடத்துத் தலைக்குறைத்தலும் இடைக்குறைத்தலும் கடைக்குறைத்தலும் என மூன்றுவகையான் குறைக்கப்படும் என்பது.

அவற்றுள், தலைக்குறைத்தது மரையிதழ் புரையும் செழுஞ்செஞ் சீறடி என்பது. ஆண்டுத் தாமரை எனற்பாலார் மரை என்று தலைக்குறைத்தார் என்பது.

இடைக்குறைத்தல் என்பது வெரிநில் ஓதி வெருக் கண்டன்ன, என்பது. ஆண்டு ஒந்தி எனற்பாலார் ஓதி என்று இடைக்குறைத்தார் என்பது.

இனிக் கடைக்குறைத்தல் என்பது, நீல் உண்துகிலிகை கடுப்ப என்பது, நீலம் உண் துகிலிகை எனற்பாலார் நீல் உண் துகிலிகை என்றார் என்பது.

குறைக்கும்வழி அறிதல் என்பது, குறைக்கைக்குத் தகக் குறைக்கப்படுவது என்றற்கு என்பது.

நிறைப்பெயர் இயல எனவே இவ்விகாரம் பெயர்க் கண்ணதே என்பது பெற்றாம்.

மற்றுச் சென்றார் என்பிலர் தோழி (அகம்.71) என என்பாரிலர் எனற்பாலார் என்பிலர் என்றார்; எனவே, வினைச் சொல்லும் குறைக்கப்பட்டது எனின், நிறைப்பெயர்இயல என்றது பெயர்ச்சொல் என்றவாறு.

அக்குறைக்கப் பெறுவன அம் மூன்று இடத்துள் எவ்இடத்தும் குறைக்கப்பெறினும் பெறுக.

பெற்றன குறையாத போது நின்ற தத்தம் நிறைபு நிலைப் பெயரவேயாக உணரப்படும் என்பார் நிறைப்பெயர் இயல என்றார் என்பது. இதுவும் ஒரு கருத்து. (57)

448. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

(எ..ன்) இடைச்சொல் எனப்பட்டனவற்றுக்கண் படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

முன்னர் வேற்றுமை ஒத்தினுள் ஐ ஒடுகுஇன் அதுகண் (தொல்.எழுத்.114) என்னும் உருபுகளையன்றே வேற்றுமைச்சொல் என்று உணர்த்தியது. இனி, அவைஅன்றி ஒழிந்த இடைச் சொற்களையும் வேற்றுமைச் சொல் என அமையும் என்றவாறு.

என்னை, அவையும் தாமாக நில்லா, பெயரும் தொழிலும் அடைந்து நின்றும், அவற்றையே பொருள் வேற்றுமைப்படுக்கும் ஆகலின் என்பது. (58)

449. உரிச்சொன் மருங்கினும் உரியவை உரிய.

(எ..ன்) உரிச் சொற்கள் திறத்துப்படுவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச்சொல் ஆதற்கு எவ்வாறு உரியவாயினமன்; அவ்உரிமை உரிச்சொற்கண்ணும் எய்தும் என்றவாறு.

உம்மை இறந்தது தழீஇயிற்று.

உரிச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல் என்றது. மேற்கூறிய இடைச்சொல்லே போல், உரிச்சொல்லும் தாமாக நில்லா, பெயரும் வினையும் அடைந்து பொருள் வேறுபடுத்தலுடைய; அது நோக்கி என்பது.

இருதலையாக அவற்றை வேற்றுமைச் சொல் என்றவாறு. (59)

450. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.

(எ..ன்) முன்னர் வினையியலுள் வினையெச்சம் என்று ஓதப்பட்டனவற்றுக்கண் ஆவதோர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

வினையெச்சம் என்று கூறப்பட்டன. செய்யுட்கண் தாம்வந்து முடிபு கொண்டதன் தன்மைப்பாலே நில்லா; நின்றால் பொருள் இசையா ஆதலால், ஓர் எச்சந்திரிந்து ஓர் எச்சமாகியும் நிற்கும் இலக்கணத்தினையுடைய என்றவாறு.

உதாரணம் ; ஞாயிறு பட்டு வந்தான், ஞாயிறு படவந்தான்

என்பதுமன் ஆகற்பாலது. பட என்பது செய என் எச்சம்; அது திரிந்து பட்டு என்னும் செய்து என் எச்சமாகி நின்றது என்பது.

கோழி கூவிப் புலர்ந்தது என்பதூஉம் செய என் எச்சம் செய்து என் எச்சமாகித் திரிந்தது.

இங்ஙனம் நின்றவேனும் அவற்றைச் செயஎன் எச்சமாக உணர்ந்துகொளல் வேண்டும். அல்லாக்கால் சொன்முடிபு எய்தாது. என்னை, ஞாயிறு பட்டு என்றக்கால், வந்தான் என்றலும் முடியற்பாலது, பின்னும் ஞாயிற்றின் மேல் வினைகொண்டு முடியற்பாற்று, முதனிலை மூன்றும் வினைமுதன் முடிபின *(வினையியல்.31)* என்று உரைத்தார் ஆகலின் என்பது.

கோழிகூவிப் புலர்ந்தது என்பதற்கும் அஃது ஒக்கும்.

இனி, மோயினள் உயிர்த்த காலை *(அகம்.5)* என்புழி, மோந்து என்னும் வினையெச்சம், மோயினள் என முற்றுச் சொல் வாய்பாட்டான் திரிந்து நின்றதேனும் வினையெச்சமே ஆகல் வேண்டும். பிறவும் அன்ன.

பிற என்றதனால்

ஏரின் உழாஅர் உழவர் புயல்என்னும்
வாரி வளங்குன்றிக் கால் *(குறள்.வான்.4)*

என்பது, குன்றியக்கால் என்னும் வினையெச்சம் குன்றிக்கால் என நின்றது. *(60)*

451. உரைஇடத்து இயலும் உடன்நிலை அறிதல்.

*(எ..ன்)* உலகத்து மாறுகொண்டு வேறுபட்டியலும் சொற்களவை அமைக என்பது உணர்த்துதல் நுதலிற்று.

கட்டுரை உரைக்கும் இடத்து நடக்கும் ஒருங்கு நிலையும் அறிக என்றவாறு. என்பது, ஒன்று உரைக்கும் இடத்து இயைபு இல்லாத இரண்டு சொல் ஒருபொருட்கண் நிற்பச் சொல்லுதல் உண்டு. உண்டேனும், அஃது அமைக என்றவாறு.

(உ..ம்) இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது என்பது. சிறிது என்ற சொல்லும், பெரிது என்ற சொல்லும், தம்முண்மாறுகோள் உடையன; அந்நாழிமேலே நின்றனவேனும் அமையும் என்பது, என்னை அமையுமாறு எனின்? சிறிது என்று நின்றதன் சிறுமையே பெரிதென்பான் சொல்லினான் அல்லன்; அந்நாழிக்கு இந்நாழி பெரிய துணை மிகுதியில்லை; பெருமை சிறிது எண்ணிய சொல்லினான் அமையும் என்பது. (61)

452. முன்னத்தின் உணருங் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொன்முறை யான.

(எ..ன்) இதுவும் சொற்கண்ணதொரு பொருள்படுதல் வேற்றுமை உணர்த்துதல் நுதலிற்று.

சொல்லின இடத்துச் சொல்கிடந்தஆறே குறிப்பினால் கொண்டு உணரப்படும் பொருளும் உள; சொற்கள் யாண்டாயினும் மற்று இன்ன என்று தன்மை வேறுபாடு சொல்லுதன் முறைக்கண் என்றவாறு.

(உ..ம்) செஞ்செவி வெள்ளொக்கலர் எனவும், குழைகொண்டு கோழிஎறியும் வாழ்க்கையர் எனவும் வரும்.

செஞ்செவி வெள்ளொக்கலர் என்றால், உதிரஞ் சொரியும் செவியர் வெளிய சுற்றத்தார் என்பதன்று, செவி எல்லாம் சாலச் செம்பொன் அணிந்து, முட்டில் செல்வத்துக் கிளை உடையர் என்றவாறு.

குழைகொண்டு கோழியெறியும் என்றக்காலும், குழை கொண்டு கோழி எறிதல் என்று உணரற்பாலது அன்று; முட்டில் செல்வத்தார் என்பது உணரற்பாற்று. (62)

453. ஒரு பொருள் இருசொல் பிரிவில் வரையார்.

இது மரபுவழுக் காத்தது.

ஒரு பொருண்மேன் கிடந்த இருசொல் பிரிவின்றி நின்றன வரையப்படா என்றவாறு.

(உ..ம்) வையைக் கிழவன் வயங்குதார் மாண்அகலம்
தையலாய் இன்றுநீ நல்குதி நல்காயேல்
கூடலார் கோவொடு நீயும் படுதியோ
நாடறியக் கவ்வை ஒருங்கு.

வையைக்குக் கிழவன் எனப்பட்டானும் கோ எனப்பட்டானும் அவன் ஆதலால் அவ்இரு சொல்லும் ஒரு பொருள்கண் மேலே நின்றன. பிற பொருட்குப் பிரியா, அங்ஙனம் நிற்பன அமையும் என்பதாம்.

இனிப் பிரிவில வரையப்படா, எனவே, பிரிவு உடையன வரையப்படும் என்பதாம். அஃதுயாதோ எனின்,

கொய்தளிர்த் தண்டலைத் கூற்றப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே - கைதொழுதேன்
காலேக வண்ணனைக் கண்ணாரக் காண எம்
சாலேகம் சார நட

இதனுள் கூற்றப்பெருஞ்சேந்தன் என்றார்; பின்னைக் காலேக வண்ணன் என்றார், அவை இரண்டு சொல்லும் பிரிவுஉடைய; அதனால் அமையா;

யாதோ பிரிவு எனின், காலேகவண்ணம் என்பது சாந்து; கூற்றப் பெருந் சேந்தற்கே உரித்தாய் நிற்பது ஒன்று அன்று. காலேக வண்ணம் என்னும் சாந்து பூசினார்க்கு எல்லாம் காலேகவண்ணர் என்று பெயராம்; அதனால் பிரிவு உடைத்தது அதனால் அமையாது என்பது. மேல் கிளவி ஆக்கத்து.

இயற்பெயர்க் கிளவியும் சுட்டுப்பெயர்க் கிளவியும் (தொல்.சொல்.கிளவி.38) என்றும், சிறப்பினாகிய பெயர்நிலைக் கிளவிக்கு (41) என்றும், ஒருபொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி (42) என்றும், ஒரு பொருண்மேல் இருபெயர் வழுவும், பலபெயர்

வழுவும் கூறிப்போந்தான்; அவற்றோடு இதனிடை வேற்றுமை தெரிந்து கொள்க.

(63)

454. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக் காகும் இடனுமார் உண்டே.

இதுவும் பால் வழு அமைகின்றது.

ஒருமை சுட்டிநின்ற பெயர்ச்சொல்லும் பன்மை கொண்டு முடியும் இடனும் உடைத்து என்றவாறு.

(உ..ம்) அங்கலுழ் மாமை அகுதை தந்தை
அண்ணல் யானை அடுபோர்ச் சோழர் (அகம்.96)

எனவரும்.

இதனுள் தந்தை என நின்ற ஒருமை முறைப்பெயர் சோழர் என்னும் பன்மைகொண்டு முடிந்தமையின் வழூஉ; வழூஉவே எனினும் அமையும் என்பது.

யான் எம்ஊர் புகுவல் என்பதும் அது. (64)

455. முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே
ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும்.

(எ..ன்) இது செய்யுட்கு உரியதொர் முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

முன்னிலை சுட்டிய ஒருமைச்சொல் பன்மை கொண்டு முடியினும் வரைந்து மாற்றப்படாது ஆற்றுப்படைச் செய்யுள் இடத்து; அதனை ஆண்டுப்போற்றி உணர்க என்றவாறு.

கலம்பெறு கண்உளர் ஒக்கர் தலைவ (மலை.50) என்புழித் தலைவ என்பது ஒருமைப் பெயர். அது பின்னை ஒருவிர் ஒருவிர்

ஓம்பினர் கழிமின் (மலைபடு.218) எனப் பன்மை கொண்டு முடிந்ததே எனினும் அமைக என்பது.

மற்று இதுவும் ஒருமைப்பெயர் பன்மை கொண்டு முடிதல் ஒக்கும் ஆகலின் முன்னர் ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி (எச்ச.64) என்னும் சூத்திரத்துள் அடங்கும் பிற எனின்,

அற்று அன்று; முன் செய்யுள் நோக்கிச் சொல்லினார் அல்லர்; இனிச் செய்யுள் நோக்கிச் சொல்லினார். எங்ஙனம்? முன்னிலை ஒருமை பன்மை கொண்டு முடிதல், ஆற்றுப்படைச் செய்யுட்கு முன்னிலைக் கட்டுரை பயின்றமையினும் மேல் அதனைக் கொண்டும் அச்செய்யுள் விதி உடைத்து ஒன்றாதலானும், அதனை அமைக்கவேண்டும். அதனான் சொல்லினார் அதற்கே வரைந்து.

மற்று, ஆற்றுப்படை மருங்கினானே அமையாது போற்றல் வேண்டும் என்பதனால், பிறவும் உள ஈண்டுப் போற்றி உணரப்படுவன என்பது.

நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும்
என்னையே குறித்த நோக்கமொடு (அகம்.110)

என்புழித் தானும் அன்னார் உள்ளாள் ஆகலின் பல்லேம் உள்ளும் எனற்பாற்றுமன்; ஆயினும், அஃது அமைக என்பது.

இனி, புலையன் எறிந்த பூசல் தண்ணுமை
ஏவல் இளையர் தாய்வயிறு கரிக்கும்

எனற்பாற்று அன்றுமன் அமைக என்பது.

மற்று, இளையர் பல்லாரையும் உடைய தாயைச் சொல்லிற்று ஆகப் பெறாதோ எனின், அற்று அன்று; ஆண்டு இளையர் பூசல் ஆட்களாகலான் அவர்க்கு எல்லாம் ஒரு தாயாதல் இயைபு இன்று என்பது.

இனி, ஒரு சாரார் கறையணி மிடற்றினை என்னும் முன்னிலை ஒருமை கறையணி மிடற்றின் அவை என்னும் அஃறிணைப் படர்க்கைப் பன்மையானும் முடிந்தது என்று காட்டுப.

இனிக் கறையணி மிடற்றின் அவை என்றது அத்தேவனார் கூளிகளை என்ப ஒருதிறத்தார்.

அற்று அன்று, பின்னை அனையை ஆதலின் அத்தேவனார் தம்மேல் ஏறும் ஆகலின் அமைக்கவேண்டும் என்பார் முன்னை உரைப்பார்.

பிறவும் இவ்வாறு வருவன போற்றி உணரப்படும். (65)

456. செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைத்து அறியப் பிரித்தனர் காட்டல்.

(எ..ன்) இவ்அதிகாரத்துள் எடுத்தோத்தே இலேசேயன்றி இவ்வாற்றான் முடியாது நின்றவற்றுக்கு எல்லாம் புறனடை உணர்த்துதல் நுதலிற்று.

செய்யுள் இடத்தும் வழக்கு இடத்தும் முன்னரே முடிவு கூறப்படாது நின்ற சொற்கள் இவை என்று தெரிந்து அவற்றை உத்திவகை இலக்கணத்தொடு படுத்திக் காட்டுக் என்றவாறு.

(உ..ம்) தினைத்தாள் அன்ன சிறுபசுங்கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதாம் மணந்த ஞான்றே (குறும்.25)

என்புழிச் சிறுபசுங்கால என்று பன்மையான் கூறிப் பின்னைக் குருகும் உண்டு என்று ஒருமையான் கூறுதல் வழுஆயிற்று; ஆயினும் அமைக என்பது.

இரண்டனுள் கூர்ங்கோட்ட காட்டுவல் என்புழிக் கூர்ங்கோட்டது எனற்பாற்று; என்னை, இரண்டனுள் என்றாற் பின்னை ஒன்றேயாகலான் என்பது. ஆயினும் அமைக என்றது

இனி, வழக்கினுள் எம்முளவன் அல்லன் நும்முள்வன் அல்லன் என்றும். பிறவும் இவ்வாறு இடவழுப்பட வருவன அமைத்துக் கொள்க. இனி, ஒரு சாரார் சம்பு சள்ளை சக்தி என்பன ஈண்டுக் காட்டுவாரும் உளர். பிறவும் முடியாது நின்றன எல்லாம் இதுவே, விதி ஒத்தாக முடித்துக் கொள்க என்பது. (66)

**எச்சவியல் முற்றும்**
**இளம்பூரணர் உரை முற்றும்**

## சேனாவரையர் உரை
## 7. இடையியல்

**பொது இலக்கணம்**

**இடைச்சொல்லின் இயல்பு**

249. இடையெனப் படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற்று இயலும் தமக்குஇயல் பிலவே.

நிறுத்த முறையானே இடைச்சொல் உணர்த்திய எடுத்துக் கொண்டார். அதனான், இவ்ஒத்து இடை இயல் என்னும் பெயர்த்தாயிற்று. மொழிக்கு முன்னும் பின்னும் வருமாயினும் பெரும்பான்மையும் இடைவருதலின் இடைச்சொல் ஆயிற்று.

இடைச்சொல் என்று சொல்லப்படுவன பெயரொடும் வினையொடும் வழக்குப்பெற்று இயலும்; தாமாக நடக்கும் இயல்பில; என்றவாறு.

இடைச்சொல் கிளவியும் உரிச்சொற் கிளவியும்
அவற்றுவழி மருங்கின் தோன்றும் (சொல்.159)

என்றதனான் இடைச்சொல் பெயரும் வினையும் சார்ந்து வருதல் பெறப்பட்டமையான் பெயரொடும் வினையொடும் நடைபெற்று இயலும் தமக்கு இயல்பில என்றது, ஈண்டு பெயரும் வினையும் உணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றை வெளிப் படுத்துவது அல்லது தமக்கு எனப் பொருள் உடையவல்ல என்றவாறாம்.

(எ..டு) அதுகொல் தோழி காம நோயே (குறுந்.5) எனவும், வருகதில் லம்மஎஞ் சேரிசேர (அகம்.276) எனவும், பெயரும் வினையும் சார்ந்து அப்பொருளை வெளிப்படுத்தவாறு கண்டுகொள்க.

சார்ந்து வருதல் உரிச்சொற்கும் ஒத்தலின், தமக்கு என பொருள் இன்மை இடைச் சொற்குச் சிறப்பு இலக்கணமாக, தமக்கு இயல்பு இலவே என்றது சார்ந்தல்லது வாரா என வலியுறுத்தவாறு.

பெயரொடும் வினையொடும் நடைபெற்று இயலும் தமக்கு இயல்பில எனப் பொதுப்படக் கூறியவதனான், சாரப்படும் சொல்லின் வேறாய் வருதலேயன்றி, உண்டனன், உண்டான் எனவும் என்மனார் என்றிசினோர் எனவும்; அருங்குரைத்து எனவும் அவற்றிற்கு உறுப்பாய் வருதலும் கொள்க.

இனி ஓர் உரை : இடைச்சொற் கிளவியும் உரிச்சொற் கிளவியும் அவற்றுவழி மருங்கின் தோன்றும் என்பதற்கு, சார்ந்து வருதலான் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் சிறப்பில; இவை உட்படச் சொல் நான்காம் என்பது கருத்தாகலின் இடைச்சொல் பெயரும் வினையும் சார்ந்து வரும் என்னும் வேறுபாடு அதனால் பெறப்படாது. என்னை? இடைச்சொல் பெயர் சார்ந்தும் உரிச்சொல் வினைசார்ந்தும் வரினும் அவற்றது சிறப்பு இன்மையும் சொல் நான்காதலும் உணர்த்துதல் சிதையாதாகலான். அதனான் இடைச்சொல் பெயரும் வினையும் சார்ந்து வரும் என்பது இச்சூத்திரத்தான் கூறவேண்டும் என்ப. அவ்உரை உரைப்பார், பெயரினும் வினையினும் மெய்தடு மாறி (சொல்.267) என்பதற்கும் பெயரும் வினையும் சார்ந்து என்று பொருள் உரைப்ப. *(1)*

**அதன்பாகுபாடு**

250. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருணிலைக்கு உதநவும்
வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபுஆ குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தங் குறிப்பிற் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியான் பொருள்செய் குநவும் என்று
அப்பண் பினவே நுவலுங் காலை.

மேற்சொல்லப்பட்ட இடைச்சொற்கள்தாம் இரண்டு சொல் புணருமிடத்து அப்பொருள் நிலைக்கு உதவுவனவும், வினைச் சொல்லை முடிக்குமிடத்துக் காலப் பொருளவாய்

வருவனவும், செயப்படுப்பொருள் முதலாகிய வேற்றுமைப் பொருட்கண் உருபு என்னும் குறியவாய் வருவனவும், பொருளுடையவன்றிச் சார்த்திச் சொல்லப்படும் துணையாய் வருவனவும், வேறு பொருள் உணர்த்தாது இசைநிறைத்தலே பொருளாக வருவனவும், தத்தங் குறிப்பான் பொருள் உணர்த்துவனவும், ஒப்புமை தோன்றாதவழி அவ் ஒப்புமைப் பொருள் பயப்பனவும் எனக் கூறப்பட்ட ஏழு இயல்பை உடைய சொல்லுமிடத்து என்றவாறு.

புணரியல் நிலை புணரியலது நிலை, ஆண்டுப் பொருள் நிலைக்கு உதவுதலாவது எல்லாவற்றையும் என்புழி வற்றுச் சாரியை நிலைமொழிப் பொருள் அஃறிணைப் பொருள் என்பதுபட வருதலும், எல்லா நம்மையும் என்புழி நம்முச் சாரியை அப்பொருள் தன்மைப் பன்மை என்பதுபட வருதலுமாம். அல்லனவும் தாம் சார்ந்து வரும் மொழிப் பொருட்கு உபகாரமுடையவாய் வருமாறு ஓர்ந்து கொள்ளப்படும். அல்லாக்கால், சாரியை மொழியாகா என்பது.

வினைச்சொல் ஒரு சொல்லாயினும் முதனிலையும் இறுதி நிலையும் இடைச்சொல்லுமாகப் பிரித்துச் செய்கை செய்து காட்டப்படுதலின், வினைசெயல் மருங்கின் என்றார். அம்முடிபு உணரத்தாமைக்குக் காரணம் புணரியல் நிலையிடை உணரத் தோன்றா என்புழிச் சொல்லப்பட்டது. அவற்றுள் ஒரு சாரன பால் உணர்த்தாமையானும், எல்லாம் காலம் உணர்த்துதலானும், காலமொடு வருநவும் என்றார்.

வேற்றுமைப் பொருளாய் வருவன பிற சொல்லும் உள ஆகலின், அவற்றை நீக்குதற்கு உருபாகுநவும் என்றார். பிற சொல்லாவன கண்ணகன் ஞாலம், ஊர்க்கால் நிவந்த பொதும்பர் (குறிஞ்சிக்கலி.20) என ஏழாம் வேற்றுமைப் பொருட்கண் வரும் கண் கால் முதலாயினவும், அனையை யாகல் மாறே (புறம்.4) சிறந்ததோன் பெயரன் பிறந்தமாறே, இயல்புளிக் கோலோச்சு மன்னவன் (குறள்.545) என மூன்றாம் வேற்றுமைப் பொருட்கண் வரும் மாறு உளி என்பனவும், அன்ன பிறவுமாம், அஃதேல்,

வேற்றுமை உருபு என்று ஓதுவார்; ஓதவே, இவை நீங்கும் எனின் அஃது ஒக்கும். அவை தம்மையும் தழீஇக் கோடற்கு வேற்றுமைப் பொருள்வயின் என்றார். அவை வருங்கால் நிலைமொழி உருபிற்கு ஏற்ற செய்கை ஏற்புழிப் பெறுதலுடைமையின், உருபாகுநவும் என்றார். இஃது இருபொருள் உணர்த்தலான் இருதொடராகக் கொள்க.

அசைத்தல் சார்த்துதல், பொருள் உணர்த்தாது பெயரொடும் வினையொடும் சார்த்திச் சொல்லப்பட்டு நிற்றலின், அசைநிலை ஆயிற்று. அவை அந்தில் முதலாயின. புகழ்ந்திகு மல்லரோ பெரிதே, உரைத்திசினோரே எனச் சார்ந்த மொழியை வேறுபடுத்து நிற்றலின், அசைநிலை சொல்லாயின என்பாரும் உளர்.

செய்யுட்கண் இசை நிறைத்து நிற்றலின், இசை நிறையாயின.

குறிப்புச் சொல்லுவான் கண்ணதாயினும் அவன் குறித்த பொருளைத் தாம் குறித்து நிற்றலின், தத்தங் குறிப்பின் என்றார். சொல்லுவான் குறித்த பொருளைத்தாம் விளக்கும் எனவே, கூறியதோர் வாள் என மன்னான் அன்றி ஓசைவேறுபட்டான் ஒருகால் திட்பம் இன்று என்னும் தொடக்கத்து ஒழியிசைப் பொருள்தோன்றலும் பெறப்படும். பொருட்கும் பொருளைப் புலனாகவுடைய உணர்விற்கும் ஒற்றுமை கருதிப் பொருள் உணர்வைப் பொருள் என்றார். மிகுதி செய்யும் பொருள (சொல்.299) என்பது முதலாயினவற்றிற்கும் ஈது ஒக்கும்.

ஒக்கும் என்னும் சொல்லன்றே ஒப்புமை உணர்த்துவது. அச்சொல் ஆண்டு இன்மையான் ஒப்புமை தோன்றாமையான், ஒப்பில் வழியான் என்றார். உவமையொடு பொருட்கு ஒப்பில்லை என்றாரல்லர் என்பது. ஒக்கும் என்னும் சொல்லை ஒப்பு என்றார் என்பாரும் உளர். ஒப்பில் வழியான் பொருள் செய்குந ஆவன அன்ன, ஏய்ப்ப, உறழ, ஒப்ப என்பன முதலாகப் பொருள் அதிகாரத்துக் கூற்ப்பட்ட முப்பத்தாறனுள் ஒக்கும் என்பது ஒழிய ஏனையவாம்.

சாரியையும், வேற்றுமை உருபும், உவம உருபும், குறிப்பான் பொருள் உணர்த்துமாயினும், புணர்ச்சிக்கண் உபகாரப்படுதலும் வேற்றுமைத் தொகைக்கும், உவமத் தொகைக்கும் அவ்உருபு பற்றி இலக்கணம் கூறுதலும் முதலாகிய பயன்நோக்கி, இவற்றை வேறு கூறினார்.

இடைச்சொல் ஏழனுள்ளும் முதல்நின்ற மூன்றும் மேலே உணர்த்தப்பட்டமையான் முன்வைத்தார், ஒப்பில் வழியாற் பொருள் செய்குந முன்னர் உணர்த்தப்படுதலின் இறுதிக்கண் வைத்தார். ஒழிந்த மூன்றும் இவ் ஓத்தின்கண் உணர்த்தப்படுதலின் இடை வைத்தார். *(2)*

**இடைச்சொல் நிற்கும் இடமும் வேறுபாடும்**

251. அவைதாம்,
முன்னும் பின்னும் மொழிஅடுத்து வருதலும்
தம்ஈறு திரிதலும் பிறிதுஅவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப.

மேற்சொல்லப்பட்ட இடைச்சொல், இடை வருதலேயன்றி, தம்மான் சாரப்படும் சொற்கு முன்னும் பின்னும் வருதலும், தம் ஈறு வேறுபட்டு வருதலும், பிறிதோர் இடைச்சொல் ஓர் இடைச்சொன் முன் வருதலுமாகிய அத்தன்மைய வெல்லாம் உரிய என்றவாறு.

(எ..டு) அதுமன் எனவும், கேண்மியா *(புறம்.148)* எனவும், சாரப்படு மொழியை முன் அடுத்துவந்தன. கொன்னூர் *(குறுந்.138)* எனவும், ஓஒவினிதே எனவும் பின் அடுத்து வந்தன. உடனுயிர் போகுக தில்ல *(குறுந்.5)* என ஈறு திரிந்து வந்தது. வருகதில் லம்மவெஞ் சேரி சேர *(அகம்.276)* என்பது பிறிது அவண் நின்றது.

அவைதாம் எனப் பொதுவகையான் ஓதினாரேனும், இவ்இலக்கணம் இவ்ஓத்தின்கண் உணர்த்தப்படும் அசைநிலை முதலாகிய மூன்றற்கும் எனக்கொள்க.

அன்னவை எல்லாம் என்றதனான், மன்னைச் சொல் (சொல்.252) கொன்னைச்சொல் (சொல்.254) எனத் தம்மை உணர நின்றவழி ஈறு திரிதலும், னகாரை முன்னர் என எழுத்துச் சாரியை ஈறுதிரிதலும் கொள்க. (3)

**சிறப்பு இலக்கணம்**

**மன் என்னும் இடைச்சொல்லின் பொருள்**

252. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன்று என்ப மன்னைச் சொல்லே.

இவ் ஓத்தின்கண் உணர்த்தப்படும் மூவகை இடைச் சொல்லுள் நத்தம் குறிப்பால் பொருள் செய்குந பொருள் உணர்துதற் சிறப்புப் பரப்புடைமையான் அதனை முன் உணர்த்துகின்றார்.

கழிவு குறித்து நிற்பதும், ஆக்கம் குறித்து நிற்பதும் ஒழியிசைப் பொருண்மை குறித்து நிற்பதும் என மன்னைச் சொல் மூன்றாம் என்றவாறு.

(எ..டு) சிறியகட் பெறினே யெமக்கீயு மன்னே (புறம்.235) என்புழி மன்னைச் சொல், இனி அது கழிந்தது என்னும் பொருள் குறித்து நின்றது. பண்டு காடுமன் இன்று கயல் பிறழும் வயலாயிற்று என்புழி அஃது ஆக்கம் குறித்து நின்றது. கூரியதோர் வாள்மன் என்புழித் திட்பம் இன்று என்றானும் இலக்கணம் இன்று என்றானும் எச்சமாய் ஒழிந்த சொற்பொருண்மை நோக்கி நின்றது. (4)

**தில் என்னும் சொல்**

253. விழைவே காலம் ஒழியிசைக் கிளவியென்று
அம்மூன்று என்ப தில்லைச் சொல்லே.

விழைவு குறித்து நிற்பதும், காலம் குறித்து நிற்பதும் ஆண்டு ஒழிந்து நின்ற சொற்பொருளை நோக்கி நிற்பதும் எனத் தில்லைச் சொல் மூன்றாம் என்றவாறு.

(எ..டு) வார்ந்திலங்கு வையெயிற்றுச் சின்மொழி யரிவையைப்
பெறுகதில் அம்ம யானே (குறுந்.14)

என அவளைப் பெறுதற்கண் உளதாகிய விழைவின்கண் வந்தது. பெற்றாங்கு அறிகதில் லம்மஇவ் வூரே எனப் பெற்றகாலத்து அறிக எனக் காலம் குறித்து நின்றது. வருகதில் லம்மவெஞ் சேரி சேர (அகம்.276) எனவந்தக்கால் இன்னது செய்வல் என்னும் ஒழியிசைப் பொருள் நோக்கிற்று. (5)

**கொன் என்னும் சொல்**

254. அச்சம் பயமிலி காலம் பெருமை என்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே

அச்சப் பொருளதும் பயமின்மைப் பொருளதும், காலப்பொருளதும் பெருமைப் பொருளதும் எனக் கொன்னைச் சொல் நான்காம்; என்றவாறு.

(எ..டு) கொன்முனை இரவூர் போலச்
சிலவா குகநீ துஞ்சு நாளே (குறுந்.91)

என்புழி அஞ்சி வாழும்ஊர் எனவும்,

கொன்னே கழிந்தன் றிளமை (நாலடி.55)

என்புழிப் பயமின்றிக் கழிந்தது எனவும்,

கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனோ

என்புழிக் காதலர் நீங்கிய காலம் அறிந்து வந்த வாடை எனவும்,

கொன்னூர் துஞ்சினும் யாம்துஞ் சலமே (குறுந்.138)

என்புழிப் பேரூர் துஞ்சினும் எனவும், கொன்னைச் சொல் நான்கு பொருளும்பட வந்தவாறு கண்டுகொள்க. (6)

**உம் என்னும் சொல்**

255. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கமென்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே.

எச்சம் குறிப்பது முதலாக ஆக்கம் குறிப்பது ஈறாக உம்மைச்சொல் எட்டாம் என்றவாறு.

(எ..டு) சாத்தனும் வந்தான் என்னும் உம்மை, கொற்றனும் வந்தான் என்னும் எச்சம் குறித்து நிற்றலின் எச்சஉம்மை. கொற்றனும் வந்தான் என்பதூஉம் இறந்த சாத்தன் வரவாகிய எச்சம் குறித்து நிற்றலின் எச்சஉம்மை. குறவரும் மருளுங்குன்றத்துப் படினே (மலை.275) என்பது குன்றத்து மயங்காது இயங்குதற்கண் குறவர் சிறந்தமையான் சிறப்பு உம்மை.

ஒன்று இரப்பான் போல் இளிவந்துஞ் சொல்லும் உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்
வல்லாரை வழிபட்டு ஒன்றறிந் தான் போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வதோர் வண்மையும் உடையன் (கலி.47)

என்புழி இன்னான் என்று துணியாமைக்கண் வருதலின் ஐய உம்மை.

சாத்தன் வருதற்கும் உரியன் என்பது வாராமைக்கும் உரியன் என்னும் எதிர்மறையை ஒழிபாக உடைத்தாய் நிற்றலின், எதிர்மறை உம்மை.

தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார் என எஞ்சாப் பொருட்டாகலான் முற்றும்மை.

நிலனும் நீரும் தீயும் வளியும் ஆகாயமும் எனப் பூதம் ஐந்து என்புழி எண்ணுதற்கண் வருதலின் எண்ணும்மை.

இரு நிலம் அடி தோய்தலின் திருமகளும் அல்லள், அரமகளும் அல்லள், இவள் யாராகும் என்ற வழித் தெரிதல் பொருட்கண் வருதலின் தெரிநிலையும்மை. திருமகளோ அரமகளோ என்னாது அவரை நீக்குதலின் ஐயஉம்மையின் வேறுஆதல் அறிக. ஆக்க உம்மை வந்தவழிக் கண்டுகொள்க. உரையாசிரியர் நெடியனும் வலியனும் ஆயினான் என்றவழி உம்மை ஆக்கம் குறித்து நிற்றலின் ஆக்க உம்மை என்றார். செப்பே வழீஇயினும் வரை நிலையின்றே (சொல்.15) என்னும் உம்மை

வழுவை இலக்கணம் ஆக்கிக் கோடல் குறித்து நின்றமையின் ஆக்க உம்மை என்பாரும் உளர். பால் உணவும் ஆயிற்று என்றால் அதுவே மருந்தும் ஆயிற்று என வருதல் ஆக்கம். (7)

**ஓ என்னும் சொல்**

256. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன்று என்ப ஓகர ரம்மே.

பிரிநிலைப் பொருட்டாவது முதலாக ஓகாரம் அறுவகைப்படும்.

(எ..டு) யானோ தேறேன் அவர் பொய்வழங் கலரே (குறுந்.21) என்பது தேறுவார் பிறரின் பிரித்தலின் பிரிநிலை ஓகாரம் ஆயிற்று.

சாத்தன் உண்டானோ என்பது வினா ஓகாரம். யானோ கொள்வேன் என்பது கொள்ளேன் என்னும் எதிர்மறை குறித்து நிற்றலின், எதிர்மறை ஓகாரமாம்.

கொளலோ கொண்டான் என்பது கொண்டு உய்யப்போயினான் அல்லன் என்பது முதலாய ஒழியிசை நோக்கி நிற்றலின் ஒழியிசை ஓகாரம்.

திருமகளோ அல்லள் அரமகளோ அல்லள் இவள் யார்? என்ற வழித் தெரிதற்கண் வருதலின் தெரிநிலை ஓகாரம். ஓஒபெரியன் என்பது பெருமை மிகுதி உணர்த்தலின் சிறப்பு ஓகாரம். (8)

**ஏ என்னும் சொல்**

257. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந்து ஏகா ரம்மே.

தேற்றேகாரம் முதலாக ஏகாரம் ஐந்து என்றவாறு.

உண்டேஎ மறுமை எனத் தெளிவின்கண் வருதலின் தேற்றேகாரம்.

நீயே கொண்டாய் என வினாப் பொருளுணர்த்தலின் வினாவேகாரம்.

அவருள் இவனே கள்வன் எனப் பிரித்தலின் பிரிநிலை ஏகாரம்

நிலனே நீரே தீயே வளியே என எண்ணுதற்கண் வருதலின் எண்ஏகாரம்.

கடல்போல் தோன்றல் காடு இறந்தோரே (அகம்.1) என்பது செய்யுள் இறுதிக்கண் வருதலின் ஈற்றசை ஏகாரம் வாடாவள்ளியம் காடிறந்தோரே (குறுந்.216) எனச் செய்யுள் இடையிலும் வருதலின், ஈற்றசை என்பது மிகுதி நோக்கிச் சென்ற குறி. இஃது அசை நிலையாயினும் ஏகார வேறுபாடாகலின் ஈண்டுக் கூறினார். *(9)*

**என என்னுஞ்சொல்**

**258. வினையே குறிப்பே இசையே பண்பே**
**எண்ணே பெயரோடு அவ்வறு கிளவியும்**
**கண்ணிய நிலைத்தே எனஎன்கிளவி.**

வினை முதலாகிய ஆறு பொருண்மையும் குறித்து வரும் என என்னும் இடைச்சொல் என்றவாறு.

(எ..டு) மலைவான் கொள்கென உயர்பலி தூஉய் (புறம்.143) என வினைப் பொருண்மையும், துண்ணெனத் துடித்தது மனம் எனக் குறிப்புப் பொருண்மையும்,

ஒல்லென ஒலித்தது என இசைப் பொருண்மையும்,

வெள்ளென விளர்த்தது எனப் பண்புப் பொருண்மையும்,

நிலனென, நீரென, தீயென வளியென என எண்ணுப் பொருண்மையும்,

அழுக்காறு என ஒரு பாவி (குறள்.168)

எனப் பெயர்ப் பொருண்மையும் குறித்து, என என்னும் சொல் வந்தவாறு கண்டு கொள்க. *(10)*

### என்று என்னும் சொல்

259. என்றுஎன் கிளவியும் அதனோ ரற்றே.

என்று என்னும் இடைச்சொல்லும் என என்பது போல அவ்ஆறு பொருளும் குறித்து வரும் என்றவாறு.

நரை வரும் என்று எண்ணி (நாலடி.11) எனவும், விண்ணென்று விசைத்தது எனவும், ஒல் என்று ஒலிக்கும் ஒலிபுனல் ஊரற்கு (ஐந்திணை ஐம்பது.28) எனவும், பச்சென்று பசுத்தது எனவும், நிலன்என்று நீர்என்று தீ என்று எனவும், பாரி என்று ஒருவன் உளன் எனவும் வரும். (11)

### தில் – விழைவுப் பொருள்

260. விழைவின் தில்லை தன்னிடத்து இயலும்.

அப்பால் மூன்றே தில்லைச் சொல் என்று சொல்லப்பட்ட மூன்றனுள், விழைவின்கண் வரும்தில்லை தன்மைக்கண் அல்லது வாராது என்றவாறு.

தன்மைக்கண் வருதல் மேற்காட்டப் பட்டனவற்றுள்ளும் பிறாண்டும் கண்டுகொள்க. இடம் வரையறுத்து ஓதாமையின், விழைவின் தில்லை தன்மைக்கண் வருதலும் மேலே பெறப் பட்டதனைப் பின்னும் கூறினார், ஏனை இடத்து வாராது என்று நியமித்தற்கு என்பது. (12)

### ஏ ஓ சொற்களுக்கு மேலும் ஒரு முடிவு

261. தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப.

தெளிவின்கண் வரும் ஏகாரமும் சிறப்பின்கண் வரும் ஓகாரமும் அளபான் மிக்க இசையை உடைய என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

அளபெடையாய் வருதல் மேற்காட்டப் பட்டனவற்றுள்ளும் பிறாண்டும் கண்டு கொள்க. (13)

**மற்று என்னும் இடைச்சொல்**

262. மற்றுஎன் கிளவி வினைமாற்று அசைநிலை
அப்பால் இரண்டுஎன மொழிமனார் புலவர்.

மற்று என்னும் சொல் வினைமாற்றும் அசைநிலையும் என இரண்டாம் என்றவாறு.

(எ..டு) மற்றறிவாம் நல்வினை யாம் இளையம் (நாலடி.9) என்றவழி அறம்செய்தல் பின் அறிவாம் என அக்காலத்து வினைமாற்றுதலான் மற்று என்பது வினைமாற்றின்கண் வந்தது.

அது மற்று அவலங் கொள்ளாது நொதுமற் கலுழும் (குறுந்.12) என அசைநிலையாய் வந்தது. கட்டுரை இடையும் மற்றோ என அசைநிலையாய் வரும். *(14)*

**எற்று என்னும் சொல்**

263. எற்றென் கிளவி இறந்த பொருட்டே.

எற்று என்னும் சொல் இறந்த பொருண்மைத்து; என்றவாறு.

(எ..டு) எற்றென் உடம்பின் எழில் நலம் என்பது என்நலம் இறந்தது என்னும் பொருள்பட நின்றது. எற்று ஏற்றம் இல்லாருள் யான் ஏற்றம் இல்லாதேன் என்பதூஉம் இதுபொழுது துணிவு இல்லாருள் துணிவு இல்லாதேன் யான் என்று துணிவு இறந்தது என்பதுபட நின்றது. *(15)*

**மற்றையது என்னும் சொல்**

264. மற்றையது என்னும் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனம்குறித் தன்றே.

மற்றையது எனப் பெயர்க்கு முதனிலையாய் வரும் மற்றை என்னும் ஐகார ஈற்று இடைச்சொல் சுட்டடப்பட்டதனை ஒழித்து, அதன் இனங்குறித்து நிற்கும் என்றவாறு.

ஆடை கொணர்ந்தவழி அவ்ஆடை வேண்டாதான், மற்றையது கொணா என்னும், அஃது அச்சுட்டிய ஆடை ஒழித்து, அதன் இனம் ஆகிய பிற ஆடை குறித்து நின்றவாறு கண்டுகொள்க.

பெரும்பான்மையும் முதனிலையாய் நின்றல்லது அவ்இடைச்சொல் பொருள் விளக்காமையின், மற்றையது என்னும் கிளவி என்றார். சிறுபான்மை மற்றை ஆடை எனத் தானேயும் வரும்.

மற்றையஃது, மற்றையவன் என்னும் தொடக்கத்தனவும் அவ்இடைச்சொன் முதனிலையாய பெயர். *(16)*

**மன்ற என்னும் சொல்**

**265. மன்றஎன் கிளவி தேற்றஞ் செய்யும்.**

மன்ற என்னும் சொல், தெளிவுப் பொருண்மையை உணர்த்தும்; என்றவாறு.

(எ..டு) கடவு ளாயினு மாக
மடவை மன்ற வாழிய முருகே (நற்றிணை.34)

என வரும். மடவையே என்றவாறாம். *(17)*

**தஞ்சம் என்னும் சொல்**

**266. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.**

முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம் (புறம்.73) எனத் தஞ்சக் கிளவி அரசு கொடுத்தல் எளிது என எண்மைப் பொருள் உணர்த்தியவாறு கண்டுகொள்க. *(18)*

**அந்தில் என்னும் சொல்**

**267. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று
ஆயிரண் டாகும் இயற்கைத்து என்ப.**

அந்தில் என்னும் சொல் ஆங்கு என்னும் இடப்பொருள் உணர்த்துவதும் அசைநிலையும் என இரண்டாம் என்றவாறு.

(எ..டு) வருமே - சேயிழை யந்திற் கொழுநற் காணிய (குறுந்.293) என்புழி ஆங்கு வரும் என்றவாறாம். அந்திற் - கச்சினன் கழலினன் (அகம்.76) என வாளாதே அசைத்து நின்றது. *(19)*

**கொல் என்னும் சொல்**

**268. கொல்லே ஐயம்.**

குற்றிகொல்லோ மகன்கொல்லோ எனக் கொல் ஐயத்துக்கண் வந்தவாறு. *(20)*

**எல் என்னும் சொல்**

**269. எல்லே இலக்கம்.**

எல்என்பது உரிச்சொல் நீர்மைத்தாயினும், ஆசிரியர் இடைச்சொல்லாக ஓதினமையான், இடைச்சொல் என்று கோடும்.

எல்வளை (புறம்.24) என எல் என்பது இலங்குதற்கண் வந்தவாறு. *(21)*

**ஆர் என்னும் சொல்**

**270. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி**
**பலர்க்குஉரி எழுத்தின் வினையொடு முடிமே.**

இயற்பெயர் முன்னர் வரும் ஆர் என்னும் இடைச்சொல் பலர் அறிசொல்லான் முடியும் என்றவாறு, ஈண்டு இயற்பெயர் என்றது இருதிணைக்கும் அஃறிணை இருபாற்கும் உரிய பெயரை.

(எ..டு) பெருஞ் சேந்தனார் வந்தார், முடவனார் வந்தார் முடத்தாமக் கண்ணியார் வந்தார், தந்தையார் வந்தார் எனவும் நரியார் வந்தார் எனவும் வரும்.

தாம், தான், எல்லாம், நீயிர், நீ என்னும் ஐந்தும் ஒழித்து அல்லா இயற்பெயர் எல்லாவற்று முன்னரும் ஆரைக்கிளவி வருதலின், பெரும்பான்மை குறித்து இயற்பெயர் முன்னர் என்றார்.

நம்பியார் வந்தார் நங்கையார் வந்தார் எனச் சிறுபான்மை உயர்திணைப் பெயர் முன்னர் வருதல் ஒன்றென முடித்தல் என்பதனால் கொள்க.

ஆரைக்கிளவி கள் என்பதுபோல் ஒற்றுமைப்பட்டுப் பெயரீறாய் நிற்றலின், ஆரைக்கிளவி பலர்அறி சொல்லான் முடியும் என்றது அதனை ஈறாகவுடைய பெயர் பலர்அறி சொல்லான் முடியும் என்றவாறாம்.

பலர்க்குரி யெழுத்தின் வினையொடு முடிமே என ஆரைக்கிளவியது இயல்பு உணர்த்தவே, அஃது உயர்த்தற் பொருட்டாதலும், திணைவழுவும், பால்வழுவும் அமைத்தலும் பெற்றாம்.

ஒருமைப்பெயர் முன்னர் ஒருமை சிதையாமல் ஆரைக்கிளவி வந்து பலர்அறி சொல்லான் முடிதலின், ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியின் வேறு ஆதல் அறிக. *(22)*

**அதற்கு, மேலும் ஒரு விதி**

271. அசைநிலைக் கிளவி ஆகுவழி யறிதல்.

ஆரைக்கிளவி அசைநிலையாம் இடம் அறிக. என்றவாறு.

(எ..டு) பெயரினாகிய தொகையுமா ருளவே (சொல்.67) எனவும், எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே (எழு.61) எனவும் வரும்.

ஆகுவழி அறிதல் என்றதனால், அசைநிலையாங்கால் உம்மை முன்னரும், உம் ஈற்று வினை முன்னரும் அல்லது வாராமை அறிக. சிறுபான்மை பிறாண்டு வருமேனும் கொள்க. *(23)*

**ஏ குரை என்னும் சொற்கள்**

272. ஏயுங் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண் டாகும் இயற்கைய என்ப.

ஏ என்னும் இடைச்சொல்லும், குரை என்னும் இடைச்சொல்லும் இசைநிறையும் அசைநிலையும் என ஓர் இரண்டாம் என்றவாறாம்.

(எ..டு) ஏஎ...இஃதொத்தன் என்பெறான் கேட்டைக்காண் (கலி.61) என்பது இசைநிறை, ஏஎயென் சொல்லுக என்பது அசைநிலை.

அளிதோ தானேயது பெறலருங் குரைத்தே (புறம்.5) என்பது இறைநிறை. பல்குரைத் துன்பங்கள் சென்றுபடும் (குறள்.1045) என்பது அசைநிலை.

தொடர்மொழி முதற்கண் பிரிந்து நின்றல்லது பெரும்பான்மையும் ஏகாரம் அசைநிலை ஆகாமையின் சார்ந்த மொழியோடு ஒன்றுபட்டிசைத்து இடையும் இறுதியும் நிற்கும் தேற்றேகாரம் முதலாயினவற்றோடு ஒருங்கு கூறாது வேறு கூறினார்.

அஃதேல், இதனை நிரல்நிறைப் பொருட்டாகக் கொண்டு ஏ இசைநிறை; குரை அசைநிலை என்றாரால் உரையாசிரியர் எனின் : அற்றுஅன்று; மற்று அந்தில் என்பனபோலப் பொருள் வகையான் வேறுபடுவனவற்றை இரண்டாம் என்பதல்லது, சொல்வகையான் இரண்டாகிய சொல்லை இரண்டாம் என்றதனான் ஒரு பயன் இன்மையின், அவர்க்கு அது கருத்து அன்று என்க. அல்லதூஉம், ஒரு சொல்லே இசைநிறையும் அசைநிலையுமாகல் உடைமையான் அவற்றை உடன்கூறினார் என்னாக்கால் இசைநிறையும் அசைநிலையும் ஒருங்கு மயங்கக் கூறலாமாகலானும், அவர்க்கது கருத்தன்மை உணர்க. (24)

**மா என்னும் சொல்**

273. மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

மா என்னும் இடைச்சொல் வியங்கோளைச் சார்ந்து அசைநிலையாய் வரும் என்றவாறு.

(எ..டு) புற்கை உண்கமா கொற்கை யோனே எனவரும். (25)

**முன்னிலை அசைச் சொற்கள்**

274. மியாஇக மோமதி இகுஞ்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்

மியா முதலாகிய ஆறும் முன்னிலை மொழியைச் சார்ந்து வரும் அசைச்சொல்லாம் என்றவாறு.

(எ..டு) கேண்மியா, சென்மியா எனவும், கண்பனி ஆன்றிக வென்றி தோழி எனவும் காமம் செப்பாது கண்டது மொழிமோ (குறுந்.2) எனவும், உரைமதி வாழியோ வலவ எனவும், மெல்லம் புலம்ப கண்டிகும் எனவும், காப்பும் பூண்டிசின் கடையும் போகலை (அகம்.7) எனவும் வரும். (26)

**இகும் சின் என்னும் சொற்கள்**

275. அவற்றுள்,
இகுமுஞ் சின்னும் ஏனை இடத்தொடும்
தகுநிலை யுடைய என்மனார் புலவர்.

மேற்கூறப்பட்ட ஆறனுள், இகுமும் சின்னும் படர்க்கைச் சொல்லோடும் தன்மைச் சொல்லோடும் பொருந்தும் நிலையுடைய என எய்தியதன்மேற் சிறப்புவிதி வகுத்தவாறு.

(எ..டு) கண்டிகும் அல்லமோ (ஐங்குறு.121) எனவும் கண்ணும் படுமோ என்றிசின் யாமே (நற்.61) எனவும் தன்மைக்கண் வந்தன.

புகழ்ந்திகும் அல்லரோ பெரிதே எனவும், யார் அஃது அறிந்திசி னோரே (குறுந்.18) எனவும், படர்க்கைக்கண் வந்தன.(27)

**அம்ம என்னும் சொல்**

276. அம்மகேட் பிக்கும்.

அம்ம என்னும் இடைச்சொல் ஒருவனை ஒருவன் ஒன்று கேள் என்று சொல்லுதற்கண் வரும் என்றவாறு.

(எ..டு) அம்ம வாழி தோழி (ஐங்.31) என வரும். மியா இக முதலாகிய அசைநிலை ஒரு பொருள் உணர்த்தாவாயினும் முன்னிலைக்கண் அல்லது வாராமையான் அவ்இடம் உணர்விக்குமாறுபோல அம்ம என்பதூஉம் ஒரு பொருள் உணர்த்தாதாயினும் ஒன்றனைக் கேட்பிக்கும் இடத்தல்லது வாராமையான் அப்பொருள் உணர்விக்கும் என்பது விளக்கிய கேட்பிக்கும் என்றார். (28)

**ஆங்க என்னும் சொல்**

277. ஆங்க உரையசை.

ஆங்க என்னும் இடைச்சொல் கட்டுரைக்கண் அசை நிலையாய் வரும் என்றவாறு.

(எ..டு) ஆங்கக் குயிலும் மயிலும் காட்டி என வரும். (29)

**ஒப்பில்போலி**

278. ஒப்பில் போலியும் அப்பொருட்டு ஆகும்.

ஒப்புமை உணர்த்தாத போலிச்சொல்லும் ஆங்க என்பதுபோல் உரையசையாம் என்றவாறு.

(எ..டு) மங்கலம் என்பதோர் ஊர் உண்டு போலும் என வரும். போலும் போல்வது என்னுந் தொடக்கத்துப் பலவாய்பாடுந் தழுவுதற்குப் போலி என்றார். நெருப்பழற் சேர்ந்தக்கால் நெய்போல்வதூஉம் (நாலடி.124) என்பதும் அது.

அசைநிலையும் பொருள் குறித்தல்லது நில்லாமையின் அப்பொருட்டாகும் என்றார். (30)

**அசைநிலைச் சொற்கள்**

279. யாகா,
பிறபிறக்கு அரோபோ மாதுஎன வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி.

யா முதலாகிய ஏழ்இடைச் சொல்லும் அசைநிலையாம் என்றவாறு.

(எ..டு) யா பன்னிருவர் மாணாக்கருள் அகத்தியனார்க்கு எனவும், புறநிழற் பட்டாளோ இவளிவண் காண்டிகா எனவும், தான் பிறவரிசை யறிதலின் தன்னுந் தூக்கி (புறம்.14) எனவும், அதுபிறக்கு எனவும், நோதக இருங்குயில் ஆலும்அரோ (கலி.33) எனவும், பிரியின் வாழாது என்போ தெய்ய எனவும், விளிந்தன்று மாது அவர்த் தெளிந்த என் நெஞ்சே (நற்றிணை.178) எனவும் வரும்.

இடம் வரையறாமையின் இவை மூன்று இடத்திற்கும் உரிய.

ஆங்கவும் ஒப்பில் போலியும் உரை தொடங்குதற் கண்ணும் ஆதரமில்வழியும் வருதலின் வேறு கூறினார். (31)

**பிரிவில் அசைநிலைகள்**

280. ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை.

ஆக, ஆகல் என்பது என்னும் மூன்றிடைச் சொல்லும் அசைநிலையாங்கால், இரட்டித்து நிற்கும்; பிரிவில் அசைநிலை எனவே, தனித்து நின்று அசைநிலை ஆகா என்பதாம். ஒருவன் யான் இன்னேன் என்றானும்; நீ இன்னை என்றானும், அவன் இன்னான் என்றானும் கூறியவழிக் கேட்டான் ஆக ஆக, ஆகல் ஆகல் என்னும்; இவை உடம்படாமைக்கண்ணும் ஆதரம்இல் வழியும் வரும். ஒருவன் ஒன்று உரைப்பக் கேட்டான் என்பது என்பது என்னும். அது நன்கு உரைத்தற்கண்ணும் இழித்தற்கண்ணும் வரும். பிறாண்டுவரினும் வழக்கு நோக்கி உணர்ந்துகொள்க. (32)

**ஔ என்னும் சொல்**

281. ஈரளபு இசைக்கும் இறுதியில் உயிரே
ஆயியல் நிலையும் காலத் தானும்
அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை யின்றித் தான்வருங் காலையும்
உளவென மொழிப பொருள்வேறு படுதல்;
குறிப்பின் இசையால் நெறிப்படத் தோன்றும்.

இரண்டு மாத்திரையை உடைத்தாய் மொழிக்கு ஈறு ஆகாது எனப்பட்ட ஔகாரம், பிரிவில் அசைநிலை என மேற் கூறப்பட்டனபோல இரட்டித்து நிற்குமிடத்தும், இரட்டியாது அளபெடையாய் நிற்குமிடத்தும், அளபெடையின்றித் தான் வரும் இடத்தும், பொருள் வேறுபடுதல் உள, அப்பொருள் வேறுபாடு சொல்லுவான் குறிப்பிற்குத் தகும் ஓசைவேறுபாட்டாற் புலப்படும்.

பொருள் வேறுபாடாவன வழக்கு நோக்கிச் சிறப்பும் மாறுபாடுமாம்.

(எ..டு) ஔஔ ஒருவன் தவம் செய்தவாறு என்றவழிச் சிறப்புத் தோன்றும். ஒரு தொழில் செய்வானை, ஔஔ இனிசாலும் என்றவழி மாறுபாடு தோன்றும்.

ஔஉ ஒருவன் இரவலர்க்கு ஈந்தவாறு, ஔஉவினி வெகுளல் எனவும்; ஔ அவன் முயலுமாறு; ஔ இனித் தட்டுப்புடையல் எனவும்; அளபெடுத்தும் அளபெடாதும் வந்தவழியும், அப்பொருள் தோன்றியவாறு கண்டுகொள்க. இதனை இக்காலத்து ஓகாரமாக வழங்குப. பிறபொருள் படுமாயினும் அறிந்து கொள்க.

ஈரளபிசைக்கும் என்றே ஒழியின் நெட்டெழுத்து எல்லாவற்று மேலும், இறுதியில் உயிர் என்றே ஒழியின் எகர ஒகரத்துக்கு மேலும் சேறலான், ஈரளபு இசைக்கும் இறுதியில் உயிர் என்றார்.

இது தத்தங் குறிப்பிற் பொருள் செய்வதாயினும் அடுக்கி வருதல் உடைமையான் ஈண்டு வைத்தார். *(33)*

**குறிப்புச் சொற்கள்**

282. நன்றீற்று ஏயும் அன்றீற்று ஏயும்
அந்தீற்று ஓவும் அன்னீற்று ஓவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்.

நன்று ஈற்று ஏயும் அன்று ஈற்று ஏயும் ஆவன நன்றே அன்றே என்பன. அந்து ஈற்று ஓவும் அன் ஈற்று ஓவும் ஆவன. அந்தோ அன்னோ என்பன. நன்றினது ஈற்றின்கண் ஏஎன விரியும். இவ்விரிவு ஏனையவற்றிற்கும் ஒக்கும். நன்று ஈற்றுஏ என்பதனான் நம்மூர்ந்து வரூஉ மிகர வைகாரமும் (சொல்.*163*) என்புழிப்போலச் சொன் முழுதும் கொள்ளப்படும். ஒழிந்தனவும் அன்ன.

குறிப்பொடு கொள்ளும் என்றது, மேலது போல இவையும் குறிப்பு ஓசையான் பொருள் உணர்த்தும் என்றவாறு.

ஒருவன் ஒன்று உரைத்தவழி அதற்கு மேவாதான் நன்றே நன்றே, அன்றே அன்றே என அடுக்கலும் வரும், அவை மேவாமைக்குறிப்பு விளக்கும். அவனன்றே இது செய்வான் என அடுக்காது நின்றவழி, அன்று ஈற்று ஏவுக்கு தெளிவு முதலாகிய பிற பொருளும்படும். ஏனை இரண்டும் அடுக்கியும் அடுக்காதும் இரங்கற் குறிப்பு வெளிப்படுக்கும். இவையும் தத்தங் குறிப்பிற் பொருள் செய்குவன.

அன்னபிறவும் என்றதனான் அதோ அதோ, சோ சோ, ஒக்கும் ஒக்கும் என்னுந் தொடக்கத்தன கொள்க. *(34)*

**உம் என்னும் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு**

283. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே.

இனி, மேற்கூறப்பட்ட இடைச்சொல்லின்கண் படும் இலக்கண வேறுபாடு உணர்த்துகின்றார்.

எச்சவும்மை நின்றவழி எஞ்சு பொருட்கிளவியாய். எதிர்மறையும்மைத் தொடர் வந்து தம்முள் மயங்குதல் இல்லை என்றவாறு.

சாத்தனும் வந்தான் கொற்றனும் வரலும் உரியன் எனின் இயையாமை கண்டுகொள்க.

ஏனை உம்மையொடு மயங்குதல் விலக்காராயிற்று என்னை எனின் : அவை எஞ்சு பொருட் கிளவியாய் வாராமையின் என்பது.

**இதுவும் அது**

284. எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

எச்ச உம்மையான் தழுவப்படும் எஞ்சுபொருட் கிளவி உம்மை இல் சொல்லாயின், அவ் உம்மை இல் சொல்லை. அவ் உம்மைத் தொடர்க்குப் பின் சொல்லாது முன் சொல்லுக என்றவாறு.

**(எ..டு)** சாத்தன் வந்தான் கொற்றனும் வந்தான் எனவரும். கொற்றனும் வந்தான் சாத்தன் வந்தான் எனப் பிற்படக்கிளப்பின், முற்கூறியதனை விலக்குவது போன்று பொருள் கொள்ளாமை கண்டு கொள்க.

அடகுபுலால் பாகு பாளிதமும் உண்ணான்
கடல்போலும் கல்வி யவன்

என்பதும் அது.

உம்மை அடாதே தானே நிற்றலின் செஞ்சொல் என்றார்.

செஞ்சொல்லாயின் முற்படகிளக்க எனவே, எஞ்சு பொருள் கிளவி உம்மையொடு வரின் பிற்படக் கிளக்க என்றவாறாம். *(36)*

**முற்றும்மை எச்சம் ஆதல்**

285. முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும்.

முற்றும்மை அடுத்து நின்ற தொகைச் சொல்லிடத்து எச்சச்சொல் உரித்துமாம் என்றவாறு.

(எ..டு) பத்துங்கொடாஅல், அனைத்துங்கொடாஅல் என்புழி முற்றும்மை தம்பொருள் உணர்த்தாது சில எஞ்சக் கொடு என்னும் பொருள் தோன்றி நின்றவாறு கண்டுகொள்க.

முற்றுதல் என்னும் பொருளது பண்பு முற்றிய உம்மையென ஒற்றுமை நயத்தான் சொன்மேல் ஏறி நின்றது.

உரித்துமாகும் எனவே, எச்சப்பொருண்மை குறியாது நிற்றலே பெரும்பான்மை என்பதாம்.

ஏற்புழிக்கோடல் என்பதனான் எச்சப்படுவது எதிர்மறை வினைக்கண் என்று கொள்க. பத்தும்கொடு என்பது பிறவும் கொடு என்பது பட நிற்றலின், விதிவினைக் கண்ணும் எச்சம் குறிக்கும் என்பாரும் உளர். இப்பொழுது பத்துங்கொடு என்பது கருத்து ஆயின் இப்பொழுது பத்துக்கொடு என உம்மையின்றியும் பொருள் பெறப்படும், பத்தும் கொடு பிறவும் கொடு என்பது கருத்தாயின் இஃது எச்ச உம்மை யாகலின் ஈண்டைக்கு எய்தாது, அதனான் அது பொருத்தம் இன்று என்க.

இவை மூன்று சூத்திரத்தானும் வழுவற்க என இடைச்சொற் பற்றி மரபுவழுக் காத்தவாறு. *(37)*

**ஏ என்னும் சொல்லுக்கு மேலும் ஒரு முடிபு**

286. ஈற்றுநின்று இசைக்கும் ஏயென் இறுதி
கூற்றுவயின் ஓரளபு ஆகலும் உரித்தே.

செய்யுள் இறுதிக்கண் நின்று இசைக்கும் ஈற்றசை ஏகாரம் கூற்றிடத்து ஒரு மாத்திரைத்து ஆகலும் உரித்து என்றவாறு.

(எ..டு) கடல் போற் றோன்றல காடிறந் தோரே (அகம்.1) என்புழி ஓரளபு ஆயினவாறு கண்டுகொள்க தேற்றம் முதலாயின நீக்கி

ஈற்றசையே தழுவுதற்கு ஈற்று நின்று இசைக்கும் என்றார். செய்யுளிடை நிற்பதனை நீக்குதற்கு ஈற்று நின்று இசைக்கும் என்றே ஒழியாது இறுதி என்றார். மேல்நின்ற செய்யுள் உறுப்போடு பொருந்தக் கூறுதற்கண் என்பார் கூற்றுவயின் என்றார்.

உம்மை : எதிர்மறை *(38)*

**எண்ணிடைச் சொற்கள் எண்ணில் வரும் உம் என என்பன.**

287. உம்மை எண்ணும் எனஎன் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே.

உம்மையான் வரும் எண்ணும், எனவான் வரும் எண்ணும், இறுதிக்கண் தொகை பெறுதலைக் கடப்பாடாக உடைய அல்ல என்றவாறு. எனவே, தொகை பெற்றும் பெறாதும் வரும் என்பதாம்.

(எ..டு) உயர்திணைக்கு உரிமையும் அஃறிணைக்கு உரிமையும்
ஆயிரு திணைக்கும் ஓர் அன்ன உரிமையும்
அம்மூ உருபின (சொல்.160) எனவும்,
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி (சொல்.297) எனவும், நிலனென நீரென தீயென வளியென நான்கும் எனவும், உயிரென உடலென இன்றியமையா எனவும் அவ்இருவகை எண்ணும் தொகை பெற்றும் பெறாதும் வந்தவாறு.

தொகை எனப் பொதுப்படக் கூறியவதனான் எண்ணுப் பெயரேயன்றி அனைத்தும் எல்லாம் என்னும் தொடக்கத்தனவும் கொள்க. *(39)*

**எண்ணில் வரும் ஏ என்பது**

288. எண்ணே காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித்து இயலும் என்மனார் புலவர்.

சொல்தொறும் வாராது எண்ணேகாரம் இடையிட்டுவரினும் எண்ணுதற் பொருட்டாம் என்றவாறு.

(எ..டு) மலை நிலம் பூவே துலாக்கோலென்று இன்னர் எனவும்,

தோற்றம் இசையே நாற்றம் சுவையே
யுறலோடு ஆங்குஐம் புலனென மொழிப

எனவும் வரும்.

எண்ணுக் குறித்து வருவன எண்ணப்படும் எல்லாவற்றோடும் வருதல் மரபாயினும் இடையிட்டு வரினும் அமைக என அமைத்தவாறு.

எனவும் என்றும் சொல்தொறும் வாராது ஒருவழி நின்றும் எண்ணுக் குறிக்குமாலெனின் : அவை ஒருவழி நின்று எல்லாவற்றோடும் ஒன்றுதலின் ஆண்டு ஆராய்ச்சி இல்லை என்க.

பிறஎண் ஓடாநின்றவழி ஏகாரஎண் இடைவந்ததாயினும் ஓடாநின்ற பிற எண்ணேயாம் என உரைத்தாரால் உரையாசிரியர் எனின் : அவ்வாறு விராய் எண்ணியவழிப் பிற எண்ணாற் பெயர் கொடுப்பின் அதனை ஏகார எண் என்பாரையும் விலக்காமையானும், பிற எண்ணாம் என்றதனான் பெறப்படுவதொரு பயன் இன்மையானும் அவர்க்கது கருத்தன்று என்க. *(40)*

**எனா என்றா என்னும் சொற்கள்**

289. உம்மை தொக்க எனாஎன் கிளவியும்
ஆஈறு ஆகிய என்றுஎன் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.

உம்மை தொக்கு நின்ற எனா என்னும் இடைச்சொல்லும் என்றா என்னும் இடைச்சொல்லும் இரண்டும் எண்ணும் இடத்து வரும். என்றவாறு.

(எ..டு) நிலன்எனா நீர் எனா எனவும், நிலன் என்றா நீர்என்றா எனவும் வரும்.

உம்மைதொக்க எனாஎன் கிளவி எனவே; எனாவும் என அச்சொல் உம்மொடு வருதலும் உடைத்து என்பதாம். உம்மொடு வந்தவழி அவ்எண் உம்மைஎண்ணுள் அடங்கும்.

எண்ணுவழிப்பட்டன எனவே, அவை சொல்தொறும் வருதலேயன்றி, இடையிட்டும் வரும் என்பதாம்.

பின்சார் அயல்புடை தேவகை யெனா (சொல்.82) எனவும், ஒப்பின் புகழின் பழியின் என்றா (சொல்.72) எனவும் இடையிட்டு வந்தவாறு. இவை எண்ணுதற்கண் அன்றி வாராமையானும் அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும் (சொல்.290) எனச் சூத்திரம் சுருங்குதற் சிறப்பினானும் அவற்றினை ஈண்டு வைத்தார். *(41)*

**தொகை பெற்றே முடியும் எண்ணிடைச் சொற்கள்**

290\. அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குஉரி மரபின் செவ்வெண் இறுதியும்
ஏயின்ஆகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகையின்று இயலா.

மேற்சொல்லப்பட்ட எனா என்றா என்பனவற்றால் வரும் எண்ணின் இறுதியும், இடைச்சொல்லான் அன்றி பெயரான் எண்ணப்படும் செவ்வெண் இறுதியும், ஏகாரத்தான் வரும் எண்ணின் இறுதியும், யாதானும் ஓர் இடத்துவரினும் தொகை இன்றி நில்லா என்றவாறு.

(எ..டு) நிலன்எனா நீர்எனா இரண்டும் எனவும், நிலன்என்றா நீர்என்றா இரண்டும் எனவும், நிலன் நீர்என இரண்டும் எனவும், நிலனே நீரே என இரண்டும் எனவும் தொகை பெற்று வந்தவாறு.

செவ்வெண் இடைச்சொல்எண் அன்று ஆயினும் எண்ணாதலும் தொகை பெறுதலுமாகிய ஒப்புமையான் ஈண்டுக் கூறினார். *(42)*

**எண்ணில் வரும் உம்முக்கு மேலும் ஒரு முடிபு**

**291. உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்.**

உம்மை எண்ணின்கண் உருபு தொகுதல் வரையப்படாது என்றவாறு.

பிறிதுபிறிது ஏற்றலும் உருபுதொக வருதலும்
நெறிபட வழங்கிய வழிமருங்கு என்ப. (சொல்.104)

என்னும் பொதுவிதியான் உம்மை எண்ணின்கண் உருபு தொகல் பெறப்பட்டமையான், பெற்றதன் பெயர்த்துரை நியமப் பொருட்டாகலான் உம்மை எண்ணின் உருபுதொகல் வரையப் படாது; ஏனை எண்ணின்கண் அவை வரையப்படும்என நியமித்தல் இதற்குப் பயனாகக்கொள்க.

குன்றி கோபம் கொடிவிடு பவளம்
ஒண்செங் காந்தள் ஒக்கும் நின்நிறம்

எனப் பிற எண்ணின்கண் உருபு தொக்கதால் எனின்: அற்று அன்று; செவ்வெண் தொகையின்றி நில்லாமையின் அவற்றை என ஒருசொல் விரிக்கப்படும்; விரிக்கவே, குன்றி முதலாயின எழுவாயாய் நின்றனவாம் என்பது.

(எ..டு) பாட்டுங் கோட்டியும் அறியாப் பயமில்
தேக்கு மரம்போல் நீடிய ஒருவன்,

இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி (சொல்.297) என உம்மை எண்ணின்கண் உருபு தொக்கவாறு கண்டு கொள்க.

வரையார் என்றதனான், ஆண்டும் எல்லா உருபும் தொகா; ஐயும் கண்ணுமே தொகுவன எனக் கொள்க.

யானை தேர் குதிரை காலாள் எறிந்தார் என உம்மையும் உருபும் உடன் தொக்கவழி, உம்மைத்தொகை என்னாது உருபுதொகை என்க என்பது இச்சூத்திரத்திற்கு கருத்தாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் : அஃது உம்மைத் தொகையாதலின் ஒருசொல் நடைத்தாய் உருபு ஏற்றானும்

பயனிலை கொண்டானும் நிற்கும் அத்தொகையிடை உருபின்மை, சிற்றறிவினார்க்கும் புலனாம்; அதனான் அஃது அவர்க்குக் கருத்தன்மை சொல்ல வேண்டுமோ என்பது. *(43)*

**புறனடை உம் உந்து ஆதல்**

**292. உம்உந்து ஆகும் இடனுமார் உண்டே.**

வினைசெயன் மருங்கின் காலமொடு வருவனவற்றுள் உம் ஈறு உந்தாய்த் திரிதலும் உடைத்து என்றவாறு.

நீர்க்கோழி கூப்பெயர்க் குந்து (புறம்.295) எனவும், நாரரி நறவினாண் மகிழ்தூங்குந்து (புறம்.400) எனவும் வரும்.

வினைசெயல் மருங்கின் காலமொடு வரும் உம் என்பது ஏற்புழிக்கோடல் என்பதனால் பெற்றாம்.

இடனுமாருண்டே என்றது, இத்திரிபு பெயரெச்சத்திற்கு ஈறுஆயவழிக் கருதிப்போலும். தம் ஈறு திரிதன் முதலாயின இவ்ஓத்தினுள் கூறப்படும் இடைச் சொற்கே என்பது இதனானும் பெற்றாம், வினை இயலுள்ளும் கூறப்படுமாயினும், இடைச்சொல் திரிபு ஆகலான் ஈண்டுக் கூறலும் இயைபுஉடைத்து என்பது. *(44)*

**எண்ணிடைச் சொற்கள் வினைச்சொற்களிலும்**

**293. வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா**
**நினையல் வேண்டும் அவற்றவற்று இயல்பே.**

வினையொடு நிற்பினும் எண்ணிடைச் சொற்கள் தம் நிலையில் திரியா; அவற்றொடு வருங்கால் அவற்று அவற்று இயல்பு ஆராய்தல் வேண்டும் என்றவாறு.

(எ..டு) உண்டுந் தின்றும் பாடியும் வந்தான் எனவும்; உண்ணஎனத் தின்னஎனப் பாடஎன வந்தான் எனவும் வரும். ஒழிந்த எண்ணொடு வருவனவுளவேற் கண்டு கொள்க.

பெரும்பான்மையும் பெயரோடல்லது எண்ணிடைச்சொல் நில்லாமையின் அதனை முற்கூறி, சிறுபான்மை வினையொடு நிற்றலுமுடைமையான் இதனை ஈண்டுக் கூறினார்.

நினையல் வேண்டும் அவற்று அவற்று இயல்பே என்றதனான், எண்ணிடைச்சொல் முற்றுச்சொல்லும் பெயரெச்சமும் பற்றி வாராது என்பதூஉம் வினையெச்சத்தோடும் ஏற்பன அல்லது வாராது என்பதூஉம் ஆண்டுத்தொகை பெறுதல் சிறுபான்மை என்பதூஉம் கொள்க.

சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான் என மூவரும் வந்தமையான் கலியாணம் பொலிந்தது எனச் செவ்வெண் தொகைபெற்று வந்தது என்றாரால் உரையாசிரியர் எனின் : அவை எழுவாயும் பயனிலையுமாய் அமைந்து மாறுதலின் எண்ணப் படாமையானும், மூவரும் என்பது சாத்தன் முதலாயினோர் தொகையாகலானு அது போலி உரை என்க.(45)

**எண்ணிடைச் சொற்கள் பிரிந்து சென்று ஒன்றுதல்**

294. என்றும் எனவும் ஒடுவும் தோன்றி
ஒன்றுவழி உடைய எண்ணினுள் பிரிந்தே.

என்றும் எனவும் ஒடுவும் என்பன ஒருவழித் தோன்றி எண்ணினுள் பிறவழியும் பிரிந்து சென்று ஒன்றும் இடம் உடைய என்றவாறு.

(எ..டு) வினைபகை என்றிரண்டின் எச்சம் (குறள்.674) எனவும், கண்ணிமை நொடியென (நூன்மரபு. 7) எனவும், பொருள் கருவி காலம் வினை இடனோடு ஐந்தும் (குறள்.675) எனவும், அவை ஒருவழி நின்று, வினை என்று பகை என்று எனவும், கண்ணிமையென நொடியென எனவும், பொருளொடு கருவியொடு காலத்தொடு வினையொடு இடத்தொடு எனவும் நின்றஇடத்துப் பிரிந்து பிறவழிச் சென்று ஒன்றியவாறு கண்டுகொள்க.

ஒன்றுவழியுடைய என்றதனான் சொல்தொறும் நிற்பதே பெரும்பான்மை என்பதாம். சொல் தொறும் நின்ற எண்

இக்காலத்து அரிய. ஒடு என்பதோர் இடைச்சொல் எண்ணின்கண் வருதல் இதனான் கொள்க.

இவை மூன்றும் பொருளிற் பிரிந்து எண்ணின் கண் அசையாய் வருதல் உடைய என்பது உரையாசிரியர்க்குக் கருத்து என்பாரும் உளர். அசைநிலை என்பது இச்சூத்திரத்தான் பெறப் படாமையானும், கண்ணிமை நொடி என்னும் சூத்திரத்து எனவைக் கண்ணிமை என்பதனோடுங் கூட்டுக என்று உரைத்தலானும் அவர்க்கது கருத்து அன்று என்க. (46)

**இடைச் சொற்களின் பொருள் அறியுமாறு**

295. அவ்வச் சொல்லிற்கு அவைஅவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல ஆயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினும் தெரிந்தனர் கொளலே.

மேற்கூறப்பட்ட இடைச்சொற்கள், அவ்வச் சொல்லிற்கு அவைஅவை பொருள்என நிலைபெறச் சொல்லப்பட்ட இயல்புடையன ஆயினும், வினையொடும் பெயரொடும் ஆராய்ந்து உணரத் தோன்றி வேறு பொருளவாயும் அசைநிலையாயும் திரிந்து வரினும், ஆராய்ந்து கொள்க என்றவாறு.

எனவே, கூறிய முறையான் வருதல் பெரும்பான்மை என்றும், வேறுபட வருதல் சிறுபான்மை என்றும் சொல்லியவாறாம், வினையொடும் பெயரொடும் என்றது, அவை வேறு பொருள என்று உணர்த்தற்குச் சார்பு கூறியவாறு.

(எ..டு) சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ (அகம்.46) எனவும், கலக்கொண்டன கள்ளன்கோ காழ் கோத்தன் சூடுஎன்கோ எனவும் ஓகாரம் ஈற்றசையாயும் எண்ணாயும் வந்தது. ஓர்கமா தோழியவர் தேர்மணிக் குரலே (அகம்.273) என மா முன்னிலை அசைச் சொல்லாயிற்று. அது மற்கொண்கன் தேரே என மன் அசைநிலையாயிற்று. பிறவும் அன்ன.

செய்யுளின்பம் நோக்கி வினையொடும் பெயரொடும் என்றார். *(47)*

**இவ்இயலுக்குப் புறனடை**

296\. கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே.

மேற் சொல்லப்பட்டனவன்றி அவை போல்வன பிறவரினும் அவற்றைக் கிளந்த சொல்லின் இயல்பாக உணர்ந்து கொள்க என்றவாறு.

கிளந்தவற்றியலான் என்றது, ஆசிரியர் ஆணையான் அன்றிக் கிளந்தவற்றையும் அவ்வாறு சார்பும் இடமும் குறிப்பும் பற்றி இஃது அசைநிலை இஃது இசைநிறை இது குறிப்பால் இன்னபொருள் உணர்த்தும் என்று உணர்ந்துகொள்க என்றவாறு.

(எ..டு) சிறிதுதவிர்ந் தீக மாளநின் பரிசிலர் உய்ம்மார் எனவும்,
சொல்லேன் தெய்ய நின்னொடு பெயர்ந்தே எனவும்,
அறிவாரி யார் அஃ்து இறுவுழி யிறுகென எனவும்,
பணியுமாம் என்றும் பெருமை (குறள்.978) எனவும்
ஈங்கா யினவால் என்றிசின் யானே (நற்றிணை.55) எனவும்,
மாள, தெய்ய, என, ஆம், ஆல் என்பனவும் அசைநிலையாய் வந்தன.

குன்றுதொறு ஆடலும் நின்றதன் பண்பே (திருமுருகா.217) எனத் தொறு என்பது தான் சார்ந்த மொழிப் பொருட்குப் பன்மையும் இடமாதலும் உணர்த்தி நிற்கும்.

ஆனம், ஏனம், ஓனம் என்பன எழுத்துச் சாரியை. பிறவும் எடுத்தோதாத இடைச்சொல் எல்லாம் இப்புறனடையான் தழீஇக் கொள்க. *(48)*

**இடையியல் முற்றும்.**

# சேனாவரையர் உரை

## 8. உரியியல்

**பொது இலக்கணம்**

**உரிச்சொல்லின் இயல்பு**

297. உரிச்சொற் கிளவி விரிக்கும் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்
பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்த மரபின் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் ஆயினும் பொருள்வேறு கிளத்தல்.

நிறுத்த முறையானே உரிச்சொல் உணர்த்திய எடுத்துக் கொண்டார். அதனான் இவ்ஓத்து உரியியல் என்னும் பெயர்த்தாயிற்று. தமக்கு இயல்பில்லா இடைச்சொல் போலாது இசை, குறிப்புப் பண்பு என்னும் பொருட்குத் தாமே உரிய ஆகலின், உரிச்சொல்லாயிற்று. பெரும்பான்மையும் செய்யுட்கு உரியவாய் வருதலின் உரிச்சொல் ஆயிற்று என்பாரும் உளர்.

உரிச்சொல்லை விரித்து உரைக்குமிடத்து இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருள் மேல்தோன்றி, பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் தம் உருபு தடுமாறி, ஒருசொல் பலபொருட்கு உரித்தாய்வரினும் பலசொல் ஒரு பொருட்கு உரியவாய்வரினும் கேட்பானால் பயிலப்படாத சொல்லைப் பயின்றவற்றோடு சார்த்திப் பெயரும் வினையுமாகிய தத்தமக்கு உரிய நிலைக்களத்தின்கண் யாதானும் ஒரு சொல்லாயினும் வேறுவேறு பொருள் உணர்த்தப்படும் என்றவாறு.

என்றது இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருளவாய்ப் பெயர் வினை போன்றும் அவற்றிற்கு முதல்நிலையாயும் தடுமாறி ஒரு சொல் ஒரு பொருட்கு உரித்தாதலேயன்றி, ஒரு சொல் பல

பொருட்கும் பலசொல் ஒரு பொருட்கும் உரியவாய் வருவன உரிச்சொல் என்றும், அவை பெயரும் வினையும்போல ஈறுபற்றிப் பொருள் உணர்த்தலாகாமையின், வெளிப்படாதவற்றை வெளிப்பட்டவற்றோடு சார்த்தி, தம்மை எடுத்து ஓதியே அப்பொருள் உணர்த்தப்படும் என்றும் உரிச்சொற்குப் பொது இலக்கணமும் அவற்றிற்குப் பொருள் உணர்த்தும் முறைமையும் உணர்த்தியவாறு.

குறிப்பு : மனத்தால் குறித்து உணர்த்தப்படுவது.
பண்பு : பொறியான் உணரப்படும் குணம்.

கறுப்பு, தவ என்பன பெயர்வினைப்போலி; துவைத்தல் துவைக்கும் என்பன பெயர் வினைக்கு முதல்நிலையாயின; உறு முதலாயின மெய் தடுமாறாது வருதலின், பெயரினும் வினையினும் மெய்தடுமாறி என்றது பெருமபான்மை பற்றி எனக்கொள்க.

அவை கூறியவாற்றான் பொருட்கு உரியவாய் வருமாறு முன்னர்க் காணப்படும்.

மெய்தடுமாறலும், ஒருசொல் பலபொருட்கு உரிமையும், பலசொல் ஒரு பொருட்கு உரிமையும் உடையவாயினும் உரிச்சொற்கு இலக்கணமாவது இசை குறிப்புப் பண்பென்னும் பொருட்கு உரியவாய் வருதலேயாம். ஒரு சொல் ஒரு பொருட்கு உரித்தாதல் இயல்பு ஆகலான் சொல்லாமையே முடியும் என்பது. *(1)*

**கீழ்வருவன இன்ன உரிச்சொல் என்பது**

298. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன.

வெளிப்பட்ட உரிச்சொல் கிளந்ததனான் பயன் இன்மையின் கிளக்கப்படா, வெளிப்பட வாரா உரிச்சொன் மேற்றுக் கிளந்தோதல் என்றவாறு.

பயிலா தவற்றைப் பயின்றவை சார்த்தி எச்சொல்லாயினும் பொருள்வேறு கிளத்தல் (சொல்.297) என்றதனால் பயிலாதவற்றைப் பயின்றவற்றோடு சார்த்திப் பயின்றவற்றைப் பிறிது ஒன்றனொடு சார்த்தாது தம்மையே கிளந்தும் எல்லா உரிச்சொல்லும் உணர்த்தப்படும் என்பதுபட்டு நின்றதனை விலக்கி, பயன் இன்மையான் பயின்ற உரிச்சொல் கிளக்கப்படாது, பயிலாத உரிச்சொல்லே கிளக்கப்படும் என, வரையறுத்தவாறு. மேல என்பது மேன என நின்றது. *(2)*

**சிறப்பிலக்கணம்**

**உரிச்சொற்களுள் உறு, தவ, நனி**

**299.** அவைதாம்,
உறுதவ நனிஎன வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப.

வெளிப்படவாரா உரிச்சொல்லைக் கிளந்து ஓதி விரிக்கின்றார்.

அவைதாம் என்றது வெளிப்பட வாரா உரிச்சொற்றாம் என்றவாறு. அதற்கு முடிபு அவைதாம் அம்ஆம் எம்ஏம் என்னும் கிளவியும் (சொல்.202) என்புழி உரைத்தாங்கு உரைக்க.

உறுபுனல் தந்து உலகு ஊட்டி (நாலடி.185) எனவும், ஈயாது வீயும் உயிர் தவப் பலவே (புறம்.239) எனவும், வந்துநனி வருந்தினை வாழிஎன் நெஞ்சே (அகம்.19) எனவும், உறு, தவ, நனி என்பன மிகுதி என்னும் குறிப்புப் பொருள் உணர்த்தும் என்றவாறு.

குறிப்புச்சொல் பரப்புடைமையான் முன் கூறினார். *(3)*

**உரு புரை**

**300.** உருவுட் காகும்; புரை உயர்பு ஆகும்.

உருகெழு கடவுள் எனவும், புரைய மன்ற புரையோர் கேண்மை (நற்றிணை.1) எனவும், உருவும் புரையும் உட்கும் உயர்பும் உணர்த்தும் என்றவாறு. *(4)*

**குரு கெழு**

301. குருவும் கெழுவும் நிறன்ஆ கும்மே.

குருமணித்தாலி, செங்கேழ் மென்கொடி (அகம்.80) எனக் குருவும் கெழுவும், நிறம் என்னும் பண்பு உணர்த்தும் என்றவாறு.(5)

**செல்லல் இன்னல்**

302. செல்லல் இன்னல் இன்னா மையே.

மணங்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல் (அகம்.22) எனவும், வெயில்புறந் தரூஉம் இன்னல் இயக்கத்து (மலைபடு.374) எனவும், செல்லலும் இன்னலும் இன்னாமை என்னும் குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (6)

**மல்லல் ஏ**

303. மல்லல் வளனே;

304. ஏபெற் றாகும்.

மல்லல் மால்வரை (அகம்.52) எனவும், ஏகல் லடுக்கம் (நற்றிணை.116) எனவும், மல்லலும் ஏவும் வளமும் பெற்றுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு.

பெற்று - பெருக்கம். ஈது அக்கால்த்துப் பயின்றது போலும். இவை இரண்டு சூத்திரம். (7,8)

**உகப்பு உவப்பு**

305. உகப்பே உயர்தல்; உவப்பே உவகை.

விசும்புகந்து ஆடாது எனவும், உவந்து உவந்து ஆர்வ நெஞ்சமோ டாய்நல னளைஇ (அகம்.35) எனவும், உகப்பும், உவப்பும், உயர்தலும், உவகையுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (9)

**பயப்பு பசப்பு**

306. பயப்பே பயனாம்;

307. பசப்புநிற னாகும்.

*பயவாக் களரனையர் கல்லாதவர் (குறள்.406)* எனவும், *மையில் வாள்முகம் பசப்பு ஊரும்மே (கலி.7)* எனவும் பயப்பும், பசப்பும் பயனும் நிறவேறுபாடுமாகிய குறிப்பும் பண்பும் உணர்த்தும். *(10,11)*

**இயைபு இசைப்பு**

308. இயைபே புணர்ச்சி;

309. இசைப்பு இசை யாகும்.

இயைந்தொழுகும் எனவும், யாழ் இசையூப் புக்கு எனவும் இயையும், இசைப்பும், புணர்ச்சிக் குறிப்பும், இசைப் பொருண்மையும் உணர்த்தியவாறு. *(12,13)*

**அலமரல் தெருமரல்**

310. அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி.

*அலமரலாயம் (ஐங்.69)* எனவும், தெருமரல் உள்ளமோடு அன்னை துஞ்சாள் எனவும், அலமரலும் தெருமரலும் சுழற்சியாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. *(14)*

**மழ குழ**

311. மழவுங் குழவும் இளமைப் பொருள.

*மழகளிறு (புறம்.38)* எனவும், *குழக்கன்று (புறம்.103)* எனவும், மழவும் குழவும் இளமைக் குறிப்புப் பொருள் உணர்த்தும். *(15)*

**சீர்த்தி மாலை**

312. சீர்த்தி மிகுபுகழ்;

313. மாலை இயல்பே.

வயக்கஞ்சால் சீர்த்தி எனவும், இரவரல் மாலையனே (குறிஞ்சிப்.அடி.239) எனவும், சீர்த்தியும், மாலையும், பெரும்புகழும், இயல்புமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (16,17)

**கூர்ப்பு கழிவு**

314. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்.

துனி கூர் எவ்வமொடு (சிறுபாண்.39) எனவும், கழிகண்ணோட்டம் எனவும் கூர்ப்பும் கழிவும், ஒன்றனது சிறந்தலாகிய குறிப்பை உணர்த்தும் என்றவாறு. உள்ளது என்றது முன் சிறவாதுள்ளது என்றவாறு. (18)

**கதழ்வு துனைவு**

315. கதழ்வும் துனைவும் விரைவின் பொருள.

கதழ்பரி நெடுந்தேர் (நற்றிணை.223) எனவும், துனைபறை நிவக்கும் புள்ளினம் மான (மலைபடு.55) எனவும், கதழ்வும் துனைவும் விரைவாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (19)

**அதிர்வு விதிர்ப்பு**

316. அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்.

அதிர வருவதோர் நோய் (குறள்.429) எனவும், விதிர்ப்புறவு அறியா ஏமக் காப்பினை (புறம்.20) எனவும் அதிர்வும் விதிர்ப்பும், நடுக்கமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு.

அதிழ்வு என்று பாடம் ஓதி, அதிழ்கண் முரசம் என்று உதாரணம் காட்டுவாரும் உளர். (20)

**வார்தல் போகல் ஒழுகல்**

317. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள.

வார்ந்து இலங்கு வைஎயிற்றுச் (சின்மொழி யரிவையை) (குறுந்.14) வார் கயிற்று ஒழுகை, (அகம்.173) எனவும், போகு கொடி மருங்குல், வெள்வேல், விடத்தரொடு காருடை போகி (பதிற்.13) எனவும், ஒழுகுகொடி மருங்குல், மால்வரை ஒழுகியவாழை (சிறுபாண்.21) எனவும், வார்தல் போகல் ஒழுகல் என்னும் மூன்று சொல்லும் நேர்மையும் நெடுமையுமாகிய பண்பு உணர்த்தும் என்றவாறு.

**தீர்தல் தீர்த்தல்**

318. தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டு ஆகும்.

தீர்தலும் தீர்த்தலும் என்னும் இரண்டும் விடுதலாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு.

(எ..டு) துணையில் தீர்ந்த கடுங்கண் யானை (நற்றிணை.108) எனவரும்.

தீர்த்தல் விடுதற்பொருண்மைக்கண் வந்தவழிக் கண்டுகொள்க.

தீர்த்தல் என்பது செய்வித்தலை உணர்த்தி நின்ற நிலைமை எனின் : செய்வித்தலை உணர்த்தும் நிலைமை வேறு ஓதின், இயைபே புணர்ச்சி (உரியியல்.12) என்புழியும் இயைப்புஎன வேறுஓதல் வேண்டும் அதனால் தீர்த்தலும் செய்தலை உணர்த்துவதோர் உரிச்சொல் எனவேபடும் என்பது.

விடற்பொருட்டாகும் என்பதனை இரண்டனொடுங் கூட்டுக. பன்மை ஒருமை மயக்கம் எனினும் அமையும். (22)

**கெடவரல் பண்ணை**

319. கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு.

கெடவர லாயமொடு எனவும், பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும் (பொருள்.மெய்ப்பாட்டியல்.1) எனவும்,

கெடவரலும் பண்ணையும் விளையாட்டாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (23)

**தட கய நளி**

320. தடவுங் கயவும் நளியும் பெருமை.

வலிதுஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன் (புறம்.394)
கயவாய்ப் பெருங்கை யானை (அகம்.198)
நளி மலைநாடன் (புறம்.150)

எனத் தடவும், கயவும், நளியும் பெருமையாகிய பண்பு உணர்த்தும் என்றவாறு. (24)

**தட, கய, நளி என்பவற்றிற்கு மேலும் பொருள்**

321. அவற்றுள்,
தடஎன் கிளவி கோட்டமும் செய்யும்.

322. கயஎன் கிளவி மென்மையும் ஆகும்.

323. நளி என் கிளவி செறிவும் ஆகும்.

தடமருப் பெருமை (நற்.120), கயந்தலை மடப்பிடி (நற்.137), நளியிருள் எனத் தடவென் கிளவி முதலாயின, பெருமையே அன்றிக் கோட்டமும் மென்மையுமாகிய பண்பும், செறிவாகிய குறிப்பும் உணர்த்தும் என்றவாறு. (25,26,27)

**பழுது சாயல் முழுது**

324. பழுதுபயம் இன்றே;
325. சாயன் மென்மை;
326. முழுதென் கிளவி எஞ்சாப் பொருட்டே.

பழுதுகழி வாழ்நாள், சாயல் மாரபு (பதிற்.16), மண் முழுதாண்ட எனப் பழுது முதலாயின, பயம் இன்மையாகிய குறிப்பும், மென்மையாகிய பண்பும், எஞ்சாமையாகிய குறிப்பும் உணர்த்தும் என்றவாறு. (28,29,30)

**வம்பு மாதர் நம்பு மே**

327. வம்புநிலை யின்மை;

328. மாதர் காதல்;

329. நம்பும் மேவும் நசையா கும்மே.

வம்பமாரி (குறுந்.66), மாதர் நோக்கு, நயந்து நாம்விட்ட நன்மொழி நம்பி (அகம்.198) பேரிசை நவிரம்மேஎ உறையுங் காரி யுண்டிக் கடவுள் (மலைபடு.அடி.82) என வம்பும் மாதரும் நிலையின்மையும் காதலுமாகிய குறிப்பு உணர்த்தும்; நம்பும் மேவும் நசையாகிய குறிப்பு உணர்த்தும். *(31,32,33)*

**ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாய்**

330. ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.

வேனில் உழந்த வறிது உயங்கு ஓய் களிறு (கலி.7), பாய்ந்து ஆய்ந்த தானைப் பரிந்தானா மைந்தினை (கலி.69), நிழத்த யானை மேய்புலம் படர (மது.அடி.303), கயலற லெதிரக் கடும்புனற் சாஅய் (நெடுநல்.அடி.18) என ஓய்தன் முதலாயின நுணுக்கமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு ஆய்ந்த தானை - பொங்குதல் விசித்தலான் நுணுகிய தானை. உள்ள தென்றது முன்நுணுகாதுள்ளது என்றவாறு. *(34)*

**புலம்பு துவன்று முரஞ்சல் வெம்மை**

331. புலம்பே தனிமை;

332. துவன்றுநிறை வாகும்;

333. முரஞ்சல் முதிர்வே;

334. வெம்மை வேண்டல்.

புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி (அகம்.7) எனவும், ஆரியர் துவன்றிய பேரிசை முள்ளூர் (நற்.170) எனவும், சூன்முரஞ்சு எழிலி எனவும், வெங்காமம் (அகம்.15) எனவும் புலம்பு முதலாயின தனிமையும் நிறைவும் முதிர்வுமாகிய குறிப்பும் விரும்புதலாகிய பண்பும் உணர்த்தும் என்றவாறு. *(35,36,37,38)*

**பொற்பு வறிது ஏற்றம்**

335. பொற்பே பொலிவு;

336. வறிதுசிறி தாகும்;

337. ஏற்றம் நினைவுந் துணிவு மாகும்.

பெருவரை யடுக்கம் பொற்ப (நற்.34) எனவும், வறிது வடக்கு இறைஞ்சிய (பதிற்.24) எனவும், கானலஞ் சேர்ப்பன் கொடுமை ஏற்றி (குறுந்.145) எற்று ஏற்ற மில்லாருள் யான்ஏற்றம் இல்லாதேன் எனவும், பொற்பு முதலாயின முறையானே பொலிவும், சிறிது என்பதூஉம், நினைவும் துணிவுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. *(39,40,41)*

**பிணை பேண்**

338. பிணையும் பேணும் பெட்பின் பொருள.

அரும்பிணை யகற்றி வேட்ட ஞாட்பினும் எனவும், அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும் (புறம்.69) எனவும் பிணையும் பேணும், பெட்பின் பொருளாகிய புறந்தருதல் என்னும் குறிப்பு உணர்த்தும் என்றவாறு.

பெட்பின் பொருள என்றதனால் பெட்பின் பொருளாகிய விரும்புதலுணர்த்தலுங் கொள்க. அது வந்தவழிக் கண்டுகொள்க. *(42)*

**பணை**

339. பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும்.

பணைத்துவீழ் பகழி எனப் பணை என்பது பிழைத்தலாகிய குறிப்பு உணர்த்தும். அதுவேயன்றி வேய்மருள் பணைத்தோள் (அகம்.1) எனப் பெருப்பாகிய குறிப்பும் உணர்த்தும் என்றவாறு.

பெருமையாகிய பண்பு உணர்த்தாது பெருத்தலாகிய குறிப்பு உணர்த்தும் என்பார் பெருப்பு என்றார். *(43)*

**படர்**

340. படரே உள்ளல்; செலவும் ஆகும்.

வள்ளியோர்ப் படர்ந்து புள்ளிற்போகி (*புறம்.47*) கறவை கன்றுவயிற் படர (*குறுந்.108*) எனப் படர் என்பது உள்ளுதலும் செலவுமாகிய குறிப்பு உணர்த்தும், என்றவாறு. (*44*)

**பையுள் சிறுமை**

341. பையுளுஞ் சிறுமையும் நோயின் பொருள.

பையுள் மாலை (*குறு.195*) எனவும், சிறுமையுறுபவோ செய்பு அறியலரே (*நற்.1*) எனவும், பையுளும் சிறுமையும் நோயாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (*45*)

**எய்யாமை**

342. எய்யா மையே அறியா மையே.

எய்யா மையலை நீயும் வருந்துதி (*குறிஞ்சிப்.24:8*) என எய்யாமை அறிவின்மையாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு.

அறிதற் பொருட்டாய் எய்தல் என்றானும், எய்த்தல் என்றானும் சான்றோர் செய்யுட்கண் வாராமையின் எய்யாமை எதிர்மறையன்மை அறிக. (*46*)

**நன்று**

343. நன்றுபெரி தாகும்.

நன்றும் அரிதுதுற் றனையால் பெரும (*அகம்.10*) என நன்று என்பது பெரிது என்னும் குறிப்பு உணர்த்தும்; என்றவாறு.

பெருமை என்னாது பெரிது என்றதனான் நன்று என்பது வினையெச்சமாதல் கொள்க. (*47*)

**தா**

**344. தாவே வலியும் வருத்தமும் ஆகும்.**

*தாவில் நன்பொன் தைஇய பாவை (அகம்.212)* எனவும், *கருங்கண் தாக்கலை பெரும்பிறிது உற்றென (குறுந்.69)* எனவும், தா என்பது வலியும் வருத்தமுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. *(48)*

**தெவு தெவ்வு**

**345. தெவுக்கொளல் பொருட்டே.**

**346. தெவ்வுப்பகையாகும்.**

*நீர்த்தெவு நிரைத் தொழுவர் (மது அடி.89)* எனவும், தெவ்வுப் புலம் எனவும் தெவும் தெவ்வும் முறையானே கொள்ளுதலும் பகையுமாகிய குறிப்பு உணர்த்தும், என்றவாறு. *(49,50)*

**விறப்பு உறப்பு வெறுப்பு**

**347. விறப்பும் உறப்பும் வெறுப்புஞ் செறிவே.**

*விறந்த காப்போடு உண்ணின்று வலியுறுத்தும்* எனவும், *உறந்த விஞ்சி* எனவும், *வெறுத்த கேள்வி விளங்கு புகழ்க் கபிலன் (புறம்.53)* எனவும், விறப்பு முதலாயின செறிவு என்னும் குறிப்பு உணர்த்தும் என்றவாறு. *(51)*

**விறப்பு என்பதற்கு மேலும் ஒரு பொருள்**

**348. அவற்றுள்,**
**விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும்.**

*அவலெறி உலக்கைப் பாடுவிறந்து அயல (பெரும்பாண். அடி.229)* என விறப்பென்பது செறிவேயன்றி வெருவுதற் குறிப்பும் உணர்த்தும் என்றவாறு. *(52)*

**கம்பலை சும்மை கலி அழுங்கல்**

349. கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றிவை நான்கும் அரவப் பொருள.

கம்பலை மூதூர் *(புறம்.54)* எனவும், ஒரு பெருஞ்சும்மையொடு எனவும், கலிகொள் ஆயம் மலிபுதொகுபு எடுத்த *(அகம்.11)* எனவும், உயவுப்புணர்ந் தன்றுஇவ் வழுங்கல் ஊரே *(நற்.203)* எனவும், கம்பலை முதலாகிய நான்கும் அரவமாகிய இசைப்பொருண்மை உணர்த்தும். *(53)*

**அழுங்கல் என்பதற்கு மேலும் இருபொருள்**

350. அவற்றுள்,
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்.

பழங்கண் ணோட்டமும் நலிய வழுங்கினன் அல்லனோ *(அகம்.66)* எனவும், குணன் அழுங்கக் குற்றம் உழைநின்று கூறும் சிறியவர்கட்கு *(நாலடி.353)* எனவும், அழுங்கல் அரவமேயன்றி இரக்கமும் கேடுமாகிய குறிப்பும் உணர்த்தும் என்றவாறு. *(54)*

**கழுமு**

351. கழுமென் கிளவி மயக்கஞ் செய்யும்.

கழுமிய ஞாட்பு *(களவழி.11)* எனக் கழும் என்பது மயக்கமாகிய குறிப்பு உணர்த்தும்; என்றவாறு. *(55)*

**செழுமை**

352. செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்.

செழும்பல் குன்றம் எனவும், செழுந்தடி தின்ற செந்நாய் எனவும் செழுமை வளனும் கொழுப்புமாகிய பண்பு உணர்த்தும் என்றவாறு. *(56)*

**விழுமம்**

353. விழுமம் சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையும்.

*விழுமியோர் காண்தொறும் செய்வர் சிறப்பு (நாலடி.159)* எனவும், *வேற்றுமையில்லா விழுத்திணைப் பிறந்து (புறம்.27)* எனவும், *நின்னுறு விழுமம் களைந்தோர் (அகம்.140)* எனவும், விழுமம் முறையானே சீர்மையுஞ் சிறப்பும் இடும்பையுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (57)

**கருவி கமம்**

354. கருவி தொகுதி;
355. கமம்நிறைந் தியலும்.

*கருவி வானம் (புறம்.159)* எனவும், *கமஞ்சூல் மாமழை (அகம்.43) (குறுந்.158)* எனவும், கருவியும் கமமும் தொகுதியும் நிறைவுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு கருவிவானம் என்புழிக்கருவி மின்னு முழக்கு முதலாயவற்றது தொகுதி. (58,59)

**அரி கவவு**

356. அரியே ஐம்மை;
357. கவவு அகத் திடுமே;

*அரிமயிர்த் திரள்முன்கை (புறம்.11)* எனவும், *கழூஉ விளங்கு ஆரங் கவைஇய மார்பே (புறம்.19)* எனவும், அரியும் கவவும் ஐம்மையும் அகத்திடுதலுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (60,61)

**துவைத்தல் சிலைத்தல் இயம்பல் இரங்கல்**

358. துவைத்தலும் சிலைத்தலும் இயல்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்.

*வரிவளை துவைப்ப* எனவும், *ஆமா நல்லேறு சிலைப்ப (முருகு.315)* எனவும்,

*கடிமரம் தடியும் ஓசை தன்னூர்*
*நெடுமதில் வரைப்பிற் கடிமனை இயம்ப (புறம்.36)*

எனவும், *ஏறிரங்கு இருளிடை (கலி.46)* எனவும் துவைத்தல் முதலாயின இசைப்பொருள் உணர்த்தும் என்றவாறு. (62)

**இரங்கல் என்பதற்கு மேலும் ஒரு பொருள்**

359. அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்.

*செய்து இரங்காவினை (புறம்.10)* என இரங்கல், இசையேயன்றிப் பொருளது கழிவாகிய குறிப்பும் உணர்த்தும் என்றவாறு.

கழிந்த பொருள் பற்றி வரும் கவலையைக் கழிந்த பொருள் என்றார். *(63)*

**இலம்பாடு ஒற்கம்**

360. இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை.

*இலம்படு புலவர் ஏற்றகைந் நிறைய (மலைபடு.அடி.576)* எனவும், *ஒக்கல் ஒற்கம் சொலிய (புறம்.327)* எனவும் இலம்பாடும் ஒற்கமும் வறுமையாகிய குறிப்பு உணர்த்தும்.

இலம் என்னும் உரிச்சொல் பாடு என்னும் தொழில் பற்றியல்லது வாராமையின் இலம்பாடு என்றார். *(64)*

**ஞெமிர்தல் பாய்தல்**

361. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.

*தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து (நெடுநல்.அடி.90)* எனவும், *பாய்புனல்* எனவும் ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தலாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. *(65)*

**கவர்வு சேர் வியல்**

362. கவர்வு விருப்பாகும்.

363. சேரே திரட்சி.

364. வியல்என் கிளவி அகலப் பொருட்டே.

கவர்நடைப் புரவி (அகம்.130) எனவும், சேர்ந்து செறி குறங்கு (நற்றிணை.170) எனவும், வியலுலகம் எனவும் கவர்வு முதலாயின முறையானே விருப்பும் திரட்சியும் அகலமுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (66,67,68)

**பேம் நாம் உரும்**

365. பேம்நாம் உரும்என வருஉங் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.

மன்ற மராஅத்த பேம்முதிர் கடவுள் (குறுந்.67) எனவும், நாமநல்லரா (அகநா.72) எனவும், உருமில் சுற்றம் (பெரும்பாண்.அடி.447) எனவும், பேம் முதலாகிய மூன்றும் அச்சமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (69)

**வய வாள் துயவு**

366. வயவலி யாகும்;
367. வாள்ஒளி யாகும்;
368. துயவுஎன் கிளவி அறிவின் திரிபே.

துன்னருந் துப்பின் வயமான் (புறம்.44) எனவும், வாண்முகம் (புறம்.9) எனவும், துயவு உற்றேம் யாமாக எனவும் வயம் முதலாயின வலியும் அறிவு வேறு படுதலுமாகிய குறிப்பும் ஒளியாகிய பண்பும் உணர்த்தும் என்றவாறு. (70,71,72)

**உயா உசா வயா**

369. உயாவே உயங்கல்;
370. உசாவே சூழ்ச்சி;
371. வயாவென் கிளவி வேட்கைப் பெருக்கம்.

பருந்திருந்து உயாவிளி பயிற்றும் யாவுயர் நனந்தலை (அகம்.19) எனவும், உசாத்துணை (குறுந்.207) எனவும், வயவுறு மகளிர் (புறம்.20) எனவும், உயா முதலாயின முறையானே உயங்கலும், சூழ்ச்சியும், வேட்கைப் பெருக்கமுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (73,74,75)

**கறுப்பு சிவப்பு**

**372. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள.**

*நிற்கறுப்பதோர் அருங்கடி முனையள் போல்* எனவும், *நீ சிவந்து இறுத்த நீரழி பாக்கம்* (பதிற்.13) எனவும், கறுப்பும் சிவப்பும் வெகுளியாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு.

கறுமை செம்மை என்னாது கறுப்பு, சிவப்பு என்றதனான் தொழிற்பட்டுழி அல்லது அவை வெகுளி உணர்த்தாமை கொள்க. (76)

**அவற்றிற்கு மேலும் ஒரு பொருள்**

**373. நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப.**

*கறுத்த காயா, சிவந்த காந்தள்* (பதிற்.15) என அவை வெகுளியேயன்றி நிறவேறுபாடு உணர்த்தவும் உரிய; என்றவாறு.

இவை வெளிப்படு சொல்லாயினும் கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள என்றதனால், கறுங்கண் செவ்வாய் எனப் பண்பாய வழியல்லது தொழிலாயவழி நிறவேறுபாடு உணர்த்தா என்பதுபடுதலின் அதனைப் பாதுகாத்தவாறு. (77)

**நொசிவு நுழைவு நுணங்கு**

**374. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.**

*நொசிமட மருங்குல்* (கலி.60) எனவும்,
*நுழை நூற்கலிங்கம்* (மலைபடு.அடி.561) எனவும்,
*நுணங்கு துகில் நுடக்கம் போல்* (நற்.15) எனவும் நொசிவு முதலாயின நுண்மையாகிய பண்பு உனர்த்தும் என்றவாறு. (78)

**புனிறு**

**375. புனிறுஎன் கிளவி ஈன்றணிமைப் பொருட்டே.**

*புனிற்றாப் பாய்ந்தெனக் கலங்கி (அகம்.56) எனப் புனிறு என்பது ஈன்றணிமையாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (79)*

**நனவு**

**376. நனவே களனும் அகலமும் செய்யும்.**

*நனவுப்புகு விறலியின் தோன்றும் நாடன் (அகம்.82) எனவும் நனந்தலை யுலகம் (பதிற்.93) எனவும், நனவு களனும் அகலமுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (80)*

**மத**

**377. மதவே மடனும் வலியும் ஆகும்.**

*பதவு மேய்ந்த மதவுநடை நல்லான் (அகம்.14) எனவும், கயிறிடு கதச்சேப் போல மதமிக்கு (அகம்.36) எனவும், மத என்பது மடனும் வலியுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (81)*

**அதற்கு மேலும் இரு பொருள்**

**378. மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே.**

*மதவிடை எனவும், மாதர் வாண்முகம் மதைஇய நோக்கே (அகம்.130) எனவும், மடனும் வலியுமேயன்றி மிகுதியும் வனப்புமாகிய குறிப்பும் சிறுபான்மை உணர்த்தும் என்றவாறு. மதவிடை என்புழி மிகுதி, உள்ள மிகுதி. (82)*

**யாணர்**

**379. புதிதுபடல் பொருட்டே யாணர்க் கிளவி.**

*மீனொடு பெயரும் யாணர் ஊர (நற்.210) என யாணர் என்பது வாரி புதிதாகப் படுதலாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (83)*

**அமர்தல் யாண்**

**380. அமர்தல் மேவல்;**

**381. யாணுக் கவினாம்;**

அகனமர்ந்து செய்யாள் உறையும் (குறள்.84) எனவும், யாணது பசலை (நற்.50) எனவும், அமர்தலும், யாணும், முறையானே மேவுதலும் கவினுமாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (84,85)

**பரவு பழிச்சு**

382. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.

நெல்லுகுத்துப் பரவுங் கடவுளும் இலவே (புறம்.335) எனவும், கைதொழூஉப் பழிச்சி (மது.964) எனவும், பரவும் பழிச்சும், வழுத்துதலாகிய குறிப்பு உணர்த்தும் என்றவாறு. (86)

**கடி என்னுஞ்சொல்**

383. கடியென் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்ச முன்தேற்று ஆயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே.

கடி என்னும் உரிச்சொல் வரைவு முதலாகிய பத்துக் குறிப்பும் உணர்த்தும், என்றவாறு.

(எ..டு) கடிந்த கடிந்தொரார் செய்தார்க்கு (குறள்.658) என வரைவும்,

கடிநுனைப் பகழி எனக் கூர்மையும்,
கடிகா (களவழி.29) எனக் காப்பும்,
கடிமலர் எனப் புதுமையும்,
கடுமான் (அகம்.134) என விரைவும்,
கடும்பகல் (அகம்.148) என விளக்கமும்,
கடுங்காலொற்றலின் (பதிற்.25) என மிகுதியும்,
கடுநட்பு எனச் சிறப்பும்
கடியையால் நெடுந்தகை செருவத் தானே என அச்சமும்,
கொடுஞ்சுழிப் புகார்த் தெய்வ நோக்கிக்
கடுஞ்சூள் தருகுவன் நினக்கே (அகம்.110)

என முன்தேற்றும் உணர்த்தியவாறு கண்டுகொள்க. முன்தேற்று புறத்தின்றித் தெய்வமுதலாயினவற்றின் முன்னின்று தெளித்தல்.*(87)*

**அதற்கு மேலும் இரு பொருள்**

**384. ஐயமுங் கரிப்பும் ஆகலும் உரித்தே.**

*கடுத்தனள் அல்லளோ அன்னை* எனவும், *கடுமிளகு தின்ற கல்லா மந்தி* எனவும் கடி என் கிளவி மேற் குறிப்பட்ட பொருளேயன்றிச் சிறுபான்மை ஐயமாகிய குறிப்பும் கரிப்பாகிய பண்பும் உணர்த்துதற்கு உரித்து; என்றவாறு. *(88)*

**ஐ முனைவு வை எறுழ்**

**385. ஐ வியப்பாகும்.**
**386. முனைவு முனிவாகும்;**
**387. வையே கூர்மை;**
**388. எறுழ்வலி யாகும்.**

*ஐதே காமம் யானே* (நற்றிணை.*143*) எனவும், *சேற்றுநிலை முனைஇய செங்கண் காரான்* (அகம்.*46*) எனவும், *வைநுனைப் பகழி* (முல்லை.*73*) எனவும், *போர் எறுழ்த்திணிதோள்* (பெரும்பாண்.*93*) எனவும் ஐ முதலாயின முறையானே வியப்பும் முனிவும் கூர்மையும் வலியுமாகிய குறிப்பு உணர்த்தும்; என்றவாறு. *(89,90,91,92)*

**சொல்லும் பொருளும்**
**உரிச்சொற் பொருள் மரபை ஒத்தது**

**389. மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்**
**முன்னும் பின்னும் வருபவை நாடி**
**ஒத்த மொழியால் புணர்த்தனர் உணர்த்தல்;**
**தத்த மரபின் தோன்றும்மன் பொருளே.**

இச்சொல் இப்பொருட்கு உரித்தென மேற்கூறப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றையும், அவற்று முன்னும் பின்னும் வரும் மொழிகளை ஆராய்ந்து அம்மொழிகளுள் தக்க மொழியானே ஒரு

பொருள் உணர்த்துக; இவ்வாறு உணர்த்தவே; வரலாற்று முறைமையான் தத்தமக்கு உரித்தாய பொருள் விளங்கும் என்றவாறு.

இஃது என் சொல்லியவாறோ எனின் :

உறுதவ நனியென வருஉ மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப. (சொல்.299)

எனவும்,

செல்லல் இன்னல் இன்னா மையே (சொல்.302) எனவும், ஓதியவழி, அவை வழக்கிடைப் பயின்ற சொல் அன்மையான் இவை மிகுதியும் இன்னாமையும் உணர்த்தும் என்று ஆசிரியர் ஆணையான் கொள்வதல்லது வரலாற்றான் பொருள் உணர்த்தப்படாவோ என்று ஐயுறுவார்க்கு உறுகால் (நற்.37) தவப்பல (புறம்.235), நனி சேய்த்து (ஐங்குறு.443) எனவும், மணம்கமழ் வியல் மார்பு அணங்கிய செல்லல் (அகம்.22) எனவும் முன்னும் பின்னும் வரும் சொல்நாடி அவற்றுள் இச்செல்லோடு இவ்உரிச்சொல் இயையும் என்று கடைப்பிடிக்கத், தாம் புணர்த்த சொற்கு ஏற்ற பொருள் உணர்த்தும் என்பது பெறப்படும் என ஐயம் அகற்றியவாறு எனக் கொள்க. வரலாற்றான் பொருள் உணர்த்தாவாயின், குழுவின் வந்த குறிநிலை வழக்குப்போல இயற்கைச் சொல் எனப்படா என்பது. (93)

**கூறிய சொற்கள் பிற பொருளும் உணர்த்தல்**

390. கூறிய கிளவிப் பொருள்நிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடுங் கொளலே.

முன்னும் பின்னும் வருபவை நாடியவழி, உரிச் சொற்குக் கூறப்பட்ட பொருளேயன்றிப் பிற பொருள் தோன்றுமாயினும், கூறப்பட்டவற்றோடு அவற்றையும் கொள்க. பிறவும் அன்ன.

கடி நாறும் பூந்துணர் என்ற வழிக் கடி என்பது முன்னும் பின்னும் வருபவை நாட, வரைவு முதலாயின பொருட்கு ஏலாது, மணப்பொருட்டு அயினவாறு கண்டுகொள்க பிறவும் அன்ன. (94)




**சொற்களால் கருத்து உணர்தலின் நிலை**

391. பொருட்குப் பொருள் தெரியின் அதுவரம் பின்றே.

பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்திப் பொருள் உணர்த்துங்கால் படும் முறைமை உணர்த்துகின்றார்.

ஒரு சொல்லை ஒரு சொல்லான் பொருள் உணர்த்திய வழி, அப்பொருள் உணர்த்த வந்த சொற்கும் பொருள் யாதெனப் பொருட்குப் பொருள் தெரியுமாயின், மேல் வருவனவற்றிற்கு எல்லாம் ஈது ஒத்தலின், அவ் வினா இறைவரம்பு இன்றி ஓடும்; அதனால் பொருட்குப் பொருள் தெரியற்க; என்றவாறு.

ஒரு சொற்குப் பொருள் உரைப்பது பிறிதொரு சொல்லானன்றே; அச்சொற்பொருளும் அறியாதானை உணர்த்துமாறு என்னை எனின், அது வருகின்ற சூத்திரத்தான் பெறப்படும். *(95)*

**அதனை உணர்த்தும் ஆற்றல்**

392. பொருட்குத்திரி பில்லை உணர்த்த வல்லின்.

உறுகால் (நற்.37) என்புழி உறு என்னும் சொற்குப் பொருளாகிய மிகுதி என்பதன் பொருளும் அறியாத மடவோனாயின் அவ்வாறு ஒருபொருட் கிளவி கொணர்ந்து உணர்த்தலுறாது கடுங்காலது வலிகண்டாய், ஈண்டு உறு என்பதற்குப் பொருள் என்று தொடர்மொழி கூறியானும், கடுங்கால் உள்வழிக் காட்டியானும் அம் மாணாக்கன் உணரும் வாயில் அறிந்து உணர்த்தல் வல்லனாயின் அப்பொருள் திரிபுபடாமல் அவன் உணரும் என்றவாறு. அவற்றானும் உணர்தல் ஆற்றாதானை உணர்த்துமாறு என்னை எனின் : அதற்கு அன்றே வரும் சூத்திரம் எழுந்தது என்பது. *(96)*

**அதனை உணரும் ஆற்றல்**

393. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.

வெளிப்படத் தொடர்மொழி கூறியானும் பொருளைக் காட்டியானும் உணர்த்தவும் உணராதானை உணர்த்தும் வாயில் இல்லை; உணர்ச்சியது வாயில் உணர்வோரது உணர்வை வலியாக உடைத்தாகலின்; என்றவாறு.

யாதானும் ஒராற்றான் உணரும் தன்மை அவற்கு இல்லையாயின் அவனை உணர்த்தற்பாலன் அல்லன் என்றவாறு. (97)

**சொற்களின் பொருள்கட்குக் காரணம் உண்டு**

394. மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.

உறு தவ முதலாயின சொற்கு மிகுதி முதலாயின பொருளாதல் வரலாற்று முறைமையான் கொள்வதல்லது; அவை அப்பொருளாவதற்குக் காரணம் விளங்கத் தோன்றா என்றவாறு.

பொருளோடு சொற்கு இயைபு இயற்கை ஆகலான் அவ்இயற்கையாகிய இயைபால் சொற்பொருள் உணர்த்தும் என்ப ஒரு சாரார். ஒரு சாரார் பிற காரணத்தான் உணர்த்தும் என்ப. அவற்றுள் மெய்ம்மையாகிய காரணம் இல்லை என்னாது விழிப்பத்தோன்றா என்றார். அக்காரணம் பொதுவகையான் ஒன்றாயினும் சொல்தொறும் உண்மையின் சிறப்பு வகையான் பலவாம்; அதனான் விழிப்பத் தோன்றா எனப் பன்மையிற் கூறினார். உரிச்சொல் பற்றி ஓதினாரேனும், ஏனைச் சொற்பொருட்கும் இஃது ஒக்கும். (98)

**உரிச்சொற்களில் எழுத்துப் பிரிந்து இசைத்தல் இல்லை**

395. எழுத்துப் பிரிந்து இசைத்தல் இவண் இயல்பு இன்றே.

முதனிலையும் இறுதி நிலையுமாக எழுத்துக்கள் பிரிந்து வேறு வேறு பொருள் உணர்த்தல் உரிச் சொல்லிடத்து இயைபுடைத்தன்று என்றவாறு.

இவண் இயல்பு இன்று எனவே, எழுத்துப் பிரிந்து பொருள் உணர்த்தல் பிறாண்டு இயல்புடைத்து என்பதாம். அவையாவன;

வினைச்சொல்லும் ஒட்டுப்பெயருமாம். பிரிதலும் பிரியாமையும் பொருள் உணர்த்துவனவற்றிற்கே யாகலின், கூறை கோட்படுதல் கடவுளர்க்கு எய்தாதவாறு போல, இடைச் சொற்கு இவ்ஆராய்ச்சி எய்தாமை அறிக.

தவ நனி என்னும் தொடக்கத்தன குறிப்பு வினையெச்சம் போலப் பொருள் உணர்த்தலின், அவைபோலப் பிரிக்கப்படும் கொல்லோ என்று ஐயுறாமை ஐயம் அகற்றியவாறு. (99)

புறனடை

396. அன்ன பிறவுங் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்தென அறியும்
வரம்புதமக் கின்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையின் கிளந்தவற்று இயலான்
பாங்குற உணர்தல் என்மனார் புலவர்.

அன்ன பிறவும் கிளந்தவல்ல பன்முறையானும் பரந்தன வரூஉம். உரிச்சொல் எல்லாம் என்பது, சொல்லப்பட்டனவேயன்றி அவைபோலவன பிறவும் பலவாற்றானும் பரந்து வரும் உரிச்சொல் எல்லாம் என்றவாறு. பொருட்குறை கூட்ட இயன்ற மருங்கின் இனைத்தென அறியும் வரம்பு தமக்கு இன்மையின் என்பது, பொருளொடு புணர்த்து உணர்த்த இசை குறிப்புப் பண்பு பற்றித் தாம் இயன்ற நிலத்து இத்துணை என வரையறுத்து உணரும் எல்லை தமக்கு இன்மையான் எஞ்சாமைக் கிளத்தல் அரிது ஆகலின் என்றவாறு. வழி நனி கடைப்பிடித்து ஓம்படை ஆணையின் கிளந்தவற்றியலான் பாங்குற உணர்தல் என்பது,

இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி (சொல்.297)

எனவும், முன்னும் பின்னும் வருபவை நாடி (சொல்.389) எனவும் கூறிய நெறியைச் சோராமல் கடைப்பிடித்து எச்சொல்லாயினும் பொருள் வேறு கிளத்தல் (சொல்.297) எனவும்,

ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே (சொல்.389)

எனவும், என்னால் தரப்பட்ட பாதுகாவல் ஆணையின் கிளந்தவற்று இயல்பொடு மரீஇயவற்றை முறைப்பட உணர்க என்றவாறு.

குறிப்புப் பொருண்மை பலவகைத்தாகலானும், பெயரினும் வினையினும் மெயதடுமாறியும் தடுமாறாதும் ஒரு சொல் பலபொருட்கு உரித்தாயும் பலசொல் ஒரு பொருட்கு உரியவாயும் வருதலானும், ஈறு பற்றித் தொகுத்து உணர்த்தற்கு அன்ன ஈறு உடைய அன்மையானும், பன்முறை யானும் பரந்தன வரூஉம் என்றார்.

பொருளைச் சொல் இன்றியமையாமையின், அதனைக் குறை என்றார்; ஒருவன் வினையும் பயனும் இன்றியமையாமையின், வினைக்குறை தீர்ந்தாரின் தீர்ந்தன்று உலகு (குறள்.612), பயக்குறை யில்லைத் தாம் வாழு நாளே (புறம்.188) என்றாற்போல. பொருட்குறை கூட்டவரம்பு தமக்கு இன்மையின் என இயையும்.

இருமை என்பது கருமையும் பெருமையுமாகிய பண்பு உணர்த்தும்; சேண் என்பது சேய்மையாகிய குறிப்பு உணர்த்தும்; தொன்மை என்பது பழமையாகிய குறிப்பு உணர்த்தும். இவை எல்லாம் அன்ன பிறவும் கிளந்த அல்ல என்பதனால் கொள்க. பிறவும் அன்ன. (100)

**உரியியல் முற்றும்.**

## சேனாவரையர் உரை
## 9. எச்சவியல்

**சொற்களின் வகை**

397. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல்என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.

கிளவியாக்கம் முதலாக உரிஇயல் இறுதியாகக் கிடந்த ஒத்துக்களுள் உணர்த்துதற்கு இடம் இன்மையான் உணர்த்தப் படாது எஞ்சி நின்ற சொல் இலக்கணம் எல்லாம் தொகுத்து உணர்த்திய எடுத்துக்கொண்டார். அதனான் இவ்ஒத்து எச்ச இயல் என்னும் பெயர்த்து ஆயிற்று.

கண்டீரென்றா (சொல்.425) எனவும், செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் (சொல்.450) எனவும், உரிச்சொல் எனவும், உரிச்சொல் மருங்கினும் (சொல்.456) எனவும், ஒருமை சுட்டிய பெயர் நிலைக் கிளவி (சொல்.461) எனவும், இவை முதலாகிய சூத்திரங்களான் உணர்த்தப்பட்ட அசைநிலையும், வினைச்சொல் இலக்கணமும், வழுஅமைதியும், அவ்ஒத்துக்களுள் உணர்த்தாது ஈண்டு உணர்த்தியது என்னையோ எனின் : அதற்குக் காரணம் அவ்வச் சூத்திரம் உரைக்கும் வழிச் சொல்லுதும்.

பலபொருள் தொகுதிக்கு ஒன்றனான் பெயர் கொடுக்குங்கால் தலைமையும் பன்மையும் பற்றிக் கொடுப்பினல்லது பிறிது ஆறு இன்மையானும், தலைமையும் பன்மையும் எச்சத்திற்கு இன்மையானும், பத்துவகை எச்சம் ஈண்டு உணர்த்தலான் எச்ச இயல் ஆயிற்று என்றல் பொருந்தாமை உணர்க.

செய்யுட்கு உரிய சொல்லும் அவற்றது இலக்கணமும் அவற்றான் செய்யுள் செய்வுழிப்படும் விகாரமும், செய்யுள் பொருள்கோளும் எடுத்துக் கோடற்கண் உணர்த்துகின்றார்.

இயற்சொல்லும், திரிசொல்லும், திசைச்சொல்லும், வடசொல்லும் என அத்துணையே செய்யுள் ஈட்டுதற்கு உரிய சொல்லாவன; என்றவாறு.

இயற்சொல்லானும், செய்யுள் சொல்லாகிய திரிசொல்லானுமேயன்றித் திசைச் சொல்லும் வடசொல்லும் இடைவிராய்ச் செய்யுள் செய்யுமாறு கண்டு ஏனைப் பாடைச் சொல்லும் செய்யுட்கு உரியவோ என ஐயுற்றார்க்கு, இந்நான்கு சொல்லுமே செய்யுட்கு உரியன; பிற பாடைச் சொல் உரிய அல்ல என்று வரையறுத்தவாறு.

செய்யுள் செய்யலாவது ஒரு பொருண்மேற் பல சொல் கொணர்ந்து ஈட்டல் ஆகலான் ஈட்டல் என்றார்.

பெயர் வினை இடை உரி என்பன இயற்சொல் பாகுபாடாகலான் இயற்சொல் அந்நான்கு பாகுபாட்டானும் செய்யுட்கு உரித்தாம். திரிசொல் பெயராய் அல்லது வாரா. என்மனார் என்பதனை வினைத்திரிசொல் என்பாரும் உளர். அஃது என்றிசினோர், பெறலருங்குரைத்து (புறம்.5) என்பனபோலச் செய்யுள் முடிபு பெற்று நின்றது என்றலே பொருத்தம் உடைத்து. தில் என்னும் இடைச்சொல் தில்லை என்றானும் தில்ல என்றானும் திரிந்து நின்றவழி அவை வழக்கிற்கும் உரிய ஆகலின் திரிசொல் எனப்படாது. கடுங்கால் என்புழிக் கடி என்னும் உரிச்சொல் பெயரினும் வினையினும் மெய்தடுமாறி (சொல்.297) என்பதனான் பண்புப் பெயராய் பெயரொடு தொக்கு வழக்கினுள் பயின்று வருதலான், திரிசொல் எனப்படாது. திசைச் சொல்லுள் ஏனைச்சொல்லும் உளவேனும், செய்யுட்கு உரித்தாய் வருவது பெயர்ச் சொல்லேயாம். வடசொல்லுள்ளும் பெயரல்லது செய்யுட்கு உரியவாய் வாரா. இவ்வாறாதல் சான்றோர் செய்யுள் நோக்கிக் கண்டுகொள்க. (1)

**இயற்சொல்**

398. அவற்றுள்,
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே.

அந்நான்கனுள், இயற்சொல் என்று சொல்லப்பட்ட சொல்தாம் செந்தமிழ் நிலத்து வழக்கு ஆதற்குப் பொருந்திக்

கொடுந்தமிழ் நிலத்தும் தம்பொருள் வழுவாமல் உணர்த்தும் சொல்லாம் என்றவாறு.

அவையாவன : நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், தயிர், மக்கள், மா, தெங்கு, கமுகு என்னும் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலம் ஆவன. வையை ஆற்றின் வடக்கும் மருத ஆற்றின் தெற்கும் கருவூரின் கிழக்கும் மருவூரின் மேற்குமாம்.

திரிபு இன்றி இயல்பாகிய சொல்லாகலின் இயற்சொல் ஆயிற்று எனினும் அமையும். நீர் என்பது ஆரியச் சிதைவு ஆயினும் அப்பொருட்கு அதுவே சொல்லாய்ச் செந்தமிழ் நிலத்தும் கொடுந்தமிழ் நிலத்தும் வழங்கப்படுதலான் இயற்சொல்லாயிற்று பிறவும் இவ்வாறு வருவன இயற்சொல்லாகக் கொள்க.

தாம் என்பது கட்டுரைச் சுவை பட நின்றது. (2)

**திரிசொல்**

399. ஒருபொருள் குறித்த வேறுசொல் லாகியும்
வேறு பொருள் குறித்த ஒருசொல் லாகியும்
இருபாற்று என்ப திரிசொற் கிளவி.

ஒரு பொருள் குறித்து வரும் பலசொல்லும் பலபொருள் குறித்துவரும் ஒரு சொல்லும் என இருவகைப்படும் திரிசொல்; என்றவாறு.

வெற்பு, விலங்கல், விண்டு என்பன ஒரு பொருள் குறித்த வேறு பெயர்க்கிளவி, எகினம் என்பது அன்னமும் கவரிமாவும் புளிமாவும் நாயும் உணர்த்தலானும், உந்தி என்பது. யாழ்ப்பத்தல் உறுப்பும் கொப்பூழும் தேர்த்தட்டும் கான்யாறும் உணர்த்தலானும் இவை வேறு பொருள் குறித்த ஒரு சொல்.

திரிசொல்லது திரிபாவது உறுப்புத் திரிதலும் முழுவதும் திரிதலும் என இருவகைத்து. கிள்ளை, மஞ்ஞை என்பன உறுப்புத்

திரிந்தன. விலங்கல் விண்டு என்பன முழுவதும் திரிந்தன. முழுவதும் திரிந்தவற்றைக் கட்டிய வழக்கு என்பாரும் உளர். அவை கட்டிய சொல்லாமாயின் செய்யுள் வழக்கு ஆமாறு இல்லை. அதனான் அவையும் திரிசொல் எனல் வேண்டும் என்பது.

அஃதேல் பலசொல் ஒரு பொருட்கு உரியவாதலும் ஒரு சொல் பல பொருட்கு உரிய (ஆதலும்) உரிச்சொல் முதலாகிய இயற்சொற்கும் உண்மையான் அது திரிசொற்கு இலக்கணம் ஆமாறு என்னை எனின்: அது திரிசொற்கு இலக்கணம் உணர்த்தியவாறன்று; அதனது பாகுபாடு உணர்த்தியவாறு. திரிபுடைமையே திரிசொற்கு இலக்கணமாதல் சொல்லின் முடிவின் அப்பொருள் முடித்தல் என்பதனால் பெறவைத்தார். கிள்ளை மஞ்ஞை என்பன ஒரு சொல் ஒரு பொருட்கு உரித்தாகிய திரிசொல்லாதலின் இருபாற்று என்றல் நிரம்பாதெனின்: அற்றன்று; ஆசிரியர் இருபாற்று என்ப திரிசொற் கிளவி எனத் தொகை கொடுத்தாராகலின் கிள்ளை மஞ்ஞை என்பவற்றோடு ஒரு பொருட் கிளவியாய் வரும் திரிசொல் உளவாகல் ஒன்றோ? இவை பிறபொருள் படுதல் ஒன்றோ, இரண்டனுள் ஒன்று திட்பம் உடைத்தாதல் வேண்டும். என்னை? ஆசிரியர் பிற கூறாமையின் என்பது.

திரித்துக் கொண்டது இயற்கைச் சொல்லான் இன்பம் பெறச் செய்யுள் ஈட்டலாகாமையான் அன்றே; அதனான் திரிசொல் எனவே, செய்யுட்கு உரித்தாதலும் பெறப்படும். (3)

**திசைச்சொல்**

400. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

செந்தமிழ் நிலத்தைச் சேர்ந்த பன்னிரண்டு நிலத்தும் தாம் குறித்த பொருள் விளக்கும் திசைச்சொல் என்றவாறு. என்றது, அவ்வந்நிலத்துத் தாம் குறித்த பொருள் விளக்குவதல்லது அவ்இயற்சொல் போல எந்நிலத்தும் தம்பொருள் விளங்கவாரா என்றவாறாம்.

பன்னிரு நிலமாவன : பொங்கர் நாடு ஒளிநாடு, தென்பாண்டி நாடு, குட்டநாடு, குடநாடு, பன்றிநாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழி நாடு, மலை நாடு, அருவா நாடு, அருவாவடதலை நாடு எனச் செந்தமிழ் நாட்டுத் தென்கிழ்ப்பால் முதலாக வடகிழ்ப்பால் இறுதியாக எண்ணிக்கொள்க.

தென்பாண்டி நாட்டார் ஆ எருமை என்பவற்றைப் பெற்றம் என்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை என்றும் வழங்குப. பிறவும் அன்ன.

தங்குறிப்பின என்று தனிமொழி தம்பொருள் உணர்த்து மாற்றுக்குச் சொல்லினார். இருமொழி தொடருமிடத்துத் தன்ளை வந்தான் என வேண்டியவாறு வரப்பெறும் என்றாரல்லர் என்பது. (4)

**வடசொல்**

401. வடசொற் கிளவி வடவெழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.

வடசொல் கிளவியாவது வடசொற்கே உரிய எனப்படும் சிறப்பு எழுத்தின் நீங்கி இருசார் மொழிக்கும் பொதுவாகிய எழுத்தான் இயன்ற சொல்லாம், என்றவாறு. எனவே, பொது எழுத்தான். இயன்ற வடசொல்லும் செய்யுள் செய்தற்குச் சொல்லாம் என்றவாறாயிற்று.

அவை வாரி மேரு குங்குமம் மணி என்னும் தொடக்கத்தன.

வடசொல்லாவது வடசொல்லோடு ஒக்கும் தமிழ்சொல் என்றாரால் உரையாசிரியர் எனின் : அற்றன்று; ஒக்கும் என்று சொல்லப்படுவன ஒருபுடையான் ஒப்புமையும் வேற்றுமையும் உடைமையான் இரண்டாகல் வேண்டும். இவை எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையாகிய ஒரு சொல் இலக்கணம் உடைமையான் இரண்டு சொல் எனப்படா; அதனான் ஒத்தல் யாண்டையது; ஒரு சொல்லேயாம் என்பது. ஆரியமும் தமிழுமாகிய இடவேற்றுமையான் வேறு ஆயின எனின் :

அவ்வாறாயின் வழக்கும் செய்யுளுமாகிய இடவேற்றுமையான் சோறு கூழ்என்னும் தொடக்கத்தனவும் இரண்டு சொல்லாவான் செல்லும், அதனான் இடவேற்றுமையுடையவேனும் ஒரு சொல் இலக்கணம் உடைமையான் ஒரு சொல்லேயாம். ஒரு சொல்லாயவழித் தமிழ்ச்சொல் வடபாடைக்கண் செல்லாமையானும், வடசொல் எல்லாத் தேயத்திற்கும் பொதுவாகலானும், இவை வடசொல்லாய் ஈண்டு வழங்கப் பட்டன எனல் வேண்டும். அதனான் அது போலியுரை எனக. அல்லதூஉம், அவை தமிழ்ச்சொல்லாயின் வடஎழுத்து ஒரீஇ என்றல் பொருந்தாமையானும், வட சொல்லாதல் அறிக. (5)

**இதுவும் அது**

402. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.

பொது எழுத்தான் இயன்றனவே யன்றி, வடஎழுத்தான் இயன்ற வடசொல் சிதைந்துவரினும், பொருத்தம் உடையன செய்யுள் இடத்து வரையார் என்றவாறு.

(எ..டு) அரமியம் வியலகத் தியம்பும் (அகம்.424) எனவும், தசநான்கு எய்திய பணைமருள் நோன்தாள் (நெடுநல்.அடி.115) எனவும் வரும்.

சிதைந்தனவரினும் எனப் பொதுப்படக் கூறியவதனான், ஆணை, வட்டம், நட்டம், கண்ணன் எனப் பாகதமாய்ச் சிதைந்து வருவனவும் கொள்க.

இச்சூத்திரத்தானும் அவை தமிழ்ச்சொல் அன்மை அறிக. (6)

**சொற்கள் அடையும் விகாரம்**

403. அந்நாற் சொல்லுந் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர்.

இயற்சொல், திரிசொல், திசைச்சொல், வடசொல் என்னும் நான்கு சொல்லையும் செய்யுளாகத் தொடுக்குங்கால், மெலியதனை வலிக்கவேண்டும் வழி வலித்தலும், வலியதனை மெலிக்கவேண்டும்வழி மெலித்தலும், குறைவதனை விரிக்க வேண்டும்வழி விரித்தலும், மிகுவதனைத் தொகுக்கவேண்டும் வழித் தொகுத்தலும். குறியதனை நீட்டல் வேண்டும்வழி நீட்டலும், நெடியதனைக் குறுக்கல் வேண்டும்வழிக் குறுக்கலும் ஆகிய அறுவகை விகாரமும், செய்யுள் இன்பம் பெறச் செய்வான் நாட்டுதலை வலியாகவுடைய என்றவாறு.

(எ..டு) குறுக்கை யிரும் புலி (269) முத்தை வரூஉங் காலந் தோன்றின் (எழு.194) என்பன வலிக்கும்வழி வலித்தல். சுடுமண் பாவை, குன்றியலுகரத் திறுதி (சொல்.9) என்பன மெலிக்கும் வழி மெலித்தல். தண்ணந்துறைவன் (குறுந்.296) என்பது விரிக்கும்வழி விரித்தல். மழவ ரோட்டிய (அகம்.9) என்பது தொகுக்கும் வழித் தொகுத்தல். குன்றிகோபங் கொடிவிடு பவள மொண்செங்காந்தள் ஒக்கும் நின்னிறம் என்புழிச் செவ்வெண்ணின் தொகை தொக்கு நிற்றலின் இதுவுமது. வீடுமின் என்பது நீட்டும்வழி நீட்டல். பாசிலை (புறம்.54) என்பது காட்டுவாரும் உளர். உண்டார்ந்து என்பது உண்டருந்து எனக் குறுகி நிற்றலிற் குறுக்கும்வழிக் குறுக்கல். அழுந்துபடு விழுப்புண் (நற்றிணை.97) என்பதும் அது. பிறவும் அன்ன.

நாட்டல் வலிய என்றது, இவ் அறுவகை விகாரமும் இன்னுழியாம் என்று வரையறுக்கப்படா; செய்யுள் செய்யுஞ் சான்றோர் அணிபெற நாட்டலைத் தமக்கு வலியாகவுடைய என்றவாறு. நாட்டல் நிலைபெறச் செய்தல். (7)

**பொருள்கோள்**

**நால்வகைப் பொருள்கோள்**

404. நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான்கு என்ப மொழிபுணர் இயல்பே.

இனிச் செய்யுளிடத்து விகார வகையான் மொழிகள் தம்முள் புணருமாறு கூறுகின்றனார்.

நிரனிறையும், சுண்ணமும், அடிமறியும், மொழிமாற்றும் என நான்கு என்று சொல்லுப. அந்நான்கு சொல்லும் செய்யுளிடத்துத் தம்முள் புணரும் முறையை என்றவாறு.

நான்கு சொல்லும் என்பதூஉம் செய்யுளிடத்து என்பதூஉம் அதிகாரத்தான் பெற்றாம்.

நிரல்நிறையும் சுண்ணமும் மொழிமாற்றாதல் ஒக்கும் ஆயினும் நிரல் நிற்றலும் அளவடி எண்சீரைச் சுண்ணமாகத் துணித்தலுமாகிய வேறுபாடு உடைமையான் அவற்றைப் பிரித்து அவ் வேறுபாட்டான் பெயர் கொடுத்து, வேறு இலக்கணம் இல்லாத மொழிமாற்றை மொழி மாற்று என்றார்.

இச்சூத்திரத்தான் மொழிபுணரியல் நான்கு என வரையறுத்தவாறு. (8)

**நிரனிறைப் பொருள்கோள்**

405. அவற்றுள்,
நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

அந்நான்கினுள், நிரல்நிறையாவது வினையானும் பெயரானும் ஆராயத் தோன்றிச் சொல்வேறு நிற்பப் பொருள் வேறு நிற்றலாம் என்றவாறு.

தொடர்மொழிப் பொருள் முடிக்கும் சொற்கண்ணது ஆகலான் முடிக்கும் சொல்லைப் பொருள் என்றார்.

வினையினும் பெயரினும் என்றதனான் வினைச் சொல்லான் வருவதூஉம், பெயர்ச்சொல்லான் வருவதூஉம் அவ்இரு சொல்லான் வருவதூஉம் என நிரல்நிறை மூன்றாம்.

(எ..டு) மாசு போகவும் காய்பசி, நீங்கவும் - கடிபுனல் மூழ்கி

அடிசில் கைதொட்டு என முடிவனவும் முடிப்பனவுமாகிய வினைச்சொல் வேறுவேறு நிற்றலின், வினை நிரல்நிறை ஆயிற்று. அவை மாசு போகப் புனல் மூழ்கி, பசி நீங்க அடிசில் கைதொட்டு என இயையும்.

கொடி குவளை கொட்டை, நுசுப்புண்கண் மேனி என முடிவனவும், முடிப்பனவுமாகிய பெயர்ச்சொல் வேறு வேறு நிற்றலின் பெயர் நிரல்நிறை ஆயிற்று. அவை நுசுப்புக்கொடி, உண்கண்குவளை, மேனிகொட்டை என இயையும்.

உடலும் உடைந்தோடும் ஊழ்மலரும் பார்க்குங்
கடல் இருள்ஆம் பல் பாம்பு என்ற - கெடலருஞ்சீர்த்
திங்கள் திருமுகமாச் செத்து

என முடிப்பனவாகிய வினையும், முடிவனவாகிய பெயரும் வேறுவேறு நிற்றலின், பொது நிரல்நிறை ஆயிற்று. அவை கடல் உடலும், இருள் உடைந்தோடும், ஆம்பல் ஊழ்மலரும், பாம்பு பார்க்கும் என இயையும்.

நினையத்தோன்றி என்றதனால், சொல்லும் பொருளும் வேறுவேறு நிற்குங்கால் நிரல்பட நில்லாது.

களிறும் கந்தும் போல நளிகடல்
கூம்புங் கலனும் தோன்றும்
தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே

என மயங்கி வருதலுங்கொள்க. (9)

**சுண்ணப் பொருள்கோள்**

408. சுண்ணம் தானே,
பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்.

சுண்ணமாவது இயல்பாக அமைந்த ஈரடிக்கண் உளவாகிய எண்சீரைத் துணித்து இயையும்வழி அறிந்து கூட்டி இயற்றப்படுவதாம் என்றவாறு.

அளவடியல்லாதன விகார அடி ஆகலிற் பட்டாங்கு அமைந்தில ஆதலின், பட்டாங்கு அமைந்த ஈரடி என்றார். எனவே, சுண்ணம் அளவடி இரண்டனுள் அல்லது பிறாண்டுவாராது என்பது.

(எ..டு) சுரைஆழ அம்மி மிதப்ப வரைஅனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலையென்ப
கானக நாடன் சுனை

என்புழி, ஆழ, மிதப்ப, நீத்து, நிலை என்பனவும், சுரை, அம்மி, யானைக்கு, முயற்கு என்பனவும் நின்றுழி நிற்ப இயையாமையின் சுரை மிதப்ப அம்மி ஆழ யானைக்கு நிலை முயற்கு நீத்து எனத் துணித்துக் கூட்ட, இயைந்தவாறு கண்டுகொள்க.

சுண்ணம் போலச் சிதராய்ப் பரந்து கிடத்தலின் சுண்ணம் என்றார். *(10)*

**அடிமறிப் பொருள்கோள்**

407. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

அடிமறிச் செய்யுளாவது சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் தத்தம் நிலையிற் திரிந்து ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று நிற்கும் என்றவாறு.

எனவே, எல்லா அடியும் யாண்டும் செல்லும் என்பதாம்,

மாறாக் காதலர் மலைமறந் தனரே;
யாறாக் கட்பனி வரலா னாவே;
வேறா மென்தோள் வளைநெகிழும்மே
கூறாய் தோழியான் வாழு மாறே

எனவரும். இதனுள் சீர் நின்றாங்கு நிற்பப் பொருள் சிதையாமல் எல்லா அடியும் தடுமாறியவாறு கண்டு கொள்க.

பெரும்பாலும் நாலடி செய்யுட்கண் அல்லது இப்பொருள் வாராது என்க.

நிரனிறைதானே சுண்ணம்தானே மொழி மாற்று இயற்கை என்பனபோல அடிமறிச் செய்தி என்பதனைக் குறளடியாக்கி, அடிநிலைத் திரிந்து சீர்நிலை திரியாது, தடுமாறும்மே பொருள் தெரி மருங்கின் என்று சூத்திரமாக அறுப்பாரும் உளர். (11)

**அதற்கு, மேலும் ஒரு முடிபு**

408. பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரிபும்
தோற்றமும் வரையார் அடிமறி யான.

பொருள் ஆராயுங்கால், அடிமறிச் செய்யுட்கண் ஈற்றடியது இறுதிச்சீர் எருத்தடியிற் சென்று திரிதலும் வரையார் என்றவாறு.

சீர்நிலை திரியாது தடுமாறும் என்றார் ஆகலின் சீர்நிலை திரிதலும் ஒரு வழிக்கண்டு எய்தியது இகந்துபடாமற் காத்தவாறு.

இலக்கியம் வந்தவழிக் கண்டுகொள்க. எருத்துவயின் என்பதற்கு ஈற்று அயற்சீர்வயின் என்று பொருள் உரைத்து,

சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூர்அர மகளிர் ஆரணங் கினரே
சாரல் நாட நீவரு தீயே
வாரல் எனினே யான்அஞ் சுவலே

என்புழி அஞ்சுவல் யான் என இறுதிச் சீர் ஈற்று அயற்சீர்வயின் சென்று திரிந்தது என்று உதாரணங் காட்டினாரால் உரையாசிரியர் எனின் யான் அஞ்சுவல் என நின்றாங்கு நிற்பவும் பொருள் செல்லுமாகலின் இவ்வாறு திரிதல் பொருந்தாமையின், அவர்க்கது கருத்து அன்று என்க.

எல்லா அடியும் யாண்டும் செல்லுமாயினும், உரைப்போர் குறிப்பான் எருத்து என்றும் ஈற்றடி என்றும் கூறினார்.

உரைப்போர் குறிப்பின் உணர்வகை அன்றி
யிடைப்பால் முதல்ஈறு என்றுஇவை தம்முள்
மதிக்கப் படாதன மண்டல யாப்பே

என உரைப்போர் குறிப்பான் முதலும் இடையும் ஈறும் கோடல் பிறரும் கூறினார் என்பது. (12)

**மொழிமாற்றுப் பொருள்கோள்**

409. மொழிமாற்று இயற்கை
சொல்நிலை மாற்றிப் பொருள்எதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.

மொழிமாற்றினது இயல்பு பொருள் எதிர் இயையுமாறு சொல் நிலையை மாற்றி முன்னும் பின்னும் கொள்ளும்வழிக் கொளுவதலாம் என்றவாறு.

(எ..டு) ஆரிய மன்னர் பறையின் எழுந்து இயம்பும்
பாரி பறம்பின்மேல் தண்ணுமை - காரி
விறன்முள்ளூர் வேங்கைவீ தான்நாணுந் தோளாள்
நிறன்உள்ளூர் உள்ளது அலர்.

என இதனுள், பாரி பறம்பின்மேல் தண்ணுமைதானாணுந் தோளான் எனவும், நிறன் விறன் முள்ளூர் வேங்கைவீ எனவும், உள்ளுருள்ளதாகிய அலர் ஆரிய மன்னர் பறையின் எழுந்தியம்பும் எனவும், முன்னும் பின்னும் கொள்வழி அறிந்து கொளுவப் பொருள் எதிர் இயைந்தவாறு கண்டு கொள்க. மொழிமாற்று நின்று ஒன்றற்கொன்று செவ்வாகாமை கேட்டார் கூட்டியுணருமாற்றான். கடாவல் வேண்டும். அல்லாக்கால், அவாய்நிலையுந் தகுதியும் உடையவேனும் அண்மையாகிய காரணம் இன்மையாற் சொற்கள் தம்முள் இயையாவாம் என்க. *(13)*

**தொகைச்சொல் வகைதொகை ஆவன**

410. த ந நு எனும் அவைமுத லாகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா.

செய்யுட்குரிய சொல்லும், சொல் தொடுக்குங்காற்படும் விகாரமும் அவை செய்யுளாக்குங்கால் தம்முள் புணர்ந்து நிற்குமாறுமாகிய செய்யுளொழிபு உணர்த்தி, இனி வழக்கு இலக்கணத்து ஒழிபு கூறுகின்றார்.

த ந நு எ என்பனவற்றை முதலாக உடையவாய்க் கிளைமை நுதலி வரும் பெயரும் பிரிக்கப்படா; என்றவாறு.

அவையாவன தமன், தமள், தமர்; நமன், நமள், நமர், நுமன், நுமள், நுமர்; எமன், எமள், எமர்; தம்மான், தம்மாள், தம்மார்; நம்மான், நம்மாள், நம்மார்; நும்மான், நும்மாள், நும்மார்; எம்மான், எம்மாள், எம்மார் என வரும்.

உம்மையாற் பிறகிளைநுதற் பெயரும் பிரிக்கப் பிரியா என்பதாம். அவை தாய்,ஞாய், தந்தை, தன்னை என்னும் தொடக்கத்தன.

இவற்றைப் பிரிப்பப் பிரியா என்றது என்னை எனின் : வெற்பன் பொருப்பன் என்னும் தொடக்கத்து ஒட்டுப்பெயர் வெற்பு+அன், பொருப்பு+அன் எனப் பிரித்தவழியும், வெற்பு, பொருப்பு என்னும் முதனிலை தம்பொருள் இனிது விளக்கும், தமன் எமன் என்பவற்றைத் தம்+அன் எம்+அன் எனப் பிரிக்கலுறின் தம் எம் என்பன முதனிலையாய்ப் பொருள் உணர்த்துவனவாதல் வேண்டும்; அவை பொருள் உணர்த்தாமையான், தமன், எமன் என வழங்கியாங்கிக் கொள்வதல்லது பிரிக்கப்படாமையின், அவ்வாறு கூறினார் என்பது. பிறவும் அன்ன, அஃதேல், தாம், யாம் என்பன அவற்றிற்கு முதனிலையாக பிரிக்கவே, அவையும் தம் பொருள் உணர்த்தும் எனின்.

தமன் எமன் என்பன தன் கிளை என் கிளை எனவும் தம்கிளை எம்கிளை எனவும் முதனிலை வகையான் ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாதல் உடைய, ஒருமை உணர்த்துங்கால் தாம் யாம் என்பன பொருந்தாமையின் தான் யான் என்பனவே முதல் நிலை எனல் வேண்டும். வேண்டவே, இவ்வாறு பிரிப்பின் தமன் எமன் ஒரொன்று இரண்டுசொல் ஆதல் வேண்டுதலான், எழுத்தானும் பொருளானும் வேறுபாடின்மையின் ஒரு சொல் எனவே படும்; இரண்டு சொல் என்றல் நிரம்பாமையின், அவ்வாறு பிரித்தலும் பொருத்தம் இன்று என்பது.

கிளை நுதற்பெயர் விளிமரபின்கண் பெறப்பட்டமையாற் பெயரியலில் உணர்த்தார் ஆயினார். அதனால் ஆண்டு

இயைபுபட்டின்றாகலான் பிரிப்பப் பிரியா ஒருசொல் அடுக்கோடு இயைய இதனை ஈண்டு வைத்தார். *(14)*

**தொகைபோல் அடுக்கி வருவன**

411. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று
அவைமூன்று என்ப ஒருசொல் அடுக்கே.

இசைநிறையும், அசைநிலையும், பொருள் வேறு பாட்டொடு புணர்வதும் என ஒரு சொல் அடுக்கு அம்மூன்று வகைப்படும் என்றவாறு.

**(எ..டு)** ஏ ஏ ஏ ஏ யம்பன் மொழிந்தனள் என்றது இசைநிறை, மற்றோ மற்றோ, அன்றே அன்றே என்பன அசைநிலை, பாம்பு பாம்பு; அவனவன்; வைதேன் வைதேன்; உண்டு உண்டு; போம் என்பன முறையானே விரைவும் துணிவும் உடம்பாடும் ஒரு தொழில் பலகால் நிகழ்தலுமாகிய பொருள்வேறுபாடு உணர்த்தலின். பொருளொடு புணர்த்தல். பொருள் வேறுபாடு பிறவும் உளவேல் வழக்கு நோக்கிக் கண்டுகொள்க.

அடுக்கு ஒரு சொல்லது விகாரம் எனப்படும்; இரண்டு சொல்லாயின் இருபொருள் உணர்த்துவதல்லது இப்பொருள் வேறுபாடு உணர்த்தாமையின் என்பது. *(15)*

**தொகை மொழிகள்**

412. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகைஎன்று
அவ்ஆறு என்ப தொகைமொழி நிலையே.

இனித் தொகை இலக்கணம் உணர்த்துகின்றார். வேற்றுமைத்தொகை முதலாகத் தொகைச் சொல் ஆறாம் என்றவாறு.

வேற்றுமைஉருபும் உவமஉருபும் உம்மையும் வினைச்சொல்ஈறும் பண்புச்சொல்ஈறும் தொகுதலின் தொகை

ஆயின என்பாரும், அவ்வப்பொருள்மேல் இரண்டும் பலவுமாகிய சொற்கள் பிளவுபடாது ஒற்றுமைப்படத் தம்முள் இயைதலின் தொகை ஆயின என்பாரும் என இரு திறத்தர் ஆசிரியர். செய்தான் பொருள், இருந்தான் மாடத்து என உருபு தொக்கு ஒரு சொல்நீர்மைப் படாதனவும் தொகையாவான் சேறலின் அவற்றை நீக்குதற்கும், வேழக் கரும்பு, கேழற் பன்றி என்புழித் தொக்கன இல்லை எனினும் தொகை எனவேண்டப்படுமாகலான் அவற்றைத் தழுவுதற்கும், உருபு முதலாயின தொகுதலின் தொகை என்பார்க்கும் ஒட்டி ஒருசொல்நீர்மைப்படுதலும் தொகை இலக்கணம் எனல் வேண்டும்.

அதனான் உருபு முதலாயின தொகுதல் எல்லாத் தொகையினும் செல்லாமையின் எல்லாத் தொகைக்கண்ணும் செல்லுமாறு ஒட்டி ஒருசொல்லாதல் தொகை இலக்கணமாய் முடிதலின், இவ்ஆசிரியர்க்கு இதுவே துணிவு எனப்படும் என்பது. அவ்வாறாயின், உருபு தொகவருதலும் (சொல்.104) எனவும், வேற்றுமை தொக்க`பெயர்வயினானும் (சொல்.418) எனவும், உம்மைதொக்க பெயர் வயினானும் (சொல்.418) எனவும், ஓதலான் அவை ஆண்டுத் தொக்கன எனப்படும் அன்றோ எனின் : அற்று அன்று; அது என் வேற்றுமை உயர்திணைத் தொகைவயின் (சொல்.94) என்புழி அது என் உருபு நின்று கெட்டதாயின் நின்ற காலத்துத் திணைவழுவாம்; அத்திணைவழு அமைவு உடைத்து எனின் விரிக்கின்றுழி நான்காம் உருபு தொடராது அது தன்னையே விரிப்பினும் அமைவு உடைத்து; அதனான் முறைப்பொருள் தோன்ற நம்பிமகன் என இரண்டு சொல்தொக்கன என்பதே ஆசிரியர் கருத்து எனல் வேண்டும். அல்லதூஉம், வினைத்தொகை பண்புத்தொகை அன்மொழித்தொகை என்பனவற்றின்கண் வினையும் பண்பும் அன்மொழியும் தொக்கு நில்லாமையானும் அஃதே கருத்தாதல் அறிக. அதனான் உருபும் உவமையும் உம்மையும் தொகுதலாவது தம் பொருள் ஒட்டிய சொல்லான் தோன்றத் தாம் ஆண்டுப் புலப்படாது நிற்றலேயாம்.

வேற்றுமைத்தொகை என்பது வேற்றுமைப் பொருளையுடைய தொகை என்றானும் வேற்றுமைப்

பொருள்தொக்க தொகை என்றானும் விரியும். உவமத்தொகை உம்மைத்தொகை அன்மொழித்தொகை என்பனவும் அவ்வாறு விரியும். அன்மொழியாவது தொக்க சொல் அல்லாத மொழி. வினைத்தொகை பண்புத்தொகை என்பன. வினையினது தொகை பண்பினது தொகை என விரியும். வினை பண்பு என்றது அவற்றை உணர்த்துஞ் சொல்லை. ஒரு சொல்லான் தொகை இன்மையின் பிறிதொரு சொல்லொடு தொகுதல் பெறப்படும்.

இச்சூத்திரத்தான் தொகைச்சொல் இனைத்தென வரையறுத்தவாறு. *(16)*

**வேற்றுமைத் தொகை**

413. அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை யியல.

வேற்றுமைத் தொகை அவ்வேற்றுமை உருபு தொடர்ப் பொருள் உணர்த்தியாங்கு உணர்த்தும் என்றவாறு.

எனவே, சாத்தனொடு வந்தான் என்னும் பொருட்கண் சாத்தன் வந்தான் எனவும், சாத்தற்குக் கொடுத்தான் என்னும் பொருள்கண் சாத்தன் கொடுத்தான் எனவும் உருபு தொடர் பொருள் உணர்த்தும் ஆற்றல் இல்லன தொகா; அவ்வாற்றல் உடையனவே தொகுவன என்றவாறாம். இரண்டாம் வேற்றுமைத் தொகை முதலாக வேற்றுமைத்தொகை அறுவகைப்படும். நிலங்கடந்தான், குழைக்காது எனவும், தாய் மூவர், பொற்குடம் எனவும், கருப்புவேலி, கடிசூத்திரப்பொன் எனவும், வரை பாய்தல், கருவூர்க்கிழக்கு எனவும், சாத்தன் புத்தகம், கொற்றன் உணர்வு எனவும்; மன்றப் பெண்ணை, மாரி ஆமா எனவும் வரும். இவை முறையானே நிலத்தைக் கடந்தான்; குழையையுடைய காது; தாயொடு மூவர்; பொன்னான் இயன்ற குடம்; கரும்பிற்கு வேலி; கடிசூத்திரத்திற்குப் பொன்; வரையினின்றும் பாய்தல்; கருவூரின் கிழக்கு; சாத்தனது புத்தகம்; கொற்றனது உணர்வு; மன்றத்தின்கண் நிற்கும் பெண்ணை; மாரிக்கணுளது ஆமா என்னும் உருபு தொடர்ப் பொருளை இனிது விளக்கியவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன. *(17)*

**உவமத்தொகை**

414. உவமத் தொகையே உவம இயல.

உவமத்தொகை உவம உருபு தொடர்ப்பொருள் போலப் பொருள் உணர்த்தும் என்றவாறு. எனவே, புலி அன்ன சாத்தன், மயில் அன்ன மாதர் என்னும் பொருட்கண் புலிச்சாத்தன், மயில்மாதர் என அப்பொருள் விளங்கும். ஆற்றல் இல்லன தொகா; ஆற்றல் உடையவே தொகுவன என்பதாம்.

(எ..டு) புலிப்பாய்த்துள்; மழை வண்கை; துடி நடுவு; பொன்மேனி என்பன புலிப்பாய்த்துள் அன்ன பாய்த்துள்; மழை அன்ன வண்கை; துடி அன்ன நடுவு, பொன் அன்ன மேனி எனத்தம் விரிப்பொருள் உணர்த்தியவாறு கண்டுகொள்க. அஃதேல், புலிப் பாய்த்துளை ஒக்கும் பாய்த்துள்; மழையை ஒக்கும் வண்கை; என விரித்தலின் அவைஎல்லாம் வேற்றுமைத்தொகை எனப்படும். அதனான். உவமத்தொகை என ஒன்று இல்லை எனின் : அற்று அன்று, சொல்லுவார்க்கு அது கருத்தாயின் வேற்றுமைத் தொகையுமாம். அக்கருத்தானன்றிப் புலியன்ன பாய்த்துள் பொன்மானும் மேனி என வேற்றுமையோடு இயைபு இல்லா உவம உருபு தொடர்ப் பொருட்கண் தொக்கவழி உவமத் தொகையாவதல்லது வேற்றுமைத்தொகை ஆண்டு இன்மையின் வேற்றுமைத் தொகையாமாறில்லை என்க. உவமஉருபு ஒப்பில் வழியான் பிறிது பொருள் செய்யும் இடைச்சொல்லாகலான், வினையும் வினைக்குறிப்பும் பற்றி வரும். அவைபற்றி என்போற் பெருவிதுப் புறுகநின்னை, இன்னாது உற்ற அறனில் கூற்றே (புறம்.255) என்புழிப் போல என்பது குறிப்பு வினை எச்சமாய் நிற்றலானும், நும்ம னோரும் மற்றினைய ராயின் எம்ம னோரிவண் பிறவலர் மாதோ (புறம்.210) என்புழி அன்னோர் என்பது இடைச்சொல் முதனிலையாகப் பிறந்த குறிப்புப் பெயர் ஆகலானும், என்னைப் போல நும்மையன்னோர், எம்மையன்னோர் என இரண்டாவது விரித்தற்கு ஏற்புடைமை அறிக. *(18)*

**வினைத்தொகை**

415. வினையின் தொகுதி காலத்து இயலும்.

வினைத்தொகை காலத்தின்கண் நிகழும்; என்றவாறு. காலத்தியலும் எனப் பொது வகையான் கூறியவதனான் மூன்று காலமுங் கொள்க. தொகுதி காலத்தியலும் எனவே, அவ்வினை பிரிந்து நின்றவழித் தோன்றாது தொக்கவழித் தொகையாற்றலான் காலம் தோன்றும் என்றவாறாம்.

ஈண்டு வினை என்றது எவற்றை எனின் : வினைச் சொற்கும் வினைப் பெயர்க்கும் முதனிலையாய், உண், தின், செல், கொல் என வினைமாத்திரம் உணர்த்தி நிற்பனவற்றை என்பது. இவற்றை வடநூலார் தாது என்ப.

(எ..டு) ஆடரங்கு; செய்குன்று; புணர்பொழுது; அரிவாள்; கொல் யானை; செல்செலவு என வரும். காலம் உணர்த்தாது வினை மாத்திரம் உணர்த்தும் பெயர் நிலப்பெயர் முதலாகிய பெயரொடு தொக்குழிக் காலம் உணர்த்தியவாறு கண்டு கொள்க. காலம் உணர்த்துகின்றுழிப் பெயரெச்சப் பொருளவாய் நின்று உணர்த்தும் என்பது செய்யுஞ் செய்த என்னும் கிளவியின் - மெய்யொருங்கு இயலுந் தொழில் தொகு மொழியும் (எழு.482) என்பதனான் கூறினார். தொகைப் பொருளாகிய தாம் பிரிந்த வழிப் பெறப்படாமையின் ஆசிரியர் இவற்றைப் புணரியல் நிலையிடை உணரத்தோன்றா என்றார். அதனான் இவை தம் சொல்லான் விரிக்கப்படாமையின் பிரிவில் ஒட்டாம்.

பெயரெச்சம் நின்று தொக்கது என்றாரால் உரையாசிரியர் எனின் : அற்று அன்று; ஆசிரியர் இவற்றைப் பிரித்துப் புணர்க்கப்படா; வழங்கியவாறே கொள்ளப்படும் என்றது. பிரித்தவழித் தொகைப்பொருள் சிதைதலானன்றே; கொன்றயானை என விரிந்தவழியும் அப்பொருள் சிதைவின்றேல் புணரியல் நிலையிடை உணரத்தோன்றா என்றற்கு ஒரு காரணம் இல்லையாம்; அதனால் பெயரெச்சம் நின்று தொகுதல் ஆசிரியர் கருத்தன்மையின் உரையாசிரியர்க்கும் அது கருத்து அன்று என்க.

அல்லதூஉம், ஆகுபெயர் உணர்த்தியவழி வினைத்தொகை உளப்பட இருபெயரொட்டும் (சொல்.114) என்றாராகலானும் வினை நின்று தொகுதல் அவர்க்குக் கருத்தன்மை அறிக.

அஃதேல், வினைத்தொகைக்கு முதனிலை பெயராம் அன்றோ எனின் : உரிஞென்பது முதலாயினவற்றைத் தொழிற் பெயர் என்றாராகலின், தொழில் மாத்திரம் உணர்த்துவன எல்லாம் தொழிற்பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்பக. (19)

**பண்புத்தொகை**

416. வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று
அன்ன பிறவும் அதன் குணம் நுதலி
இன்னது இதுஎன வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே.

வண்ணம் வடிவு அளவு சுவை என்பனவும் அவை போல்வன பிறவுமாகிய குணத்தை நுதலிப்பின் தொக்கவழிக் குணச்சொல் குணம் உடையதனை உணர்த்துவான் இன்னது இது என ஒன்றனை ஒன்று விசேடித்து இரு சொல்லும் ஒரு பொருளின் மேல் வரும் இயல்புடைய எல்லாத் தொகைச் சொல்லும் பண்புத் தொகையாம் என்றவாறு.

நுதலி என்னும் சினைவினையெச்சம் வரும் என்னும் முதல் வினையோடு முடிந்தது.

இயற்கை என்றது, தொக்குழிப் பண்புடையதனைக் குறித்தல் அத்தொகைச் சொல்லது இயல்பு என்பதல்லது காரணம் கூறப்படாதவாறு. தொகைக்கண் அல்லது அச்சொல் தனி நிலையாய், உண், தின், செல், கொல் என்பன போலப் பொருள் உணர்த்தாமையின், பண்புத் தொகையும் வினைத்தொகை போலப் பிரிக்கப்படாதாம்.

(எ..டு) கருங்குதிரை என்பது வண்ணப்பண்பு. வட்டப்பலகை என்பது வடிவு. நெடுங்கோல் என்பது அளவு, தீங்கரும்பு என்பது

சுவை. அன்ன பிறவும் என்றதனான், நுண்ணூல், பராரை, மெல்லிலை, நல்லாடை என்னும் தொடக்கத்தன கொள்க. அவை கரிதாகிய குதிரை, வட்டமதாகிய பலகை எனப் பண்புச் சொல்லும் பண்புடைப் பொருளே குறித்தலான், இரு சொல்லும் ஒரு பொருளவாய் இன்னது இது என ஒன்றை ஒன்று பொதுமை நீக்கியவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன.

அஃதேல், கரிதாகிய குதிரை, வட்டமதாகிய பலகை என்பன அத்தொகையின் விரியாகலின் பண்புத்தொகைப் பிரிக்கப்படாது என்றது என்னை எனின் : அற்று அன்று. தொகைப் பொருள் உணர்த்துதற்குப் பிறசொல் கொணர்ந்து விரித்ததல்லது தன்சொல்லான் விரியாமையின் அவை விரி எனப்படா என்க. வடநூலாரும் பிரியாத் தொகையும் பிற சொல்லான் விரிக்கப்படும் என்றார். கரியது என்னும் பண்புகொள் பெயர் கருங்குதிரையெனத் தொக்கதென்றாரால் உரையாசிரியர் எனின் அதனைப் பெயரெச்சம் வினைத்தொகை நிலைமொழி என்றதற்கு உரைத்தாங்கு உரைத்து மறுக்க. பிறசொல் கொணர்ந்து விரிக்குங்கால், கரிய குதிரை, கரிதாகிய குதிரை, கரியது குதிரை என அத்தொகைப் பொருள் உணர்த்துவன எல்லாவற்றானும் விரிக்கப்படும்.

முதனிலையாவது கரியன், செய்யன், கருமை, செம்மை என்பனவற்றிற்கு எல்லாம் முதனிலையாய்ச் சொல்லாய் நிரம்பாது கரு செவ் எனப் பண்புமாத்திரம் உணர்த்தி நிற்பதாம்.

என்ன கிளவியும் என்றதனால், சாரைப் பாம்பு வேழக்கரும்பு, கேழற்பன்றி எனப் பண்பு தொகாது பெயர் தொக்கனவும் அத்தொகையாதல் கொள்க. இவற்றுள் சாரை முதலாகிய நிலைமொழி பிரித்த வழியும் பொருள் உணர்த்தலின் இவற்றைப் பிரித்துப் புணர்த்தார். அஃதேல், பாம்பைச் சாரை விசேடித்ததல்லது சாரையைப் பாம்பு விசேடித்தின்று ஆகலின் ஒன்றை ஒன்று பொதுமை நீக்காமையான் சாரைப்பாம்பு என்பது முதலாயின பண்புத்தொகை ஆயினவாறு என்னை எனின் : நன்று சொன்னாய்; விசேடிப்பதும் விசேடிக்கப்படுவதுமாகிய

இரண்டனுள் விசேடிப்பது விசேடியாக்கால் அது குற்றமாம்; விசேடிக்கப்படுவது விசேடித்தின்று என்றாலும் விசேடிக்கப் படுதலாகிய தன் தன்மைக்கு இழுக்கு இன்மையான் விசேடியாது நிற்பினும் அமையும் என்க. இவ்வேறுபாடு பெறுதற்கன்றே இன்னது இது என வரூஉம் எனப் பின்மொழியை விசேடிப்பதாகவும், முன்மொழியை விசேடிக்கப்படுவதாகவும், ஆசிரியர் ஓதுவாராயிற்று என்பது. அற்றேனும், சாரையெனவே குறித்த பொருள் விளங்கலின் பாம்பு என்பது மிகையாம் பிற எனின் : அற்று அன்று; உலக வழக்காவது சூத்திர யாப்புப் போல, மிகைச் சொற்படாமைச் சொல்லப்படுவதொன்றன்றி, மேல் தொட்டுங் கேட்டார்க்குப் பொருள் இனிது விளங்க வழங்கப்பட்டு வருவதாகலின், அது கடாவன்று என்க. மிகைச் சொற்படாமைச் சொல்லப்படுமாயின், யான் வந்தேன், நீ வந்தாய் என்னாது வந்தேன், வந்தாய் என்றே வழங்கல் வேண்டும் என்பது. இனி ஒற்றுமை நயத்தால் என்பும் தோலும் உரியவாதலாகிய உறுப்பும் சாரை எனப்படுதலின், அவற்றை நீக்கலான் பாம்பு என்பதூஉம் பொதுமை நீக்கிற்று என்பாரும் உளர். உயர்சொற்கிளவி இடைச்சொற்கிளவி, உரிச்சொற் கிளவி என்புழியும் உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்பன சொல் என்பதன்கண் கருத்துடையவன்றிக் குறிமாத்திரமாய் உயர்வு, இடை, உரி என்ற துணையாய் நின்றனவாகலின், சாரை என்பது பாம்பை விசேடித்தமை போல அவை கிளவி என்பதனை விசேடித்து நின்றன என்பது. அவ்வாற்றான் அமைவுடையவாயினும் சூத்திரமாகலின், உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல் எனவே அமையும்; கிளவி என்பது மிகையெனின்; மிகையாயினும் இன்னோரன்ன அமைவுடைய என்பது உணர்த்துதற்கு அவ்வாறு ஓதினார் என்பது.

(20)

**உம்மைத்தொகை**

417. இருபெயர் பல்பெயர் அளவின் பெயரே
எண்ணியற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே.

இருபெயர் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகைச் சொல்திரளையும் தனக்குச் சார்பாகக் குறித்து நிற்கும் உம்மைத்தொகை; என்றவாறு.

உவாப்பதினான்கு என்பது இருபெயரானாய உம்மைத் தொகை. புலிவிற்கெண்டை என்பது பல பெயரானாய உம்மைத் தொகை. தூணிப்பதக்கு என்பது அளவுப்பெயரானாய உம்மைத் தொகை. முப்பத்து மூவர் என்பது எண்ணியற்பெயரானாய உம்மைத்தொகை. தொடியரை என்பது நிறைப் பெயரானாய உம்மைத்தொகை. பதினைந்து என்பது எண்ணுப்பெயரானாய உம்மைத்தொகை.

இனி, அவை விரியுங்கால், உவாவும் பதினான்கும் எனவும், புலியும் வில்லும் கெண்டையும் எனவும், தூணியும் பதக்கும் எனவும், முப்பதின்மரும் மூவரும் எனவும், தொடியும் அரையும் எனவும், பத்தும் ஐந்தும் எனவும் விரியும்.

வேற்றுமைத்தொகை முதலாயின பலசொல்லான் தொகுதல் சிறுபான்மை; அதனான் உம்மைத்தொகை இரு சொல்லானும் பல சொல்லானும், ஒப்பத் தொகும் என்பது அறிவித்தற்கு இருபெயர் பல் பெயர் என்றார். கற்சுனைக் குவளை இதழ், பெருந்தோள் பேதை எனப் பிற தொகையும் பெரும்பான்மையும் பல சொல்லான் வருமாலெனின், கல் என்பதும் சுனை என்பதும் கற்சுனை எனத்தொக்குக் கற்சுனைக் குவளையிதழெனை ஒன்றாயிற்று. பெருந்தோள் என்னும் தொகை ஒரு சொல்லாய்ப் பேதை என்பதோடு தொக்குப் பெருந்தோள்பேதை என ஒன்றாயிற்று. அவை இவ்வாற்றான் அல்லது தொகாமையின் இருசொல் தொகையேயாம். புலிவிற்கெண்டை என்புழி மூன்று பெயரும் தொகும் என்னாது முதற்பெயர் ஒழித்தும் இறுதிப் பெயர் ஒழித்தும் ஏனை இரண்டும் தம்முள் தொக்கு ஒருசொல்லாய்ப் பின் மற்றையதனோடு தொகும் எனின். முன்தொகும் இரண்டற்கும் ஓரியைபு வேறு பாடின்மையானும் இருதொகைப்படுத்தல் பல செய்கைத்தாகலானும் அவை மூன்று பெயரும் ஒருங்குதொக்கன எனவேபடும் என்பது.

அளவின் பெயர் முதலாயின, இருபெயராயல்லது தொகாவென வரையறுத்தற்கு இருபெயர் பல்பெயரென அடங்குவனவற்றைப் பெயர்த்துக் கூறினார். கலனே தூணிப்பதக்கு, தொடியே கஃசரை, நூற்று நாற்பத்து நான்கு என்புத் தூணிப்பதக்கு, கஃசரை, நாற்பத்து நான்கு என்பன ஒரு சொற்போல் அளவுப்பெயரும், நிறைப்பெயரும், எண்ணுப் பெயருமாய் வழங்கப்பட்டு வருதலின் கலமும் தூணிப்பதக்கும், தொடியும் கஃசரையும், நூறும் நாற்பத்து நான்கும் என இருமொழி நின்று தொக்க என்றலே பொருத்தமுடைமையறிக.

உம்மைத்தொகை இன்ன பொருள் பற்றித் தொகும் என்னாது அவ்அறு கிளவியும் எனச் சொல்லே பற்றி ஓதினாரேனும், ஏற்புழிக் கோடல் என்பதனான் உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே பலர் சொல் நடைத்து (சொல்.421) என்பதனான் எண்ணும்மைப் பொருட்கண் தொகும் என்பது பெறப்படும். எண்ணின்கண் வரும் இடைச்சொல் பலவேனும் தொக்கு நிற்கும் ஆற்றலுடையது உம்மை இடைச் சொல்லா கலான், உம்மைத்தொகையாயிற்று. (21)

**அன்மொழித் தொகை**

418. பண்புதொக வரூஉம் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின்று இயலும் அன்மொழித் தொகையே.

பண்புச் சொல்தொகும் சொல்லினும், உம்மை தொக்க பெயர்க்கண்ணும், வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதிச்சொற்கண் நின்று நடக்கும் அன்மொழித்தொகை. (எ-று)

பண்புத்தொகை படவும் உம்மைத்தொகை படவும் வேற்றுமைத்தொகைபடவும் அச்சொல் தொக்கபின் அத்தொகை அன்மொழித் தொகையாகாமையின் தொகுவதன் முன் அவற்றிற்கு நிலைக்களமாகிய சொல்பற்றி வரும் என்பது விளக்கிய, தொகைவயினானும் என்னாது பண்புதொகவரூஉம் கிளவியானும்

உம்மை தொக்க பெயர்வயினானும், வேற்றுமை தொக்க பெயர்வயினானும் என்றார்.

இறுதிச்சொல் படுத்தல் ஓசையான் பொருள் விளக்குமாறு வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் கண்டுகொள்க.

(எ.டு) வெள்ளாடை, அகரஈறு என்பன பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை; தகரஞாழல் என்பது உம்மைத்தொகை நிலைகளத்துப் பிறந்த அன்மொழித்தொகை; பொற்றொடி என்பது வேற்றுமைத்தொகை நிலைக்களத்துப் பிறந்த அன்மொழித்தொகை; இனி, அவை வெள்ளாடையுடுத்தாள், அகரமாகிய ஈற்றையுடைய சொல் எனவும், தகரமும் ஞாழலுமாகிய சாந்து பூசினாள் எனவும், பொற்றொடி தொட்டாள் எனவும் விரியும்.

பண்புத்தொகை நிலைக்களத்துப் பிறத்தல் பெரும்பான்மையாகலின், முறையிற் கூறாது அதனை முற்கூறினார்; வேற்றுமைத் தொகை நிலைக்களத்துப் பிறத்தலின் உம்மைத்தொகை நிலைக்களத்துப் பிறத்தல் சிறுபான்மையாயினும், ஒரு பயன்நோக்கி அதனை அதன்முன் வைத்தார். யாதோ பயன் எனின் : சிறுபான்மை உவமத்தொகை நிலைக்களத்தும் வினைத்தொகை நிலைக்களத்தும் அன்மொழித் தொகை பிறக்கும் என்பது உணர்த்துதல் என்க. அவை பவளவாய், திரிதாடி எனவரும். அவைதாம் பவளம் போலும் வாயையுடையாள்; திரிந்த தாடியையுடையான் என விரியும்.

பிறவும் அன்ன. (22)

**தொகை மொழிகளில் பொருள் நிற்குமிடம்**

419. அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குஉடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான்கு என்ப பொருள்நிலை மரபே.

முன்மொழிமேல் நிற்றலும், பின்மொழிமேல் நிற்றலும், இருமொழிமேல் நிற்றலும், அவற்றின்மேல் நில்லாது பிறமொழிமேல் நிற்றலும் என அத்தொகையும் அவற்றது பொருள்நிலை மரபும் நான்கு என்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

தொகையும் அவற்றது பொருள்நிலை மரபும் ஒருவகையான் வேறாயினும் ஒற்றுமை நயம்பற்றி அவைதாம் என்றார்.

பொருள் நிற்றலாவது வினையோடு இயையுமாற்றான் மேற்பட்டுத் தோன்றுதல்.

(எ..டு) வேங்கைப்பூ என்புழிப் பூ என்னும் முன்மொழிக்கண் பொருள் நின்றது. அது நறிது என்னும் வினையோடு இயையுமாற்றான் மேற்பட்டுத் தோன்றியவாறு கண்டுகொள்க. மேல்வருவனவற்றிற்கும் ஈது ஒக்கும். இடவகையான் முன் மொழியாயிற்று. அடைகடல் என்புழி அடை என்னும் பின்மொழிக்கண் பொருள் நின்றது இடவகையான் பின்மொழியாயிற்று. முன்பின் என்பன கால இடவகையான் தடுமாறி நிற்கும். கடலும் கடலடைந்த இடமும் கடல் எனப்படுதலின், அடைகடல் என்பது அடையாகிய கடல் என இருபெயர்ப் பண்புத்தொகை. இனி வரையறை இன்மையான் சிறுபான்மை முன்மொழி பின்மொழியாகத் தொக்கதோர் ஆறாம் வேற்றுமைத்தொகை எனவும் அமையும். உவாப்பதினான்கு என்புழி இருமொழி மேலும் பொருள் நின்றது. தன்னினம் முடித்தல் என்பதனால் பல பெயர்மேல் நிற்றலும் கண்டுகொள்க. வெள்ளாடை என்புழித்தொக்க இருமொழி மேலும் நில்லாது உடுத்தாள் என்னும் அன்மொழிமேல் நின்றது.

வேற்றுமைத்தொகை முதல் நான்கு தொகையும் முன்மொழிப் பொருள; வேற்றுமைத்தொகையும் பண்புத் தொகையும் சிறுபான்மை பின்மொழிப் பொருளவாம். உம்மைத்தொகை இருமொழிப் பொருட்டு.

ஆறு எனப்பட்ட தொகை பொருள்வகையான் நான்காம் எனப் பிறிது ஒரு வகை குறித்தவாறு. *(23)*

**தொகைமொழிகள் ஒருசொல் தன்மைய**

420. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய.

அறுவகைத் தொகைச்சொல்லும் ஒரு சொல்லாய் நடத்தலையுடைய என்றவாறு.

ஒரு சொல் நடைய எனப்பொதுப்படக் கூறியவதனான், யானைக்கோடு, கொல்யானை என முன்மொழி பெயராகியவழி ஒரு பெயர்ச்சொல் நடையவாதலும், நிலங்கடந்தான் குன்றத்திருந்தான் என முன்மொழி வினையாயவழி ஒரு வினைச் சொல் நடையவாதலும் கொள்க. அவை உருபு ஏற்றலும் பயனிலை கோடலும் முதலாகிய பெயர்த்தன்மையும், பயனிலை ஆதலும் பெயர் கோடலும் முதலாகிய வினைத்தன்மையும் உடையவாதல் அவ்வச் சொல்லோடு கூட்டிக் கண்டு கொள்க.

நிலங்கடந்தான் குன்றத்திருந்தான் எனப் பெயரும் வினையும் தொக்கன ஒருசொல் நீர்மை இல ஆகலின் தொகை எனப் படா என்பாரும் உளர். எழுத்து ஒத்தினுள் பெயரும் தொழிலும் பிரிந்தொருங்கு இசைப்ப வேற்றுமை உருபு நிலைபெறுவழியும், தோற்றம் வேண்டாத் தொகுதிக் கண்ணும் (எழுத்.132) என்றதனான், வேற்றுமையுருபு தொகப்பெயரும் தொழிலும் ஒருங்கு இசைத்தல் ஆசிரியர் நேர்ந்தார் ஆகலின் அவை தொகை எனவேபடும் என்பது. கடந்தான்நிலம், இருந்தான் குன்றத்து என்பன ஒருங்கிசையாது பக்கு இசைத்தலின் அவை தொகையன்மை அறிக.

எல்லாத் தொகையும் ஒரு சொல் நடைய என்றதனான், தொகை அல்லாத தொடர்மொழியுள் ஒருசொல் நடையவாவன சில உள என்பதாம். யானை கோடுகூரிது, இரும்பு பொன்னாயிற்று, மக்களை உயர்திணைஎன்ப என்பனவற்றுள் கோடுகூரிது பொன்னாயிற்று உயர்திணைஎன்ப என்னும்

தெகையல் தொடர்மொழி ஒருசொல் நடையவாய் எழுவாய்க்கும் இரண்டாவதற்கும் முடிவாயினவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன. *(24)*

**உம்மைத்தொகைக்கு மேலும் ஒரு முடிபு**

421. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்துஎன மொழிமனார் புலவர்.

உயர்திணைக்கண் வரும் உம்மைத்தொகை பலர்க்குரிய ஈற்றான் நடக்கும் என்றவாறு.

பொதுவில் கூறினாரேனும் மாமூல பெருந்தலைச் சாத்தர்; கபில பரண நக்கீரர் என வரும்.

விரவுப் பெயர்த்தொகையும் அடங்குதற்கு உயர்திணைப் பெயர் உம்மைத்தொகை என்னாது, உயர்திணை மருங்கின் உம்மைத்தொகை என்றார். அவை ஒட்டி ஒரு சொல்லாய் நிற்றலின் பலரறிசொல் எனப்படும். பலரறிசொற் கபில பரணன் என ஒருமை ஈற்றான் நடத்தல் வழு ஆகலின் வழுக் காத்தவாறு.

இதனானும் தொகை ஒரு சொல்லாதல் பெற்றாம். ஒருசொல் நீர்மை பெற்றின்றாயின், கபிலன் பரணன் என ஒருமைச்சொல் ஒருமை ஈற்றான் நடத்தற்கண்படும் இழுக்கு என்னை என்பது. *(25)*

**பொருள் கொள்ளுங் குறிப்பு**

422. வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றுஅவற்று இயல்பான்
இன்ன என்னும் குறிப்புரை யாகும்.

வாரா இயல்பினவற்றை வருவனவாகச் சொல்லுதலும், என்னா இயல்பினவற்றை என்பனவாகச் சொல்லுதலும், அத்தன்மையன எல்லாம் அவ்வப் பொருள் இயல்பான் இத்தன்மைய என்று சொல்லும் குறிப்பு மொழியாம் என்றவாறு.

(எ..டு) அந்நெறி ஈண்டு வந்து கிடந்தது, அம்மலை வந்து இதனொடு பொருந்திற்று எனவும், அவல் அவல் என்கின்றனநெல், மழை மழை என்கின்றன பைங்கூழ் எனவும் வரும். அவை வரவும் சொல்லுதலும் உணர்த்தாது இன்ன என்பதனைக் குறிப்பான் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

முலை வந்தன தலை வந்தன என்பன காட்டுவாரும் உளர். ஆண்டு வருதல் வளர்தற் பொருட்டாகலான் அவை ஈண்டைக்கு ஆகா என்க.

நிலம் வல்லென்றது நீர் தண்ணென்றது என்பன காட்டினாரால் உரையாசிரியர் எனின் : சொலற்பொருள வன்மையின் அவை காட்டல் அவர் கருத்து அன்று என்க.

அன்னவை எல்லாம் என்றதனான், இந்நெறி ஆண்டுச் சென்று கிடக்கும்; இக்குன்றம் அக்குன்றோடு ஒன்றும் என்னுந் தொடக்கத்தன கொள்க. *(26)*

**இசைநிலை அடுக்கு**

423. இசைப்படு பொருளே நான்குவரம்பு ஆகும்.

**பொருளொடு புணர்தல் என்னும் அடுக்கு**

424. விரைசொல் லடுக்கே மூன்று வரம்பு ஆகும்.

மேற்கூறப்பட்ட ஒரு சொல் அடுக்கினுள் இசை நிறையடுக்கு நான்காகிய வரம்பையுடைத்து; பொருளோடு புணர்தற்கண் விரைவுப்பொருள்பட அடுக்குவது மூன்றாகிய வரம்பையுடைத்து என்றவாறு.

வரம்பாகும் என்றது, அவை நான்கினும் மூன்றினும் இறந்து வாரா. குறைந்து வரப்பெறும் என்றவாறு.

(எ..டு) பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ எனவும் தீத்தீத்தீ எனவும் வரும்.

அவை மும்முறையாயினும் இருமுறையாயினும் அடுக்கி வருதல் இவற்றைக் குறைத்துச்சொல்லிக் கண்டுகொள்க.

இசைப்பொருளாவது செய்யுள் இன்பம். விரைவிக்குஞ் சொல்லை விரைசொல் என்றார். அசைநிலை இருமுறையல்லது அடுக்காமையின், அதற்கு எல்லை கூறார் ஆயினார். அஃது இருமுறை அடுக்கும் என்பது யாண்டுப் பெற்றாம் எனின், அடுக்கு என்பதனான் பெற்றாம், ஒருமுறை வருவது அடுக்கெனப் படாமையின் என்பது.

முன்னர்க் கூறப்படும் அசைநிலை அடுக்கிவரும் என்பது அதிகாரத்தான் கோடற்பொருட்டு இசைநிறையசைநிலை *(411)* என்னுஞ் சூத்திரத்தின் பின் வையாது இச்சூத்திரம் இரண்டனையும் ஈண்டு வைத்தார். *(27,28)*

**அசைநிலை அடுக்கு**

425. கண்டீர் என்றா கொண்டீர் என்றா
சென்றது என்றா போயிற்று என்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி அசைக்கும் கிளவி என்ப.

கண்டீர் எனவும், கொண்டீர் எனவும், சென்றது எனவும், போயிற்று எனவும் வரும் வினைச்சொல் நான்கும் வினாவொடு பொருந்தி நின்றவழி, அசைநிலையடுக்காம்; என்றவாறு.

கட்டுரையகத்து ஒருவன் ஒன்றுசொல்லியவழி அதற்கு உடம்படாதான் கண்டீரே கண்டீரே என்னும்; ஈண்டு வினைச்சொற் பொருண்மையும் வினாப் பொருண்மையும் இன்மையான், அசைநிலையாயினவாறு கண்டுகொள்க. வரையாது கூறினமையான், கண்டீர் எனச் சிறுபான்மை அடுக்காது வருதலும் கொள்க. ஏனையவும் ஏற்றவழி அடுக்கியும் அடுக்காதும் அசைநிலையாம். அவை இக்காலத்தரிய; வந்தவழிக் கண்டுகொள்க. *(29)*

**இதுவும் அது**

426. கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்னுறக் கிளந்த இயல்பா கும்மே.

கேட்டை எனவும், நின்றை எனவும், காத்தை எனவும், கண்டை எனவும் வரும் நான்கும் முன்னிலை அல்லாக்கால், மேற்சொல்லப்பட்ட அசைநிலையாம்; என்றவாறு.

இவையும் கட்டுரைக்கண் அடுக்கியும் சிறுபான்மை அடுக்காதும் ஏற்றவழி அசைநிலையாய் வருமாறு கொள்க.

நின்றை, காத்தை என்பன இக்காலத்துப் பயின்று வாரா.

வினாவிற் கடையாக அடுக்கி வந்தவழி முன்னிலையசை நிலையேயாம். இவை அடுக்கியும் அடுக்காதும் முன்னிலைச் சொல்லாதலும் உடைமையால், அந்நிலைமை நீக்குதற்கு, முன்னிலை அல்வழி என்றார்.

முன்னுறக்கிளந்த இயல்பாகும் என்றதனால், முன்னைய போச் சிறுபான்மை வினாவொடு வருதலும் கண்டுகொள்க.

முன்னிலையல்வழி என்பதற்கு முன்னையபோல வினாவொடு சிவணி நில்லாதவழி என்ற உரைத்தாரால் உரையாசிரியர் எனின் : அற்றுஅன்று; வினாவொடு சிவணல் இவற்றிற்கு ஒன்றான் எய்தாமையின் விலக்கவேண்டா; அதனான் அவர்க்குஅது கருத்து அன்று என்க.

இரண்டு சூத்திரத்தானும் கூறப்பட்டன வினைச் சொல்லாதலும், இடைச் சொல்லாதலும் உடைமையான், வினை இயலுள்ளும் இடை இயலுள்ளும் கூறாது ஈண்டுக் கூறினார்.

அஃதேல், ஆக, ஆகல் என்பது என்பனவற்றோடு

இவற்றிடை வேற்றுமை என்னை? அவையும் வினைச்சொல்லாதல் உடைமையான் எனின்: இசை நிறைத்தற்கும் பொருள் வேறுபாட்டிற்கும் அடுக்கிவரின் அல்லது அடுக்காது வருதலே வினைச்சொற்கு இயல்பாம். ஆகல், ஆக, என்பது என்பன அடுக்கி அல்லது நில்லாமையின், வினைச்சொல் இடைச்சொல்லாயின எனப்படா. கண்டீர் கொண்டீர் என்பன முதலாயின வினைச்சொற்கு உரிய ஈற்றவாய் அடுக்கியும் அடுக்காதும் வருதலான் வினைச்சொல் அசைநிலையாயின எனப்படும். இது தம்முள் வேற்றுமை என்க. அல்லதூஉம் வினாவொடு சிவணி நிற்றலாலும் வினைச்சொல் எனவேபடும் என்பது. *(30)*

**வினைமுற்றின் வகை**
**அதன் இயல்பு**

427. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றாச்
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ இடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் இவ்விரண் டாகும்
அவ்வாறு என்ப முற்றியல் மொழியே.

முற்றுச் சொல்லாவது, இறப்பு, நிகழ்வு, எதிர்வு என்னும் மூன்று காலமும், தன்மை முன்னிலை படர்க்கை என்னும் மூன்றிடத்தும், உயர்திணையும் அஃறிணையும் இரு திணைப் பொதுவுமாகிய பொருள்தோறும், வினையானும் குறிப்பானும் இவ்விரண்டாய்வரும் அவ்அறுவகைச் சொல்லாம் என்று சொல்லுவர் ஆசிரியர்; என்றவாறு.

*(எ..டு)* சென்றனன், கரியன் எனவும்; சென்றது, கரிது எனவும்; சென்றனை, கரியை எனவும் வரும்.

இடம் உணர்த்தலும் திணையும் பாலும் விளக்கலும் போல ஒரு சாரனவற்றிற்கே ஆகாது, எல்லாமுற்றுச் சொற்கும் காலம் முற்சிறத்தலின் சிறப்புடை மரபின் அம்முக் காலமும் என்றார்.

வினையினுங் குறிப்பினும் என்புழி ஓர் ஈற்றவாகிய வினையும் வினைக்குறிப்புமே கொள்ளப்படும்; இவ்விரண்டாதற்கு ஏற்பன அவையேயாகலான்.

மெய்ம்மையாவது பொருண்மை. உயர்திணையும் அஃறிணையுமல்லது இருதிணைப் பொது என்பதொரு பொருள் இல்லையாயினும், சென்றனை கரியை என்பன செலவிற்கு வினைமுதலும் பண்பியுமாகிய ஒரு நிமித்தம் பற்றி இருதிணைக்கண்ணும் சேறலின் அந்நிமித்தம் இருதிணைப் பொது எனப்பட்டது.

வினையினும் குறிப்பினும் இவ்இரண்டாய் வருதல் ஆவது தெரிநிலை வினையான் தெற்றெனத் தோன்றலும் குறிப்பு வினையான் தெற்றெனத் தோன்றாமையுமாம்.

முற்றி நிற்றல் முற்றுச்சொற்கு இலக்கணமாதல் முற்றியல் மொழியே என்பதனான் பெற்றாம். முற்றி நிற்றலாவது இது என்பது வினையியலுள் கூறினாம் (சொல்.235). திணையும் பாலும் இடமும் விளக்கல் எல்லா முற்றிற்கும் இன்மையான் இலக்கணம் அன்மை அறிக.

உயர்திணை அஃறிணை விரவு என்னும் பொருண்மேல் வினையும் வினைக்குறிப்புமாய் வருதல் பற்றி அவ்வாறு என்ப என்றார். காலமும் இடமும் முதலாயினவற்றோடு கூட்டிப் பகுப்பப் பலவாம்.

ஊரானொரு தேவகுலம் என்றாற்போல மெய்ம்மையானும் என்புழி ஆனென்பது தொறும் என்பதன் பொருட்டாய் நின்றது.

முன்னர்ப் பிரிநிலை வினையே பெயரே (சொல்.430) என்புழிப் பெயரெச்சமும் வினையெச்சமும் கூறுப ஆகலின் அவற்றோடு இயைய முற்றுச் சொல்லையும் ஈண்டுக் கூறினார். கூறவே முற்றுச்சொல்லும் பெயரெச்சமும் வினையெச்சமும் என வினைச்சொல் மூவகைத்தாதல் இனிது உணரப்படும் என்பது.

உரையாசிரியர் வினையியலுள் ஓதப்பட்டன சில வினைச்சொற்கு முற்றுச்சொல் என்று குறியிடுதன் நுதலிற்று இச்சூத்திரம் என்றாராலெனின் : குறியீடு கருத்தாயின் அவ்வாறென்ப முற்றியல் மொழியே என்னாது அவ்ஆறும் முற்றியல் மொழி என்ப எனல் வேண்டுமாகலான் அது போலியுரை என்க. முற்றியல் மொழிஎன்பஎன மொழிமாற்றவே குறியீடாம் எனின் : குறியீடு ஆட்சிப் பொருட்டாகலின் அக்குறியான் அதனை ஆளாமையான் மொழிமாற்றி இடர்ப்படுவது என்னையோ என்பது. அல்லதூஉம் முற்றியன் மொழி எனக் குறியிட்டாராயின், இவை பெயரெஞ்சு கிளவி எனவும், இவை வினையெஞ்சு கிளவி எனவும் குறியிடல் வேண்டும், அவ்வாறு குறியிடாமையானும் அது கருத்தன்றாம். அதனான் வினைச் சொல்லுள் இருவகை எச்சம் ஒழித்து ஒழிந்த சொல் முற்றி நிங்கும் என்றும், அவை இளைத்துப் பாகுபடும் என்றும் உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொளக். *(31)*

**அதற்கு வேறுவிதி**

428. எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்.

மூவிடத்தான் பொருள்தோறும் இவ்விரண்டாமென மேற்சொல்லப்பட்ட கட்டளையுள்பட்டு அடங்காது பிறாண்டு வரும் வினையும் முற்றியல்பாய் நிலையும் என்றவாறு.

யார், எவன், இல்லை, வேறு என்பன இடம் உணர்த்தாமையின், மேற்கூறிய கட்டளையின் அடங்காது பிறாண்டு வந்தனவாம். சிறப்பு ஈற்றான் வருந்தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் பொருள்தோறும் வினையும் வினைக் குறிப்புமாய் வருதற்கு எய்தாமையின் மெய்ம்மையானு இவ்இரண்டாகும் (சொல்.427) என்னும் கட்டளையுப்படாது பிறாண்டு வந்தனவாம். குறிப்பு வினைக்கு ஈறாகாது தெரிநிலை வினைக்கு ஈறாகவனவும் தெரிநிலை வினைக்கு ஈறாகாது குறிப்பு வினைக்கு ஈறு ஆவனவும் சிறப்பு ஈற்றவாம். அவை வினை இயலுள் கூறிப்போந்தாம். யார் எவன் என்பன பாலும் இல்லை வேறு என்பன திணையும் பாலும் உணர்த்தாவாயினும் மேலைச்

சூத்திரத்தான் முற்றுச் சொற்குப் பாலுந்திணையும் உணர்த்தல் ஒருதலையாக எய்தாமையின் இடம் உணர்த்தாமையே பற்றி ஈண்டுக் காட்டப்பட்டன. திணையும் பாலும் உணர்த்தல் ஒருதலையாயின் தன்மை முன்னிலை படர்க்கை என்னும். அம்மூவிடத்தான் (சொல்.427) என ஆசிரியர் முன்னிலையிடம் ஆண்டுவையார் என்பது.

முற்றுச்சொல்லே அன்றிப் பெயரெச்சமும் வினையெச்சமும் காலமும் இடமும் உணர்த்தும் என்பது இச்சூத்திரத்திற்குப் பொருளாக உரைத்தாரால் உரையாசிரியர் எனின் : அவை இடவேறுபாடு உணர்த்தாது மூவிடத்திற்கும் பொதுவாய் நிற்றலின், அது போலியுரை என்க.

இனி ஓர் உரை : மேலைச் சூத்திரத்தான் கூறப்பட்ட பொருண் மேல் வரும் எல்லா வினையும் முற்றுச்சொல்லாய் நிற்கும் என்றவாறு. ஈண்டு வினை என்றது வினைச் சொல்லையாக்கும் முதனிலையை. எல்லா வினையும் முற்றுச் சொல்லாமெனவே எச்சமாகல் ஒருதலையன்று என்பதாம். ஆகவே, வினைச் சொல்லாதற்குச் சிறந்தன முற்றுச்சொல்லே என்பதாம். எல்லா வினையும் முற்றுச்சொல்லாகலும், கச்சினன், கழலினன், நிலத்தன், புறத்தன் என்னுந் தொடக்கத்து வினைக்குறிப்பின் முதனிலை எச்சமாய் நில்லாமையும், வழக்கு நோக்கிக் கண்டு கொள்க. பிறவும் அன்ன.

இவை இரண்டும் இச்சூத்திரத்திற்குப் பொருளாகக் கொள்க. (32)

**அதற்கு முடிபு**

429. அவைதாம்,
தத்தம் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத்தானும் பெயர்முடி பினவே.

மேற்சொல்லப்பட்ட முற்றுச்சொல்தாம், தத்தங் கிளவி பல அடுக்கிவரினும், தம்முள் தொடராது எவ்வாற்றானும் பெயரொடு முடியும் என்றவாறு.

(எ..டு) உண்டான் தின்றான் ஆடினான் பாடினான் சாத்தன்; நல்லன் அறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன் என வரும்.

அடுக்கிவரினும் என்ற உம்மையான், வந்தான் வழுதி; கரியன்மால் என அடுக்காது பெயரொடு முடிதலே பெரும்பான்மை என்பதாம்.

தம்பாற் சொல்லல்லாது பிறபாற் சொல்லொடு விராய் அடுக்கின்மையின், தத்தங்கிளவி என்றார்.

என்மனார் புலவர், முப்பஃதென்ப என வெளிப்பட்டும் வெளிப்படாதும் பெயர்முடிபாம் என்றற்கு எத்திறத்தானும் என்றார். எவ்வயிற் பெயரும் வெளிப்படத் தோன்றி (சொல்.68) என்றதனான், வெளிப்படாது நிற்றலும் பெறப்பட்டமையான் ஈண்டுக் கூறல் வேண்டா எனின் : ஆண்டு முடிக்கப்படும் பெயர் வெளிப்படாது நிற்றலும் உடைத்து என்றார்; இது முடிக்கும் பெயராகலின் ஆண்டு அடங்காது என்பது. முடிக்கப்படுவதனோடு முடிப்பதனிடை வேற்றுமை, வேற்றுமை ஓத்தினுள் கூறினாம். இன்னும் எத்திறத்தானும் என்றதனான், உண்டான் சாத்தன்; சாத்தன் உண்டான் என முன்னும் பின்னும் பெயர் கிடக்கலும் கொள்க.

அஃதேல், முற்றி நிற்றலாவது மற்றுச்சொல் நோக்காமையாகலின் முற்றிற்றேல் அது பெயர் அவாய் நில்லாது; பெயர் அவாவிற்றேல் முற்றுச் சொல் எனப்படாது; அதனான் முற்றுச் சொல் பெயர் கொள்ளும் என்றல் மாறு கொள்ளக் கூறலாமெனின்: அற்றுஅன்று; உண்டான் சாத்தன் என்பது எத்தையென்னும் அவாய்நிலைக்கண் சோற்றை என்பதனோடு இயைந்தாற்போல, உண்டான் என்பது யார் என்னும் அவாய்நிலைக்கண் சாத்தன் என்பதனோடு இயைவதல்லது, அவாய் நிலை இல்வழி உண்டான் எனத்தானே. தொடராய் நிற்றல் வினை இயலுள்ளுங் கூறினாம் என்பது. அஃதேல், சாத்தன் என்னும் பெயர் சோற்றை என்பது போல் அவாய்நிற்றலை உள்வழி வருவதாயின், எத்திறத்தானும் பெயர் முடிபினவே என

விதந்தோதல் வேண்டாவாம். பிறவெனின் : நன்று சொன்னாய்; அவாய் நிற்றலை உள்வழி வருவது அவ்இரண்டற்கும் ஒக்குமேனும், உண்டான் என்ற வழி உண்டல் தொழிலான் செயப்படுபொருள் உய்த்துணர்ந்து பின் அதன் வேறுபாடு அறியலுறின் சோற்றை என்பது வந்து இயைவதல்லது, சொல் கேட்ட துணையான் எத்தை எனக் கேட்பான் செயப்படுபொருள் வேறுபாடு அறிதற்கு அவாவாமையின், சோற்றை என்பது வருதல் ஒருதலையன்று. இனி உண்டான் என்னும் சொல்லான் பொது வகையான் வினைமுதல் உணர்ந்து கேட்பான். அதன் வேறுபாடு அறியலுறுதலின் சாத்தன் என்பது வருதல் ஒருதலையாம். அதனான் இச்சிறப்பு நோக்கி விதந்து ஓதினார் என்பது. *(33)*

**எச்சச் சொற்களின் வகை அவற்றின் பாகுபாடு**

430. பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆயீ ரைந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி.

முற்றுச்சொல் உணர்த்தி எச்சம் ஆமாறு உணர்த்துகின்றார். எஞ்சுபொருட் கிளவி கொண்டல்லது அமையாமையின் எச்சமாயினவும், ஒரு தொடர்க்கு ஒழிபாய் எச்சம் ஆயினவும் என அவை இருவகைப்படும்.

பிரிநிலை முதலாகச் சொல்லப்பட்ட பத்தும் எஞ்சு பொருட் கிளவியாம்; என்றவாறு.

அவற்றுள் கடைநிலை மூன்றும் ஒருதொடர்க்கு ஒழிபாய் எச்சமாயின. அல்லன எஞ்சுபொருட்கிளவியான் முடிவன. எஞ்சுபொருட் கிளவி எனினும் எச்சம் எனினும் ஒக்கும்.

பெயரெச்சம் வினையெச்சம் பெயர் வினையான் முடிதலின், ஆகுபெயரான் பெயர் வினை என்றார்.

ஆயீரைந்தும் எஞ்சுபொருட்கிளவி என்றாரேனும்,

எஞ்சுபொருட் கிளவி பத்துவகைப்படும் என்பது கருத்தாகக் கொள்க.

எச்சம் ஆவன ஒரு சார் பெயரும் வினையும் இடைச் சொல்லுமாதலின், பெயரியல் முதலாயினவற்றுள் பத்தும் ஒருங்கு உணர்த்துதற்கு ஏலாமை அறிக.

முடிவும் பொருளும் ஒத்தலின், என்று என்பதனை எனவின்கண் ஏற்றினார். *(34)*

**பிரிநிலை யெச்சம்**

431. அவற்றுள்,
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.

மேற்சொல்லப்பட்ட எச்சங்களுள், பிரிநிலை எச்சம் ஏகாரப் பிரிநிலையும் ஓகாரப்பிரிநிலையும் என இருவகைப்படும். அவ்இருவகைப் பிரிநிலை எச்சமும் பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்துஞ் சொல்லோடு முடியும்; என்றவாறு.

(எ..டு) தானே கொண்டான், தானோ கொண்டான் என்னும் பிரிநிலையெச்சம் பிறர் கொண்டிலர் எனப் பிரிக்கப்பட்ட பொருளை உணர்த்துஞ் சொல்லான் முடிந்தவாறு கண்டுகொள்க.

அஃதேல், தான் எனப்பட்டான் அன்றே ஆண்டுப் பிரிக்கப்பட்டான்; பிறர் கொண்டிலர் என்பது அவனை உணர்த்தும் சொல்லன்மையான், அவை பிரிநிலை கொண்டு முடிந்திலவாலெனின் : அற்றுஅன்று: தான் எனப்பட்டான் பிறரிற் பிரிக்கப்பட்டவழிப் பிறரும் அவனிற் பிரிக்கப்பட்டமையான், அவை பிரிநிலை கொண்டனவேயாம் என்க.

பிரிநிலையோடு முடிதலாவது அவனே கொண்டான் என்றவழி அவனே என்பது கொண்டான் எனப் பிரிக்கப்பட்ட பொருளை வினை எனக்கொண்டு முடிதல் என்றாரால் உரையாசிரியர் எனின் : அற்று அன்று; அவனே கொண்டான்

என்புழி அவன் என்னும் எழுவாய்வேற்றுமை கொண்டான் என்னும் பயனிலைக் கொண்டது; ஏகாரம் பிரிவு உணர்த்திற்று. ஆண்டு எச்சமும் எச்சத்தை முடிக்குஞ் சொல்லும் இன்மையான் அவர்க்கது கருத்தன்று என்க. *(35)*

**வினை செய்சம்**

432. வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபா கும்மே;
ஆவயிற் குறிப்பே ஆக்கமொடு வருமே.

வினையெச்சத்திற்குத் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் முடிபாம்; ஆண்டைக் குறிப்பு வினை ஆக்க வினையொடு வரும்; என்றவாறு.

(எ..டு) உழுது வந்தான்; மருந்து உண்டு நல்லனாயினான் எனவரும்.

உழுது வருதல்; உழுது வந்தவன் என வினையெச்சம் வினைப்பெயரோடு முடிதல் நினையத்தோன்றிய என்றதனால் கொள்க.

வினையெச்சத்திற்கு முடிபு வினைஇயலுள் கூறப்பட்டமையான் இச்சூத்திரம் வேண்டா எனின் : இதற்கு விடை ஆண்டே கூறினாம். வேங்கையுங் காந்தளும் நாறி ஆம்பன் மலரினுந் தான் தண்ணியளே (குறுந்.84), வில்லக விரலிற் பொருந்தி அவர் நல்லகஞ் சேரின் ஒருமருங்கினமே (குறுந்.370) எனவும்; கற்றுவல்லன், பெற்றுடையன் எனவும் வினைக்குறிப்பு ஆக்கம் இன்றி வந்தனவாலெனின்: ஆக்கமொடு வரும் என்றது பெரும்பான்மை குறித்ததாகலிற் சிறுபான்மை ஆக்கமின்றியும் வரும் என்பது. *(36)*

**பெயரெச்சம்**

433. பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

பெயரெச்சம் பெயரொடு முடியும்; என்றவாறு.

(எ..டு) உண்ணுஞ் சாத்தன், உண்டசாத்தன் என வரும்.

அவ்வறு பொருட்கும் ஓரன்ன உரிமைய (சொல்.234) என்றதனான் பெயரெச்சம் பொருள்படு முறைமை கூறினார். முடிபு எச்சவியலுள் பெறப்படுமென வினையியலுள் கூறியவாறு கடைப்பிடிக்க. (37)

**ஒழியிசையெச்சம்**

434. ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின.

மன்னை ஒழியிசையும், தில்லை ஒழியிசையும், ஓகார ஒழியிசையும் ஆகிய ஒழியிசை எச்சம் மூன்றும் ஒழியிசையான் முடியும்; என்றவாறு.

(எ..டு) கூரியதோர் வாண்மன், வருகதில் லம்மவெஞ் சேரி சேர (அகம்.276) கொளலோ கொண்டான் என்னும் ஒழியிசை எச்சம் முறையானே திட்பமின்று, வந்தால் இன்னது செய்வல், கொண்டு உய்யப்போமாறு அறிந்திலன் என்னும் ஒழியிசையான் முடிந்தவாறு. (38)

**எதிர்மறை எச்சம்**

435. எதிர்மறை யெச்சம் எதிர்மறை முடிபின.

மாறுகொள் எச்சம் எனப்பட்ட ஏகார எதிர்மறையும் (எழுத்.275), ஓகார எதிர்மறையும் (சொல்.256) உம்மை எதிர்மறையும் (சொல்.255) ஆகிய எதிர்மறை எச்சம் மூன்றும் எதிர்மறையான் முடியும், என்றவாறு.

(எ..டு) யானே கொள்வேன், யானோ கள்வேன், வரலும் உரியன் என்னும் எதிர்மறை எச்சம் முறையானே கொள்ளேன், கள்ளேன், வாராமையும் உரியன் என்னும் எதிர்மறையான் முடிந்தவாறு கண்டு கொள்க. (39)

**உம்மை எச்சம்**

436. உம்மை எச்சம் இருவீற்றானும்
தன்வினை ஒன்றிய முடிபா கும்மே.

எஞ்சுபொருட்கிளவியும், அவ்எஞ்சு பொருட் கிளவியான் முடிவதுமாகிய உம்மை எச்ச வேறுபாடு இரண்டன்கண்ணும், தன்வினை உம்மையோடு தொடர்ந்த சொற்குப் பொருந்திய முடிபாம் என்றவாறு.

என்றது, எஞ்சுபொருட் கிளவி செஞ்சொலாயின் (சொல்.284) என்றதனான் உம்மை உடைத்தாயும், உம்மை இன்றியும் வரும் எஞ்சு பொருட்கிளவி உம்மை எச்சத்திற்கு முடிபாதல் எய்திற்று. என்னை? எல்லா எச்சத்திற்கும் எஞ்சுபொருட் கிளவியே முடிபாகலின். இனி, உம்மையொடு தொடர்ந்த சொல் இரண்டற்கும் வினை ஒன்றே ஆகல் வேண்டும் என எய்தாதது எய்துவித்தவாறு.

ஒன்றற்கு ஆயதே ஏனையதற்கும் ஆகலிற் தன்வினை என்றார்.

(எ..டு) சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என இரண்டும் ஒருவினை கொண்டவாறு கண்டு கொள்க. சாத்தனும் வந்தான் கொற்றனும் உண்டான் என வினை வேறுபட்டவழி உம்மை எச்சமும் எஞ்சுபொருட்கிளவியும் இயயாமை கண்டுகொள்க.

அஃதேல்,
பைம்புதல் வேங்கையும் ஒள்ளிணர் விரிந்தன;
நெடுவெண் திங்களும் ஊர் கொண்டன்றே (அகம்.2)
எனவினை வேறுபட்டுழியும் தம்முள் இயைந்தனவாலெனின், இணர் விரிதலும் ஊர்கோடலும் இரண்டும் மணஞ்செய் காலம் இது என்று உணர்த்தலாகிய ஒருபொருள் குறித்து நின்றமையான், அவை ஒருவினைபாற்படும் என்பது. பிறவும் இவ்வாறு வருவன அறிந்து ஒரு வினைபாற்படுக்க.

எஞ்சு பொருட்கிளவி செஞ்சொல்லாய வழித் தன்வினை கோடல் ஈண்டு அடங்காமையான், அது தன்னினம் முடித்தல் என்பதனான் பெறப்படும்.

உம்மை எச்சம் இரு வீற்றானும் என்றதனான், உம்மை எச்சத்திற்கு முடிபாகிய எஞ்சுபொருட் கிளவி உம்மையொடு வரின் எச்சமாம் என்பதாம். அஃது எச்சமாங்கால், முன்னின்றது, எஞ்சு பொருட் கிளவியாம் என்பது.

எதிர்மறையும்மை எதிர்மறை எச்சமாய் அடங்குதலின், ஈண்டு உம்மையெச்சம் என்றது எச்ச உம்மையேயாம். *(40)*

**அதற்கு மேலும் ஒரு முடிபு**

437. தன்மேல் செஞ்சொல் வரூஉங் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

உம்மை எச்சத்தின்முன் எஞ்சுபொருட்கிளவி உம்மையில் சொல்லாய் வருங்கால் நிகழ்காலத்தோடு எதிர்காலமும் இறந்த காலத்தோடு எதிர்காலமும் மயங்குதல் வரையார்; என்றவாறு.

முறை நிலையான என்றதனான், கூறிய முறையானல்லது எதிர்காலம் முன்னிற்ப ஏனைக்காலம் பின் வந்து மயங்குதல் இல்லை என்பதாம்.

(எ..டு) கூழ் உண்ணாநின்றான் சோறும் உண்பான் எனவும், கூழ் உண்டான் சோறும் உண்பான் எனவும் அவை கூறிய முறையான் மயங்கியவாறு கண்டுகொள்க.

இவற்றோடு இது மயங்குதல் வரையார் எனவே, இறந்தகாலத்தோடு நிகழ்காலமும் நிகழ்காலத்தோடு இறந்தகாலமும் வந்து மயங்குதல் வரையப்படும் என்றவாறாயிற்று.

தன்மேற் செஞ்சொல் வருஉங்காலை என்றதனான், உம்மையடுத்த சொல் வருங்கால், வேறுபாடின்றி இரண்டு சொல்லும் ஒரு காலத்தான் வரும் என்பதாம்.

தன்வினை, காலம் வேறுபடுதலும் படாமையும் உடைமையான், இன்னுழி இன்னவாற்றான் அல்லது காலம் வேறுபடாது என வரையறுத்தவாறு. *(41)*

**என என்னும் எச்சம்**

438. எனஎன் எச்சம் வினையொடு முடிமே.

என என் என்னும் எச்சம் வினைகொண்டு முடியும் என்றவாறு.

(எ..டு) கொள்ளெனக் கொடுத்தான்; துண்ணெனத் துடித்தது; ஒல்லென ஒலித்தது; காரெனக் கறுத்தது எனவும், நன்றென்று கொண்டான்; தீதென்று இகழ்ந்தான் எனவும் வரும். *(42)*

**ஏனை மூன்று எச்சங்கள்**

439. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி யிலஎன மொழிப.

சொல்லப்பட்ட ஒழிந்து நின்ற சொல்லுங் குறிப்பும் இசையுமாகிய எச்சம் மூன்றும் மேல் வந்து தம்மை முடிக்கும் எஞ்சுபொருட் கிளவியையுடைய வல்லஎன்று சொல்லுவர் ஆசிரியர் என்றவாறு.

என்றது, அவ்வத்தொடர்க்குத் தாம் எச்சமாய் வந்து அவற்றது அவாய் நிலையை நீக்கலின், பிரிநிலை எச்சம் முதலாயின போலத் தம்மை முடிக்கும் பிறசொல்லைத்தாம் அவாய் நில்லா என்றவாறு. அவை பிறசொல் அவாவாது தாம் எச்சமாய் வருமாறு முன்னர்ச் சூத்திரத்தான் பெறப்படும். *(43)*

**குறிப்பெச்சமும் இசை எச்சமும்**

440. அவைதாம்,
தத்தங் குறிப்பின் எச்சஞ் செப்பும்.

அவ்எச்சம் மூன்றும் சொல்லுவார் குறிப்பான் எஞ்சி நின்ற பொருளை உணர்த்தும்; என்றவாறு.

(எ..டு) பசப்பித்துச் சென்றார் உடையையோ அன்ன
நிறத்தையோ பீர மலர்.
இளைதாக முள்மரங் கொல்க களையுநர்
கைகொல்லும் காழ்த்த விடத்து. (குறள்.879)

என்புழி முறையானே பசப்பித்துச் சென்றாரை யாம் உடையேம் எனவும், தீயாரைக் காலத்தான் களைக எனவும் வந்த தொடர்மொழி எச்சமாய் நின்ற குறிப்புப் பொருளை வெளிப்படுத்தலான் குறிப்பெச்சம் ஆயின.

அகர முதல எழுத்தெல்லாம் ஆதி
பகவன் முதற்றே உலகு. (குறள்.1)

அளித்து அஞ்சல் என்றவர் நீப்பின் றெளித்தசொல்
தேறியார்க் குண்டோதவறு. (குறள்.1154) என்றவழி முறையானே அதுபோல எனவும், நீத்தார்க்கே தவறு எனவும் வருவன எஞ்சிய இசைப்பொருள் உணர்த்தலான் இசையெச்சம் ஆயின. சொல் எச்சத்திற்கு உதாரணம் முன்னர்க் காட்டுதும். சொல்லளவு அல்லது எஞ்சுதல் இன்றே (சொல்.441) என்பதனான் அஃதொரு சொல்லாதல் பெறப்படுதலின், இது தொடர்ச் சொல்லாம் என்பது. சொல் என்னுஞ் சொல் எஞ்சுவது சொல்லெச்சம் என்பார் இவ்இரு வகையும் இசையெச்சம் என அடக்குப.

பசப்பித்துச் சென்றாரை யாமுடையேம் என்னுந் தொடக்கத்தன குறிப்பின் தோன்றலாய் அடங்குதலின், விணணென விசைத்து என்பது குறிப்பெச்சம் என்றும், அதுபோல என்னுந் தொடக்கத்தன விகார வகையான் தொக்கு நின்றமையான், ஒல்லென ஒலித்தது என்பது இசையெச்சம் என்றும், இவை தத்தஞ் சொல்லான் முடிதலல்லது பிற சொல்லான்

முடியாமையின் இவற்றை மேல்வந்து முடிக்கும் எஞ்சு பொருட்கிளவியில என்றார் என்றும், உரைத்தாரால் உரையாசிரியர் எனின் : அற்றுஅன்று;தெரிபுவேறு நிலையலுங் குறிப்பின் தோன்றலும் (சொல்.157) எனச் சொற்பொருட் பாகுபாடு உணர்த்தினார். குறிப்பின் தோன்றும் பொருளை வெளிப்படுத்தும் எச்சமாதல் உடைமையான் எச்சம் என்றார். அதனான் ஆண்டு அடங்காது. இனி விசைத்தது ஒலித்தது என்பன தஞ்சொல் எனப்படா; படினும், விணணென நீங்கிற்று, துண்ணெனத் துளங்கினான் எனவும், ஒல்லென வீழ்ந்தது எனவும் பிற சொல்லானும் முடிதலின் எஞ்சு பொருட் கிளவி இல என்றல் பொருந்தாதாம். என்னை? தஞ்சொல் அல்லாதன எஞ்சு பொருள் கிளவியாமாகலின்.

இனி, அதுபோல என்பது தொகுக்கும் வழித் தொகுத்தல் என்பதனான் தொக்கதாயின் அதனைச் சுட்டிக் கூறா உவமை என அணியியலுள் ஆசிரியர் ஓர் உவமை வேறுபாடாகக் கூறல் பொருந்தாது.

தொகுக்கும் வழித் தொகுத்தல் ஒரு மொழிக் கண்ணதாகலிற் பலசொற் தொகும் என்றலும் பொருத்தம் இன்று. அதனான் அவர்க்கு அது கருத்து அன்று. விண்ணென விசைத்தது; ஒல்லென ஒலித்தது என்னுந் தொடக்கத்தனவற்றை எனவென் எச்சம் என அடக்காது இசையும் குறிப்பும்பற்றி வருவனவற்றை வேறு ஓதின், வெள்ளென வெளுத்தது எனப் பண்புபற்றி வருவதனையும் வேறு ஓதல் வேண்டும்; அதனை வேறு ஓதாமையானும் எனவென் எச்சம் என அடக்குதலே கருத்தாகக் கொள்க. குறிப்புப் பொருளைப் பசப்பித்துச் சென்றார் உடையையோ, இளைதாக முள்மரங்கொல்க என்பன முதலாகிய தொடர்மொழியே உணர்த்லான் எஞ்சு பொருளெனப் படாவாயினும், அப்பொருள் பிறசொல்லான் அல்லது வெளிப் படாமையின், அச்சொல் எச்சம் ஆயிற்று. குறிப்புப் பொருளேயன்றி எஞ்சுபொருளுஞ் சொல்லுவான் குறிப்பொடு படுத்துணர்ந்து தமக்குஏற்ற சொல்லான் உணர்த்தப்படுதலின் குறிப்பான் எச்சம் செப்பல் மூன்றற்கும் ஒத்தவாறு அறிக. (44)

**சொல்லெச்சம்**

441. சொல்என் எச்சம் முன்னும் பின்னும்
சொல்அளவு அல்லது எஞ்சுதல் இன்றே.

சொல்லெச்சம் ஒரு சொற்கு முன்னும் பின்னும் சொல்மாத்திரம் எச்சுவதல்லது, தொடராய் எஞ்சுதலின்று; என்றவாறு.

உயர்திணை என்மனார் (சொல்.1) என்புழி ஆசிரியர் என்னுஞ் சொல் முன்னும், மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே (குறுந்.71) என்புழி எமக்கு என்னுஞ் சொல் பின்னும் எஞ்சி நின்றவாறு கண்டுகொள்க.

ஒருசாரார் இவற்றை இசைஎச்சம் என்று சொல்லளவல்லது எஞ்சுதலின்றே என்பதற்குச் சொல் என்னுஞ் சொல்லளவல்லது பிறிது சொல் எஞ்சுதல் இன்று என்று பொருள் உரைத்து, பசித்தேன் பழஞ்சோறு தாஎன்று நின்றாள் என்புழித் தா எனச்சொல்லி எனச் சொல்லென்னும் சொல் எஞ்சி நின்றது என்று, இதனை உதாரணமாகக் காட்டுப. அவர் முன்னும் பின்னும் என்பதற்குச் சொல்லென்னும் சொல்கொணர்ந்து கூட்டுவதன் முன்னும் பின்னும் என இடர்ப்பட்டுப் பொருள் உரைப்ப. (45)

**சில மரபு வகை**

**இடக்கர்ச்சொல்**

442. அவைஅல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

அவைக்கண் உரைக்கப்படாத சொல்லை அவ்வாய்பாடு மறைத்துப் பிற வாய்பாட்டான் சொல்லுக; (எ-று)

அவைக்கண் வழங்கப்படுஞ் சொல்லை அவை என்றார்.

(எ..டு) ஆன்முன் வருஉ மீகார பகரம் (தொ.எ) எனவும் கண்கழீஇ வருதும்; கால்மேல் நீர்பெய்து வருதும் எனவும், கருமுக மந்தி, செம்பின் ஏற்றை; புலி நின்று இறந்த நீரல் ஈரத்து எனவும், இடக்கர் வாய்பாடு மறைத்துப்பிறவாய் பாட்டான் கூறியவாறு.

ஈகார பகரம் என்பது போலக் கண் கழுவுதல் முதலாயின அவையல் கிளவியைக் கிடந்தவாறு கூறாது பிறிதோராற்றாற் கிளந்தனவல்ல எனினும் அவையல் கிளவிப் பொருண்மையை உணர்த்தலின், ஒற்றுமை நயத்தான் அவையல் கிளவியைப் பிறிதோராற்றான் கூறியவாய்பாடாகக் கொள்ளப்படும்; இவை தகுதியும் வழக்கும் (சொல்.17) என்புழித் தகுதியாய் அடங்கும் எனின் : செத்தாரைத் துஞ்சினார் என்றல் முதலாயினவன்றே தகுதியாவன; ஆண்டுச் செத்தார் என்பதும் இலக்கணம் ஆகலின் அதனானும் வழங்கப்படும்; தகவு நோக்கிச் சொல்லுங்கால் துஞ்சினார் என்றுஞ் சொல்லப்படும்; ஈண்டை அவையல் கிளவியான் கிளத்தல் வழுவாகலின் மறைந்த வாய்பாட்டானே கிளக்கப்படும்; அதனால் ஆண்டு அடங்கா என்பது.

இது வழுஅமைதியன்மையான் கிளவியாக்கத்துக் கூறாராயினார். (46)

**இதுவும் அது**

443. மறைக்குங் காலை மரீஇயது ஒராஅல்.

அவையல் கிளவியை மறைத்துச் சொல்லுங்கால், மேல் தொட்டு வழங்கப்பட்டு வருவன மறைக்கப்படா என்றவாறு.

(எ..டு) ஆப்பி, ஆனை இலண்டம் என மரீஇ வந்தன மறைக்கப்படாது வந்தவாறு.

பகல்கான்று எழுதரும் பல்கதிர்ப் பரிதி (பெரும்பாண்.2) என்புழிக் கான்று என்பது தன் பொருண்மேல் நில்லாது அணி குறித்துப் பிறிதொரு பொருண்மேல் நிற்றலின் மரீஇய சொல்லாய் மறைக்கப் படாமையும் அதன் பொருண்மேல் நின்றவழி மறைக்கப்படுதலும் அறிக. (47)

**ஈ தா கொடு என்னுஞ் சொற்கள்**

444. ஈதா கொடுஎனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய.

ஈ, தா, கொடு எனச் சொல்லப்படும் மூன்றும் ஒருவன் ஒன்றை இரத்தற்கண் வருஞ்சொல்லாம்; என்றவாறு.

அவை பிறபொருண்மேல் வருதலும் உடைமையான், இரவின் கிளவி ஆகிடன் உடைய என்றார். வழங்கல், உதவல், வீசல் முதலாயின பிறவும் உளவாக இவற்றையே விதந்தோதியது என்னை எனின்? அவை கொடைப் பொருளவாய் வருவதல்லது இவைபோல இரத்தற்குறிப்பு வெளிப்படுக்கும் இரவின் கிளவியாய்ப் பயின்று வாராமையானும், இன்னார்க்கு இன்ன சொல் உரித்தென்று வரையறுத்தலும் வழுவமைத்தலுமாகிய ஆராய்ச்சி ஆண்டு இன்மையானும் இவற்றையே விதந்து ஓதினார் என்பது.

அஃதேல், ஈயென்கிளவி (சொல்.445) என்னுஞ் சூத்திரம் முதலாய நான்கும் அமையும்; இச் சூத்திரம் வேண்டாவெனின் : இவை இரவின் கிளவியாதலும் மூன்று என்னும் வரையறையும் அவற்றான் பெறப்படாமையின் வேண்டும் என்பது.

முன்னிலைச் சொல்லாய் வருவழியல்லது பிறாண்டு இன்னசொல் இன்னார்க்கு உரித்து என்னும் வரையறை இல்லென்பது உணர்த்துதற்கு ஈதாகொடு என முன்னிலை வாய்பாடு பற்றி ஓதினார். (48)

**ஈ என்னுஞ்சொல்**

445. அவற்றுள்,
ஈயென் கிளவி இழிந்தோன் கூற்றே.

**தா என்னுஞ்சொல்**

446. தாவென் கிளவி ஒப்போன் கூற்றே.

**கொடு என்னுஞ்சொல்**

447. கொடுவென் கிளவி உயர்ந்தோன் கூற்றே.

ஈயென் கிளவி இரக்கப்படுவோனின் இழிந்த இரவலன்

கூற்றாம். தாவென்கிளவி அவனோடு ஒப்பான் கூற்றாம். கொடுவென்கிளவி அவனின் உயர்ந்தவன் கூற்றாம்; என்றவாறு.

(எ..டு) சோறு ஈ; ஆடை தா; சாந்து கொடு என மூன்று சொல்லும் முறையானே மூவர்க்கும் உரியவாய் வந்தவாறு கண்டுகொள்க.
*(445, 446, 447)*

**அதற்கு மேலும் ஒரு முடிபு**

448. கொடுவென் கிளவி படர்க்கை ஆயினும்
தன்னைப் பிறன்போல் கூறுங் குறிப்பின்
தன்னிடத்து இயலும் என்மனார் புலவர்.

கொடு என்னுஞ்சொல், முதனிலை வகையால் படர்க்கை யாயினும், தன்னைப்பிறன் ஒருவன் போலக் கூறுங் கருத்து வகையான், தன்னிடத்துச் செல்லும், என்றவாறு.

(எ..டு) மேற்காட்டப்பட்டது. தன்மைக்கும் முன்னிலைக்கும் உரிய தா என்பதனானாக. பொதுவாகிய ஈ என்பதனானாகவன்றே சொல்லற்பாலது; உயர்ந்தான் அங்ஙனந்தான் ஏற்பானாகச் சொல்லாது, கொடு எனப் படர்க்கை வாய்பாட்டான் சொல்லும்; ஆண்டுத் தன்னையே பிறன்போலக் குறித்தானாகலின் தன்னிடத்தேயாம் என இடவழு அமைத்தவாறு.

உயர்ந்தான் தமன் ஒருவனைக் காட்டி இவற்குக்கொடு என்னும் என்றாரால் உரையாசிரியர் எனின் : ஆண்டுப் படர்க்கைச்சொல் படர்க்கைச் சொல்லோடு இயைதலான் வழுவின்மையின் அமைக்கல் வேண்டாவாம். அதனால் அது போலியுரை என்க. (52)

**பெயர்கள் முதலிய சொற்கள்**

449. பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்துங் கடப்பாடு இலவே.

பெயர் நிலைக் கிளவியின் ஆஅ குநவும் என்றது. ஒரு திணைப் பெயர் ஒரு திணைக்காய் வருவனவும்; என்றவாறு.

அவையாவன : ஒரெருத்தை நம்பி என்று வழங்குதலும், ஒரு கிளியை நங்கை என்று வழங்குதலுமாம். பிறவும் அன்ன.

திசைநிலைக் கிளவியின் ஆகுநவும் என்றது. திசைச் சொல்லிடத்து வாய்பாடு திரிந்து வருவனவும் என்றவாறு. அவை புலியான், பூசையான் என்னும் தொடக்கத்தன. தொன்னெறி மொழிவயின் ஆகுநவும் என்றது - முதுசொல்லாகிய செய்யுள் வேறுபாட்டின்கண் இயைபில்லன இயைந்தனவாய் வருவனவும் என்றவாறு. அவை, ஆற்றில் செத்த எருமை ஈர்த்தல் ஊர்க்குயவர்க்குக் கடன் என்பது முதலாயின, மெய்ந்நிலை மயக்கி னாகுநவும் என்றது - பொருண் மயக்கமாகிய பிசிச்செய்யுட்கண் திணை முதலாயின திரிந்து வருவனவும் என்றவாறு. அவை,

எழுதுவரிக் கோலத்தார் ஈவார்க் குரியார்
தொழுதிமைக் கண்ணணைந்து தோட்டார் - முழுதகலா
நாணிற் செறிந்தார் நலங்கிள்ளி நாடோறும்
பேணற்கமைந்தார் பெரிது.

என்பது புத்தகம் என்னும் பொருண்மேல் திணை திரிந்து வந்தவாறு கண்டுகொள்க. பிறவும் அன்ன. மந்திரப்பொருள் வயினா குநவும் என்றது - மந்திரப் பொருட்கண் அப்பொருட்கு உரித்தல்லாச் சொல்வருவனவும் என்றவாறு. இதற்கு உதாரணம் மந்திர நூல்வல்லார் வாய்க்கேட்டு உணர்க. அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே என்றது. அவ்வனைத்தும் வழங்கியவாறே கொள்வதல்லது இலக்கணத்தான் யாப்புறவுடைய அல்ல என்றவாறு.

இஃது இச்சூத்திரத்திற்கு ஒரு சாரார் உரை. ஒரு சாரார் பிற உரைப்ப.

இஃது இயற்சொல்லும் திசைச்சொல்லும் பிறவும் பற்றி வழு அமைத்ததாகலின், கிளவியாக்கம் முதலாயினவற்றின்கண் உணர்த்துதற்கு இயைபு இன்மையான், ஈண்டுவைத்தார். (53)

**செய்யாய் என்னுஞ் சொல்**

450. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய் என்கிளவி யாகிடன் உடைத்தே.

செய்யாய் என்னும் வாய்பாட்டதாகிய முன்னிலை முற்றுச்சொல் ஆய் என்னும் ஈறுகெடச் செய்யென்னுஞ் சொல்லாய் நிற்றலுடைத்து என்றவாறு.

ஆகிடனுடைத்தென்றதனான் செய்யாய் என ஈறுகெடாது நிற்றலே பெரும்பான்மை என்பதாம்.

(எ..டு) உண்ணாய், தின்னாய், கிடவாய், நடவாய், தாராய், வாராய், போவாய் என்பன ஈறுகெட உண், தின், கிட, நட, தா, வா, போ எனச் செய்யென் கிளவி ஆயினவாறு கண்டுகொள்க.

செய்யாய் என்னும் முன்னிலை எதிர்மறை செய்யென் கிளவியாதற்கு ஏலாமையின், செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் என்றது விதி வினையையேயாம்.

தன்னினம் முடித்தல் என்பதனான் வம்மின், தம்மின் என்பன மின் கெட வம், தம் என நிற்றலும், அழியலை, அலையலை என்னும் முன்னிலை எதிர்மறை ஐகாரங்கெட்டு அழியல் அலையல் என நிற்றலுங்கொள்க. ஒன்றென முடித்தல் என்பதனான் புகழ்ந்தார் என்னும் படர்க்கைவினை ஆர் ஈறு கெடப் புகழ்ந்திகு மல்லரோ என நிற்றலுங் கொள்க. இவை எல்லாம் செய்யுள் முடிபாம் என்பாரும் உளர்.

செய்யாய் என்னும் முன்னிலை எதிர்மறை, எதிர்மறை படாது செய்யென் விதிவினையாதலும் உரித்து என்று உரைத்தாரால் உரையாசிரியர் எனின் : அற்றுஅன்று; செய்யாய் என்னும் எதிர்மறை வினையும் செய்யாய் என்னும் விதிவினையும் முடிந்த நிலைமை ஒக்குமாயினும் எதிர்மறைக்கண் மறை உணர்த்தும் இடைநிலையும் உண்மையான், முடிக்குஞ்சொல் வேறு எனவேபடும். மறை உணர்த்தும் இடைநிலையாவன;

உண்ணலன், உண்டிலன், உண்ணாது, உண்ணேன் என்புழி வரும் அல்லும், இல்லும், ஆவும், ஏயும் பிறவுமாம். உண்ணாய் உண்ணேன் என்புழி எதிர்மறை ஆகார ஏகாரங் கெட்டு நின்றன எனல் வேண்டும். அல்லாக்கால் மறைப்பொருள் பெறப் படாமையின்; அதனான் எதிர்மறைச்சொல்லே விதிவினைச் சொல்லாகாமையின் அவர்க்கது கருத்தன்றென்க. அல்லதூஉம் ஆசிரியர் அக்கருத்தினராயின், செய்யாய் என்னும் எதிர்மறை வினைச்சொல் என்று ஓதுவார் மன். அவ்வாறு ஓதாமையின் அவர்க்கது கருத்தன்மையான் உரையாசிரியர்க்கும் அது கருத்தன்மையறிக. (54)

**ஈ ஏ என்னும் முன்னிலை ஈறுகள்**

451. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய் ஊர்ந்து வருமே.

முன்னிலை வினைச்சொல்முன் வரும் ஈகாரமும் ஏகாரமும் அம் முன்னிலைச் சொற்கு ஏற்ற மெய் ஊர்ந்து வரும்; என்றவாறு.

(எ..டு) சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ (அகம்.46) அட்டில் ஓலை தொட்டனை நின்மே (நற்றினை.300) என அவை முன்னிலைக்கு ஏற்ற மெய் ஊர்ந்து வந்தவாறு கண்டுகொள்க.

முன்னிலை என்றாரேனும், செய்யென் கிளவியாகிய முன்னிலை என்பது அதிகாரத்தான் கொள்க.

ஈகாரம் ஒன்றேயாக, புக்கீ உண்டீ, உரைத்தி, சென்றீ என முன்னிலை வினையீற்று வேறுபாட்டிற்கு ஏற்ப மெய் வேறுபட்டு வருதலான் அந்நிலை மரபின் மெய் என்றார். ஏகாரம் மகரம் ஊர்த்தல்லது வாராது.

இவ்எழுத்துப்பேறு புணர்ச்சி விகாரமாதலின் ஈண்டுக் கூறற் பாற்று அன்று எனின் : அற்றன்று : இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி (சொல்.270) அப் பெயரோடு ஒற்றுமைப்பட்டு நின்றாற்போல முன்னிலை முன்னர் ஈயும் ஈயும் முன்னிலைச்

சொல்லோடு ஒற்றுமைப்பட்டு நிற்றலான், நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையான், அம்மெய் புணர்ச்சி விகாரம் எனப்படா என்க. அஃதேல், இடைஇயலுள் இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி (சொல்.270) என்பதனோடு இயைய இதனையும் வைக்க எனின் : ஆண்டு வைப்பின் செய்யாய் என்பது செய்யென் கிளவியாய வழியது அவ்ஈகார ஏகார வரவு என்பது பெறப்படாமையின், ஈண்டு வைத்தார். செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் என்பதனை ஈண்டு வைத்தற்கும் இதுவே பயனாதல் அறிக. முன்னிலைச் சொல் விகாரம் ஒருங்குணர்த்தல் அதற்குப் பயன்எனினும் அமையும். ஈ என்பது ஓர் இடைச்சொல் உண்டு என்பது இச்சூத்திரத்தான் பெற்றாம். இவை இரண்டும் ஈண்டுப் புறத்துஉறவுப் பொருள்பட நின்றன. அசைநிலை எனபாரும் உளர். (55)

**புதிய சொற்கள்**

452. கடிசொல் இல்லைக் காலத்துப் படினே.

இவைதொன்று தொட்டன அல்லன என்று கடியப்படும் சொல் இல்லை; அவ்வக்காலத்துத் தோன்றி வழங்கப்படுமாயின்; என்றவாறு.

(எ..டு) சம்பு, சள்ளை, சட்டி, சமழ்ப்பு எனவரும். இவை தொன்றுதொட்டு வந்தன வாயின் முதலாகா தனவற்றின் கண்.

சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அ ஐ ஔ எனும் முன்றலங் கடையே (எழு.62)

என வியக்கார் ஆசிரியர். அதனான் அவை பிற்காலத்துத் தோன்றிய சொல்லேயாம் என்பது.

இஃது எழுவகை வழுவமைதியுள் ஒன்று ஆகாது ஒரு பாதுகாவல் ஆதலின் கிளவியாக்கத்து இயைபு இன்மையான் ஈண்டுக் கூறினார்.

இனி ஒருசாரார் உரை : இன்ன அநுவதிக்கும் காலமாம் அக்காலத்து, அவை வழுவன்மை எல்லா ஆசிரியர்க்கும்

உடம்பாடாகலின் அதனைத் தழுவிக் கொண்டவாறு என்க. இவை இரண்டு இச்சூத்திரத்திற்குப் பொருளாகக் கொள்க.

இனி ஒன்றென முடித்தலான் புதியன தோன்றினால் போலப் பழையன கெடுவனவும் உள எனக்கொள்க. அவை அழான், புழான் முதலியனவும், எழுத்திற் புணர்த்த சொற்கள் இக்காலத்து வழங்காதனவும் ஆம். *(56)*

**முதற்குறை முதலியன**

**453. குறைச்சொல் கிளவி குறைக்கும்வழி அறிதல்**

குறைக்கும் சொல்லைக் குறைக்கும் இடம் அறிந்து குறைக்க என்றவாறு.

குறைக்கும் வழி அறிக என்பது, ஒரு சொற்குத் தலையும் இடையும் கடையும் என. இடம் மூன்றே; அவற்றுள், இன்னுழிக் குறைக்கப்படும் இச்சொல் என்று அறிந்து குறைக்க என்றவாறு.

*(எ..டு)* தாமரை என்பது, மரையிதழ் புரையும் அஞ்செஞ் சீறடி எனத் தலைக்கண்ணும், ஓந்தி என்பது வேதின வெரிநின் ஓதிமுது போத்து *(குறுந்.140)* என இடைக்கண்ணும், நீலம் என்பது, நீலுண் துலிகை கடுப்ப எனக் கடைக்கண்ணும், குறைக்கப்பட்டவாறும், அவை பிறாண்டு குறைத்தற்கு ஏலாமையும் கண்டுகொள்க. குறைத்தலாவது ஒரு சொல்லின் சிறிதுகெடுத்தலாகலின் முழுவதும் கெடுத்தலாகிய தொகுக்கும் வழித் தொகுத்தலின் வேறு ஆதல் அறிக.

இயற்சொல் திரிசொல் *(சொ.397)* என்னும் சூத்திரம் முதலாயின செய்யுள் அதிகாரத்துக் கூறாமையானும், ஒரு காரணத்தான் கூறினாரேனும் செய்யுள்கண் என்று விதந்து கூறாமையானும் இது வழக்கு முடிபு என்பாரும் உளர். *(57)*

**இதுவும் அது**

**454. குறைத்தன ஆயினும் நிறைப்பெயர் இயல.**

குறைத்தனவாயினும் அவை குறையாது நிறைந்து நின்ற பெயர் இயல்பு உடையன என்றவாறு.

என்றது, முற்கூறிய உதாரணங்கள் தாமரை ஓத்தி நீலம் என நிறைந்த பெயர்களின் பொருள்களைத் தந்தே நிற்கும் என்றவாறாம்.

குறைந்தவழியும் நிறைந்த பெயராகக் கொள்க என்றவாறாம். குறைக்கப்படுவன பெயராகலின், நிறைப்பெயரியல என்றார். (58)

**இடைச்சொல் மரபு**

**455. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.**

பிறிதொரு சொல்லை வேறுபடுப்பனவும் பிறிதொரு சொல்லான் வேறுபடுக்கப்படுவனவும் எனச் சொல் இருவகைப்படும், பிறிதொரு சொல்லை வேறுபடுத்தலாவது விசேடித்தல். பிறிதொரு சொல்லான் வேறுபடுக்கப்படுதலாவது விசேடிக்கப்படுதல். இடைச்சொல் எல்லாம் பிறிதொரு சொல்லை வேறுபடுக்கும் சொல்லாம் என்றவாறு.

வேறுபடுத்தலும் வேறுபடுக்கப்படுதலும் ஆகிய இரண்டும் பொதுவகையான் எல்லாச் சொற்கும் கூறாமை எய்துமாகலின் இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச்சொல் என்றதனால், இவை வேறுபடுக்கும் சொல்லாதல் அல்லது ஒரு ஞான்றும் வேறுபடுக்கப்படும் சொல்லாகா என நியமித்தவாறாம். அவை அன்னவாதல் இடையியலுள் ஓதப்பட்ட இடைச்சொல் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் வரும்வழிக் கண்டுகொள்க.

வேற்றுமைச்சொல் வேற்றுமையைச் செய்யுஞ்சொல்லென விரியும். வேற்றுமை எனினும் வேறுபாடு எனினும் ஒக்கும்.

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லாயினும், அவற்றுள் ஒரு சாரனவற்றை வேற்றுமைச் சொல் என்று ஆள்ப; இயற்பொருள் (சொல்.174) ஒரு சாரனவற்றை இயற்பெயர் என்றாற்போல என்பது. இதுவும் ஒரு நயம். (59)

**உரிச்சொல்லுக்கும் அவ்இயல்பு**

**456. உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.**

உரிச்சொல் இடத்தும் வேறுபடுக்குஞ் சொல்லாதற்கும் உரியன உரியவாம்; எல்லாம் உரியவாகா என்றவாறு. எனவே, உரிச்சொல்லுள் வேறுபடுத்தும் வேறுபடுக்கப்பட்டும் இருநிலைமையும் உடையவாய் வருவனவே பெரும்பான்மை என்பதாம்.

வேறுபடுக்குஞ் சொல்லேயாவன : உறு, தவ, நனி, ஏ என்னும் தொடக்கத்தன. இருநிலைமையும் உடையன குரு, கெழு, செல்லல், இன்னல் என்னுந் தொடக்கத்தன. உறு பொருள், தவப்பல, நனி சேய்த்து ஏகல் அடுக்கம் என இவை ஒன்றை விசேடித்தல்லது வாராமையும், குருமணி விளங்குகுரு; கேழ் கிளர் அகலம், செங்கேழ்; செல்லல் நோய், அருஞ்செல்லல்; இன்னற் குறிப்பு, பேரின்னல் என இவை ஒன்றனை விசேடித்தும் விசேடிக்கப்பட்டும், இரு நிலைமையும் உடையவாய் வருமாறும் வழக்குஞ் செய்யுளும் நோக்கிக் கண்டுகொள்க. குரு விளங்கிற்று, செல்லல்தீர எனத் தாமே நின்று வினைகொள்வன, விசேடிக்கப்படும் தன்மையுடையவாகலின், விசேடிக்கப்படுஞ் சொல்லாம். பிறவும் விசேடித்தல்லது வாராதனவும், விசேடித்தும் விசேடியாதும் வருவனவும், வழக்கும் செய்யுளும் நோக்கி உணர்க.

வேறுபடுக்குஞ் சொல்லேயாவன இவை எனத் தொகுத்து உணர்த்தற்கும், உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய எனச் சூத்திரம் சுருங்குதற்கும், இடையியலுள்ளும் உரியியலுள்ளும் வையாது, இரண்டு சூத்திரத்தையும் ஈண்டு வைத்தார். (60)

**வினையெச்சச் சொற்கள்**

**457. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.**

மேற்கூறப்பட்ட வினையெச்சமும் வேறுபட்ட பல இலக்கணத்தையுடைய என்றவாறு.

அவையாவன : உரற்கால் யானை ஒடித்துண்டு எஞ்சியயா (குறுந்.232) எனவும், ஞாயிறுபட்டு வந்தான் எனவும், செய்தெனெச்சம் வினைமுதல் கொள்ளாது பிறிதின் வினை கோடலும், அஃது ஈறு திரிதலும், மோயினள் உயிர்த்த காலை (அகம்.5) எனவும், கண்ணியன் வில்லன் வரும் (கலி.37) எனவும், முற்றுச்சொல்லது திரிபாய் வருதலும். ஓடி வந்தான், விரைந்து போயினான் எனவும், வெய்ய சிறிய மிழற்றுஞ் செவ்வாய் எனவும், செவ்வன் தெரிகிற்பான், புதுவதின் இயன்ற அணியன் (அகநா.66) எனவும், தம்மை முடிக்கும் வினைக்கண்கிடந்த தொழிலானும் பண்பானுங் குறிப்பானும் உணர்த்தித் தெரிநிலை வினையுங் குறிப்பு வினையுமாய் முடிக்குஞ்சொல்லை விசேடித்தலும் பிறவுமாம். செய்தெனெச்சத்து ஈறு திரிதல் வினை இயலுள் காட்டிப் போந்தாம்.

பெருங்கை யற்றவென் புலம்புமுந் துறுத்து என்புழிப் பெரும் என்பதனை ஒருசாரார் வினையெச்ச வாய்பாடு என்ப; ஒருசாரார் வினைச்சொல் பற்றி நின்றதோர் உரிச்சொல் என்ப.

இடைச்சொல்லும் உரிச்சொல்லும் மேற்கூறப்பட்ட இலக்கணமேயன்றிப் பிறஇலக்கணமும் உடைய என்பது உணர்த்தினார். இனி அவையேயன்றி வினையெஞ்சு கிளவியும் பல இலக்கணத்தன என்பதுபட நின்றமையான், உம்மை இறந்தது தழீஇய எச்சவும்மை, இவ்இலக்கணம் ஓரியல அன்றித் திரிதலும் வேறு பொருள் உணர்த்துதலும் விசேடித்தலும் முதலாகிய வேற்றுமையுடையவாகலின், வேறு பல்குறிய என்றார்.

வினையெச்சத்துள் விசேடித்தே நிற்பனவும் உள என்பதூஉம் உணர்த்துகின்றாராகலின், இதனை வினை இயலுள் வையாது, ஈண்டு விசேடிக்குந் சொல் உணர்த்துவனவற்றோடு வைத்தார்.

பெயர்த்தனென் முயங்க (குறுந்.84) என்பது முதலாயின செய்தெனெச்சம் முற்றாய்த் திரிந்தன என்றும், ஒடித்துண்டு எஞ்சிய என்பது முதலாயின செயவெனெச்சம் செய்தென் எச்சமாய்த்

திரிந்தன என்றும், முன்னர் உரைத்தாரால், உரையாசிரியர் எனின்: பெயர்ந்தனென் முயங்க என்பது முதலாயின எச்சத்திரிபாயின் எச்சப்பொருள் உணர்த்துவதல்லது இடமும் பாலும் உணர்த்தற்பாலவல்ல. எச்சப் பொருண்மையாவது மூன்றிடத்திற்கும் ஐந்துபாற்கும் பொதுவாகிய வினை நிகழ்ச்சியன்றே; அவ்வாறன்றி முற்றுச்சொற்கு ஓதிய ஈற்றவாய் இடமும் பாலும் உணர்த்தலின், அவை முற்றுத் திரிசொல் எனவேபடும். சொல் நிலை உணர்ந்து வினை கோடன் மாத்திரத்தான் வினையெச்சம் எனின் : மாரைக்கிளவியும், வினையொடு முடியும் வேற்றுமையும், பிறவும் எல்லாம் வினையெச்சமாவான் செல்லும்; அதனான் அவர்க்கு அது கருத்து அன்று என்க. அல்லதூஉம். கண்ணியன் வில்லன் வரும் (கலி.37) என வினைக் குறிப்பு முற்றாய்த் திரிதற்கு ஏற்பதொரு வினையெச்சம் இன்மையானும், அது கருத்தன்மையறிக.

ஒடித்துண்டு எஞ்சிய என்பதூஉம் ஞாயிறு பட்டு வந்தான் என்பதூஉம் பிறவினை கொண்டனவாயினும், செய்தென் எச்சத்திற்குரிய இறந்தகாலம் உணர்த்தலான், ஏனைக் காலத்திற்குரிய செய்வென்னெச்சத்தின் திரிபு எனப்படா; செயவென் எச்சத்திரிபாயின் செய என் எச்சத்திற்குரிய காலம் உணர்த்தல் வேண்டும். மழைபெய்ய மரங்குழைத்தது எனச் செய என் எச்சத்திற்கு இறந்தகாலமும் உரித்து எனின் : காரணகாரிய பொருண்மை உணர்த்தும் வழியல்லது செயவெனெச்சம் இறந்தகாலம் உணர்த்தாது; ஒடித்துண்டலும் ஞாயிறு படுதலும் எஞ்சுதற்கும் வருதற்கும் காரணம் அன்மையான், ஆண்டு இறந்தகாலம் உணர்த்தாமையின், செய்தென் எச்சமாய் நின்று தமக்குரிய இறந்தகாலம் உணர்த்தின எனப்படும். அதனான் செயவெனெச்சம் செயதெனெச்சமாய்த் திரிந்தன என்றலும் அவர் கருத்து அன்று என்க. ஞாயிறு பட்டுவந்தான் என்பது ஞாயிறு பட்டபின்வந்தான் என இறந்தகாலம் உணர்த்தலும், ஞாயிறு படவந்தான் என்பது ஞாயிறு படா நிற்க வந்தான் என நிகழ்காலம் உணர்த்தலும் வழக்கு நோக்கிக் கண்டுகொள்க. *(61)*

**பொதுவாகத் தொடர்மொழிகள்**

458. உரையிடத் தியலும் உடன்நிலை அறிதல்.

வழக்கிடத்து உடன் நிற்கற்பால அல்லனவற்றது உடனிலை போற்றுக. எ-று.

உடன் நிற்கற் பால அல்லனவாவன தம்முள் மாறுபாடுடையன, மாறுபாடில்லனவற்றது உடன்நிலைக்கண் ஆராய்ச்சி இன்மையின் உடன்நிலை என்றது மாறுபாடு உடையனவற்றது உடன் நிலையேயாம்.

(எ..டு) இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது என உடன் நிற்கற்பால அல்லாச் சிறுமையும் பெருமையும் உடன்நின்றவாறு கண்டு கொள்க. சிறிது என்பது பெரிது எனப்பட்ட பொருளை நோக்காது பெரிது என்பதற்கு அடையாய் மிகப் பெரிதன்று என்பதுபட நிற்றலான் அமைவுடைத்து ஆயிற்று.

அறிதல் என்பது இவ்வாறு அமைவுடையன கொள்க என்றவாறு.

மாறுபாடு உடையன உடன் நிற்றல் எழுவகை வழுவினுள் ஒன்று அன்மையான், இதனைக் கிளவியாக்கத்துள் கூறாது ஈண்டுக் கூறினார். (62)

**குறிப்பான் உணரும் சொற்கள்**

459. முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான.

சொல்லான் அன்றிச் சொல்லுவான் குறிப்பான் பொருள் உணரப்படும் சொல்லும்உள; இப்பொருள் இத்தன்மைய என்று சொல்லுதற்கண் என்றவாறு.

(எ..டு) செஞ்செவி, வெள்ளொக்கலர் என்புழி மணியும் பொன்னும் அணிந்த செவி என்றும், வெளியது உடுத்த சுற்றம் என்றும் குறிப்பான் உணரப்பட்டவாறு கண்டுகொள்க.

குழைகொண்டு கோழி எறியும் வாழ்க்கையர் என்புழி அன்னபெருஞ் செல்வத்தார் என்பதூஉம் குறிப்பான் உணரப்படும்.

இது தெரிபுவேறு நிலையலுங் குறிப்பின் தோன்றலும் (சொல்.157) என்புழி அடங்கும் எனின் ஆண்டுப் பொருள்நிலை இருவகைத்து என்பதல்லது இன்னுழி இப்பொருள் குறிப்பின் தோன்றும் என்னும் வேறுபாடு பெறப்படாமையான், ஆண்டு அடங்காது என்பது.

இதுவும் மேலை ஓத்துக்களுள் உணர்த்துதற்கு இயைபு இன்மையான் ஈண்டு உணர்த்தினார். (63)

**இருசொல் ஒருபொருள் உணர்த்தல்**

**460. ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்.**

பொருள் வேறுபாடு இன்றி ஒரு பொருள்மேல் வரும் இரண்டு சொல் பிரிவு இன்றித் தொடர்ந்துவரின், அவற்றைக் கடியார் என்றவாறு.

(எ..டு) நிவந்து ஓங்கு பெருமலை எனவும் துறுகல் மீமிசை யுறுகண் எனவும் வரும்.

இருசொல் ஒருபொருள் மேல் வருதல் எழுவகை வழுவினுள் ஒன்று அன்மையான் ஈண்டுக் கூறினார்.

வையைக் கிழவன் வயங்குதார் மாண்அகலந்
தையலாய் இன்றுநீ நல்கினை; நல்காயேல்
கூடலார் கோவொடு நீயும் படுதியே
நாடறியக் கௌவை ஒருங்கு

என்புழி வையைக்கிழவன் கூடலார்கோ என்பன ஒரு பொருளை வரைந்து உணர்த்தலான் பிரிவுஇல ஆகலின் வரையப்படா என்றும்,

கொய்தளிர்த் தண்டலைக் கூத்தப் பெருஞ்சேந்தன்
வைகலும் ஏறும் வயக்களிறே! - கைதொழுவல்;
காலேக வண்ணனைக் கண்ணாரக் காணஎம்
சாலேகம் சார நட

என்புழிக் காலேக வண்ணன் என்பது அச்சாந்து பூசினார் எல்லார்க்கும் பொதுவாய்க் கூத்தப் பெருஞ்சேந்தனையே வரைந்து உணர்த்தாமையின் அவை பிரிவு உடையவாம் என்றும், உரையாசிரியர் உரைத்தாரால் எனின் அற்றன்று

நாணி நின்றோள் நிலைகண்டு யானும்
பேணினென் அல்லனோ மகிழ்ந! வானத்து
அணங்கருங் கடவுள்அன் னோள்நின்
மகன்தாய் ஆதல் புரைவது ஆங்கு எனவே (அகம்.16)

என்புழி வானத்து அணங்கு அருங்கடவுள் அன்னோள் என்பது மகளிர்க்கு எல்லாம் பொதுவாய் நாணி நின்றோளை வரைந்து உணர்த்தாதாயினும் சொல்லுவாள் குறிப்பான் அவளையே உணர்த்தினால் போலக் காலேக வண்ணன் என்பதூஉம் பொதுவாயினும் சொல்லுவான் குறிப்பால் கூத்தப் பெருஞ்சேந்தனையே உணர்த்திப் பிரிவு இலவாய் நிற்றலான், அவர்க்கு அது கருத்து அன்று என்க. (64)

**ஒருமைப் பெயர் பன்மைக்கு ஆதல்**

**461. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி**
**பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே.**

ஒருமைக்கு உரிய பெயர்ச்சொல் பன்மைக்குஆகும் இடமும் உண்டு என்றவாறு.

(எ..டு) ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப என்புழித் தாய் என்னும் ஒருமைசுட்டிய பெயர் இளையர் என்பதனான் தாயர் என்னும் பன்மை உணர்த்தியவாறு கண்டுகொள்க. பன்மைக்கு ஆகும் இடனு மாருண்டே என்பது ஒருமைச்சொல் பன்மைச் சொல்லோடு தொடர்தற்குப் பொருந்தும் இடம் உண்டு என்பதூஉம் படநின்றமையான், அஃதை தந்தை அண்ணல் யானை அடுபோர்ச் சோழர் என ஒருமைச்சொல் பன்மைச் சொல்லொடு தொடர்தலும் கண்டுகொள்க. ஈண்டு ஒருமைச்சொல் பன்மைச் சொல்லொடு மயங்குதலுடைமையான் ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவி (சொல்.27) என்புழி அடங்காமை அறிக.

ஏற்புழிக் கோடல் என்பதனான் உயர்திணைக்கண்ணது இம்மயக்கம் என்று கொள்க.

ஆகும் இடம் என்பதனான் பன்மை உணர்த்துதற்கும் பன்மைச் சொல்லொடு தொடர்தற்கும் பொருந்தும் வழிக் கண்டுகொள்க என்பதாம். (65)

**ஆற்றுப்படையில் முன்னிலை ஒருமை பன்மையொடு முடிதல்**

462. முன்னிலை சுட்டிய ஒருமைக்கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே
ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும்.

முன்னிலை குறித்து நின்ற ஒருமைச் சொல், பன்மையொடு முடிந்ததாயினும், வரையப்படாது; அம் முடிபு ஆற்றுப்படைச் செய்யுளிடத்துப்போற்றி உணரப்படும்; என்றவாறு.

கூத்தராற்றுப்படையுள், கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ (மலைபடுகடாம்.50) என நின்ற ஒருமைச் சொல்போய் இரும்பேர் ஒக்கலொடு பதம் மிகப் பெறுகுவீர் (மலைபடுகடாம்.157) என்னும் பன்மைச் சொல்லொடு முடிந்தவாறு கண்டுகொள்க. ஈண்டு முன்னிலை ஒருமைப் பெயர் ஆதல் அதிகாரத்தால் கொள்க.

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக்கு ஆகும் இடனுமா ருண்டே (சொல்.461)
என்பதனாள் இதுவும் அடங்குதலின், இச்சூத்திரம் வேண்டா எனின் : பன்மையொடு முடியும் இடனுமாருண்டே என்னாது பன்மைக்கு ஆகும் இடனுமாருண்டே என்றாராதலின், ஆண்டுப் பன்மைச் சொல் கொண்டு முடியாது ஒருமைச் சொல் பன்மை உணர்த்துதலும் பன்மைச்சொல்லொடு ஒரு பொருட்டாகிய துணையாய் மயங்குதலும் உணர்த்தினார்; அதனான் இக்கொண்டு முடிபு ஆண்டு அடங்காது என்பது. அல்லதூஉம், இம்முடிபு செய்யுட்கு உரித்து என்றமையானும் ஆண்டு அடங்காமை அறிக.

பொதுவகையான் ஆற்றுப்படை மருங்கின் என்றாராயினும் சுற்றத்தொடு சுற்றத்தலைவனை ஆற்றுப்படுத்தற் கண்ணது இம் மயக்கம் என்பது பாதுகாத்து உணர்க என்பார் போற்றல் வேண்டும் என்றார்.

பால் மயக்கு உற்ற ஐயக் கிளவி (சொல்.23) என்பதனான் கூறிய ஒருமைப்பன்மை மயக்கம் வழுவமைதி ஆயினும் இலக்கணத்தோடு ஒத்துப் பயின்று வரும். ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி பன்மைக்கு ஆதலும், முன்னிலை ஒருமை பன்மையொடு முடிதலும் அன்னவன்றிச் சிறுவழக்கின ஆதலின், ஆண்டு வையாது ஈண்டு வைத்தார்.

ஒருவர் ஒருவரை ஆற்றுப்படுத்தற்கண் முன்னிலை ஒருமை பன்மையொடு முடிதல் வழக்கிற்கும் ஒக்கும் ஆகலான், ஆற்றுப்படையெனப் பொதுவகையாற் கூறினார். *(66)*

**சொல்லதிகாரத்திற்குப் புறனடை**

463. செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி யெல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்.

செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் இவ்வதிகாரத்தின்கண் பொருள்பெறச் சொல்லப்பட்ட சொல் எல்லாவற்றையும் பல்வேறு செய்கையுடைய தொன்னூல் நெறியின் பிழையாது சொல்லை வேறுபடுத்து உணருமாற்றான் பிரித்துக் காட்டுக என்றவாறு.

என்றது, நிலப்பெயர் குடிப்பெயர் எனவும், அம்மாம் எம்மேம் எனவும் பொதுவகையான் கூறப்பட்டன. அருவா நிலத்தான் என்னும் பொருட்கண் அருவாளன் எனவும்; சோழ நிலத்தான் என்னும் பொருட்கண் சோழியன் எனவும்; இறந்தகாலத்தின்கண் உண்டனம், உண்டாம் எனவும்; நிகழ்காலத்தின்கண் உண்ணாநின்றனம், உண்ணாநின்றாம் உண்கின்றாம் எனவும்; எதிர்காலத்தின்கண் உண்குவம், உண்பாம்

எனவும் வேறுபட்டு வருமன்றே; அவ்வேறுபாடு எல்லாம் கூறின் பல்கும் என்று அஞ்சிக் கூறிற்றிலன் ஆயினும், தொன்னூல் நெறியில் பிழையாமல் அவ்வேறுபாடு உணரப் பிரித்துக் காட்டுக நூல் வல்லார் என்றவாறு ஆயிற்று.

இது பிற நூன் முடிந்தது தான் உடம்படுதல் என்னும் தந்திரவுத்தி. பிறவு மன்ன.

செய்கை - விதி

சொல் வரைந்தறிய எனவே, வரைந்தோதாது பொதுவகையான் ஓதப்பட்டவற்றின் மேற்று இப்புறனடை என்பதாம்.

இனி ஓர் உரை : செய்யுளிடத்தும் வழக்கிடத்தும் என்னான் கிளக்கப்படாது தொன்னூலாசிரியரான் கிளக்கப்பட்டு எஞ்சி நின்ற சொல் எல்லாவற்றையும் அவ்வத்தொன்னூல் நெறியின் பிழையாமைச் சொல்லை வரைந்துணரக் கொணர்ந்து பிரித்துக் காட்டுக என்றவாறு.

என்னான் கிளக்கப்படாது என்பது பெற்றவாறு என்னை எனின்: கிளந்தன பிற நூலிற் கொணர்ந்து காட்டல் வேண்டாமையின் கிளக்கப்படாதன என்பது பெறப்படும் என்க.

புறனடையான் கொள்ளப்படுவன : யானும் நீயும் அவனும் செல்வேம் எனவும், யானும் நீயும் செல்வேம் எனவும் ஏனை இடத்திற்குரிய சொல் தன்மைச் சொல்லோடு இயைந்தவழித் தன்மையான் முடிதலும், அவனும் நீயும் செல்மின் எனப் படர்க்கைச் சொல் முன்னிலையோடு இயைந்தவழி முன்னிலையான் முடிதலும், நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும் என்புழிப் பல்லேம் உள்ளும் எனத் தன்மையாகற் பாலது பல்லோர் உள்ளும் எனப் படர்க்கைப் பன்மையாயவழி அமைதலும்,

முரசுகெழு தானை மூவ ருள்ளும்
அரசுஎனப் படுவது நினதே பெரும (புறம்.35)

என்புழி மூவிருள்ளும் என முன்னிலையாகற்பாலது மூவருள்ளும்

எனப் படர்க்கையாய வழி அமைதலும், இரண்டனுள் கூர்ங்கோட்ட காட்டுவல் என்புழிக் கூர்ங்கோட்டது என ஒருமையாகற்பாலது கூர்ங்கோட்ட எனப் பன்மையாய வழி அமைதலுமாம். பிறவும் உளவேல் கொள்க.

அகத்தியம் முதலாயின எல்லா இலக்கணமும் கூறலின் பல்வேறு செய்தியின் நூல் என்றார்.

இவ் இரண்டு உரையும் இச்சூத்திரத்திற்கு உரையாகக் கொள்க. (67)

**எச்சவியல் முற்றும்.**
**சேனாவரையர் உரை முற்றும்.**

# நச்சினார்க்கினியர் உரை
## 7. இடையியல்

**இடைச் சொற்குப் பொது இலக்கணம்**

251. இடைஎனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற்று இயலும்; தமக்கு இயல்பு இலவே.

என்பது சூத்திரம். நிறுத்த முறையானே, இடைச்சொல் உணர்த்துகின்றமையின், இவ் ஒத்து இடைச்சொல் ஒத்து என்னும் பெயர்த்து ஆயிற்று. இச்சூத்திரம் இடைச்சொற்கு எல்லாம் பொது இலக்கணம் கூறுகின்றது.

(இ..ள்) இடை எனப்படுப - இடைச்சொல் என்று சொல்லப்படுவன, பெயரொடும் வினையொடும் நடைபெற்று இயலும் - பெயரும் வினையும் உணர்த்தும் பொருளைச் சார்ந்து நின்று அவற்றையே வெளிப்படுத்து நடக்கும்; தமக்கு இயல்பு இல - தமக்கு என வேறு ஒரு பொருளை உணர்த்தும் இலக்கணம் உடைய அல்ல. (எ-று)

முன்னும் பின்னும் நிற்கு மேனும், பெரும்பான்மையும் இடையே நிற்றலின் இடைச்சொல் என்றார்.

(உ..ம்) *அதுகொல் தோழி; காம நோயே* (குறுந்.5)
*வருகதில் அம்மஎம் சேரி சேர* (அகநா.276)

எனப் பெயரும் வினையும் சார்ந்து நின்று, அவற்றின் பொருளை விளக்கின.

தமக்கு இயல்புஇல எனப் பொதுப்படக் கூறிய அதனால், சாரப்படும் சொல்லின் வேறாய் நிற்றலே அன்றி, உண்டான், என்றிசினோரே, அருங்குரைத்து என அவற்றிற்கு உறுப்பாய் வருதலும் கொள்க. (1)

**இடைச்சொற்களின் பாகுபாடு**

252. அவைதாம்,
புணரியல் நிலைஇடைப் பொருள்நிலைக்கு உதநவும்
வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபுஆ குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பின் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியான் பொருள்செய் குநவும் என்று
அப்பண் பினவே நுவலுங் காலை.

இஃது அவ்இடைச்சொற்களின் பாகுபாடு கூறுகின்றது.

**(இ..ள்)** அவைதாம் - முற்கூறிய இடைச்சொற்கள் தாம்.

புணரியல் நிலையிடைப் பொருள் நிலைக்கு உதநவும்- இருமொழி தம்மில் புணர்தல் இயன்ற நிலைமைக்கண் அவற்றின் பொருள் நிலைக்கு உதவி செய்து வருவனவும்; வினை செயல் மருங்கின் காலமொடு வருநவும் - முதல் நிலை நின்று காரியத்தினைத் தோற்றுவிக்கும் இடத்துக் காலம் காட்டும் இடைச் சொற்களோடே பாலும் இடமும் காட்டும் இடைச் சொற்களாய் வருவனவும், வேற்றுமைப் பொருள்வயின் உருபு ஆகுநவும் - வேறுபடச் செய்யும் செயப்படுபொருள் முதலாயவற்றின்கண் உருபு என்னும் குறியவாய் வருவனவும்,

அசைநிலைக்கிளவி ஆகிவருநவும் - தமக்கு என ஒரு பொருள் இன்றித்தாம் சார்ந்த பெயர் வினைகளை அசையப் பண்ணும் நிலைமையவாய் வருவனவும்,

இசைநிறைக்கிளவி ஆகிவருநவும்-செய்யுட்கண் இசை நிறைத்தலே பொருளாக வருவனவும், தத்தம் குறிப்பின் பொருள் செய்குநவும் - கூறுவார் தாம்தாம் குறித்த குறிப்பினானே அவர் குறித்த பொருளை விளக்கி நிற்பனவும்,

ஒப்புஇல் வழியான் பொருள் செய்குநவும் - நாடக வழக்கினான் உய்த்து உணரின் அன்றி உலகியல் வழக்கினான் காட்டப்படுவது ஓர் ஒப்பு இன்றி நின்ற ஒப்புமைப் பொருண்மையை உணர்த்திவரும் உவமஉருபுகளும், என்று அப்பண்பினவே நுவலுங்காலை - என்று சொல்லப்பட்ட அவ்ஏழ் இயல்பினை உடைய சொல்லுமிடத்து (எ-று)

பொருள் நிலைக்கு உதவுவன - எல்லாம் என்பதனை வற்றுச்சாரியை அஃறிணை ஆக்கியும் நம்முச் சாரியை உயர்திணை ஆக்கியும் நிற்பன போல்வன. இதனானே காரம், கரம் முதலிய எழுத்துச் சாரியையும் கொள்க.

காலமொடு வருவன - உண்டான் என்புழி உண் என்னும் முதல்நிலை, காலம் காட்டுகின்ற. டகரத்தினையும் பாலும் இடமும் காட்டும் ஆனினையும் விரித்து நின்றவாறு காண்க. உண்டு என்னும் எச்சம் முதலியனவும் பாலும் இடமும் உணர்த்தும் என்பது, வந்தான், வந்தது என்னும் வினைகளான் பெறுதல். பிரிவு வேறு படூஉம் செய்திய ஆகி (சொ.224) என்பதனான் கொள்க.

தன்னினம் முடித்தல் என்பதளான் உண்டவன் என்றாற் போலும் தொழிற்பெயரும், நம்பி, நங்கை என்னும் பெயர்ப் பெயரும் இவ்இடைச்சொல் பெற்று வருதல் கொள்க.

உருபு ஆகுநவும் - கண் அகல் ஞாலம் (திரிகடு - 1)

என்புழிக் கண் இடப்பொருள் உணர்த்துதலும்,

ஊர்க்கால் நிவந்த பொதும்பருள் (கலி.56)

என்புழிக்கால் உருபு ஆகலும் முற்கூறினாம். (சொ.83)

அனையை ஆகல்மாறே (புறநா.4)

சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே (நற்.40)

என்புழி மாறு என்னும் இடைச்சொல் வினையை அடுத்துக் காரணப் பொருள் உணர்த்தி நிற்றலின், மூன்றாம் வேற்றுமைப் பொருள் உணர்த்தி நின்றது அல்லாமை உணர்க. அது மூன்றாவதன் பொருள். உணர்த்திற்றேல், கூறாய் தோழியான் வாழுமாறே என்புழி வாழுமாற்றை என இரண்டாவது விரியாதாம்.

மந்திர விதியின் மரபுளி வழாஅ (முருகு.95)

என்புழி முறைமையின் வழுவாத அந்தணர் என ஐந்தாவது விரிதலானும்,

இயல்புளிக் கோல்ஒச்சும் மன்னவன் (குறள்.545)

என்புழி, முறைமையிலே செங்கோல் நடாத்தும் என ஏழன்உருபு விரிதலானும், உளி என்பது மூன்றன் உருபின் பொருள்பட வந்தது அன்று; பகுதிப் பொருள் விகுதியாய் நின்று தனக்கு ஏற்ற உருபை ஏற்று நின்றது.

இம்மூன்றும் புணரியலுள்ளும், வினையியலுள்ளும், வேற்றுமை ஒத்தினுள்ளும் கூறி, இடைநின்ற மூன்றும் ஈண்டுக் கூறுகின்றார்.

இறுதி நின்ற ஒப்பில் வழியான் பொருள் செய்யும் உவமஉருபுகள், அன்னஏய்ப்ப (பொ.286) என்னும் சூத்திரத்தான் உவம இயலுள் கூறுப. அவை ஒப்பு இன்றியும் ஒப்பு உணர்த்துதல்

ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா (பொ.247)

என்னும் பொருளியல் சூத்திரத்தான் உணர்க. (2)

**இடைச்சொல் வரும் இடமும் வேறுபாடும்**

253. அவைதாம்,
முன்னும் பின்னும் மொழிஅடுத்து வருதலும்
தம்ஈறு திரிதலும் பிறிதுஅவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப.

இஃது இன்னும் அவற்றுக்கு ஒரு பொதுவிதி கூறுகின்றது.

(இ..ள்) அவைதாம் - முற்கூறிய இடைச்சொற்கள்தாம் இடைவருதலே அன்றி, மொழி முன்னும் பின்னும் அடுத்து வருதலும் - தம்மால் சாரப்படும் சொற்களை முன்னும் பின்னும் தாம் அடைந்து வருதலும், தம் ஈறு திரிதலும் - தம் ஈற்றெழுத்து வேறுபட்டு வருதலும், பிறிது அவண் நிலையலும் - ஓர் இடைச்சொல் நிற்கின்ற இடத்தே மற்றோர் இடைச்சொல் நிற்றலும் ஆகிய, அன்னவை எல்லாம் உரிய என்ப -

அந்தன்மையை உடைய இலக்கணங்கள் எல்லாம் இடைச்சொற்கு உரிய என்று சொல்லுவர் ஆசிரியர். (எ-று)

(உ..ம்) அதுமன், கேண்மியா - இவை முன் அடுத்தன.
கொன்ஊர் துஞ்சினும் *(குறுந்.138)*
ஓஒ இனிதே *(குறள்.1176)*

இவை பின் அடுத்தன.
உடன் உயிர் போகுக தில்ல (குறுந்.57)

இது திரிந்தது.
வருகதில் அம்மஎம் சேரி சேர (அகநா.276)
பண்டுஅறியா தீர்போல் படர்ந்தீர் பழங்கேண்மை
கண்டு அறியா தேன்போல் கரக்கிற்பென் மற்கொலோ (கலி.39)

இவை பிறிது நின்றன.

அன்னவை எல்லாம் என்றதனான்,
மன்னைச் சொல்லே (சொல்.254)
கொன்னைச்சொல்லே (சொ.256)

எனத் தம்மை உணர நின்ற வழியும் ஈறு திரிதலும்,
னகாரை முன்னர் (எ.52)

என எழுத்துச்சாரியை ஈறு திரிதலும் கொள்க. *(3)*

**மன் என்னும் இடைச்சொல்லின் பொருள்**

**254. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவிஎன்று**
**அம்மூன்று என்ப மன்னைச் சொல்லே.**

இது தத்தம் குறிப்பின் பொருள் செய்குநவற்றுள் (252) ஒன்றன் பொருட் பாகுபாடு கூறுகின்றது.

*(இ..ள்) மன்னைச் சொல் கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவி என்று அம்மூன்று என்ப* - மன்னைச் சொல் கழிவுப் பொருண்மையும், ஆக்கப் பொருண்மையும், எச்சமாய் ஒழிந்து நின்ற சொற்பொருண்மையும் என்று சொல்லப்பட்ட அம் மூன்று கூற்றை உடையது என்று கூறுவர் ஆசிரியர் (எ-று)

(உ..ம்) சிறியகள் பெறினே எமக்கு ஈயும் மன்னே (புறநா.235)
புதுமலர் கஞல இன்று பெயரின்
அதுமன்எம் பரிசில் ஆவியர் கோவே (புறநா.147)
கூரியது ஓர் வாள்மன் (இக்காலம் திட்பம் இன்று)
எனவரும். (4)

**தில் என்னும் இடைச்சொல்**

**255. விழைவே காலம் ஒழியிசைக் கிளவி என்று**
**அம்மூன்று என்ப தில்லைச் சொல்லே.**

இதுவும் அது.

(இ..ள்) தில்லைச்சொல் விழைவே காலம் ஒழியிசைக் கிளவி என்று அம்மூன்று என்ப - தில்லைச்சொல் விருப்பமும், காலமும், ஒழிந்து நின்ற பொருண்மையும் என்று சொல்லப்பட்ட அம் மூன்று கூற்றை உடையது என்று சொல்லுவர் ஆசிரியர் (எ-று)

(உ..ம்) வார்ந்து இலங்கு வையெயிற்றுச் சின்மொழி அரிவையைப்
பெறுகதில் அம்ம யானே (குறுந்.14)
எனப் பெறுதற்கண் உளதாகிய விருப்பம் கூறிற்று.
வருகதில் வல்லே வருகதில் வல்லென
வேந்துவிடு விழுத்தூது ஆங்காங்கு இசைப்ப
நூல்அரி மாலை சூடிக் காலின்
தமியன் வந்த (புறநா.284)
இதுகாலம் குறித்தது.
வருகதில் அம்மஎம் சேரி சேர (அகநா.276)
என, வந்தக்கால் இன்னது செய்வல் என ஒழியிசை குறித்தது. (5)

**கொன் என்னும் இடைச்சொல்**

**256. அச்சம் பயம்இலி காலம் பெருமைஎன்று**
**அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.**

இதுவும் அது.

கொன்னைச்சொல் அச்சம் பயம்இலி காலம் பெருமை என்று அப்பால் நான்கே - கொன்னைச் சொல் அச்சப்பொருள், பயம் இன்மைப் பொருள், காலப் பொருள், பெருமைப் பொருள் என்று கூறப்பட்ட அக்கூற்று நான்கே ஆம். (எ-று)

(உ..ம்) கொன்முனை இரவுஊர் போல (குறுந்.91)
என அச்சமும்,
கொன்னே கழிந்தன்று இளமையும் (நாலடி.55)
எனப் பயன் இன்மையும்,
கொன்வரல் வாடை
எனக் காதலன் நீங்கிய காலம் அறிந்து வருதலை உடைய வாடை எனக் காலமும்,
கொன்ஊர் துஞ்சினும் (குறுந்.138)
எனப் பெருமையும் உணர்த்திற்று. (6)

**உம் என்னும் இடைச்சொல்**

257. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம்என்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே.

இதுவும் அது.

(இ..ள்) உம்மைச் சொல் எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம் என்று அப்பால்எட்டே - உம் என்னும் இடைச்சொல் எச்சத்தைக் குறிப்பதும், சிறப்பைக் குறிப்பதும், ஐயத்தைக் குறிப்பதும் எதிர்மறையைக் குறிப்பதும், முற்றைக்குறிப்பதும், எண்ணைக் குறிப்பதும், தெரிநிலையைக் குறிப்பதும், ஆக்கத்தைக் குறிப்பதும் என அக்கூற்று எட்டாம். (எ-று)

எச்சம் இறந்தது தழீஇயதும், எதிரது தழீஇயதும் என இருவகைத்து.

சாத்தனும் வந்தான் என்னும் உம்மை கொற்றனும் வந்தான் என எதிரது தழீஇயிற்று. பின்வந்த கொற்றனும் வந்தான் என்பதூஉம்

முன்வந்த சாத்தனும் வந்தான் என்பதனைத் தழுவுதலின் இறந்தது தழிஇயிற்று. இனி இவ்விரண்டினையும் இறந்த காலம் தழிஇயின ஆக்கி, இன்று சாத்தனும் வரும்; நாளைக்கொற்றனும் வரும் என்பன எதிரது தழிஇயின என்றும் ஆம்.

இன்னும் இவ்எச்சம்தான் யான் கருவூர்க்குச் செல்வல் என்றாற்கு, யானும் அவ்வூர்க்குப் போதுவல் என முழுவதூஉம் தழுவுவதும், அவ்வாறு கூறினாற்கு யானும் உறையூர்க்குப் போதுவல் என ஒருபுடை தழுவுவதும் என இருவகைத்தாம்.

சிறப்பு - உயர்வு சிறப்பும், இழிவு சிறப்பும் என இருவகைத்து,

உப்பொடு நெய்பால் தயிர்காயம் பெய்து அடினும்,
கைப்புஅறா பேய்ச்சுரையின் காய் (நாலடி.*116*)
குறவரும் மருளும் குன்றத்துப் படினே (மலைபடு.*275*)
ஊர்க்கும் அணித்தே பொய்கை (குறுந்.*113*)

என்பன உயர்வு.

அவ்வூர்ப் பூசையும் புலால் தின்னாது

என்பது இழிவு.

ஒன்று, இரப்பான்போல் எளிவந்தும் சொல்லும்; உலகம்
புரப்பான் போல்வதோர் மதுகையும் உடையன்;
வல்லாரை வழிபட்டு ஒன்றுஅறிந் தான்போல்
நல்லார்கண் தோன்றும் அடக்கமும் உடையன்;
இல்லோர் புன்கண் ஈகையின் தணிக்க
வல்லான் போல்வதோர் வன்மையும் உடையன்;
அன்னான் ஒருவன் (கலி.*47*)

என்புழி, இன்னான் என்று துணியாமைக்கண் வருதலின் ஐயம்

............................பொய்கைக்குச்
சேய்த்தும் அன்றே சிறுகான் யாறே (குறுந்.*113*)

என்பதும் அது.

சாத்தன் வருதற்கும் உரியன் என்பது வாராமைக்கும் உரியன் என எதிர்மறையை ஒழிபாக உடைத்தாய் நிற்றலின், எதிர்மறை. இஃது

அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே (எழு.155)

எனப் பண்பு பற்றியும் வரும், இது பிறிது ஒரு பொருளினைத் தழுவாது ஒரு பொருளின் வினையை மறுத்து நிற்றலின், எச்சத்தின் வேறு ஆயிற்று. மேல் ஆசிரியர் எதிர்மறை எச்சம் (சொ.435) என்றமையின் இஃது எச்சத்தின் கூறாம்.

தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார்
யாதும் ஊரே (புறநா.192)
நாளும் அன்னான் புகழும்

என்பன முற்றும்மை,

நிலனும் நீரும் தீயும் வளியும்
ஆகா யமுமெனப் பூதம் ஐந்து

என்பன எண்

மண்திணிந்த நிலனும்
நிலன் ஏந்திய விசும்பும்
விசும்பு தைவரு வளியும் (புறநா.2)

என்பதும் அது.

இருநிலம் அடிதோய்தலின் திருமகளும் அல்லள்; அரமகளும் அல்லள்; இவள் யார் ஆகும்? என்பது திருமகளோ அரமகளோ என ஐயுறாது ஆராய்தற்கண் வருதலின் தெரிநிலை

ஐதேய்ந் தன்று; பிறையும் அன்று;
மைதீர்ந் தன்று; மதியும் அன்று;
வேய் அமன் றன்று; மலையும் அன்று;
பூ அமன் றன்று சுனையும் அன்று; (கலி.55)

என்பதும் அது.

நெடியனும் வலியனும் ஆயினான் என்பது ஆக்கம்
செப்பே வழிஇயினும் வரைநிலை இன்றே (சொல்.15)

என்பது இலக்கணம் ஆக்கிக்கோடல் குறித்தமையின், ஆக்கமும் ஆம். (7)

**ஒகார இடைச்சொல்**

258. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன்று என்ப ஒகா ரம்மே.

இதுவும் அது.

(இ..ள்) பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ இரு மூன்று என்ப ஓகாரம்மே - பிரிநிலைப் பொருண்மை, வினாப் பொருண்மை, எதிர்மறைப் பொருண்மை, எஞ்சி நின்ற சொற்பொருண்மை, ஆராயும் நிலைமையை உடைய பொருண்மை என்கிற இவற்றை மிகுதிப் பொருண்மையோடே தொகுத்து ஓகாரப் பொருண்மை ஆறு என்று கூறுவர் ஆசிரியர்.

(உ..ம்) யானோ தேறேன் அவர் பொய்வழங் கலரே (குறுந்.21)
இது தேறுவார் பிறரின் பிரித்தலின் பிரிநிலை.
சாத்தன் உண்டானோ? - இது வினா
யானோ கொள்வேன்! - இது எதிர்மறை
கொளலோ கொண்டான் - இது கொண்டு உய்யப் போகலான் ஆயினான் என்றலின் ஒழியிசை.

திருமகளோ அல்லள்; அரமகளோ அல்லள்; இவள் யார்? என்பது தெரிநிலை.

ஓஒ உவமன் உறழ்வு இன்றி ஒந்ததே (களவழி.36)
இது மிகுதி உணர்த்தலின் சிறப்பு.

மாறுகோள் எச்சமும் வினாவும் ஐயமும் (எழு.290)
என்னும் சூத்திரத்தான் ஐயமும் கொண்டார்.

அது பத்தோ பதினொன்றோ எனவரும். (8)

**ஏகார இடைச்சொல்**

259. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்று அசை இவ்ஐந்து ஏகா ரம்மே.

இது ஏகார இடைச் சொல் பெரும்பான்மை பொருள்படுமாறும் சிறுபான்மை அசைநிலை ஆமாறும் கூறுகின்றது.

(இ..ள்) தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே ஈற்று அசை இவ்ஐந்து ஏகாரம்மே - தெளிவுப் பொருண்மை, வினாப் பொருண்மை, பிரிநிலைப் பொருண்மை, எண்ணுப் பொருண்மை, ஈற்று அசை ஆதல் என இவ் ஐந்து வகைப்படும் ஏகாரம் (எ-று)




(உ..ம்) உண்டேஎ மறுமை - தேற்றம்
நீயே உண்டாய்? - வினா
அவருள், இவனே கள்வன் - பிரிநிலை
நிலனே நீரே தீயே வளியே - எண்

கடல் போல் தோன்றல காடுஇறந் தோரே (அகநா.1)
ஈற்றசை எனவரும்.
ஈற்றசை என்பதனைச் செய்யுள் ஈற்றின்கண் அன்றி
வாடா வள்ளிஅங் காடு இறந் தோரே (குறுந்.216)
எனச் சொல்லின் ஈற்றினும் கொள்க.

யானே கொண்டேன் என்புழி, நீயே கொண்டாய் என்னும் எதிர்மறைப் பொருள் தருதல் மாறுகோள் எச்சமும் வினாவும் (எழு.275) என்பதனான் கொள்க. (9)

**என என்னும் இடைச்சொல்**

260. வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனஎன் கிளவி.

இது எனஎன் இடைச்சொல் பொருள்படுமாறு கூறுகிறது.

(இ..ள்) வினையே குறிப்பே இசையே பண்பே எண்ணே பெயரோடு அவ்அறு கிளவியும் கண்ணிய நிலைத்தே எனஎன் கிளவி - வினைச் சொல்லின் பொருண்மையும், குறிப்பாய் வரும்

உரிச்சொல்லின் பொருண்மையும், இசைக்கண் வரும் உரிச்சொல்லின் பொருண்மையும், பண்பின்கண்வரும் உரிச்சொல்லின் பொருண்மையும், எண்ணுப் பொருண்மையும் பெயர்ப் பொருண்மையோடே கூடி அவ்ஆறு பொருண்மையும் தான் இடைநின்று கருதிப் பின்வரும் சொல்லோடு இயைவிக்கும் நிலைமையை உடைத்து என என்னும் சொல். (எ-று)

(உ..ம்) கார் வருமெனக் கருதி நொந்தாள் - வினை
துண்ணெனத் துடித்தது மனம் - குறிப்பு
ஒல்லென ஒலித்தது - இசை
வெள்ளென விளர்த்தது - பண்பு
நிலன்என நீர் எனத் தீ என வளி என - எண்
அழுக்காறு என ஒருபாவி (குறள்.168) - பெயர்

எனவரும்.

நெடுநீர்க் குட்டத்துத் துடும் எனப் பாய்ந்து (புறநா.243) என்பதும் இசை. (10)

**என்று என்னும் இடைச்சொல்**

261. என்றுஎன் கிளவியும் அதனோ ரற்றே.

இதுவும் அது.

(இ..ள்) என்று என் கிளவியும் அதனோ ரற்றே - என்று என்னும் இடைச்சொல்லும் என என்பதுபோல அவ்ஆறு பொருளும் குறித்துவரும் (எ-று)

(உ..ம்) நரைவரும் என்று எண்ணி (நாலடி.11) -வினை
விண்என்று விணைத்தது - குறிப்பு
ஒல்என்று ஒலிக்கும் ஒலிபுனல் ஊரற்கு(ஐந்.ஐம்.28)- இசை
பச்சென்று பசுத்தது - பண்பு
நிலன் என்று நீர் என்று - எண்
பாரி என்று ஒருவன் உளன் - பெயர்

எனவரும். (11)

**தில் என்பதற்குப் புறனடை**

262. விழைவின் தில்லை தன்இடத்து இயலும்.

இது முற்கூறிய (255) தில் என்பதற்குப் புறனடை கூறுகின்றது.

(இ..ள்) விழைவின் தில்லை தன் இடத்து இயலும் - அம்மூன்று என்ப தில்லைச் சொல்லே (255) என்ற மூன்றனுள் விழைவின்கண் வரும் தில்லை தன்மைக்கண் அல்லது வாராது. (எ-று)

வார்ந்து இலங்கு வை எயிற்றுச் சின்மொழி அரிவையைப்
பெறுகதில் அம்ம யானே (குறுந்.14)

எனவே, ஏனைய, எல்லா இடத்திற்கும் உரிய ஆயின. (12)

**ஒஓ என்பனவற்றிற்குப் புறனடை**

265. தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப.

இஃது ஒகார ஏகாரங்கட்குப் புறனடை கூறுகின்றது.

(இ..ள்) தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும் அளபின் எடுத்த இசைய என்ப - முற்கூறிய தெளிவின்கண் வரும் ஏகாரமும் (259) சிறப்பின்கண் வரும் ஓகாரமும் (258) இரண்டு மாத்திரையின் மிக்கு மூன்று மாத்திரையினை உடைய என்று கூறுவர் ஆசிரியர். (எ-று)

(உ..ம்) உண்டேஎ மறுமை
ஒஓ உவமன் உறழ்வு இன்றி ஒத்ததே (களவழி.36)

எனவரும். (13)

**மற்று என்னும் இடைச்சொல்**

264. மற்றுஎன் கிளவி வினைமாற்று அசைநிலை
அப்பால் இரண்டுஎன மொழிமனார் புலவர்.

இது பொருள்படுமாறும் அசைநிலை ஆமாறும் கூறுகின்றது.

(இ..ள்) மற்று என் கிளவி வினைமாற்று அசைநிலை அப்பால் இரண்டு எனமொழிமனார் புலவர் - மற்று என்னும் சொல் முன்சொல்கின்றது ஒழிய இனி வேறு ஒன்று என்னும் பொருண்மையும் அசைநிலை ஆதலும் என்னும் அக்கூற்று இரண்டாம் என்று கூறுவர் புலவர். (எ.று)

(உ..ம்) இனி மற்று ஒன்று உரை

மற்று அறிவாம் நல்வினை யாம் இளையம் (நாலடி.19)

மற்றும் கூடும் மனைமடி துயிலே (நற்.360)

எனத் தொழிலும் காலமும் இடமும் பற்றி வரும்.

அது மற்று அவலம் கொள்ளாது (குறுந்.12)

என்பது அசைநிலை.

உரையாடா நின்றுழிப் பொருள் குறியாது மற்றோ எனவும் அசைநிலை வரும் என்பாரும் உளர். (14)

**எற்று என்னும் இடைச்சொல்**

265. எற்றுஎன் கிளவி இறந்த பொருட்டே.

இது பொருள்படுமாறு கூறுகின்றது.

(இ..ள்) எற்று என் கிளவி இறந்த பொருட்டே - எற்று என்னும் சொல் ஒன்றன் இடத்தினின்றும் ஒன்று போயிற்று என்னும் பொருண்மை உணர்த்துதல் உடைத்து (எ-று)

எற்று என் உடம்பின் எழில் நலம். இஃது என்நலம் இறந்தது என நின்றது.

எற்று ஏற்றம் இல்லாருள் யான் ஏற்றம் இல்லாதேன் என்பதூஉம் இது பொழுது துணிவு இல்லாருள் துணிவு இல்லாதேன் யான் என்று துணிவு இறந்தது என்பதுபட நின்றது. (15)

**மற்றை என்னும் இடைச்சொல்**

265. மற்றையது என்னும் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனம்குறித் தன்றே.

இதுவும் அது

(இ..ள்) மற்றையது என்னும் கிளவிதானே - மற்றையது எனப் பெயர்க்கு முதல்நிலையாய் வரும் மற்றை என்னும் ஐகார ஈற்று இடைச்சொல், சுட்டுநிலை ஒழிய இனம் குறித்தற்றே - ஒருவன் முன்னர்க் கருதப்பட்ட பொருள் ஒழிய அதன் இனப்பொருளைக் கருதி நிற்கும். (எ-று)

(உ..ம்) ஆடை கொணர்ந்தவழி, அவ் ஆடை வேண்டாதார், மற்றையது கொண்டுவா என்றால், அதற்கு இனமாகிய பிற ஆடை குறித்து நிற்கும். இனிச் சிறுபான்மை மற்றை ஆடை எனத்தானேயும் வரும்.

அஃது, அவன் என்னும் தொடக்கத்தனவற்றிற்கு, மற்றையஃது, மற்றையவன் என அவ் இடைச்சொல் முதல் நிலையாய் வருதலின் மற்றை என இடைச்சொல்லைப் பிரித்து ஓதாது மற்றையது என ஒன்றாக ஓதினார். (16)

**மன்ற என்னும் இடைச்சொல்**

267. மன்றஎன் கிளவி தேற்றம் செய்யும்.

இதுவும் அது

(இ..ள்) மன்ற என் கிளவி தேற்றம் செய்யும் - மன்ற என்னும் சொல் தெளிவுப் பொருண்மை உணர்த்தும் (எ-று)

(உ..ம்) மடவை மன்ற வாழிய முருகே (நற்.37) என மன்ற அறியாமையையே தெளிவித்தது. (17)

**தஞ்சம் என்னும் இடைச்சொல்**

268. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே

இதுவும் அது.

(இ..ள்) தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே - தஞ்சம் என்னும் சொல் எளிது என்னும் பொருண்மையை உடைத்து (எ-று)

முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம் (புறநா.73)
எனத் தஞ்சம் அரசு கொடுத்தல் எளிது என நின்றது. (18)

**அந்தில் என்னும் இடைச்சொல்**

269. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவி என்று
ஆஇரண்டு ஆகும் இயற்கைத்து என்ப.

இஃது அந்தில் பொருள்படுமாறும் அசைநிலை ஆமாறும் கூறுகின்றது.

(இ..ள்) அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவி என்று ஆயிரண்டு ஆகும் இயற்கைத்து என்ப - அந்தில் என்னும் சொல் ஆங்கு என்னும் இடப்பொருள் உணர்த்துதலும், அசை நிலைச்சொல் ஆதலும் என்னும் அவ்விரண்டு கூறாம் இயற்கையை உடைத்து என்று கூறுவர் புலவர். (எ-று)

(உ..ம்) வருமே சேயிழை அந்தில் (குறுந்.293)
அந்தில் கச்சினன் கழலினன் (அகநா.76)
என இடமும் அசைநிலையுமாய் நின்றது. (19)

**கொல் என்னும் இடைச்சொல்**

270. கொல்லே ஐயம்

இது பொருள்படுமாறு கூறுகின்றது.

(இ..ள்) கொல்லே ஐயம் - கொல் என்னும் சொல் ஐயப்பொருண்மையை உணர்த்தும் (எ-று)

(உ..ம்) யாதுகொல் மற்றவர் நிலையே (அகநா.139)
அதன் அளவு உண்டுகொல் மதிவல்லோர்க்கே (அகநா.48)
எனத் துணிவின்கண் ஐயம் சிறிது நினைத்தலும் ஒன்றென முடித்தலான் கொள்க. (20)

**எல் என்னும் இடைச்சொல்**

**271. எல்லே இலக்கம்**

இதுவும் அது.

*(இ..ள்)* எல்லே இலக்கம் - எல் என்னும் சொல் விளங்குதல் பொருண்மை உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* எல்வளை! எம்மொடு நீவரின் (கலி.13) எனவரும். *(21)*

**ஆர் என்னும் இடைச்சொல்**

**272. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி**
**பலர்க்குஉரி எழுத்தின் வினையொடு முடிமே.**

இஃது ஆர் என்னும் இடைச்சொல் முடிபு கூறுகின்றது.

*(இ..ள்)* இயற்பெயர் முன்னர் ஆரைக்கிளவி - இருதிணைக்கும் இயலும் பெயர்க்கும், அஃறிணை இருபாற்கும் இயலும் பெயர்க்கும் முன்னர் வரும் ஆர் என்னும் இடைச்சொல், பலர்க்குஉரி எழுத்தின் வினையொடு முடிமே - ரஃகான் ஒற்றினை ஈறாக உடைய வினைச்சொல்லான் முடியும். (எ-று)

*(உ..ம்)* பெருஞ்சேந்தனார் வந்தார் - இயற்பெயர்
முடவனார் வந்தார் - சினைப்பெயர்
முடத்தாமக் கண்ணியார் வந்தார் - சினைமுதற்பெயர்
தந்தையார் வந்தார் - முறைப் பெயர்

எனவும்,
கிளியார் வந்தார் - அஃறிணை இயற்பெயர்
எனவும் வரும்.

பெரும்பான்மை இயற்பெயர் கூறவே,
நம்பியார் வந்தார்
நங்கையார் வந்தார்
எனச் சிறுபான்மை உயர்திணைப் பெயர் முன்னரும் வருதல்

ஒன்றென முடித்தலான் கொள்க. இவைதாம் ரகர ஈற்றுப் பெயர் அன்மையின், இகர ஈறும் ஐகார ஈறுமாய் நின்றே விளி ஏற்கும் என்று உணர்க. ஒருமைப் பெயர் நின்று ஆரைக் கிளவி ஏற்றலின், இவை ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியின் வேறு ஆயின. *(22)*

**ஆர் என்பதற்குப் புறனடை**

273. அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்.

இதுமேலதற்குப் புறனடை.

*(இ..ள்)* அசை நிலைக்கிளவி ஆகுவழி அறிதல் - அவ் ஆர் என்னும் சொல் அசைநிலைச்சொல்லாம் இடம் அறிக. (எ-று)

ஆகுவழி அறிதல் என்றதனான் உம்மை முன்னரும், உம் ஈற்று வினைமுன்னரும் வருதல் கொள்க.

(உ..ம்) பெயரின் ஆகிய தொகையுமார் உளவே *(சொல்.68)*
எல்லா உயிரொடும் செல்லுமார் முதலே *(எழு.61)*
எனவரும். *(23)*

**ஏ, குரை என்னும் இடைச்சொற்கள்**

274. ஏயும் குரையும் இசைநிறை அசைநிலை
ஆஇரண்டு ஆகும் இயற்கைத்து என்ப.

இஃது இசைநிறையும் அசைநிலையும் கூறுகின்றது.

*(இ..ள்)* ஏயும் குரையும் இசைநிறை அசைநிலை ஆ இரண்டு ஆகும் இயற்கைத்து என்ப - ஏ என்னும் இடைச்சொல்லும், குரை என்னும் இடைச்சொல்லும் இசைநிறையும் அசை நிலையும் என ஒரோஒன்று அவ்விரண்டு இயல்பினை உடைத்து என்று கூறுவர் ஆசிரியர் (எ-று)

(உ..ம்) ஏஎ இஃதுஒத்தன் நாணிலன் (கலி.62)
இஃது இசைநிறை
ஏஎ எனச் சொல் லியது

இஃது அசைநிலை.

அளிதோ தானே அது பெறல் அருங்குரைத்தே (புறநா.5)

இஃது இசை நிறை

பல்குரைத் துன்பங்கள் சென்றுபடும் (குறள்.1045) இஃது அசைநிலை. ஏகாரம் தேற்றேகாரம் முதலியனபோல மொழியோடு ஒன்றுபட்டு இசையாது, தொடர்மொழி முதற்கண் பிரிந்து இசைத்தலின் வேறு கூறினார். (24)

**மா என்னும் இடைச்சொல்**

**275. மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.**

**இஃது அசைநிலை கூறுகின்றது.**

(இ..ள்) மா என் கிளவி வியங்கோள் அசைச்சொல் - மா என்னும் இடைச்சொல் பெரும்பான்மை வியங்கோளைச் சார்ந்து அசைநிலையாய் வரும் (எ-று)

(உ..ம்) புற்கை உண்கமா கொற்கை யோனே எனவரும். (25)

**முன்னிலை அசைச் சொற்கள்**

**276. மியாஇக மோமதி இகும்சின் என்னும்**
**ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்.**

இதுவும் அது.

(இ..ள்)மியாஇக மோ மதி இகும்சின் என்னும் ஆவியின் ஆறும் - மியா, இக, மோ, மதி, இகும், சின் என்று சொல்லப்பட்ட அவ்விடத்து இடைச்சொல் ஆறும், முன்னிலை அசைச்சொல் - முன்னிலைப் பொருளை உணர்த்தும் அசைச் சொல்லாம் (எ-று)

(உ..ம்) கேள்மியா, செல்மியா எனவும், கண்பனி ஆன்றிக என்றி தோழி எனவும், காமம் செப்பாது கண்டதுமொழிமோ (குறுந்.2) எனவும், உரைமதி வாழியோ வலவ எனவும், மெல்லம் புலம்ப கண்டிகும் எனவும், காப்பும் பூண்டிசின், கடையும் போகலை (அகநா.7) எனவும் வரும். (26)

**இகும் சின் என்பனவற்றிற்குப் புறனடை**

277. அவற்றுள்,
இகுமும் சின்னும் ஏனை இடத்தொடும்
தகும்நிலை உடைய என்மனார் புலவர்.

இது மேலதற்குப் புறனடை கூறுகின்றது.

(இ..ள்) அவற்றுள் இகுமும் சின்னும் - முற்கூறிய ஆறனுள் இகுமும் சின்னும், ஏனை இடத்தொடும் தகும்நிலை உடைய என்மனார் புலவர் - ஒழிந்த தன்மைச் சொல்லொடும் படர்க்கைச் சொல்லொடும் பொருந்தும் நிலைமை உடைய என்று கூறுவர் புலவர். (எ-று)

(உ..ம்) கண்டிகும் அல்லமோ (ஐங்குறு.121)
கண்ணும் படுமோ என்றிசின் யானே (நற்.61)

எனத் தன்மைக் கண்ணும்,

புகழ்ந்திகும் அல்லரோ பெரிதே
யார் அஃது அறிந்திசி னோரே (குறுந்.18)

எனப்படர்க்கைக் கண்ணும் வந்தன.

முருகாற்றுப் படையுள்
விளிவு இன்று,
இருள்நிற முந்நீர் வளைஇய உலகத்து,
ஒருநீ ஆகித் தோன்ற விழுமிய
பெறலஅரும் பரிசில் நல்குமதி; பலவுடன்
...................... ..............................
பழம்உதிர் சோலை மலைகிழ வோனே (முருகு.292 - 295,317)

என மதி படர்க்கைக்கண்ணும் வந்ததனைத் தகும் நிலை உடைய என்றதனான் ஆதல்,

அவ்வச் சொல்லிற்கு அவைஅவை (சொல்.297)

என்னும் சூத்திரத்தான் ஆதல் அமைத்துக்கொள்க. அன்றி, மதியை அறிவாக்கிப் பல அறிவுடனே நீ ஒருவனே ஆகப் பரிசில் நல்கும் எனப்பொருள் கூறுவாரும் உளர்.

ஊனும் ஊனும் முனையின் என்னும் புறப்பாட்டினுள் (381)
சென்மோ பெருமஎம் விழைவுடை நாட்டுளன

என்பதனையும் தன்மைக்கண் மோ வரும் என இவ்வாறு அமைத்தலும் ஒன்று. அன்றி, பெரும! எம் விழைவு உடை நாட்டே நீ செல் என்று சுற்றத்தார் தலைவனை நோக்கிக்கூற, அப்பொருநனும் பாட்டுடைத்தலைவனை நோக்கிப் பின்னும் கூறினானாகப் பொருள் கூறலும் ஒன்று. (27)

**அம்ம என்னும் இடைச்சொல்**

278. அம்ம கேட்பிக்கும்.

இது பொருள்படுமாறு கூறுகின்றது.

(இ..ள்) அம்ம கேட்பிக்கும் - அம்ம என்னும் சொல் யான் கூறுகின்றதனைக்கேள் என்று ஒருவர்க்குக் கேட்பிக்கும் பொருண்மையை உணர்த்தி நிற்கும். (எ-று)

சொல்லொடு பொருட்கு ஒற்றுமை கருதிக் கேட்பிக்கும் என்றார்.

அம்ம வாழி தோழி. (குறுந்.77)
அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம். (சொல்.155)

என்புழியும் பொருள் தந்தே நிற்குமாறு கூறியவாறு ஆண்டு உணர்க. (28)

**ஆங்க என்னும் இடைச்சொல்**

279. ஆங்க உரையசை.

இதுவும் அது.

(இ..ள்) ஆங்க உரையசை - ஆங்க என்னும் இடைச்சொல் கட்டுரைக்கண்ணே அசைத்த நிலையாய் வரும். (எ-று)

கட்டுரை - புனைந்துரை. அசைத்தல் - சேர்த்துதல்.

(உ..ம்) ஆங்கக் குயிலும் மயிலும் காட்டிக்
கேள்வனை விடுத்துப் போகி யோளே
என்புழி, அங்ஙனே எனப் புனைந்துரைத்து நின்றது.

சிறிது பொருள் உணர்த்துவனவற்றை உரையசை என்றும், பொருள் உணர்த்தாது சொற்களை அசைத்து நிற்பனவற்றை அசைநிலை என்றும் கூறுதல் ஆசிரியர் கருத்து ஆதலை இரண்டு அதிகாரத்தும் கண்டுகொள்க. (29)

**ஒப்பில் போலி**

280. ஒப்பில் போலியும் அப்பொருட்டு ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) ஒப்பில் போலியும் அப்பொருட்டு ஆகும் - ஒன்றற்கு ஒன்று ஒக்கும் என்னும் பொருள் தன்கண் இன்றி வரும் போலி என்னும் சொல்லும் அக்கட்டுரைக்கண்ணே அசைத்த நிலையாகிய பொருளை உடைத்தாய் வரும் (எ-று)

அப்பொருட்டு எனவே, ஆங்கவும் பொருள் தருதல் பெற்றாம்.

(உ..ம்) மங்கலம் என்பதுஓர் ஊர் உண்டு போலும்
நெருப்புஅழல் சேர்ந்தக்கால் நெய்போல் வதூஉம்
எரிப்பச்சுட்டு எவ்வம்நோய் ஆக்கும் (நாலடி.124)
எனப் போலும் என்னும் இடைச்சொல் ஊரையும் நெய்யையும் புனைந்து நின்றவாறு காண்க. (30)

**அசைநிலைச் சொற்கள்**

281. யாகா,
பிறபிறக்கு அரோபோ மாதுஎன வரூஉம்
ஆஏழ் சொல்லும் அசை நிலைக் கிளவி.

இஃது அசைநிலை கூறுகின்றது.

(இ..ள்) யாகா பிறபிறக்கு அரோபோ மாது என வரூஉம் ஆ - ஏழ் சொல்லும் அசைநிலைக் கிளவி - யா, கா, பிற, பிறக்கு, அரோ, போ, மாது என்று சொல்ல வருகின்ற அவ் எழு சொல்லும், தாம் சார்ந்த சொல்லை அசைத்து நிற்கும் நிலைமையை உடைய சொல்லாம் (எ-று)

(உ..ம்) யா பன்னிருவர் மாணாக்கர் உளர் அகத்தியனார்க்கு எனவும், இன்னும்,

தோழியா சுவாகதம் போதுக ஈங்குஎன (சீவக.1021)

என்றுபாடமாயின் அதுவும் இதற்கு உதாரணம்.

புறநிழற்கீழ்ப் பட்டாளோ இவள்இவட் காண்டிகா (கலி.99)

எனவும்,

தான்பிற வரிசை அறிதலின் தன்னும் தூக்கி (புறநா.140)

எனவும்,

நசைதர வந்தோர் நசை பிறக்கு ஒழிய (புறநா.15)

எனவும்,

நோதக இருங்குயில் ஆலும் அரோ (கலி.33)

எனவும்,

பிரியின் வாழாது என்போதெய்ய

எனவும்,

விளிந்தன்று மாது அவர்த் தெளிந்தஎன் நெஞ்சே (நற்.178)

எனவும் வரும். (31)

**பிரிவு இல் அசைநிலை**

282. ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை.

இது, தாம் சார்ந்து நின்ற சொல்லின் பொருண்மையை உணர்த்தி நிற்கும் இடைச் சொற்களைக் கூறுகின்றது.

(இ..ள்) ஆக ஆகல் என்பது என்னும் ஆவயின் மூன்றும் - ஆக ஆகல் என்பது என்று சொல்லப்படுகின்ற அவ்விடத்து மூன்றும், பிரிவு இல் அசைநிலை - தாம் சார்ந்த சொற்களின் பொருள்களைப் பிரிதல் இன்றி உணர்த்தும் அசைநிலையாம். (எ-று)

(உ..ம்) கார்எதிர் கானம் பாடினேம் ஆக (புறநா.144)
இனைதல் ஆனாள் ஆக (புறநா.144)
சொல்லற் பாணி நின்றனன் ஆக (குறிஞ்சி.152)

எனச் செயஎன் எச்சம் முற்றாய்த் திரிவுழி ஆக என்னும் இடைச்சொல் வந்து அவற்றின் பொருளே உணர்த்திச் செய என் எச்சமாய் நின்றது. இவ்வினையெச்சமுற்று வினை முதலைக் கொள்ளும் வழி, ஆகல் என்னும் இடைச்சொல்லைப் பெற்றே நிற்கும்.

அருளாய் ஆகலோ கொடிதே (புறநா.144)
தன்பெயர் ஆகலின் நாணி (புறநா.152)
அனையை ஆகல் மாறே (புறநா.4)

என ஆகல் என்னும் வினைக் குறிப்புச்சொல் சார்ந்து நின்ற சொற்பொருளையே உணர்த்தி நின்றது. தெரிநிலைக்கும் குறிப்பிற்கும் உரிய இவ்விரண்டு இடைச்சொற்களும் சிறுபான்மைய ஆகலின், வினையியற்கண் எடுத்து ஓதாராயினார்.

நடுங்குநோய் திரநின் குறிவாய்த்தாள் என்பதோ....
துறந்ததை (கலி.127)
எறிதிரை இமிழ்கானல் எதிர்கொண்டாள் என்பதோ.....
துறந்ததை (கலி.127)

என்புழி, என்பது என்றது என்று சொல்லப்படுவது என்னும் பொருள் தந்து நில்லாது, வாய்த்தாள், எதிர்கொண்டாள் என்னும் சொற்கள் உணர்த்திய செய்ந்நன்றியைத்தானும் உணர்த்தியவாறு காண்க.

இவை, தாம் சார்ந்த சொல்லை அசைத்தே நிற்கும் என்றலின், பிரிவில் அசைநிலை என்றார். இங்ஙனம் நில்லாது, வழக்கின்கண் ஆக, ஆக என அடுக்கிவந்து, உடம்படாமையும் ஆதரம் இன்மையும் ஆகிய பொருள் தந்து நிற்கும் என்றல் அசைநிலைக்கு ஆகாமையின், அவ்வாறு கூறுதல் பொருள் அன்மை உணர்க. (32)

**ஔ என்பதன் பொருள் வேறுபாடு**

283. ஈர்அளபு இசைக்கும் இறுதிஇல் உயிரே
ஆஇயல் நிலையும் காலத் தானும்

அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை இன்றித் தான்வரும் காலையும்
உளஎன மொழிப பொருள்வேறு படுதல்;
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்.

இதுபொருள் வேறுபடுமாறு கூறுகின்றது.

(இ..ள்) ஈர் அளபு இசைக்கும் இறுதி இல் உயிரே - இரண்டு மாத்திரையை இசைக்கும், உயிர் ஔ எஞ்சிய இறுதி ஆகும் (எ.69) என்றதனான் மொழிக்கு ஈறு ஆகாது என்ற ஔகாரம், ஆ இயல் நிலையும் காலத்தானும் - கவவோடு இயையின் ஔவும் ஆகும். (எழு.70) என்ற இயல்பின்கண்ணே கௌ, வெளான மொழிக்கு ஈறாய் நிற்கும் காலத்துக்கண்ணும், (எவ்வாறு நிற்கும் எனின்) அளபெடை நிலையும் காலத்தானும் அளபெடை இன்றித் தான் வருகாலையும் உள என மொழிப பொருள் வேறுபடுதல் - அவை அளபு எடுத்து நிற்கும் காலத்தினும், அளபு எடாது நிற்கும் காலத்தினும் பொருள் வேறுபடுதல் உளது என்று கூறுவர் ஆசிரியர்; குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும் - அப்பொருள் வேறுபாடுதான், சொல்லுவான் குறிப்பினான் உளதாம் ஓசை வேறுபாட்டான் வழிப்படப் புலப்படும். (எ-று)

முன்னர் நின்ற உம்மை சிறப்பும்மை; பின்னர் நின்ற இரண்டும் எண்ணும்மை.

ஆசிரியர் முன்னர்க் கூறியதனை ஈண்டும் இறுதி இல் உயிரே என்று ஒருதலை மொழிதல் என்னும் உத்தியாகக் கூறியமையானும், உரையாசிரியரும் நெட்டெழுத்து ஏழே ஓர் எழுத்து ஒருமொழி (எ.43) என்புழி ஔகாரத்தினை உதாரணம் காட்டாது, கவவோடு இயையின் (எ.70) என்பதனான். கௌ, வௌஎன உதாரணம் காட்டினமையானும் ஈண்டு,

அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை இன்றித் தான்வரு காலையும்

என்னும் இரண்டற்கும் ஔஉ, ஔ என உயிரையே உதாரணமாகக் காட்டுதல் மாறுகொளக் கூறலாம் (பொ.663) என்று உணர்க.

(உ..ம்) கௌஉ என அளபெடுத்தவழி கைக்கொண்டே விடு எனத்துணிவும், கௌ என அளபெடாதவழி நினக்குக் கருத்தாயின் கைக்கொள் என ஐயமும் உணர்த்தும். இஃது வௌ என்பதற்கும் ஒக்கும்.

இனி ஔகாரம் அளபெடுத்துழி உகர ஈறாயே நிற்றலின், ஔஉ என உகர ஈறாகிய ஔகாரமும் ஈண்டுக்கோடும். இது வியப்பு உணர்த்தும். அளபுஎடா ஔகாரம் ஆகாது என்று உணர்க. *(33)*

**சொல்லுவான் குறிப்பான் பொருள் உணர்த்துவன**

284. நன்றுஈற்று ஏயும் அன்று ஈற்று ஏயும்
அந்துஈற்று ஓவும் அன்ஈற்று ஓவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்.

இதுவும் அது.

*(இ..ள்)* நன்று ஈற்று ஏயும் - நன்றினது ஈற்றின்கண்வந்த ஏயும், (நன்றே)

அன்று ஈற்று ஏயும் - அன்றினது ஈற்றின்கண்வந்த ஏயும், (அன்றே)

அந்து ஈற்று ஓவும் - அந்தினது ஈற்றின்கண்வந்த ஓவும் (அந்தோ)

அன்ஈற்று ஓவும் - அன்னினது ஈற்றின்கண்வந்த ஓவும் (அன்றோ)

அன்னபிறவும் குறிப்பொடு கொள்ளும் - அவை போல்வன பிறவும் சொல்லுவான் குறிப்பொடு பொருள் உணர்த்தி நிற்கும் (எ-று)

ஒருவன் கொலை, களவு, கள், காமம், பொய் என்பனவற்றை விரும்புக என்றவழி, அவற்றை விரும்புதல் நன்றே! என்றால் மேவாமைக்குறிப்பு உணர்த்தும்.

நின்றே எறிப பறையினை.......நன்றே காண் (நாலடி.24) என்பது தீது என்னும் குறிப்பு உணர்த்துக.

இஃது ஊழ் அன்றே என்றால் அஃது இங்ஙன் நுகர்வியாது ஒழியுமோ? என்னும் குறிப்பு உணர்த்தும்.

அந்தோ! எந்தை அடையாப் பேரில் (புறநா.261)

அன்னோ என்னா வதுகொல் தானே (புறநா.345)

என்பன இரக்கக் குறிப்பு உணர்த்தும்.

இவ் ஏகார ஓகாரங்கள் பல சொல்லோடு அடுத்து வாராது இச்சொற்களையே அடுத்துப் பொருள் வேறுபட்டு நிற்றலின், அவற்றைப் பெயர்தந்து வேறு கூறினார்.

அன்ன பிறவும் என்றதனான்

அன்னா அலமரும் ஆர் உயிரும்

என்புழி அன்னா இரக்கக் குறிப்பு உணர்த்துதல் கொள்க. இதனை ஓகாரம் ஆகாரமாய்த் திரிந்தது என்றலும் ஆம்.

ஏஏ இவள் ஒருத்தி பேடியோ என்றார் (சீவக.652)

என ஏகாரத்தின்பின் வந்த ஏ இழிபு உணர்த்துதலும்,

அஆ இழந்தான் (நாலடி.9)

எனவும்,

ஐயா என் ஐயா என் ஐயா அகன்றனையே (சீவக.1802)

எனவும்,

ஆஅம்மா அம்மா என் அம்மா அகன்றனையே (சீவக.1804)

எனவும் ஆகாரம் இரக்கக் குறிப்பு உணர்த்துதலும், பிறவும் கொள்க. (34)

**உம்மைகள் மயங்குமாறு**

285. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும்; உடன்நிலை இலவே.

இது முற்கூறிய உம்மைகள் மயங்கும் என்கின்றது.

(இ..ள்) எச்ச உம்மையும் - எச்சப் பொருண்மையினை உடைய உம்மையும். எதிர்மறை உம்மையும் - அதனை முடிக்க வரும் எதிர்மறைப் பொருண்மையினை உடைய உம்மையும், தத்தமுள் மயங்கும் - தொடராய் வந்து தம்முள் மயங்கும். உடன்நிலை இலவே - அங்ஙனம் மயங்கினவேனும் தம்வினை ஒன்றிய முடிபு கொள்ளா. (எ-று)

(உ..ம்) சாத்தனும் வந்தான்; இனிக் கொற்றனும் வரினும் வரும் என்புழிச் சாத்தனும் கொற்றனும் என்னும் எச்ச உம்மைகள் வரினும் என்னும் எதிர்மறை உம்மையொடு தொடர்ந்து நின்று ஒருவினை கொள்ளாது, இறப்பும் எதிர்வும் பற்றிவரும் வேறுவினை கொண்டவாறு காண்க.

இங்ஙனம் உலக வழக்கு உண்மையானும், ஆசிரியர் மயங்கி உடன் நிலை இல என்னாது மயங்கும் உடன் நிலை இல எனச் சூத்திரம் செய்தமையானும், இதுவே பொருள் என்று உணர்க. இவ்விரண்டு உம்மையும் எச்சம் ஆதலின், இவற்றிற்கே மயக்கம் உளது என்று கூறினார்.

ஒன்று என முடித்தல் என்பதனான் வடுகு அரசரும் வந்தார்; இனித் தமிழ் நாட்டு மூவேந்தரும் வரினும் வருவர் என எச்ச உம்மையொடு முற்றும்மை தொடர்ந்து வேறு வினை கோடலும் கொள்க. (35)

**எச்ச உம்மை நிற்கும் இடம்**

286. எஞ்சு பொருட் கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

இஃது எச்ச உம்மைக்கண் சொல்லுதல் வகைமை கூறுகின்றது.

(இ..ள்) எஞ்சு பொருட்கிளவி - எச்ச உம்மையான் தழுவப்படும் எஞ்சு பொருட்கிளவி, செஞ்சொல் ஆயின் பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல் - உம்மை இல் சொல்லாயின் அவ்உம்மை இல் சொல்லை அவ்உம்மைத் தொடர்க்குப்பின் சொல்லாது முன் சொல்லுக. (எ-று)

(உ..ம்) சாத்தன் வந்தான், கொற்றனும் வந்தான்
அடகு புலால்பாகு பாளிதமும் உண்ணான்
கடல்போலும் கல்வி யவன்
எனவரும். பிற்படக் கிளப்பின் பொருள்கொள்ளாமை காண்க.

செஞ்சொல்லாயின் முற்படக் கிளக்க எனவே, உம்மையொடுவரின் பிற்படக்கிளக்க என்ற வாறாம். *(36)*

**முற்றும்மை எச்சு உம்மையாதல்**

287. முற்றிய உம்மை தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும்.

இது முற்றும்மை எச்சஉம்மையாம் பொருள்தரும் எனவமு அமைக்கின்றது.

*(இ..ள்)* முற்றிய உம்மைத் தொகைச் சொல் மருங்கின் - முற்றும்மை அடுத்து நின்ற பெயரும் வினையும் சார்ந்த சொல்லிடத்து, எச்சக்கிளவி உரித்தும் ஆகும் - எச்சச் சொல் உரித்தும் ஆகும். (எ-று)

எனவே, எச்சப்பொருள் குறியாது நிற்றலே பெரும்பான்மை, ஏற்புழிக்கோடலான் இஃது எதிர்மறைக்கண்ணது எனக்கொள்க.

*(உ..ம்)* பத்துங்கொடாஅல், அனைத்தும் கொடாஅல் என்னும் முற்றும்மைகள், சில கிடக்கக்கொடு என எச்சப்பொருள் உணர்த்தி நின்றவாறு காண்க. தொகைச்சொல் என்றதனானே, எல்லாரும் வாரார் எனப் பொருட் பெயர்க்கண்ணும் கொள்க. பத்தும்கொடு, பிறவும் கொடு என்பது கருத்தாயின், அஃது எச்ச உம்மையாம். *(37)*

**ஈற்றசை ஏகாரம் – வேறு ஓர் இலக்கணம்**

288. ஈற்றுநின்று இசைக்கும் ஏஎன் இறுதி
கூற்றுவயின் ஓர்அளபு ஆகலும் உரித்தே.

இஃது ஈற்றசை ஏகாரத்திற்கு வேறோர் இலக்கணம் கூறுகின்றது.

*(இ..ள்)* ஈற்று நின்று இசைக்கும் ஏ என் இறுதி - செய்யுள் இறுதிக்கண் நின்று இசைக்கும் ஈற்றசை ஏகாரம், கூற்றுவயின் -

அச்செய்யுளிடத்துப் பா என்னும் உறுப்பினை நிலை பெறக்கூறும் இடத்து, ஓர் அளபு ஆகலும் உரித்தே - தனக்கு உரிய இரண்டு மாத்திரையே அன்றிப் பின்னரும் ஒரு மாத்திரை உண்டாய் வருதலும் உரித்து. (எ-று)

உம்மையான் மூன்று மாத்திரை பெறாது இரண்டு மாத்திரை பெற்று வருதலும் உரித்து ஆயிற்று. பா என்னும் உறுப்பினை நிலைபெறக் கூறும் இடத்து மூன்று மாத்திரை பெறுவது செய்யுள் இறுதிக்கண் நிற்கும் ஈற்றசையே என்பது அறிவித்தற்கு ஏஎன் இறுதி என மீட்டும் கூறினார்.

(உ..ம்) கடல்போல் தோன்றல காடுஇறந் தோரேஎ (அகநா.1)
அகில்படு கள்ளிஅம் காடுஇறந் தோரேஎ
தண்கடல் வேலிநின் குடநாடு அற்றேஎ

இவை போல்வன பிறசான்றோர் செய்யுள்கண் எல்லாம் மூன்று மாத்திரை பெற்றுப் பா என்னும் உறுப்பை விளக்கி நிற்குமாறு காண்க.

இனி,

அவரே, கேடுஇல் விழுப்பொருள் தருமார் பாசிலை
வாடா வள்ளிஅம் காடு இறந் தோரே (குறுந்.216)

எனச் செய்யுள் இடைக்கண் வரும் ஈற்றசை ஏகாரம் இரண்டு மாத்திரை பெற்றுப் பா என்னும் உறுப்பை விளக்கி நின்றவாறு காண்க. இஃது ஈற்றசை ஆகலின், செய்யுளியலில் கூறும் மாத்திரை என்னும் உறுப்பின்கண் அடங்காது என்று ஈண்டுக் கூறினார், அது பெரும்பான்மை பொருள் தரும் சொற்கே விதி ஆகலின். *(38)*

**எண்களுக்கு முடிபு வேற்றுமை**

**289. உம்மை எண்ணும் எனஎன் எண்ணும்**
**தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே.**

இஃது எண்களுக்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

(இ..ள்) உம்மை எண்ணும் எனஎன் எண்ணும் - உம்மையான் வரும் எண்ணும், எனவான் வரும் எண்ணும், தம்வயின் தொகுதி

கடப்பாடு இலவே - தத்தம் இறுதிக்கண் தொகைச்சொல் பெறுதலை முறைமையாக உடைய அல்ல. (எ-று)

எனவே, தொகை பெற்றும் பெறாதும் வரும் என்பதாம்.

(உ..ம்) உயர்திணைக்கு உரிமையும் அஃறிணைக்கு உரிமையும்
ஆஇரு திணைக்கும் ஓரன்ன உரிமையும்
அம்மூ உருவின தோன்றல் ஆறே (சொ.162)
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி (சொல்.299)
நிலன் என நீர்என‌த் தீ என வளி என நான்கும்
உயிர்என உடல்என இன்றி யமையா

எனவரும்.

தொகை எனப் பொதுப்படக் கூறிய அதனான் எண்ணுப் பெயரே அன்றி, அனைத்தும், எல்லாம் என்னும் தொடக்கத்தனவும் கொள்க. (39)

**எண் ஏகாரம் இடையிட்டும் வருதல்**

290. எண் ஏகாரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக் குறித்து இயலும் என்மனார் புலவர்.

இஃது எண்இடத்து வழு அமைக்கின்றது.

(இ..ள்) எண் - உம்மையும் ஏகாரமும், எனவும், என்றும், எனாவும், என்றாவும், செவ்வெண்ணும் ஆகிய எழுவகை எண்களுள் ஒன்று முதல் நின்று, ஏகாரம் இடையிட்டுக்கொளினும் - ஏகார எண்ணைத் தன் இடத்தே அழைத்துக் கொண்டு நிற்பினும், பிற எண்களைத்தன் இடத்தே அழைத்துக் கொண்டு நிற்பினும், எண்ணுக் குறித்து இயலும் என்மனார் புலவர் - பல எண் வந்தன என்று குற்றம் ஆகா. தான் உணர்த்தும் எண்ணுப் பொருளையே அப்பலவும் குறித்து நடக்கும் என்று கூறுவர் புலவர். (எ-று)

(உ..ம்) மலைநிலம் பூவே துலாக்கோல் என்றுஇன்னர்
உலைவுஇல் உணர்வுஉடை யோர் (பாயிரம்)

தோற்றம் இசையே நாற்றம் சுவையே
உறலோடு ஆங்குஐம் புலன்என மொழிப

இவை செல்வெண் நின்று ஏகார எண்ணை இடையிட்டன. மாத்திரை எழுத்தியல் அசைவகை எனாஅ (செய்.1) என்னும் சூத்திரம் செவ்வெண்நின்று எனா எண்ணை இடையிட்டது. வண்ணம் வடிவே அளவே சுவையே (சொ.79) என்னும் சூத்திரம், செவ்வெண் நின்று, ஏகார எண்ணையும் என்றா என்னும் எண்ணையும் இடையிட்டது. யாத்தசீரே அடி யாப்பு எனாஅ (செய்யு.1) என்பது ஏகார எண் செவ்வெண்ணையும் எனாவையும் இடையிட்டது. ஒழிந்த எண்களும் இவ்வாறு வருமாறு சூத்திரங்களுள்ளும் செய்யுள்கள் உள்ளும் காண்க. (40)

**என்னா, எனா – எண்ணுவழி வருதல்**

291. உம்மை தொக்க எனாஎன் கிளவியும்
ஆஈறு ஆகிய என்றுஎன் கிளவியும்
ஆஇரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.

இஃது எண் உம்மை பிற எண்ணொடு மயங்குங்கால் சிறந்து வரும் என்கின்றது.

(இ..ள்) உம்மை தொக்க எனா எண் கிளவியும் - முன்னர் எண்ணும்மை அடுக்கி நின்ற எனா என்னும் இடைச்சொல்லும், ஆ ஈறு ஆகிய என்று என் கிளவியும் - முன்னர் எண் உம்மை அடுக்கி நின்ற ஆகாரத்தை ஈறாக உடைய என்று என்னும் இடைச் சொல்லும், ஆ இரு கிளவியும் எண்ணுவழிப்பட்டன - அவ்இரண்டு சொல்லும் எண்ணும் இடத்தே சிறந்துவரும். (எ.று)

(உ..ம்) ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா (பொருளி.53) என்னும் சூத்திரம் உம்மை தொக்க என்றாவிற்கு உதாரணம், உம்மைதொக்க எனா வந்துழிக் காண்க.

இனி, உம்மைதொக்க என்பதற்கு நிலன் எனாவும் என ஈற்று நின்ற உம்மைதொக்கு நிலன் எனா என்றல் வழக்கம் இன்மையானும், எனாவும் என்றாவும் எண் இடைச்சொல் ஆதல்

மேலிற் சூத்திரத்தான் பெறப்படுதலானும் இதுவே ஆசிரியர் கருத்து. *(41)*

**எண் இடைச்சொற்களுக்கு முடிபு வேற்றுமை**

292. அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குஉரி மரபின் செவ்வெண் இறுதியும்
ஏயின் ஆகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகைஇன்று இயலா.

இஃது எண் இடைச்சொற்களுக்கு முடிபு வேற்றுமை கூறுகின்றது.

*(இ..ள்)* அவற்றின் வருஉம் எண்ணின் இறுதியும் - முற்கூறிய எனா என்றா என்பனவற்றான் வரும் எண்ணுச் சொற்களின் இறுதியும், பெயர்க்கு உரி மரபின் செவ்வெண் இறுதியும் - இடைச் சொல்லான் அன்றிப்பெயரான் எண்ணப்படும் செவ்வெண்ணின் இறுதியும், ஏயின் ஆகிய எண்ணின் இறுதியும் - ஏகாரத்தான் வரும் எண்ணுச் சொற்களின் இறுதியும், யாவயின் வரினும் தொகை இன்றி இயலா - யாதானும் ஓரிடத்துவரினும் தொகை இன்றி நடவா. (எ-று)

(உ..ம்) நிலன்எனா நீர்எனா இரண்டும் - எனா
நிலன்என்றா நீர்என்றா இரண்டும் - என்றா
நிலன் நீர் என இரண்டும் - செவ்வெண்
நிலனே நீரே என இரண்டும் - ஏ

எனவரும்.

இறுதியும் என்றது அவ்வெண்ணுக்கண் இறுதி தொகைபெறும் என்றற்கு. பெயர்க்கு உரிமரபின் என்றது, மற்றைய எல்லாம் இடைச்சொல்; செவ்வெண்ணுப் பெயர் தம்மாலே ஆம் என்றற்கு. *(42)*

**உம்மை எண்ணின் உருபு தொகுதல்**

293. உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்.

இஃது உம்மையும் உருபும் தொக்கவழியும் உருபுதொகை எனப்படும் எனவழு அமைத்தது.

**(இ..ள்)** உம்மை எண்ணின் - உம்மையான் வரும் எண்ணின்கண் உருபு தொகல் வரையார் - இரண்டாவதும் ஏழாவதும் தொக்கு நிற்றலை (106) நீக்கார் ஆசிரியர். (எ-று)

உம்மை எண் எனப்பொதுப்படக் கூறுதலின், உம்மை தொக்குழியும் விரிந்துழியும் உருபுதொகுதல் கொள்க.

**(உ..ம்)** புலி வில் கெண்டை
யானை தேர் குதிரை காலாள்
என்னும் பல பெயர் உம்மைத்தொகைகண் ஒருசொல் நடையவாய்க் கிடந்தன வந்தன என்னும் தம் வினையாகிய பயனிலைகளைக் கொள்ளும் வழியும்,
புலியும் வில்லும் கெண்டையும் கிடந்தன
யானையும் தேரும் குதிரையும் காலாளும் வந்தன
என உம்மை விரிந்து நின்ற பொருளைத்தந்தே நிற்குமாறுபோல, இவ்உம்மைத் தொகைகண்.
புலி வில் கெண்டையை வைத்தான்
யானை தேர் குதிரை காலாளை எறிந்தான்
என உருபு ஏற்று நின்ற வழியும்
புலியும் வில்லும் கெண்டையும் வைத்தான்
யானையும் தேரும் குதிரையும் காலாளும் எறிந்தான்
என உம்மை விரிந்து நின்ற பொருளைத் தந்தே நிற்றல் வேண்டும். அங்ஙனம் உம்மை விரிந்து நிற்கும் இடத்து வைத்தான் என்னும் வினைமுதல் வினைக்குப் புலியும் வில்லும் கெண்டையும் செயப்படுபொருளாய் இரண்டாம் உருபே விரித்து நிற்றலும், எறிந்தான் என்னும் வினைமுதல் வினைக்கு யானை முதலியன செயப்படுபொருளாய் இரண்டாம் உருபே விரித்து நிற்றலும் உணர்க.

குன்றி கோபம் கொடிவிடு பவளம்
ஒண்செங் காந்தள் ஒக்கும் நின்நிறம்
என்னும் பல பெயர் உம்மைத் தொகைக்கும் உம்மையும் உருபும்

விரித்தே பொருள் உரைக்க. இக்குன்றி முதலியவற்றைச் செவ்வெண் ஆக்கி இவற்றை எனத் தொகை கொடுத்து உருபு விரித்துழியும், அச்சுட்டு அக்குன்றி முதலியவற்றையே சுட்டுதலின், அக்குன்றி முதலியன செயப்படுபொருளாயே நிற்குமாறும் உணர்க. அன்றி அவை செவ்வெண்ணாயின்,

நிலன் நீர் தீவிசும்பு என்ற நான்கின்
அளப்பரியையே (பதிற்.14)

என்றாற்போல உம்மையும் உருபும் விரித்தற்குப் பொருந்தாது எழுவாயாய், நான்கு என்னும் தொகைச் சொற் பயனிலை கொண்டு நிற்றல் வேண்டும் என்று உணர்க.

இவை உம்மைத்தொகைக்கண் உருபுதொக்கன. இங்ஙனம் இரண்டு தொக்கனவற்றை என்ன தொகை என்று கோடுமோ எனின், புலியையும் வில்லையும் கெண்டையையும் வைத்தான் என்று விரித்துழி எண்ணுப்பொருள் தந்து நிற்கும் உம்மையினும், சொற்றொடர்ப்பொருளை உணர்த்தி நிற்கும் உருபு சிறந்தது ஆதலின் அச்சிறப்பு நோக்கி உருபுதொகை என்றேகோடும்.

இனி,

பாட்டும் கோட்டியும் அறியாப் பயம்இல்
தேக்கு மரம்போல் நீடிய ஒருவன்,
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி (சொல்.299)

என்னும் இவை, உம்மை விரிந்து நின்று, உருபு தொக்கன. (43)

**உம்–உந்து ஆதல்**

294. உம் உந்து ஆகும் இடனுமார் உண்டே.

இஃது உம் என்னும் இடைச்சொல் திரியும் என்கின்றது.

(இ..ள்) உம் உந்து ஆகும் இடனுமார் உண்டே - வினை செயல் மருங்கின் காலமொடு வருவனவற்றுள் (252) உம் ஈறு உந்து ஆய்த் திரிதலும் உடைத்து. (எ-று)

(உ..ம்) நீர்க்கோழி கூப்பெயர்க்குந்து (புறநா.395)
நார்அரி நறவின் நாள்மகிழ் தூங்குந்து (புறநா.400)

எனவரும்.

இடனுமார் உண்டே என்பதனான், இத்திரிபு பெயரெச்சத்திற்கே கொள்க. *(44)*

**எண்ணிடைச்சொல் வினைச்சொல்லொடும் வருதல்**

295. வினையொடு நிலையினும் எண்ணு நிலை திரியா;
நினையல் வேண்டும் அவற்றுஅவற்று இயல்பே.

இஃது எண் இடைச்சொற்கள் வினைச்சொற்கண்ணும் வரும் என்கின்றது.

*(இ..ள்)* எண்ணு வினையொடு நிலையினும் நிலை திரியா - எண் இடைச்சொற்கள் - பெயர்ச்சொல்லோடு அன்றி வினைச் சொல்லொடு நிற்பினும் தத்தம் நிலைமையின் திரியா; அவற்று அவற்று இயல்பு நினையல் வேண்டும் - அவற்று அவற்று இலக்கணங்களை ஆராய்ந்து அறிதலை வேண்டும் ஆசிரியன் (எ-று)

*(உ..ம்)* உண்டும் தின்றும் ஊர்ந்தும் ஆடுகம்
செல்வல் அத்தை யானே *(புறநா.166)*

உண்ண எனத் தின்ன எனப் பாட என வந்தான் எனவரும். ஒழிந்த எண் வினையொடு வந்தன உளவேல் காண்க. உண்டுதின்று ஓடி வந்தான் என்பன தொகை இனரேனும் செவ்வெண்ணாம்.

சிறுபான்மை முற்றும் தொகைபெற்று வருதலின், சாத்தன் வந்தான், கொற்றன் வந்தான், வேடன் வந்தான், மூவரும் வந்தமையான் கலியாணம் பொலிந்தது என முற்றுச் செவ்வெண் தொகைபெற்று வரும். இவை எழுவாயும் பயனிலையுமாய் நிற்றலின் எண்ணப்படா எனின், ஒருபொருள் வேறுபாட்டான் எண்ணினார். இதனை இம்மூவரும் வரின் கலியாணம் பொலியும் என்று இருக்கின்றான் கூற்றாகக் கொள்க. முன்னர்ச் சாத்தன் வந்தான்; பின்னர்க் கொற்றன் வந்தான்; அதன் பின்னர் வேடன் வந்தான்; இவர்கள் மூவரும் ஒருங்கு வந்திவரேனும், முடிவில் வந்து நிற்றலின் இது முடிவு போயிற்று என்று கூறினான் ஆதலின். இம்மூவர் என்றமையான், பெயர் தொகை பெற்றதேனும், வந்தமையான் என்றமையான் வினையும் தொகை பெற்று

அவ்வினையான் கலியாணம் முடிந்தவாறும் உணர்க. இம்முற்று அடுத்து வந்தனவும் செல்வெண்ணாம்.

இனி, யாம் கண்ட பொழுது இம்மாடத்துமேல் நின்றானும் இருந்தானும் கிடந்தானும் இவன் என முற்றுச் சொற்கண்ணும் எண்ணும்மை வருதல் கொள்க.

பெயரெச்சத்தில் எண்இடைச்சொல்வாரா. *(45)*

**எண் இடைச்சொற்கள் பிரிந்து சென்று ஒன்றுதல்**

**296. என்றும் எனவும் ஒடுவும் தோன்றி**
**ஒன்றுவழி உடைய எண்ணினுள் பிரிந்தே.**

இஃது எண் இடைச்சொற்கள் பிரிந்து சென்று ஒன்றும் என்கின்றது.

*(இ..ள்)* என்றும் எனவும் ஒடுவும் தோன்றி - என்றும் எனவும் ஒடுவும் என்பன ஒருவழித்தோன்றி, எண்ணினுள் பிரிந்து ஒன்று வழி உடைய - எண்ணினுள் பிறவழியும் பிரிந்து ஒன்றும் இடம் உடைய. *(எ-று)*

*(உ..ம்)* வினை பகை என்று இரண்டின் எச்சம் (குறள்.674)
கண்இமை நொடி என (தொ.எ.7)

பொருள் கருவி காலம் வினை இடனோடு ஐந்தும் (குறள்.675), என்புழி வினை என்று, கண் இமை என, பொருளொடு, கருவியொடு, காலத்தொடு, வினையொடு எனப் பிறவழிச்சென்று ஒன்றியவாறு காண்க.

ஒன்றுவழி உடைய என்றதனாள், சொற்றொறும் நிற்றல் பெரும்பான்மை. அஃது இக்காலத்து அரிது. *(46)*

**இடைச் சொற்களுக்குப் பொருள் கொள்ளுமாறு**

**297. அவ்வச் சொல்லிற்கு அவைஅவை பொருள்என**
**மெய்பெறக் கிளந்த இயல ஆயினும்**

வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினும் தெரிந்தனர் கொளலே.

இஃது எழுவகை இடைச்சொற்கும் பொருள் புறனடை கூறுகிறது.

(இ..ள்) அவ்வச் சொல்லிற்கு அவைஅவை பொருள்என மெய்பெறக் கிளந்த இயல ஆயினும் - முற்கூறிய இடைச் சொற்கள்தாம் அவ்வச் சொற்குக் கூறிய அவையே பொருள் என நிலைபெறச் சொல்லப்பட்ட இயல்பை உடைய ஆயினும், வினையொடும் பெயரொடும் நினையத்தோன்றித் திரிந்து வேறுபடினும் - தாம் அடைந்து வரும் வினையோடும் பெயரோடும் ஆராய்ந்து உணரத் தோன்றி வேறுபொருளவாயும் அசைநிலையாயும் திரிந்துவரினும், தெரிந்தனர் கொளல் - ஆராய்ந்து கொள்க. (எ-று)

வேறு பொருள் என்று உணர்தற்குச் சார்பு - வினையும் பெயரும்.

(உ..ம்) ஓகாரம்
சென்றீ பெருமநிற் றகைக்குநர் யாரோ? (அகம்.46)
என ஈற்றசையாயும்,
கலக்கொண்டன கள் என்கோ
காழ்க்கொண்டன சூடுஎன்கோ (யா.வி.93)
என எண்ணாயும்,
நீங்கினளோஎன் பூங்கண் ணோளே (ஐங்குறு.375)
என இரக்கக் குறிப்பாயும் வந்தது. என என்பது
ஊர் எனப்படுவது உறையூர்
எனச் சிறப்பின் கண் வந்தது.

அவர் நமக்குத் தஞ்சம் அல்லர்
எனத் தஞ்சக்கிளவி பற்று என்கின்றது.
மா : ஓர்கமா தோழிஅவர் தேர்மணிக் குரலே
என முன்னிலைக்கண் அசைச் சொல்லாயும்,

ஒக்கல் வாழ்க்கை தட்குமா காலே (புறநா.193)
என முன்னிலை அன்றி அசைச்சொல்லாயும் வந்தது.

அதுமன் கொண்கன் தேரே
என, மன் அசைநிலையாய் வந்தது.

சாரியை இன் : காப்பின் ஒப்பின் (சொல்.73)
என அசைநிலையாய் வந்தது.

இனி, உருபு பொருண்மை நோக்கிய ஐகாரமும்

நேரை நோக்க நாரரி பருகி
எனவும்,

முனை உண்டவர் உருகும் பசுந்தினைப் பிண்டியும்
எனவும் அசைநிலையாய் வருதலும் கொள்க.

தண்ணென் றிசினே பெருந்துறைப் புனலே (ஐங்குறு.73)
விசும்புஇழி தோகைச் சீர்போன் றிசினே (ஐங்குறு.74)
என்பன தண்ணென்றது, போன்றது என முற்றுச்சொற்கண் சின் அசை நிலைப்படுதலும் கொள்க. பிறவும் செய்யுட்கண் வேறுபடுவன எல்லாம் இதனான் அமைத்துக்கொள்க. (47)

**இடைச்சொற்களுக்குப் புறனடை**

**298. கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்**
**கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே.**

இஃது அவற்றிற்குச் சொற் புறனடை கூறுகின்றது.

(இ..ள்) கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும் - மேல் சார்பும் இடமும் குறிப்பும் பற்றிச் சொல்லப்பட்டன அன்றி வேறு பிறவரினும், கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளல் - அவற்றையும் - அச்சொற்களின் மூவகையாகக் கூறிய இலக்கணத்தான் உணர்ந்துகொள்க. (எ-று)

(உ..ம்) சிறிது தவிர்ந்தீக மாளநின் பரிசிலர் உய்ம்மார்
எனமாளவும்,

சொல்லேன் தெய்ய நின்னொடு பெயர்ந்தே
எனத் தெய்யவும்,

அறிவார் யார்அஃது இறுவுழி இறுகென

என எனவும்,

அஞ்சுவது ஓரும் அறனே (குறள்.366)

என ஓரும்,

செலியர் அத்தை நின்வெகுளி (புறநா.6)

என அத்தையும்,

செழுந்தேர் ஓட்டியும் வென்றீ

என ஈகாரமும்,

காதல் நன்மா நீமற் றிசினே

எனஇசினும்,

பணியுமாம் என்றும் பெருமை (குறள்.978)

என ஆமும்,

ஈங்கு ஆயினவால் என்றிசின் யானே (நற்.55)

என ஆலும்,

புனல் கன்னிகொண்டு இழிந்தது என்பவே (சீவக.39)

என என்பவும்,

சேவடி சேர்தும் அன்றே (சீவக.1)

என அன்றும் அசைநிலையாய் வந்தன.

குன்றுதொறு ஆடலும் நின்றதன பண்பே (முருகு.217)

எனத்தொறு தான்சார்ந்த மொழிக்குப் பன்மையும் இடமும் உணர்த்திற்று. இது

நாள்தோறும் நாடி (குறள்.355)

என நீண்டும் நிற்கும்.

ஆ என்பது வியப்பு உள்வழியும், மறுத்தல் உள் வழியும் பொருள் உணர்த்துதலும்; ஐ என்றது, இசை உள்வழியும் வருத்தம் உள்வழியும் பொருள் உணர்த்துதலும் கொள்க.

பொள்ளென, பொம்மென, கதுமென - இவை விரைவு உணர்த்தின.

கொம்மென என்பது பெருக்கம் என்னும் குறிப்பு உணர்த்திற்று.

ஆனம், ஏனம், ஓனம் என்பன எழுத்துச் சாரியை. எப்பொருள் எத்தன்மைத்து ஆயினும் (குறள்.355) எனவரும் எகர வினாவும் கொள்க.

அங்கு இங்கு உங்கு எங்கு என எழுத்தினுள் இடப்பொருள் உணர்த்தும் என்றனவும் இவை நீண்டு வருவனவும், பிறவாற்றான் வருவனவும் இதனான் கொள்க. *(48)*

**இடையியல் முற்றும்.**

## நச்சினார்க்கினியர் உரை
## 8. உரியியல்

**உரிச்சொற்குப் பொது இலக்கணம்**

299. உரிச்சொல் கிளவி விரிக்குங் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்
பயிலாத வற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் ஆயினும் பொருள்வேறு கிளத்தல்.

என்பது சூத்திரம். தமக்கு இயல்பு இல்லா இடைச்சொல் போலாது, இசை, குறிப்பு, பண்பு என்னும் பொருட்குத்தாமே உரியவாய் வருதலின், இஃது உரிச்சொல் ஒத்து என்னும் பெயர்த்து ஆயிற்று. ஈறு பற்றிப் பல பொருள் விளக்கலும் உருபு ஏற்றலும் இன்றிப் பெயரையும் வினையையும் சார்ந்து பொருள் குணத்தை விளக்கலின், உரிச்சொல் பெயர் வினையின் வேறு என உணர்க. இச்சூத்திரம் உரிச்சொற்கு எல்லாம் பொது இலக்கணம் கூறுகின்றது.

(இ..ள்) உரிச்சொல் கிளவி விரிக்குங்காலை - உரிச்சொல்லாகிய சொல்லை விரித்து உணர்த்தும் இடத்து, ஒருசொல் பல பொருட்கு உரிமை தோன்றினும், பல சொல் ஒரு பொருட்கு உரிமை தோன்றினும் - அஃது ஒரு சொல் ஒரு பொருட்கு உரித்தாய்வாராது பல பொருட்கு உரித்தாய் மயங்கிவரினும், பலசொல் ஒரு பொருட்கு உரியவாய் மயங்கிவரினும், இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப் பெயரினும் வினையினும் மெய்தடுமாறித் தத்தம் மரபின் சென்று நிலை மருங்கின் - இசைப் பொருண்மைக்கண்ணும் மனத்தான் குறித்து உணரும் பொருண்மைக்கண்ணும் பண்புப் பொருண்மைக் கண்ணும் வெளிப்பட்டுப் பெயர் வினைகள் போன்றும் அவற்றிற்கு முதல்நிலையாயும் தம் உருபு தடுமாறித் தத்தமக்குஉரிய

முறைமையான் சென்று நிற்கும் நிலைக்களங்களானே. எச்சொல் ஆயினும் பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்திப் பொருள்வேறு கிளத்தல் - கேட்போனால் பொருள் உணரப்படாத எவ்வகைப்பட்ட சொல்லாயினும் பயிலப்படாத சொல்லைப் பயின்றவற்றொடு சேர்த்திப் பொருளை வேறுவேறு சொல்லுக. (எ-று)

அது மயங்கிவரினும், நிலைக்களங்களானே சேர்த்தி வேறுவேறு கிளத்தல் என வினை முடிபு செய்க.

பண்பு பொறியான் அறியப்படும் குணம்.

கறுப்பு - பெயர்ப்போலி
தவ - வினைப்போலி
துவைத்தல் - பெயர்க்கு முதல் நிலை
தாவாத - வினைக்கு முதல் நிலை

பலவும் ஓதினாரேனும் உரிச்சொற்கு இலக்கணம் மூவகைப் பொருளும் பற்றி வருதலேயாம். (1)

**வெளிப்பட வாரா உரிச்சொல்**

300. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன.

இஃது உரிச்சொற்களுள் யான் கூறப்படுவன இவை என்கின்றது.

*(இ..ள்)* வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா - பொருள் புலப்பட்ட உரிச்சொற்கள் எல்லாரும் அறிதலின் எடுத்து ஓதிப்பொருள் உணர்த்துதல் வேண்டா, வெளிப்பட வாரா உரிச்சொல்மேன - பொருள் புலப்பட வாராத உரிச்சொல் மேலன யான் பொருள் புலப்பட ஓதுதல். (எ-று)

**உறு தவ நனி**

301. அவைதாம்,
உறு தவ நனி என வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப.

இது குறிப்புப் பொருள் பற்றி வரும் உரிச்சொல் பொருள்படுமாறு கூறுகின்றது.

(இ..ள்) அவைதாம் - வெளிப்படவாராத உரிச்சொற்கள்தாம், (யாவை எனின்), உறு தவ நனி என வருஉம் மூன்றும் - உரு எனத் தவ என நனி என வருகின்ற மூன்று உரிச்சொற்களும், மிகுதி செய்யும் பொருள என்ப - மிகுதி என்னும் உரிச்சொல் காட்டும் குறிப்புப் பொருளை உடைய என்று கூறுவர் புலவர். (எ-று)

குறிப்புச் சொல் பரப்பு உடைமையின் முற்கூறினார்.

(உ..ம்) உறுகால் ஒற்ற ஒல்கி ஆம்பல் (நற்.300)
ஈயாது வீயும் உயிர்தவப் பலவே (புறநா.235)
வந்து நனி வருந்தினை வாழிஎன் நெஞ்சே (அகநா.19)
எனவரும்.

**உரு, புரை**

302. உருஉட்கு ஆகும்; புரை உயர்வு ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) உரு உட்கு ஆகும் - உரு என்னும் உரிச்சொல் உட்குதல் என்னும் உரிச்சொல்லது குறிப்புப் பொருட்டாம்; புரை உயர்வு ஆகும் - புரை என்னும் உரிச்சொல் உயர்வு என்னும் உரிச்சொல்லது குறிப்புப் பொருட்டாம். (எ-று)

(உ..ம்) உருகெழு ஞாயிற்று ஒண்கதிர் மிசைந்த (புறநா.160)
புரைய மன்ற புரையோர் கேண்மை (நற்.1)
எனவரும்.

உருவக் குதிரை மழவர் ஓட்டிய (அகநா.1)
உருவம் என்று உரைத்தி யாயின் (சீவக.1585)
என உரு வடிவு அழகையும், புரைதீர் கேள்விப் புலவரான எனப் புரை குற்றத்தையும் உணர்த்துதல் கூறிய கிளவிப்பொருள்நிலை அல்ல (சொல்.390) என்னும் சூத்திரத்தான் கொள்க. (4)

**குரு, கெழு**

303. குருவும் கெழுவும் நிறன்ஆ கும்மே.

இது பண்பு.

*(இ..ள்)* குருவும் கெழுவும் நிறன் ஆகும்மே - குரு என்னும் உரிச்சொல்லும், கெழு என்னும் உரிச்சொல்லும் நிறன் என்னும் உரிச்சொல்லது பண்புப் பொருளாம். (எ-.று)

*(உ..ம்)* குருமணித் தாலி,
*நறுஞ் சாந்து புலர்ந்த கேழ்கிளர் அகலம் (மதுரைக்.493)*
எனவரும்.
குரூஉத்துளி பொழிந்த,
*குரூஉக்கண் இறடிப்பொம்மல் (மலைபடு.169)*
எனக் குருநீடலும், *செங்கேழ் மென்கொடி ஆழி அறுப்ப (அகம்.86)* என கெழு கேழ் என நீடலும் ஈறு கெடுதலும். எழுத்துப் பிரிந்து இசைத்தல் இவண்இயல்பு இன்றே (சொ.395) என்பதனான் கொள்க. கெழு என்று வரும் இடம் உளதாயின் கொள்க. இக்கெழு பொருத்தத்தை உணர்த்துதலும், கெழுமுதல் என்னும் வழக்கிற்கு முதல் நிலையாய் நிற்றலும் கூறிய கிளவி (390) என்பதனான் கொள்க. மேல்வரும் சூத்திரங்கட்கும் இவ்வாறே பொருள் கூறுக. (5)

**செல்லல், இன்னல்**

304. செல்லல் இன்னல் இன்னா மையே.

இது குறிப்பு.

*(இ..ள்)* செல்லல் இன்னல் இன்னாமையே - செல்லலும் இன்னலும் இன்னாமை என்னும் குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* மணம்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல் (அகநா.22)
*வெயில்புறம் தரூஉம் இன்னல் இயக்கத்து (மலைபடு.374)*
எனவரும். (6)

**மல்லல், ஏ**

305. மல்லல் வளனே; ஏ பெற்று ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) மல்லல் வளனே - மல்லல் செல்வம் என்னும் குறிப்பினையும் ஏ பெற்று ஆகும் - ஏ என்பது பெருக்கம் என்னும் குறிப்பினையும் உணர்த்தும். (எ-று)

பெற்று அடுக்குதலும் ஆம்.

(உ..ம்) மல்லல் மார்பு அடுத்தனன் புல்லுமாறு எவனோ,
ஏகல் அடுக்கத்து இருள் அளைச்சிலம்பின் (அகநா.52)
என வரும். (7)

**உகப்பு, உவப்பு**

306. உகப்பே உயர்தல்; உவப்பே உவகை.

இதுவும் அது.

(இ..ள்) உகப்பே உயர்தல் உவப்பே உவகை - உகப்பு உயர்வு என்னும் குறிப்பினையும், உவப்பு உவகை என்னும் குறிப்பினையும் உணர்த்தும். (எ-று)

(உ..ம்) விசும்பு உகந்து ஆடாது இரைதேர்ந்து உண்ணாது, உவந்து உவந்து, ஆர்வநெஞ்சமோடு ஆய்நலன் அளைஇ (அகநா.35) எனவரும். (8)

**பயப்பு**

307. பயப்பே பயனாம்

இதுவும் அது.

(இ..ள்) பயப்பே பயனாம் - பயப்புப் பயன் என்னும் குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* பயவாக், களர் அனையர் கல்லாதவர் (குறள்.406)
எனவரும். *(9)*

**பசப்பு**

308. பசப்பு நிறன் ஆகும்

இது பண்பு.

*(இ..ள்)* பசப்பு நிறன் ஆகும் - பசப்பு நிறன் என்னும் பண்பை உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* மைஇல் வாள்முகம் பசப்பு ஊரும்மே (கலி.7)
எனவரும். *(10)*

**இயைபு**

309. இயைபே புணர்ச்சி

இது குறிப்பு.

*(இ..ள்)* இயையே புணர்ச்சி - இயைபு கூட்டம் என்னும் குறிப்பு உணர்த்தும் (எ-று)

*(உ..ம்)* வளன்வலி யுறுக்கும் உளம்இ லாளரோடு
இயைந்த கேண்மை இல்லா கியரோ (புறநா.190)
எனவரும். *(11)*

**இசைப்பு**

310. இசைப்பு இசை ஆகும்.

இஃது இசை கூறுகின்றது.

*(இ..ள்)* இசைப்பு இசை ஆகும் - இசைப்பு இசைப் பொருண்மையை உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* வாயில் தோன்றி யாழ் இசையூப் புக்கு எனவரும். *(12)*

**அலமரல், தெருமரல்**

311. அலமரல் தெருமரல் ஆஇரண்டும் சுழற்சி.

இது குறிப்பு.

அலமரல் தெருமரல் ஆ-இரண்டும் சுழற்சி - அலமரல் தெருமரல் ஆகிய அவ்விரண்டும் மனத்தடுமாற்றம் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* அலமரல் ஆயம் (ஐங்குறு.*64*)

தெருமரல் உள்ளமோடு அன்னையும் துஞ்சாள் எனவரும். உலமரல் சொல் புறனடையான் கொள்க. *(13)*

**மழகுழ**

312. மழவும் குழவும் இளமைப் பொருள.

இதுவும் அது.

*(இ..ள்)* மழவும் குழவும் இளமைப்பொருள - மழவும் குழவும் இளமை என்பதன் குறிப்புப் பொருண்மையை உடைய. (எ-று)

*(உ..ம்)* வரைபுரையும் மழகளிற்றின்மிசை (புறநா.*38*)

தடமருப்பு எருமை மடநடைக் குழவி (நற்.*120*)

எனவரும். *(14)*

**சீர்த்தி, மாலை**

313. சீர்த்தி மிகுபுகழ்; மாலை இயல்பே.

இதுவும் அது.

*(இ..ள்)* சீர்த்தி மிகுபுகழ் மாலை இயல்பே - சீர்த்தி மிகுபுகழும், மாலை இயல்பும் ஆகிய குறிப்பு உணர்த்தும் (எ-று)

*(உ..ம்)* வயக்கம் சால் சீர்த்தி,
இரவரல் மாலையனே (குறிஞ்சிப்.239) எனவரும். *(15)*

**கூர்ப்பு, கழிவு**

314. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்.

இதுவும் அது.

*(இ..ள்)* கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும் - கூர்ப்பும் கழிவும் முள்சிறவாது உள்ளது ஒன்று சிறத்தல் ஆகிய குறிப்பு உணர்த்தும். *(எ-று)*

*(உ..ம்)* இயங்கா வையத்து வள்ளியோர் நசைஇத்
துனிகூர் எவ்வமொடு *(சிறுபாண்.38,39)*
சினனே காமம் கழிகண் ணோட்டம் (பதிற்.22)

எனவரும். *(16)*

**கதழ்வு, துனைவு**

315. கதழ்வும் துனைவும் விரைவின் பொருள.

*(இ..ள்)* கதழ்வும் துனைவும் விரைவின் பொருள - கதழ்வும் துனைவும் விரைவு என்னும் சொல்லினது குறிப்பு உடைய. (எ.று)

*(உ..ம்)* அண்டர், கயிறு அரி எருத்தின் கதழும் துறைவன் *(குறுந்.117)*, துனைபரி துரக்கும் துஞ்சாச்செலவின் *(அகநா.9)* எனவரும். *(17)*

**அதிர்வு, விதிர்ப்பு**

316. அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்

இதுவும் அது.

*(இ..ள்)* அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும் - அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) அதிர வருவது ஓர் நோய் (குறள்.429)
விதிர்ப்புறவு அறியா ஏமக்காப்பினை (புறநா.20)
எனவரும். (18)

**வார்தல் போகல் ஒழுகல்**

**317. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்**
**நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள.**

இது பண்பு.

(இ..ள்) வார்தல் போகல் ஒழுகல் மூன்றும் நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள - வார்தல், போகல், ஒழுகல் என்னும் மூன்று சொல்லும், நேர்மையும் நெடுமையும் உணர்த்தும் பண்பினைத் தமக்குப் பொருளாக உடைய. (எ-.று)

(உ..ம்) வார்ந்து இலங்கு வைஎயிற்றுச் சின்மொழி அரிவையை (குறுந்.14)
தெள்அறல் தழீஇய வார்மணல் அடைகரை (அகநா.34)
எனவும், போகுகொடி மருங்குல், திரிகாய் விடத்தரொடு காருடை போகி (பதிற்.13) எனவும்,
ஒழுகு கொடி மருங்குல்,
மால்வரை ஒழுகிய வாழை (சிறுபாண்.21)
எனவும் வரும். (19)

**தீர்தல், தீர்த்தல்**

**318. தீர்தலும் தீர்த்தலும் விடல்பொருட்டு ஆகும்.**

இது குறிப்பு.

(இ..ள்) தீர்தலும் தீர்த்தலும் விடற்பொருட்டு ஆகும் - தீர்தலும் தீர்த்தலும் விடல் என்னும் உரிச்சொல்லது குறிப்புப் பொருண்மையை உடைத்தாம். (எ-று)

(உ..ம்) துணையின் தீர்ந்த கடுங்கண் யானை (நற்.108),

நங்கையைச் செற்ற திங்கு தீர்த்துநீர் கொண்மின் (சீவக.1275) எனவரும்.

இதனானே, விடல் என்னும் உரிச்சொல் அடியாகப் பிறக்கும் பெயரும் வினையும் தன்வினையும் பிறவினையும் பற்றிப் பிறக்கும் என்பது உணர்த்தற்கு விடல் பொருட்டு என்றார். இயைபு என்பதற்கு இயைப்பு என வழங்காது இயைக்க, இயைவிக்க என வேறுபட்டு வழங்குதலின், தன் வினை பிறவினையுடன் ஓதார் ஆயினார்.

ஒன்று என முடித்தலான் பிளத்தல், அணங்கல் என்றாற் போலத் தன்வினை பிறவினைக்குப் பொதுவாய் வருவனவும் கொள்க. இப்பிறவினை தீர்வித்தல், தீர்ப்பித்தல் என வாய்பாடு வேறுபட்டு இக்காலத்து வழங்குமாறும் உணர்க. (20)

**கெடவரல், பண்ணை**

319. கெடவரல் பண்ணை ஆஇரண்டும் விளையாட்டு.

இதுவும் அது.

(இ..ள்) தெடவரல் பண்ணை ஆ-இரண்டும் விளையாட்டு - கெடவரல், பண்ணை என்னும் அவ்விரண்டும் விளையாட்டு ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) கெடவரல் ஆயமொடு, பண்ணைத் தோன்றிய எண்ணான்கு பொருளும் (மெய்ப்.1) எனவரும். விளையாட்டு என்பது விளையாட்டுக் கருத்தினை. (21)

**தட கய நனி**

320. தடவும் கயவும் நளியும் பெருமை

இது பண்பு.

(இ..ள்) தடவும் கயவும் நளியும் பெருமை - தடவும் கயவும் நளியும் பெருமையாகிய பண்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) வலிதுஞ்சு தடக்கை வாய்வாள் குட்டுவன் (புறம்.394),
இரும்பிடிகன்றொடு விரைஇய கயவாய்
பெருங்கை யானை (அகநா.118),
நளிமலை நாடன் நள்ளி அவன் எனவே (புறநா.150)
எனவரும்.
கயவர் (குறள்.1076)
என்பது வழக்கு. (22)

தட – வளைவு

321. அவற்றுள்,
தடஎன் கிளவி கோட்டமும் செய்யும்.

இஃது எய்தியதன் மேல் சிறப்புவிதி.

(இ..ள்) அவற்றுள் தட என் கிளவி கோட்டமும் செய்யும் - முற்கூறிய மூன்றனுள், தட என்னும் சொல் கோட்டம் என்னும் பண்பினையும் உணர்த்தும். (எ-று)

(உ..ம்) தடமருப்பு எருமை (நற்.120) எனவரும். (23)

கய – மென்மை

322. கயஎன் கிளவி மென்மையும் ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) கய என் கிளவி மென்மையும் ஆகும் - கய என்னும் சொல் மென்மை என்னும் பண்பினையும் உணர்த்தும். (எ-று)

(உ..ம்) கயந்தலை மடப்பிடி (நற்.137) எனவரும். (24)

நளி – செறிவு

323. நனி என் கிளவி செறிவும் ஆகும்.

இதுவும் அது.

*(இ..ள்) நளி என் கிளவி செறிவும் ஆகும் - நனி என்னும் சொல் செறிவு என்னும் குறிப்பினையும் உணர்த்தும். (எ-று)*

*(உ..ம்) சிலைப்புவல் ஏற்றின் தலைக்கை தந்துநீ*
*நளிந்தனை வருதல் உடன்றனள் ஆகி (பதிற்.52)*
*எனவரும். (25)*

**பழுது**

**324. பழுது பயம் இன்றே.**

இது குறிப்பு.

*(இ..ள்) பழுது பயம் இன்றே - பழுது பயம் இன்மை ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)*

*(உ..ம்) பழுது கழி வாழ்நாள் எனவரும்.*

*பழுது குற்றத்தை உணர்த்துதல் வழக்கு. (26)*

**சாயல்**

**325. சாயல் மென்மை.**

இது பண்பு.

*(இ..ள்) சாயல்மென்மை - சாயல் என்னும் சொல் மெய் வாய் கண் மூக்கு செவி என்னும் ஐம்பொறியான் நுகரும் மென்மையை உணர்த்தும். (எ-று)*

*(உ..ம்) மயில்சாயல் மகள் வேண்டிய (பு.வெ.மா)*
*சாயல் மார்பு நனி அலைத்தன்றே (பதிற்.16)*
*என இவை ஒளியானும் ஊற்றானும் பிறந்த மென்மை உணர்த்தின. அமிர்து அன்ன சாயல் (சீவக.8) என்பது தன்னை நுகர்ந்தார் பிறிது நுகராமல் தடுக்கும் மென்மையை உணர்த்தவே, பல மென்மையும் அடங்கின. ஒழிந்தன வந்துழிக் காண்க. (27)*

**முழுது**

326. முழுதுஎன் கிளவி எஞ்சாப் பொருட்டே.

இது குறிப்பு.

*(இ..ள்)* முழுது என் கிளவி எஞ்சாப் பொருட்டே - முழுது என்னும் சொல் எஞ்சாமையாகிய குறிப்பு உணர்த்தும் (எ.று)

*(உ..ம்)* மண் முழுது ஆண்ட நின் முன்னோர் போல
எனவரும். *(28)*

**வம்பு**

327. வம்புநிலை யின்மை.

இதுவும் அது.

*(இ..ள்)* வம்பு நிலையின்மை - வம்பு நிலையின்மையாகிய குறிப்பு உணர்த்தும் (எ-று)

*(உ..ம்)* வம்ப மாரியைக் கார் என மதித்தே (குறுந்.66)
எனவரும். *(29)*

**மாதர்**

328. மாதர் காதல்.

இதுவும் அது.

*(இ..ள்)* மாதர் காதல் - மாதர் காதல் என்னும் குறிப்பினை உணர்த்தும் (எ-று)

*(உ..ம்)* மாதர் கொள் மான் நோக்கின் மடநல்லாய் (கலி.56)
எனவரும். *(30)*

**நம்பு, மே**

329. நம்பும் மேவும் நசையா கும்மே.

இதுவும் அது.

(இ..ள்) நம்பும் மேவும் நசை ஆகும்மே - நம்பும் மேவும் நசை என்னும் குறிப்பினை உணர்த்தும். (எ-று)

(உ..ம்) நயந்து நாம்விட்ட நன்மொழி நம்பி (அகநா.138) எனவும்,
பேரிசை நவிரம் மேஎய் உறையும்
காரி உண்டிக் கடவுள் (மலைபடு.82,83)
எனவும் வரும். (31)

**ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாய்தல்**

330. ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.

இதுவும் அது.

(இ..ள்) ஒய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய் ஆவயின் நான்கும் - ஒய்தல், ஆய்தல், நிழ்த்தல், சாய்தல் என்னும் உரிச்சொல் முதல்நிலையும் ஆகிய அவ்விடத்துவந்த குறிப்புப் பெயர் நான்கும், உள்ளதன் நுணுக்கம் - பண்டு உள்ளது ஒன்றனது நுணுகுதலை உணர்த்தும். (எ-று)

சாய்தல் - விகாரப்பட்டது.

(உ..ம்) வேனில் உழந்த வறிது உயங்கு ஓய்களிறு (கலி.7)
பாய்ந்து ஆய்ந்த தானை பரிந்து ஆனா மைந்தினை (கலி.96)
நிழத்த யானை மேய்புலம் படர (மதுரைக்.303)
கயல்அறல் எதிரக் கடும்புனல் சாஅய் (நெடுநல்.18)
எனவரும். ஆய்ந்த தானை என்றது பொங்குதல் அவிதலான் நொசிந்ததுகில் என்றவாறு. (32)

**புலம்பு**

331. புலம்பே தனிமை.

இதுவும் அது.

(இ..ள்) புலம்பே தனிமை - புலம்பு தனிமை என்னும் குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) புலிப்பல் கோத்த புலம்பு மணித்தாலி (அகநா.7) எனவரும். தமி என்பது சொல்புறனடையான் கொள்க.

**துவன்று**

332. துவன்று நிறைவு ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) துவன்று நிறைவு ஆகும் - துவன்று நிறைவு என்னும் குறிப்பு உணர்த்தும் என்றவாறு.

(உ..ம்) ஆரியர் துவன்றிய பேரிசை இமயம் (பதிற்.11) எனவரும். (34)

**முரஞ்சல்**

333. முரஞ்சல் முதிர்வே.

இதுவும் அது.

(இ..ள்) முரஞ்சல் முதிர்வே - முரஞ்சல் முதிர்வு என்னும் குறிப்பு உணர்த்தும் (எ-று)

(உ..ம்) கோடுபல முரஞ்சிய கோளி ஆலத்து (மலைபடு.268) எனவரும்.

**வெம்மை**

334. வெம்மை வேண்டல்

இது பண்பு.

(இ..ள்) வெம்மை வேண்டல் - வெம்மை விரும்புதல் ஆகிய பண்பை உணர்த்தும். (எ-று)

எம்வெம் காமம் இயைவது ஆயின் (அகநா.15)

எனவரும். இது,

குழைமாண் ஒள்ளிழை நீ வெய்யோளொடு (அகநா.6)

எனத் திரிந்தும் நிற்கும்.

வெம்மை வெப்பம் உணர்த்துதல் வழக்கு. (36)

**பொற்பு**

335. பொற்பே பொலிவு

இது குறிப்பு.

(இ..ள்) பொற்பே பொலிவு - பொற்பு பொலிவு என்னும் குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) பெருவரை அடுக்கும் பொற்பச் சூர்மகள் (நற்.34) எனவரும். (37)

**வறிது**

336. வறிதுசிறிது ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) வறிது சிறிது ஆகும் - வறிது சிறிது என்னும் குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) வறிது வடக்கு இறைஞ்சிய சீர்சால் வெள்ளி (பதிற்.24)

**எற்றம்**

337. எற்றம் நினைவும் துணிவும் ஆகும்

இதுவும் அது.

(இ..ள்) எற்றம் நினைவும் துணிவும் ஆகும் - எற்றம் நினைவும் துணிவும் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) கானவர் சேர்ப்பன் கொடுமை எற்றி (குறுந்.145)
எற்றமில் லாட்டி என் ஏமுற்றாள் (கலி.144) எனவரும். (39)

**பிணை, பேண்**

338. பிணையும் பேணும் பெட்பின் பொருள

இது குறிப்பும் பண்பும் உணர்த்துகின்றது.

(இ..ள்) பிணையும் பேணும் பெட்பின் பொருள - பிணையும் பேணும் பெட்பு என்னும் உரிச்சொல்லினது பொருளை உடையவாய். (எ-று)

பெட்பு என்பது புறந்தருதலும் விரும்புதலும் ஆகிய குறிப்பும் பண்பும் உணர்த்தும். சிறுபான்மை பெட்பநகும் *(சீவக.1662)* எனப் பெருமையும் உணர்த்தும்.

(உ..ம்) அரும்பினை அகற்றி வேட்ட ஞாட்பினும்,
யானும் பேணினென் அல்லனோ மகிழ்ந (அகநா.16)
இவை புறந்தருதல் உணர்த்தின.

பெற்றோற் பெட்கும் பிணையை ஆக என (அகநா.86)
என்புழிக் கணவனைப் புறந்தரும் விருப்பத்தை உடையை ஆவாய் எனப் பிணை விருப்பத்திற்குவந்தது.

அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும் (புறநா.99)
இது விருப்பம் உணர்த்திற்று.

பெட்டவாயில் பெற்று இரவு வலியுறுப்பினும்
(பொ.கள.11)

காய்தலும் உவத்தலும் பிரித்தலும் பெட்டலும்
(பொ.கற்.6)

என ஆசிரியர் பெட்பின் பகுதியாகிய பெட்டு என்னும் உரிச்சொல்லை உடம்பொடு புணர்த்து ஓதியவாறும் காண்க.

*(40)*

**பணை**

339. பணையே பிழைத்தல்; பெருப்பும் ஆகும்.

இது குறிப்பு.

*(இ..ள்)* பணையே பிழைத்தல் பெருப்பும் ஆரும் - பணை பிழைத்தலாகிய குறிப்பு உணர்த்துதலே அன்றிப் பெருப்பு ஆகிய குறிப்பும் உணர்த்தும். (எ-று)

பெருமை ஆகிய பண்பு உணர்த்தாது பெருத்தல் ஆகிய குறிப்பு உணர்ந்துதற்குப் பெருப்பு என்றார்.

*(உ..ம்)* அமர்க்கண் ஆமான் அருநிறம் மூழ்காது
பணைத்துவீழ் பகழிப் போக்கு நினைந்து கானவன்
*(நற்.165)*

வேய்மருள் பணைத்தோள் நெகிழச் சேய்நாட்டு
*(அகநா.1)*

எனவரும். இப்பணை மூங்கிலினை உணர்த்தல் உரிச்சொல் அன்மை அறிக. *(41)*

**படர்**

340. படரே உள்ளல்; செலவும் ஆகும்.

இதுவும் அது.

*(இ..ள்)* படரே உள்ளல் செலவும் ஆகும் - படர் உள்ளுதல் என்னும் குறிப்பு உணர்த்துதலே அன்றிச் செலவு என்னும் குறிப்பும் உணர்த்தும். (எ-று)

உள்ளல் வருத்தக் குறிப்பான் உள்ளுதலும் வகுத்தக் குறிப்பு இன்றி உள்ளுதலும் என இருவகைத்து ஆகலின், செலவுப் பொருட்டு ஆகிய படரும் இவ்இருவகையும் உடைத்து.

*(உ..ம்)* வள்ளியோர்ப் படர்குவர் புலவர் யானும் (புறநா.154)

*கறவை கன்றுவயின் படர (குறுந்.108)*
*பசந்த மேனியொடு படர்அட வருந்தி (புறநா.159)*

எனவும் வரும். *(42)*

**பையுள், சிறுமை**

341. பையுளும் சிறுமையும் நோயின் பொருள.

இதுவும் அது.

(இ..ள்) பையுளும் சிறுமையும் நோயின் பொருள - பையுளும் சிறுமையும் நோய் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ...ம்) பையுள் மாலைப் பழுமரம் படரிய (தொ.கள.23 நச்)
சிறுமை உறுபவோ செய்பு அறியலரே (நற்.1)

எனவரும். *(43)*

**எய்யாமை**

342. எய்யா மையே அறியா மையே.

இதுவும் அது.

(இ..ள்) எய்யாமையே அறியாமையே - எய்யாமை அறியாமையாகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) எய்யா மையலை நீயும் வருந்துதி (குறிஞ்சிப்.8) எனவரும்.

அறிதல் என்னும் உடன்பாட்டிற்கு மறை ஆகிய அறியாமை என்னும் உரிச்சொல்லான் எய்யாமையை உணர்த்தவே, அவ் எய்யாமை மறைச்சொல் என்பதூஉம், அதற்கு எய்த்தல் என்னும் உடன்பாட்டுச்சொல் உளது என்பதூஉம் பெற்றாம். அவ்உடன்பாட்டை ஓதாது மறையை ஓதினார், மறைச்சொல்லும் உரிச்சொல்லாய் வரும் என்றற்கு. எய்த்துநீர்ச் சிலம்பின் குரைமேகலை (சீவக.2481) என்புழி எய்த்து என்பது அறிந்து என்னும் பொருள் உணர்த்திற்று.

நன்று

343. நன்று பெரிது ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) நன்று பெரிது ஆகும் - நன்று பெரிது என்றும் குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) நன்றும் அரிதுற்றனையால் பெரும (அகநா.10) எனவரும். பெருமை என்னாது பெரிது என்றதனான் நன்று என்பது வினை எச்சம் ஆயிற்று. (45)

தா

344. தாவே வலியும் வருத்தமும் ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) தாவே வலியும் வருத்தமும் ஆகும் - தா வலியும் வருத்தமும் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) தாவில் நன்பொன் தைஇய பாவை (அகநா.212)
தாவாக் கொள்கைத் தகைகால் சிறப்பின்
எனவரும். தாவாக் கொள்கை வருத்தம் இல்லாத விரதம்.

இனி,

கருங்கண் தாக்கலை பெரும்பிறிது உற்றென (குறுந்.69)
எனத் தாவுதலும்,

தாவாத இல்லை வலிகளும் எனக்கேடும் உணர்த்துதல் கூறிய கிளவி (சொல்.390) என்பதனாள் கொள்க. (46)

தெவு

345. தெவுக்கொளல் பொருட்டே.

இதுவும் அது.

(இ..ள்) தெவுகொளல் பொருட்டே - தெவு கொள்ளுதலாகிய குறிப்பு உணர்த்தும்.

நீர்த் தெவு நிரைத்தொழுவர் (மதுரை.89) என வரும். (47)

**தெவ்வு**

345. தெவ்வுப் பகை ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) தெவ்வு பகை ஆகும் - தெவ்வு பகை ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) தெவ்வுப்புலம் சிதைய எய்கணை சிதறி எனவரும். (48)

**விறப்பு உறப்பு வெறுப்பு**

347. விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே.

இதுவும் அது.

(இ..ள்) விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே - விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவு என்னும் குறிப்பு உணர்த்தும் (எ-று)

(உ..ம்) விறந்த காப்போடு உள்நின்று வலியுறுத்து,
உறந்த இஞ்சி உயர்நிலை மாடத்து,
வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் (புறநா.53)
எனவரும். (49)

**விறப்பு – அச்சம்**

348. அவற்றுள்,
விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும்.

இஃது எய்தியதன்மேல் சிறப்பு விதி கூறுகின்றது.

*(இ..ள்)* அவற்றுள் விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும் - அம்மூன்றனுள் விறப்பு செறிவே அன்றிவெருவுதல் குறிப்பும் உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* அவல்எறிந்த உலக்கைப் பாடு விறந்து (பெரும்பாண்.226) எனவரும். *(50)*

**கம்பலை, சும்மை, கலி, அழுங்கல்**

349. கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றுஇவை நான்கும் அரவப் பொருள.

இஃது இசை.

*(இ..ள்)* கம்பலை சும்மை கலியே அழுங்கல் என்று இவை நான்கும் அரவப்பொருள - கம்பலை, சும்மை, கலி, அழுங்கல் என்று சொல்லப்பட்ட இந்நான்கும் அரவமாகிய இசைப் பொருண்மையை உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* களிறு கவர் கம்பலைபோல (அகநா.96),
தளிமழை பொழியும் தண்பரங் குன்றில்
கலிகொள் சும்மை ஒலிகொள் ஆயம் (மதுரைக்.263-4),
கலிகொள் ஆயம் மலிபுதொகுபு எடுத்த (அகநா.11),
உயவுப் புணர்ந்தன்றுஇவ் அழுங்கல் ஊரே (நற்.203)
எனவரும்.

கலிகொள் சும்மை என்பதனுள் கலி செருக்கினை உணர்த்தல் கூறிய கிளவி (சொ.390) என்பதனான் கொள்க. *(51)*

**அழுங்கல் – இரக்கமும் கேடும்**

350. அவற்றுள்,
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்.

இஃது எய்தியதன்மேல் சிறப்புவிதி.

(இ..ள்) அவற்றுள் அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும் - அந்நான்கனுள் அழுங்கல் அரவமே அன்றி இரக்கமும் கேடும் ஆகிய குறிப்பும் உணர்த்தும் (எ-று)

(உ..ம்) பழங்கண் னோட்டமும் நலிய
அழுங்கினன் அல்லனோ அயர்ந்த தன் மணனே
(அகநா.66)

குணன் அழுங்கக்
குற்றம் உழை நின்று கூறும் சிறியவர்கட்கு (நாலடி.353)
எனவரும். (52)

**கழுமு என்பதன் பொருள்**

351. கழுமு என் கிளவி மயக்கம் செய்யும்.

இது குறிப்பு.

(இ..ள்) கழுமு என் கிளவி மயக்கம் செய்யும் - கழுமு என்னும் சொல் மயங்கமாகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) கழுமியஞாட்பினுள் மைந்து இழந்தார் இட்ட (களவழி.11)
எனவரும்.

இது,
கழும முடித்துக் கண்கூடு கூழை (கலி.56)
எனத் திரட்சியை உணர்த்துதல் கூறிய கிளவி (சொல்.390) என்பதனான் கொள்க. (53)

**செழுமை**

352. செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) செழுமை வளனும் கொழுப்பும் ஆகும் - செழுமை வளனும் கொழுப்புப் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

செழும் செய் நெல்லின் சேயரிப் புனிற்றுக்கதிர்,
செழுந்தடி தின்ற செந்நாய் ஏற்றை

எனவரும்.

வளத்தொடு கொழுப்பிடை வேற்றுமை என்னை எனின், வளம் என்பது ஆக்கம். கொழுப்பு, ஊன் தொடக்கத்தனவற்றது நிணம் கோடல் இழுது இருப்பு. *(54)*

**விழுமம்**

353. விழுமம் சிறப்பும் சீர்மையும் இடும்பையும்.

இதுவும் அது.

*(இ..ள்)* விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும் - விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும் ஆகிய குறிப்பு உணர்த்தும். *(எ-று)*

*(உ..ம்)* விழுமியோர், காண்டொறும் செய்வர் சிறப்பு *(நாலடி.159)*,
வேற்றுமை இல்லா விழுத்திணைப் பிறந்து *(புறநா.27)*,
நின்உறு விழுமம் களைந்தோள் *(அகநா.170)*

எனவரும். *(55)*

**கருவி**

354. கருவி தொகுதி.

இதுவும் அது.

*(இ..ள்)* கருவி தொகுதி - கருவி தொகுதியாகிய குறிப்பு உணர்த்தும். *(எ-று)*

உணர்த்துங்கால் பலவற்றது கூட்டத்தை விளக்கும்.

(உ..ம்) கருவி வானம் கதழ்உறை சிதறி (அகநா.4)
எனவரும். கருவி மின்னும் முழக்கும் காற்றும் இத்தொகுதி.

**கமம்**

355. கமம் நிறைந்து இயலும்.

இதுவும் அது.

(இ..ள்) கமம் நிறைந்து இயலும் - கமம் நிறைவு ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

சொல்லொடு பொருட்கு ஒற்றுமை கருதி நிறைந்து இயலும் எனப் பொருளின் தொழிலைச் சொல்மேல் ஏற்றினார்.

(உ..ம்) கார்கோள் முகந்த கமம்சூல் மாமழை (முருகு.7) எனவரும். (57)

**அரி**

356. அரியே ஐம்மை.

இதுவும் அது.

(இ..ள்) அரியே ஐம்மை - அரி ஐம்மையாகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) அரிமயிர்த் திரள்முன்கை (புறநா.11) எனவரும். (58)

**கவவு**

357. கவவு அகத்து இடுமே.

இதுவும் அது.

(இ..ள்) கவவு அகத்து இடுமே - கவவு அகத்தீடு ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* கவவுக்கடுங் குரையள் காமர் வனப்பினள் *(குறுந்.132)* எனவரும். இது, கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே *(புறநா.19)* என எச்சம் ஆங்கால் திரிந்து நிற்கும். *(59)*

**துவைத்தல், சிலைத்தல், இயம்பல், இரங்கல்**

358. துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்.

இஃது இசை.

*(இ..ள்)* துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும் இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர் - துவைத்தல் முதலிய நான்கும் இசைப்பொருளை உணர்த்தும் சொல்லாம் என்று கூறுவர் புலவர் (எ-று)

*(உ..ம்)* முரசு கடிப்பு இகுப்பவும் வால்வளை துவைப்பவும் *(புறநா.158),*

ஆமா நல்ஏறு சிலைப்ப *(முருகு.315),*

கடிமரம் தடியும் ஓசை தன்னூர் நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப *(புறநா.36),*

ஏறுஇரங்கு இருளிடை இரவினில் பதம்பெறாஅன் *(கலி.46)* எனவரும். *(60)*

**இரங்கல் – கழிவு**

359. அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்.

இஃது எய்தியதன்மேல் சிறப்பு விதி.

*(இ..ள்)* அவற்றுள் இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும் - அந்நான்கனுள் இரங்கல் இசையே அன்றி ஒருபொருளது கழிவான் பிறந்த வருத்தமாகிய குறிப்பும் உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* செய்து இரங்காவினைச் சேண் விளங்கும் புகழ் *(புறநா.10)*

எனவரும். இஃது இனி நினைந்து இரக்கம் ஆகின்று (புறநா.243) என இரக்கம் எனவும் நிற்கும். (61)

**இலம்பாடு, ஒற்கம்**

360. இலம்பாடு ஒற்கம் ஆஇரண்டும் வறுமை.

இதுவும் அது.

(இ..ள்) இலம்பாடு - இலம் என்னும் சொல் குறிப்புச்சொல் தன்மைப்பட்டு இன்மை என்னும் உரிச்சொல்லாய் நின்றதுவும், ஒற்கம் - ஒற்கம் என்னும் உரிச்சொல்லும், ஆ - இரண்டும் வறுமை - அவ்விரண்டும் வறுமை என்னும் உரிச்சொற் பெயரது குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ...ம்) இலம்படு புலவர் ஏற்றகைந் நிறைய (மலைபடு.576),
ஒக்கல் ஒற்கம் சொலிய (புறநா.327) எனவரும்.

இலம்படு புலவர் என்பதற்கு இல்லாமை உண்டாகின்ற புலவர் என அல்வழியாகப் பொருள் உரைக்க. இதற்கு உரையாசிரியர் இலத்தால் பற்றப்படும் புலவர் என வேற்றுமையாகப் பொருள் கூறினாரால் எனின், ஆசிரியர்,

அல்வழி எல்லாம் மெல்லெழுத்து ஆகும் (எ.314)

என அல்வழியே கூறத்தொடங்கி,

அகம் என் கிளவிக்குக் கைம்முள் வரினே (எ.315)

எனப் பண்புத் தொகையும்

இலம் என் கிளவிக்கு (எ.316)

என அவ்வழிக்கண் வரும் உரிச்சொல்லும் கூறிப் பின்னர் எண்ணுப் பெயரும் நிறைப் பெயரும். அளவுப் பெயரும் கூறி, படர்க்கைப் பெயரும் (எ.320) என்னும் சூத்திரத்தில் வேற்றுமையாயின் என மீட்டும் வேற்றுமையை எடுத்து ஓதினமையின், இலம் என்பதனை வேற்றுமை என்றல் பொருந்தாமை உணர்க. இலம் என்னும் சொல் யாம் பொருள் இலம் என முற்றுச் சொல்லாயும், ஒருகால் உரிச்சொல்லாயும் நிற்கும் என்பது உணர்த்துதற்கு, இலத்திற்கு உரிச்சொல் தன்மைபட்டு நிற்கும் இடத்து என்றார்.

இலம் என் கிளவிக்குப் படுவரு காலை (எழு.316) என நிலைமொழி வருமொழி செய்து முன்னர் ஆசிரியர் புணர்த்தமையின் இலம்பாடு என ஒருசொல்லாக உணர்தாமை உணர்க. இலம்பாடு நாணுத்தரும் (சிலப்.9.71) என்றதோ எனின், இல்லாமை உண்டாதல் நாணுத் தரும் என்று பொருள் கூறிக்கொள்க. *(62)*

**ஞெமிர்தல், பாய்தல்**

361. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தற் பொருள.

இதுவும் அது.

*(இ..ள்)* ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தல் பொருள - ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தல் ஆகிய குறிப்புப் பொருண்மையை உடைய. (எ-று)

*(உ..ம்)* தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து (நெடுநல்.90),
புண்உமிழ் குருதி முகம்பாய்ந்து இழிதர (குறிஞ்சி.172)
எனவரும். *(63)*

**கவர்வு**

362. கவர்வு விருப்பு ஆகும்.

இதுவும் அது.

*(இ..ள்)* கவர்வு விருப்பு ஆகும் - கவர்வு விருப்பு ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* கவர் நடைப்புரவி (அகநா.130) எனவரும்.

இனி,

கொள்ளை மாந்தரின் ஆனாது கவரும் (அகநா.3)
எனக் கைக்கொள்ளுதல், கூறிய கிளவி (சொ.390) என்பதனான் கொள்க.

கடுமறிக் காதின் அவை அடிப்பேய்மகள் (சிறுபாண்.197)
எனக் கவைத்தல் சொற்புறனடையாள் கொள்க. *(64)*

**சேர்**

**363. சேரே திரட்சி.**

இதுவும் அது.

*(இ..ள்)* சேரே திரட்சி - சேந்திரட்சியாகிய குறிப்பு உணர்த்தும். *(எ-று)*

*(உ..ம்)* சேர்ந்து செறி குறங்கின் (நற்.170) எனவரும். *(65)*

**வியல்**

**364. வியல்என் கிளவி அகலப் பொருட்டே.**

*(இ..ள்)* வியல் என்கிளவி அகலப்பொருட்டே - வியல் என்னும் சொல் அகலமாகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* இருங்கல் வியல் அறை கிடப்பி வயிறுதின்று எனவரும்.

இது, வியன்தானை விறல் வேந்தே (புறநா.38) எனத் திரிந்தும் நிற்கும். *(66)*

**பேம் நாம் உரும்**

**365. பேம் நாம் உரும்என வருஉம் கிளவி**
**ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.**

இதுவும் அது.

*(இ..ள்)* பேம் நாம் உரும் என வருஉம் கிளவி ஆமுறை மூன்றும் அச்சப் பொருள - பேம் நாம் உரும் என்று சொல்ல வருகின்ற கிள்வி ஆகிய அம்முறைமையினை உடைய மூன்றும், அச்சம் என்றும் உரிச்சொல்லது குறிப்புப் பொருண்மையை உடைய. (எ-று)

(உ..ம்) மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள் (குறுந்.87),
நாம நல்அராக் கதிர்பட உமிழ்ந்த (அகநா.72),
உரும்இல் சுற்றமொடு (பெரும்பாண்.447)
எனவரும். நாம் நாமம் எனத்திரிந்து வழங்கிற்று. *(67)*

**வய**

366. வய வலி ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) வயவலி ஆகும் - வய வலியாகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* துன்னருந் துப்பின் வயமான் தோன்றல் (புறம்.44) என வரும். *(68)*

**வாள்**

367. வாள் ஒளி ஆகும்.

இது பண்பு.

*(இ..ள்)* வாள்ஒளி ஆகும் - வாள் ஒளி ஆகிய பண்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) கண்ணே, நோக்கி நோக்கி வாள் இழந்தனவே (குறுந்.44) எனவரும். *(69)*

**துயவு**

368. துயவு என்கிளவி அறிவின் திரிபே.

இது குறிப்பு.

*(இ..ள்)* துயவு என்கிளவி அறிவின் திரிபே - துயவு என்னும் சொல் அறிவினது திரிதல் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) துயவுற்றேம் யாமாக எனவரும். (70)

உயா

369. உயாவே உயங்கல்.

இதுவும் அது.

(இ..ள்) உயாவே உயங்கல் - உயா வருத்தம் அகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

பருந்து இருந்து
உயாவிளி பயிற்றும் யாஉயர் நனந்தலை (அகநா.19)

எனவரும்.

உசா

370. உசாவே சூழ்ச்சி.

இதுவும் அது.

(இ..ள்) உசாவே சூழ்ச்சி - உசா சூழ்ச்சியாகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) உசாத்துணை (தொ.பொ.126) எனவரும். (72)

வயா

371. வயாஎன் கிளவி வேட்கைப் பெருக்கம்.

இதுவும் அது.

(இ..ள்) வயா என் கிளவி வேட்கைப் பெருக்கம் - வயா என்னும் சொல் வேட்கையினது பெருக்கம் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) வயாவும் வருத்தமும் ஈன்றக்கால் நோவும் (நாலடி.201) எனவரும். இது வயவுஉறு மகளிர் (புறநா.20)எனத் திரிந்தும் நிற்கும்.

ஈண்டு வேட்கை என்றது கருப்பம் தங்கி வருத்தமுற்று நுகரப்படும் பொருள்மேல் செல்லும் வேட்கையை. *(73)*

**கறுப்பு, சிவப்பு**

372. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள.

இதுவும் அது.

*(இ..ள்) கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள* - கறுப்பும் சிவப்பும் வெகுளி ஆகிய குறிப்புப் பொருண்மையை உடைய. (எ-று)

*(உ..ம்)* நிற்கறுத்தோர் அருங்கடி முனைஅரண்போல,
நீ சிவந்து இறுத்த நீர்அழிபாக்கம் (பதிற்.13) எனவரும்.

கருமை, செம்மை என்னாது கறுப்பு, சிவப்பு எனத் தொழில் படுத்தினார், அவை வெகுளியை உணர்த்தினமையின். *(74)*

**கறுப்பு, சிவப்பு, நிறப்பண்பு**

373. நிறத்துஉரு உணர்த்தற்கும் உரிய என்ப.

இஃது எய்தியதன்மேல் சிறப்புவிதி.

*(இ..ள்) நிறத்துஉருஉணர்த்தற்கும் உரிய என்ப* - கறுப்பு சிவப்பு எனத் தொழிற்படுத்துக் கூறிய சொற்கள் வெகுளியே அன்றி நிறவேறுபாடு ஆகியபண்பு உணர்த்துதற்கும் உரிய என்று கூறுவர் ஆசிரியர் (எ-று)

இவை தொழிற்பட்டுழியும் பண்பு உணர்த்தும் என வெளிப்படு சொல்லையும் கூறினார், ஐயம் அகற்றுதற்கு

*(உ..ம்)* கறுத்த காயா,
சிவந்த காந்தள் முழுமுதல் துமிய (பதிற்.15)
எனவரும். *(75)*

**நொசிவு நுழைவு நுணங்கு**

374. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.

இதுவும் அது.

*(இ..ள்)* நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை - நொசிவு முதலியன நுண்மை ஆகிய பண்பு உணர்த்தும்.*(எ-று)*

*(உ..ம்)* நொசிபடு மருங்குல் கசிவுஉறக் கைதொழா,
இழை மருங்கு அறியா நுழைநூல் கலிங்கம்
*(மலைபடு.561)*

நுணங்குதுகில் நுடக்கம்போல (நற்.15)
எனவரும்.

நுணங்கு நுண்கொடி மின்னார் மழைமிசை
என நுணங்கு நுடக்கத்தை உணர்த்துதல், கூறிய கிளவி(சொ.390) என்பதனான் கொள்க. *(76)*

**புனிறு**

375. புனிறுஎன் கிளவி ஈன்றுஅணிமைப் பொருட்டே.

இது குறிப்பு.

*(இ..ள்)* புனிறு என் கிளவி ஈன்று அணிமைப் பொருட்டே - புனிறு என்னும் சொல் ஈன்று அணிமை ஆகிய குறிப்புப் பொருளை உடைத்து. (எ-று)

*(உ..ம்)* புனிறுதீர் குழவிக்கு இலிற்றுமுலை போல (புறநா.68),
புனிற்றா பாய்ந்தெனக் கலங்கி (அகநா.56)
எனவரும். *(77)*

**நனவு**

376. நனவே களனும் அகலமும் செய்யும்.

இதுவும் அது.

(இ..ள்) நனவே களனும் அகலமும் செய்யும் - நனவு களனும் அகலமும் ஆகிய குறிப்புப் பொருண்மையை உணர்த்தும்.(எ-று)

(உ..ம்) நனவுப்புகு விறலியின் தோன்றும் நாடன் (அகநா.82)
நனந்தலை உலகம் வளைஇ (முல்லைப்.1)
எனவரும். (78)

மத

377. மதவே மடனும் வலியும் ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) மதவே மடனும் வலியும் ஆகும் - மத மடனும் வலியும் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) பதவுமேயல் அருந்து மதவுநடை நல்லான் (அகநா.14),
கயிறுஇடு கதச்சேப் போல மதமிக்கு (அகநா.36)
எனவரும். மதவு நடை என்பதில் மத மதவு என ஈறு திரிந்து நின்றது. (79)

மத – மிகுதி, வனப்பு

378. மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே.

இஃது எய்தியதன மேல் சிறப்புவிதி.

(இ..ள்) மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே - மத மடனும் வலியுமே அன்றி மிகுதியும் வனப்பும் ஆகிய குறிப்பும் சிறுபான்மை உணர்த்தும். (எ-று)

(உ..ம்) போர்ஆரா ஏற்றின் பொருநாகு இளம்பாண்டில்
தேர்ஊரச் செம்மாந் ததுபோல் மதைஇயினள் (கலி.109),
மாதர் வாள்முகம் மதைஇய நோக்கே (அகநா.130)
எனவரும். இவையும் ஈறுதிரிந்தன. (80)

**யாணர்**

**379. புதிது படல் பொருட்டே யாணர்க் கிளவி.**

இதுவும் அது.

*(இ..ள்)* யாணர்க் கிளவி புதிது படல் பொருட்டே - யாணர் என்னும் சொல் வருவாய் புதிதாகப்படுதல் ஆகிய குறிப்பை உடைத்து. (எ-று)

*(உ..ம்)* வீகொடு சென்ற வட்டில் பற்பல
மீனொடு பெயரும் யாணர் ஊர! (நற்.210) எனவரும். *(81)*

**அமர்தல்**

**380. அமர்தல் மேவல்.**

இதுவும் அது.

*(இ..ள்)* அமர்தல் மேவல் - அமர்தல் மேவுதலாகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* அகன் அமர்ந்து செய்யாள் உறையும் (குறள்.84) எனவரும். *(82)*

**யாண்**

**381. யாணுக் கவின் ஆகும்.**

இதுவும் அது.

*(இ..ள்)* யாணுக்கவின் ஆகும் - யாண் என்னும் சொல் கவின் ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* யாணது பசலை என்றனன் (நற்.50)
எனவரும். *(83)*

**பரவு, பழிச்சு**

382. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.

இதுவும் அது.

*(இ..ள்)* பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள - பரவும் பழிச்சும் வழுத்துதல் என்னும் சொல்லினது குறிப்புப் பொருளை உடைய. *(எ-று)*

*(உ..ம்)* கல்லே பரவின் அல்லது
நெல்உகுத்துப் பரவும் கடவுளும் இலவே (புறநா.335),
செறிவளை விறலியர் கைதொழூஉப் பழிச்சி
வறிதுநெறி ஒரீஇ
எனவரும். *(84)*

**கடி என்னும் சொல்**

383. கடிஎன் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்தேற்று ஆயீ ரைந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டு ஆகும்மே.

இது, கடி என்னும் உரிச்சொல் பெரும்பான்மை குறிப்பும் சிறுபான்மை பண்பும் உணர்த்துகின்றது.

*(இ..ள்)* கடி என் கிளவி வரைவே கூர்மை காப்பே புதுமை விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே அச்சம் முன்தேற்று ஆயீரைந்தும் மெய்ப்படத் தோன்றும் பொருட்டு ஆகும்மே - கடி என்னும் சொல் வரைவு, கூர்மை, காப்பு, புதுமை, விரைவு, விளக்கம், மிகுதி, சிறப்பு, அச்சம், தெய்வம் முதலிவற்றின் முன்நின்று தெளிவித்தல் என்று கூறப்படுகின்ற அப்பத்துச் சொல்லும் மெய்ம்மைப் படத்தோன்றும் பொருண்மையினை உடைத்து. *(எ-று)*

(உ..ம்) வரைவு - கடிய கடிந்து ஒரார் செய்தார்க்கு (குறள்.658)
கூர்மை - கடி நுனைப் பகழி
காப்பு - கடிமரம் தடியும் ஓசை (புறநா.36)
புதுமை - கடி உண் கட்வுட்கு இட்ட செழுங்குரல் (குறுந்.105)
விரைவு - கடுந்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண் (புறநா.15)
விளக்கம் - கடும்பகல் ஞாயிறு (கலி.145)
மிகுதி - கடுங்கால் ஒற்றலின் சுடர் சிறந்து உருத்து (பதிற்.25)
சிறப்பு - அம்பு துஞ்சும் கடி அரணால் (புறநா.20)
அச்சம் - கடி உருமின் உரறிக் கடிப்புச் சேர்பு
கடியமன்ற நின் தழங்குகுரல் முரசம்
முன்தேற்று - கொடுஞ்சுழிப் புகாஅர்த் தெய்வம் நோக்கிக்
கடுஞ்சூள் தருகுவன் நினக்கே (அகநா.110)

எனவரும். இவ் உரிச்சொல் பெரும்பான்மை திரிந்து நிற்கும். (85)

**கடி – வேறுபொருள்**

384. ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே.

இஃது ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே - கடி என்னும் சொல் முற்கூறிய பத்துமே அன்றிச் சிறுபான்மை ஐயம் ஆகிய குறிப்பும் கரிப்பு ஆகிய பண்பும் உணர்த்துதற்கும் உரித்து. (எ-று)

(உ..ம்) ஐயம் - கடுத்தனள் அல்லளோ அன்னை,
கரிப்பு - கடிமிளகு தின்ற கல்லா மந்தி எனவரும். (86)

**ஐ – வியப்பு**

385. ஐ வியப்பு ஆகும்.

இது குறிப்பு.

(இ..ள்) ஐ வியப்பு ஆகும் - ஐ வியப்பு ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) ஐதே காமம் யானே (குறுந்.217) எனவரும். (87)

**முனைவு**

386. முனைவு முனிவு ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) முனைவு முனிவு ஆகும் - முனைவு என்னும் சொல் முனிவு ஆகிய குறிப்பு உணர்த்தும். (எ-று)

(உ..ம்) முனை என்றும் பாடம்

சேற்றுநிலை முனைஇய செங்கண் காரான் (குறுந்.261)

எனவரும். (88)

**வை – கூர்மை**

387. வையே கூர்மை.

இதுவும் அது.

(இ..ள்) வையே கூர்மை - வை கூர்மையாகிய குறிப்பு உணர்த்தும் (எ-று)

(உ..ம்) வைந்நுனைப் பகழி மூழ்கலின் செவிசாய்த்து (முல்லை.73) எனவரும். (89)

**எறுழ்**

388. எறுழ் வலி ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) எறுழ் வலி ஆகும் - எறுழ் வலி ஆகிய குறிப்பு உணர்த்தும் (எ-று)

(உ..ம்) சிலை நவில் எறுழ்த்தோள் ஓச்சி வலன்வளையூ

எனவரும். (90)

**உரிச்சொற்களுக்குப் புறனடை**

389. மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல்;
தத்தம் மரபின் தோன்றும்மன் பொருளே.

இஃது உரிச்சொற்கு எல்லாம் புறனடை கூறுகின்றது.

*(இ..ள்)* மெய்பெறக்கிளந்த உரிச்சொல் எல்லாம் - ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றியும் பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றியும் வரும் என இருகூறு செய்து பொருள்பெறக் கூறப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றையும்.

முன்னும் பின்னும் வருபவை நாடி - தத்தமக்கு முன்னும் பின்னும் வரும் மொழிகளை ஆராய்ந்து, ஒத்த மொழியான் புணர்த்தளர் உணர்த்தல் - அம் மொழிகளுள் தமக்குப் பொருந்தின மொழியொடு கூட்டிப் பொருள் உணர்த்துக.

மரபின் - அங்ஙனம் உணர்த்திய வரவாற்று முறைமையானே, தத்தம் பொருள் மன் தோன்றும் - தத்தமக்கு உரிய பொருள் விளங்கித் தோன்றும். (எ-று)

எனவே, உரிச்சொல் ஆணையான் பொருள் உணர்த்தாது, வரலாற்று முறைமையான் பொருள் உணர்த்தும் என்றார்.

*(உ..ம்)* போகுகொடி மருங்குல் என்பதின் போகல் என்பது முன்வரும் சொல்லான் நேர்மையை உணர்த்திற்று.

திரிகாய் விடத்தரொடு கார்உடைபோகி *(பதிற்.13)* என்பதின் போகல் என்பது பின்வரும் சொல்லான் நெடுமையை உணர்த்திற்று.

உறுகால் *(நற்.30)* என்பது முன்வரும் கால் என்னும் சொல்லான் மிகுதியை உணர்த்திற்று.

அணங்கிய செல்லல் (அகநா.22) என்பது பின்வரும் அணங்கிய என்னும் சொல்லான் இன்னாமையை உணர்த்திற்று.

இங்ஙனம் கூறவே, முன்னும் பின்னும் மொழி அடுத்து வருதஉ .ஷ் (சொ.253) என இடைச்சொற்கு ஓதிய விதி இதற்கும் கூறினோர் ஆயிற்று. (91)

**உரிச்சொல் பிறபொருள் உணர்த்தல்**

390. கூறிய கிளவிப் பொருள்நிலை அல்ல
வேறுபிற தோன்றினும் அவற்றொடு கொளலே.

இதுவும் அது.

(இ..ள்) கூறிய கிளவிப் பொருள் நிலை அல்ல வேறு பிற தோன்றினும் - முன்னும் பின்னும் வருபவை நாடிய வழி முற்கூறிய உரிச்சொற்களின் பொருள் நிலைமை அல்லாத வேறுபிற பொருள்தோன்றும் ஆயினும், அவற்றொடு கொளல் - அக் கூறப்பட்டனவற்றோடே அவற்றையும் உரிச்சொல்லாகக் கொள்க. (எ-று)

(உ..ம்) கடிநாறு பூந்துணர் என்றால், முற்கூறியவற்றிற்கு ஏலாது மணப்பொருட்டு ஆயிற்று. மரம் புரைபட்டது என்பது உயர்வு பொருள் குறித்தது என்று கொள்ளற்க; பொந்துபட்டது என்னும் பொருட்டு ஆயிற்று.

இவையே அன்றி, வேறுபிற தோன்றினவை, அவ்வச் சூத்திரங்களுள் காட்டிப் போந்தாம். அவற்றான் உணர்க. (92)

**பொருள் உணர்த்தும் முறைமை**

391. பொருட்குப் பொருள்தெரியின் அதுவரம்பு இன்றே.

இச்சூத்திரம் முதல், எழுத்துப் பிரிந்து இசைத்தல் (சொ.395) என்னும் சூத்திரத்து அளவும் முற்கூறிய நால் வகைச் சொல்லையும் உணருமாறும், உணர்த்துமாறும், அவற்றின் தன்மையும்

உணர்த்துகின்றார், மேற் கூறுகின்ற பொது இலக்கணமாகிய எச்ச இயற்கு ஏற்ப அதிகாரப்பட்டமை கருதி.

(இ..ள்) பொருட்குப் பொருள்தெரியின் - ஒரு சொல்லை ஒரு சொல்லானும் பல சொல்லானும் உணர்த்திய வழிப் பொருள் உணர்த்தவந்த சொற்கும் பொருள் யாது எனப் பொருள் தெரியுமாயின், அது வரம்பு இன்று - அங்ஙனம் தெரிதல் வரம்பு இன்றி ஓடும். அதனான் பொருட்குப் பொருள் தெரியற்க. (எ-று)

ஒரு சொற்கு ஒரு சொல்லானும் பல சொல்லானும் பொருள் உணர்த்தினாலும் உணரும் உணர்வு இல்லாதானை உணர்த்துமாறு மேல் கூறுகின்றார். *(93)*

**பொருள் உணருமாறு உணர்த்தல்**

392. பொருட்குத் திரிபு இல்லை உணர்த்த வல்லின்.

இதுவும் அது.

(இ..ள்) உணர்த்த வல்லின் பொருட்டுத்திரிபு இல்லை - மாணாக்கன் உணருமாறு அறிந்து ஆசிரியன் உணர்த்த வல்லன் ஆயின், இச்சொல் இப்பொருட்டு என்று தான் கூறிய பொருட்குத் திரிபு இன்றாம். (எ-று)

யாம் என்பது படர்க்கை உளப்பாட்டுத் தன்மைப் பெயர் என்றால் உணராதானை அது சேய்மைக்கண் நின்றாரைத் தன்னொடு கூட்டிக் கூறப்பட்டுப் புடைபெயர்ச்சி இன்றி நின்ற தொரு பொருளை உணர்த்திற்றுக்காண் எனத் தொடர்மொழி கூறியானும், சேய்மைக்கண் நின்றாரைத் தன்னொடு சேர்த்துக் காட்டியானும் பொருள் உணர்த்துக.

உண்டேம் என்பது பன்மைத் தன்மை என்றால் பொருள் உணராதானை இது யானும் இவனும் அவனும் உண்டல் தொழிலைச் செய்தேம் என்னும் பொருள் உணர்த்திற்றுக்காண் எனத்தொடர்மொழி கூறியானும், அவரைத் தன்னொடு சேர்த்தித்

தொழில் நிகழ்த்திக் காட்டியானும் பொருள் உணர்த்துக. சிறிய கள் பெறினே, எமக்கு ஈயும் மன்னே (புறநா.235) என்புழி, மன்னைச் சொல் இனி அதுகழிந்தது என்னும் பொருள் குறித்து நின்றதுகாண் என்றால் பொருள் உணராதானை, அரிதாகப்பெற்ற கள்ளை எக்காலமும் எமக்குத் தருகின்றவன் துறக்கத்துச் சேறலின், எமக்குக் கள் உண்டல் போயிற்று என்றல் இதன்பொருள் எனத் தொடர்மொழி கூறிப் பொருள் உணர்த்துக.

உறுகால் (நற்.300) என்புழி உறு என்பது மிகுதி என்றால் பொருள் உணராதனை கடுங்காலினது வலி கண்டாய்; ஈண்டு உறு என்பதற்குப் பொருள் அஃது என்று தொடர்மொழி கூறியானும், கடுங்கால் உள்வழிக் காட்டியானும் உணர்த்துக.

இங்ஙனம் நால்வகைச் சொல்லையும் மாணாக்கன் உணருமாறு அறிந்து உணர்த்தவே பொருட்குத் திரிபு இன்றாம்.

இங்ஙனம் உணர்த்தவும் உணராதானை உணர்த்தற்பாலன் அல்லன் என்கின்றது மேல் வருகின்ற சூத்திரம். (94)

**உணர்வோர் ஆற்றல்**

393. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.

இதுவும் அது.

(இ..ள்) உணர்ச்சிவாயில் - நால் வகைச் சொற்களையும் மாணாக்கன் உணர்தற்குக் கூறிய இவ்இலக்கணம், உணர்வோர் வலித்து - தன்னை உணர்வோரது உணர்வைத் தனக்கு வாயிலாக உடைத்து. (எ.று)

எனவே, தன்னை உணரும் உணர்வு இல்லாதாற்குத்தான் சொல்வது பயன்படாது அதலின், அதனை அவற்கு, உணர்த்தற்க என்பது பொருள் ஆயிற்று.

இத்துணையும் உணருமாறும் உணர்த்துமாறும் உணர்த்தினார். (95)

**மொழிப் பொருட் காரணம்**

394. மொழிப் பொருள் காரணம் விழிப்பத் தோன்றா.

இது சொல் பொருள் உணர்த்தும் காரணம் ஆசிரியர்க்கே புலப்படும் என்கின்றது.

*(இ..ள்)* மொழிப் பொருள் காரணம் - நால்வகைச் சொல்லுக்கும் பொருளை அறிவுறுத்து நிற்கின்றது ஒருகாரணம் உண்டாம் தன்மை, விழிப்பத்தோன்றா - நுண் உணர்வு இல்லாதோர்க்கு மரபு என்று கொள்வது அல்லது விளங்கத் தோன்றா. (எ-று)

எனவே, நுண் உணர்வு உடையோருக்குக் காரணம் உண்டாம் தன்மை விளங்கத் தோன்றும் என்பது பொருள் ஆயிற்று.

இது மரபு என்று கோடல் நிலம் தீ நீர் வளி *(89)* என்னும் மரபியல் சூத்திரத்தினானும் ஆசிரியர் உணர்த்தினார்.

உலகத்துப் பொருள்களின் நிகழ்ச்சிக்குச்சொல் காரணம் ஆதலின், மொழிப் பொருட் காரணம் என்றார். இக்காரணம் அக்காரியங்களோடு இயைந்து நிற்கின்ற தன்மை ஆசிரியர்க்கு அல்லது புலப்படாமையின் விழிப்பத் தோன்றா என்றார். *(96)*

**உரிச்சொல் எழுத்துப் பிரிந்து இசையாமை**

395. எழுத்துப் பிரிந்து இசைத்தல் இவண் இயல்பு இன்றே.

இஃது உரிச்சொற்கு எழுத்துப் பிரிந்து இசைத்தல் இன்று என்கின்றது.

*(இ..ள்)* எழுத்துப் பிரிந்து இசைத்தல் இவண் இயல்பு இன்றே - எழுத்துக்கள் முதல் நிலையும் இறுதி நிலையுமாகப் பிரிந்து வேறுவேறு பொருள் உணர்த்துதல் உரிச்சொல் இடத்து இயல்பு உடைத்து அன்று. (எ-று)

எனவே, எழுத்துக்கள் திரிந்து பொருள் உணர்த்துதல் உரிச்சொல் இடத்து இயல்பு உடைத்து என்றவாரும்.

எழுத்துக்கள் பிரிந்து இசைத்தன் வினைச் சொல்லும் ஒட்டுப் பெயரும். அவற்றுள் வினை பிரிந்தன வினையியலுள் ஈறுபற்றி ஓதிப்பிரித்துக் காட்டினார். பெயர் பிரிந்தன நம் ஊர்ந்து வருஉம் இகர ஐகாரமும் (சொ.165) என்பன முதலியவற்றாள் காட்டினார். வெற்பன் பொருப்பன் என்பன முதல் நிலை பிரிப்பப் பிரியுமேல் அவையும் ஒட்டுப்பெயர் என்று உணர்க.

தாமாகப் பொருள் உணர்த்தாமையின் பிரிதலும் பிரியாமையும் இடைச்சொற்கு இல.

இனி, உரிச்சொல் எழுத்துத் திரிந்து இசைத்தன எல்லாம் இவ்வோத்தினுள் காட்டிப் போந்தவற்றான் உணர்க. (97)

**உரிச் சொற்குப் புறனடை**

396. அன்ன பிறவும் கிளந்த அல்ல
பன்முறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருட்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்துஎன அறியும்
வரம்புதமக்கு இன்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையின் கிளந்தவற்று இயலான்
பாங்குஉற உணர்தல் என்மனார் புலவர்.

இஃது உரிச் சொற்கு எல்லாம் புறனடை கூறுகின்றது.

*(இ..ள்)* கிளந்த அல்ல அன்ன பிறவும் - சொல்லப்பட்டனவே அன்றி அவைபோல்வன பிறவுமாய், பன்முறையானும் பரந்தன வரூஉம் உரிச்சொல் எல்லாம் - ஈறு பற்றி உணர்த்தற்கு அடங்காது பலவாற்றானும் பரந்து வரும் உரிச்சொல் எல்லாம். பொருள் குறை கூட்ட - பொருளைச் சொல் இன்றியமையாக்குறைபாடு தீரப் பொருளை அதனொடு கூட்டி உணர்த்த,

இயன்ற மருங்கின் இனைத்துஎன அறியும் வரம்பு தமக்கு இன்மையின் - இசை குறிப்பு பண்பு பற்றித்தாம் இயன்ற நிலத்து, இத்துணை என்று வரையறுத்து உணரும் எல்லை தமக்கு இன்மையான் எஞ்சாமல் கிளத்தல் அரிது ஆதலின்,

வழி நனி கடைப்பிடித்து - அவற்றை அறிவதற்கு ஓதிய வழிகளைச் சோராமல் மிகவும் கடைப்பிடித்து, ஓம்படை ஆணையின் கிளந்தவற்று இயலான் பாங்கு உற உணர்தல் என்மனார் புலவர் - பாதுகாவல் ஆகிய ஆணையின் கிளந்தவற்றின் இயல்பானே அவற்றையும் பகுதிஉற உணர்க என்று சொல்லுவர் புலவர். (எ-று)

ஆதலான் யானும் அவ்வாறே கூறினேன் என்றார் எனக் குறிப்பு எச்சமாக உரைக்க. எனவே, பெயரினும் வினையினும் மெய்தடு மாறி (299) எனவும்,

முன்னும் பின்னும் வருபவை நாடி (389) எனவும் யான் கூறிய நெறியைச் சோராமல் கடைப்பிடித்து

எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல் (299) எனவும்,

ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபின் தோன்றும்மன் பொருளே (சொ.389)

எனவும் என்னால் தரப்பட்ட பாதுகாவல் ஆணையான் கிளந்தவற்று இயலான் பாங்கு உறஉணர்க என்பது இதன் கருத்து ஆயிற்று.

உரிச்சொல் எல்லாம்; கூட்ட வரம்பு தமக்கு இன்மையின், கடைப்பிடித்து இயல்பாகவே அவற்றை உணர்க என வினை முடிபு செய்க.

இருமை என்பது கருமையும் பெருமையும் ஆகிய குறிப்பும்
சேண் என்பது சேய்மை ஆகிய குறிப்பும்
தொன்மை என்பது பழமை ஆகிய குறிப்பும் உணர்த்தலும்,
இவறல் உலோபமும்,
நொறில்இயல் புரவி அதியர் கோமான்
என நொறில் நுடக்கமும்,
நொறில் இயல்புரவி கழற்கால் இளையோர்
என நொறில் விரைவும்,

தெவிட்டுதல் அசையிடுதலும்,

மலிதல் நெருங்குதலும்

மாலை குற்றமும் உணர்த்துதலும் பிறவும் கிளந்த அல்ல என்பதனான் கொள்க. (98)

**உரியியல் முற்றும்.**

## நச்சினார்க்கினியர் உரை
## 9. எச்சவியல்

**நால்வகைச் சொற்கள்**

397. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.

என்பது சூத்திரம். முற்கூறிய எண்வகை ஒத்தினுள்ளும் உணர்த்துதற்கு இடம் இன்றி எஞ்சி நின்ற சொல் இலக்கணங்களைத் தொகுத்து உணர்த்துதலின், இஃது எச்ச இயல் என்னும் பெயர்த்து ஆயிற்று. செய்யுட்கு உரிய சொல்லும், அவற்று இலக்கணமும், அவற்றின் விகாரமும், அச்சொய்யுள் பொருள்கோளும் முதலில் உணர்த்துகின்றார். இச்சூத்திரம் செய்யுள் விதி ஒழிபு பெரும்பான்மை ஆகலின், செய்யுள் செய்தற்கு உரிய சொற்கள் இவை என அவற்றின் வரையறை கூறுகின்றது.

**(இ..ள்)** இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று அனைத்தே - இயல்பாய சொல்லும், அதுதான் திரிந்து வரும் சொல்லும், திசைக்கண் வழங்கும் சொல்லும், ஆரியச் சொல்லும் என்று கூறிய அத்துணையே, செய்யுள் ஈட்டச் சொல்லே - ஒரு பொருள் மேல் நிகழும் செய்யுளை ஈட்டுதற்குரிய சொல் ஆவன.(எ-று) எனவே, பிறபாடைச் சொற்கள் ஈட்டுதற்குரிய அன்றிச் சிறுபான்மை வரும் ஆயின. அவை செப்பு, குனிரு, சிக்கு, அந்தோ என்றாற் போல்வன பிறவுமாம்.

இயல்பாகிய சொல் முற்கூறிய நால்வகைச் சொல்லேயாய் நின்று, செய்யுட்கு உரியவாம்.

அவ்இயற்சொல், திரிசொல் ஆங்கால் பெரும்பான்மை பெயராகவும், சிறுபான்மை வினைத்திரி சொல்லாகவும் திரிதலன்றி, இடையும் உரியுமாகத் திரிந்து வாரா.

திசைச்சொல்லும் வடசொல்லும் பெரும்பான்மை பெயர்ப் பெயராயும், சிறுபான்மை, தொழிற்பெயராயும் வருதல் அன்றி ஏனையவாய் வாரா. *(1)*

**இயற்சொல் இலக்கணம்**

398. அவற்றுள்,
இயற்சொல் தாமே,
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாஅமை இசைக்கும் சொல்லே.

இது, நிறுத்தமுறையானே இயற்சொற்கு இலக்கணம் கூறுகின்றது.

(இ..ள்) அவற்றுள் இயற்சொல்தாமே - அந்நான்கனுள் இய்ற்சொல் என்று கூறிய சொல்தாம், செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணி - செந்தமிழ் நிலத்தின்கண்ணே வழங்குதலொடு பொருந்தி, தம் பொருள் வழாமை இசைக்கும் சொல்லே - அச்செந்தமிழ் நிலத்தும், கொடுந்தமிழ் நிலத்தும் கேட்டோர்க்குத் தத்தம் பொருள் வழுவாமல் ஒலிக்கும் சொல்லாம். (எ-று)

திரிபு இன்றி இயல்பாகிய சொல் ஆவன - நிலம், நீர், தீ, வளி, சோறு, கூழ், பால், மக்கள், மரம் தெங்கு, கமுகு என்னும் தொடக்கத்தன.

செந்தமிழ் நிலமாவது - வையை யாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும் ஆம். (2)

**திரி சொல்லுக்கு இலக்கணம்**

399. ஒருபொருள் குறித்த வேறுசொல் ஆகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
இருபாற்று என்ப திரிசொல் கிளவி.

இது திரிசொற்கு இலக்கணம் கூறுகின்றது.

(இ..ள்) திரிசொல் கிளவி - அவ்இயற்சொல் திரிந்த திரிசொல் ஆகிய சொல்லை, ஒருபொருள் குறித்த வேறு சொல் ஆகியும்

வேறுபொருள் குறித்த ஒரு சொல் ஆகியும் இருபாற்று என்ப - ஒருபொருளைக் குறித்துவரும் பல சொல்லாயும், பல பொருளைக் குறித்து வரும் ஒரு சொல்லாயும் இருவகைப்படும் என்று கூறுவர் ஆசிரியர். (எ-று)

அவ் இயற்சொல்லைத் திரிக்குங்கால் தம் எழுத்துச் சிறிது நிற்பத் திரிப்பனவும், அவ்இயற்சொல் தம்மையே பிறசொல் கொணர்ந்து முழுவதூஉம் திரிப்பனவும் என இருவகையவாம்.

**(உ..ம்)** கிளி, மயில் என்பனவற்றைக் கிள்ளை, மஞ்ஞை எனச் சிறிது நிற்பத் திரித்தும், அவற்றைத் தத்தை, பிணிமுகம் எனப் பிறசொல் கொணர்ந்து முழுவதூஉம் திரித்தும் கூறுதல்.

மலைக்கு வெற்பு விலங்கல், விண்டு என்பன முழுவதூஉம் திரித்தன. இவை ஒரு பொருள் குறித்த வேறுசொல்.

உந்தி என்பது யாழ்ப்பத்தலும், கொப்பூழும், தேர்த்தட்டும், கானியாற்று இடையும் உணர்த்துதல் முழுவதூஉம் திரித்தது. இது வேறு பொருள் குறித்த ஒருசொல். அளகு என்பது கோழி கூகைமயில் என்னும் மூன்று சாதியின் பெண்பாற்கும் பெயர் ஆதலின் (மரபியல். 56,57) இதுவும் வேறுபொருள் குறித்தது ஆம். இவை முழுவதூஉம் திரித்தன.

கேட்டீவாய்ஆயின், செப்பீமன், ஈங்குவந்தீத்தாய், புகழ்ந்திகும்அல்லரோ, என்மனார், என்றிசினோரே, பெறலருங்குரைத்து என்பன போல்வன வினைத்திரிசொல். இவை சிறிது நிற்பத் திரித்தன.

பைங்கண், பைந்தார், பச்சிழை; காரா, சேதா என்றால் போலும் பண்புத்தொகை ஆகிய சொற்களைப் பசுமை, கருமை, செம்மை எனப் பண்புப் பெயராக நிறுத்தி, ஈற்று உயிர்மெய்யும், ஈற்று அயல் உயிரும் கெட்டு, வருமொழிக்கு ஏற்ப ஒற்றுத்திரிந்தும் திரியாதும் ஆதிநின்ற அகரம் ஐகாரமாயும் திரிந்தன என்றும், ஈற்று உயிர் மெய்யும் ஈற்று அயல் உயிரும் கெட்டு ஆதி நீண்டது

என்றும். ஈற்று உயிர் மெய்யும் இடையில் ஒற்றும்கெட்டு ஆதி நீண்டது என்றும் பின்னுள்ளோர் சந்தி முடிக்கின்றது பொருந்தாது. என்னை? பைங்கண் என்புழிப் பசியதாகிய கண் எனப் பண்பு உணர்த்தும் ஈற்றை விரித்தல் அன்றிப் பசுமைக்கண் எனத்தாம் தொகுத்த பண்புப்பெயரை விரித்தல் ஆகாமையின் இவை செய்யுட்குப் புலவர் சிறிது நிற்பத்திரித்துக் கொண்ட பெயரெச்ச வினைக்குறிப்புப் பெயர் என்று உணர்க. எழுதத்திகாரத்துச் செய்புட்கு இவ்வாறு முடிக்க என ஆசிரியர் முடிபு கூறியவற்றை எல்லாம் செய்யுள் முடிபு என்று கூறலும், வழக்குச் சொல் இவ்வாறு திரிந்து வருவனவற்றை வினைத்திரிசொல் என்று பெயர் கூறலும் ஆசிரியர் கருத்தாம்.

இடையும் உரியும் திரிசொல்லாய் வருமேனும் உணர்க. *(3)*

**திசைச்சொற்கு இலக்கணம்**

400. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம்குறிப் பினவே திசைச்சொல் கிளவி.

(இ..ள்) திசைச்சொல் கிளவி - திசைச் சொல்லாகிய சொல், செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும் தம் குறிப்பினவே - செந்தமிழ் நாட்டைச் சூழ்ந்த பன்னிரண்டு நிலத்தும், பன்னிரண்டையும் புறம் சூழ்ந்த பன்னிரண்டு நிலத்தும் தாம்தாம் குறித்தபொருள்ளயே விளக்கும் தன்மை உடையன. (எ-று)

உம்மையை எச்ச உம்மை ஆக்கிப் பொருள் உரைக்க. எனவே, இயற்சொல்போல எந்நிலத்தும் தம்பொருள் விளக்கா ஆயின.

பன்னிரு நிலம் ஆவன - பொங்கர் நாடு, ஒளி நாடு, தென்பாண்டி நாடு, குட்ட நாடு, குடநாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீத நாடு, பூழி நாடு, மலையமான் நாடு, அருவா நாடு, அருவாவாடதலை நாடு, எனத் தென்கிழ்பால் முதலாக வடகீழ்பால் ஈறாக எண்ணுக.

இனிப் பன்னிரண்டையும் சூழ்ந்த பன்னிரண்டு ஆவன - சிங்களமும், பழந்தீவும், கொல்லமும், கூபமும், கொங்கணமும், துளுவும், குடகமும், கருநடமும், கூடமும், வடுகும், தெலுங்கும் கலிங்கமும் ஆம்.

தென்பாண்டி நாட்டார் ஆ, எருமை என்பனவற்றைப் பெற்றம் என்றும்,

குட்ட நாட்டார் தாயைத் தள்ளை என்றும்

குடநாட்டார் தந்தையை அச்சன் என்றும்,

கற்காநாட்டார் வஞ்சரைக் கையர் என்றும்,

சீத நாட்டார் ஏடா என்பதனை எலுவன் என்றும் தோழியை இகுளை என்றும், தம்மாமி என்பதனைத் தந்துவை என்றும்,

பூழி நாட்டார் நாயை ஞமலி என்றும், சிறு குளத்தைப் பாழி என்றும்,

அருவா நாட்டார் செய்யைச் செறு என்றும், சிறு குளத்தைக் கேணி என்றும்,

அருவா வடதலையார் குறுணியைக் குட்டை என்றும் வழங்குப.

இனிச் சிங்களம் அந்தோ என்பது.

கருநடம் கரைய, சிக்க, குளிர என்பன.

வடுகு செப்பு என்பது.

தெலுங்கு எருத்தைப் பாண்டில் என்பது

துளு மாமரத்தைக் கொக்கு என்பது.

ஒழிந்தவற்றிற்கும் வந்துழிக் கண்க.

**வடசொற்கு இலக்கணம்**

401. வடசொல் கிளவி வடஎழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்ஆ கும்மே.

இது வடசொற்கு இலக்கணம் கூறுகின்றது.

(இ..ள்) வடசொற் கிளவி - வடசொல்லாகிய சொல். வடஎழுத்து ஒரீஇ - உரப்பியும் எடுத்தும் கனைத்தும் கூறும் வடஎழுத்துக்களின்

நீங்கி, எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும் - இருசார் மொழிக்கும் பொதுவாகிய எழுத்தான் இயன்றசொல் ஆம். (எ-று)

அவை - வாரி, மேரு, குங்குமம், மணி, மானம், மீனம், வீரம், வேணு, காரணம், காரியம், நிமித்தம், காரகம் என்றாற் போலச் சான்றோர் செய்யுட்கண் வருவன.

இனி ஒழிந்தோர் செய்யுட்கண் வருவன - கமலம், அமலம், மூலம், கோபம், ஞானம், ஞேயம், தமாலம், தாரம், திலகம், நாமம், யானம், யோனி, உற்பலம் இவை போல்வனபிறவும் ஆம். (5)

**மேலதற்கு ஒரு புறனடை**

402. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.

இதுவும் அது.

*(இ..ள்)* சிதைந்தனவரினும் - பொது எழுத்தான் இயன்றனவே அன்றி வடஎழுத்தான் இயன்ற வடசொல் சிதைந்துவரினும், இயைந்தன வரையார் - பொருத்தம் உடையன செய்யுள் இடத்து நீக்கார். (எ-று)

(உ..ம்)அரமியம் வியல்அகத்து இயம்பும் *(அகநா.124)*,
தசநான்கு எய்திய பணைமருள் நோன்தாள் *(நெடுநல்.115)*,
வாதிகை அன்ன கவைக் கதிர் இறைஞ்சி *(மலைபடு.112)*,
சுடுந்தேர் இராமன் உடன்புணர் சீதையை *(புறநா.378)*,
பேதை அல்லை மேதைஅம் குறுமகள் *(அகநா.7)*,
தைப்பு அமை சருமத்து *(பரி.21-3)*,
என்றாற் போல்வன சான்றோர் செய்யுட்கண் சிதைந்து வந்தன.

இனி, தந்திரம், சூத்திரம், விருத்தி, அருத்தாபத்தி, உத்தி என்றாற் போல்வன நூலுள் சிதைந்து வந்தன.

பங்கயம், இடபம், விசயம், இருடிகள், மேகம், பந்தம், மயாளம், விடம், துங்கம், பலம், பாரம், சர்ச்சரை, சாதி, சேனை,

— — சித்தி, சாதனம், அயன், அரி, அரன், ஆரம், அருகம், சிங்கம், மோக்கம், காமம், பக்கம், தலம், சதம், போதகம், போகம், சுத்தம், சலம், மோகம், யோகம், வந்தனை, வேலை, சாலை, மாலை, உவமை, வனிதை, புரி, மேதினி, குமரி, நதி, அரங்கம், இலங்கை, இயக்கன், உலோபம், உலோகம், நிருத்தம், சீதம், வாச்சியம், வச்சிரம், அருத்தம், கருமம், கருப்பம், காப்பியம், பருப்பதம் என்றாற் போல்வன பின்னுள்ளோர் செய்யுட்கண் திரிந்து ஏற்கும் எழுத்துக்களான் மருவி வந்தன.

இனி, சிதைந்தனவரினும் எனப் பொதுப்படக் கூறிய அதனான், ஆணை, வட்டம், நட்டம், கண்ணன் எனப்பாகதமாகச் சிதைந்தனவும் கொள்க. (6)

**செய்யுள் விகாரம்**

403. அந்நால் சொல்லும் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர்.

இது செய்யுள் விகாரம் ஆமாறு கூறுகின்றது.

(இ..ள்) அந்நால் சொல்லும் தொடுக்குங்காலை - முற்கூறிய நான்கு சொல்லையும் செய்யுளாகத் தொடுக்குங்கால், வலிக்கும் வழி வலித்தலும் - மெல்லொற்றை வல்லொற்று ஆக்க வேண்டும் வழி வல் ஒற்று ஆக்கலும், மெலிக்கும் வழி மெலித்தலும் - வல் ஒற்றை மெல் ஏற்று ஆக்க வேண்டும்வழி மெல் ஒற்று ஆக்கலும், விரிக்கும் வழிவிரித்தலும் - சந்தி நிரம்புதற்கு ஒரு சொல்லை விரிக்க வேண்டும் வழி விரித்தலும், தொகுக்கும் வழித் தொகுத்தலும் - சந்தம் உளதாதற்கு ஒரு சொல்லைத் தொகுக்கவேண்டும் வழித் தொகுத்தலும், நீட்டும் வழி நிட்டலும் - குற்றெழுத்திணை நிட்டவேண்டும் வழி நீட்டலும், குறுக்கும் வழிக்குறுக்கலும் - நெட்டெழுத்தினைக் குறுக்க வேண்டும் வழிக் குறுக்கலும் ஆகிய அறுவகை விகாரமும், நாட்டல் வலிய என்மனார் புலவர் -

செய்யுள் இன்பம் பெறச் செய்வார் நாட்டுதலை வலியாக உடைய என்று கூறுவர் புலவர். (எ-று)

(உ..ம்) முத்தை வருஉம் காலம் தோன்றின் (எழு.164)
குன்றிய லுகரத்து இறுதி ஆகும் (சொ.8)
தண்ணந் துறைவன் கொடுமை (குறுந்.9)
இடை எனப் படுப (சொ.251)
வெள்வளை நல்காள் வீடும்என் உயிரே
திருத்தார்நன்று என்றேன் தியேன் (யா.வி.62 மேற்)
என்பன முறையே காண்க.

பாசிலை (புறநா.54) அழுந்துபடு விழுப்புண் (நற்.97) என்றாற்போல இரண்டு விகாரம் வருவனவற்றை நாட்டல் வலிய என்றதனான் கொள்க. (7)

**பொருள்கோள் வகை**

404. நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான்கு என்ப மொழிபுணர் இயல்பே.

இது செய்யுள் செய்வழி அதன் பொருள்கிடை கூறுகின்றது.

(இ..ள்) இயல்பு புணர்மொழி - இயற்கையாகவே தம்முள்கூடிய பொருள் உணர்த்தும் சொற்கள் அங்ஙனம் இயற்கையாகக் கூடிப் பொருள் உணர்த்தாது விகாரப்பட்டுப் பொருள் உணர்த்துங்கால், அவை - அவ்விகார வகை, நிரல்நிறைகண்ணம் அறமறி மொழிமாற்று நான்கு என்ப - நிரல் நிறையும் சுண்ணமும் அடிமறியும் மொழியாற்றும் என நான்கு என்று கூறுவர் ஆசிரியர். (எ-று)

நிரல் நிறையும் சுண்ணமும் நிரலே நிறுத்தலும் துணித்துக் கூட்டுதலும் ஆகிய வேறுபாடு உடைமையின், மொழிமாற்றின் வேறு ஆயின. (8)

**நிரல்நிறை**

405. அவற்றுள்,
நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

இது, நிறுத்த முறையானே நிரல்நிறை கூறுகின்றது.

(இ..ள்) அவற்றுள் நிரல்நிறைதானே - அந்நான்கனுள் நிரல் நிறையாவது, வினையினும் பெயரினும் நினையத்தோன்றி - வினையானும் பெயரானும் ஆராயத் தோன்றி, சொல்வேறு நிலைஇப் பொருள் வேறுநிலையல் - முடிக்கப்படும் சொல்லும் வேறே நிலைபெற்று, முடிக்கும் சொல்லும் வேறேநிற்றலாம். (எ-று)

தொடர்மொழிப் பொருள் முடிக்கும் சொற்கண்ணது ஆகலான் முடிக்கும் சொல்லைப் பொருள் என்றார். வினையினும் பெயரினும் என்றதனான், வினைச்சொல்லான் வருவதூஉம், பெயர்ச்சொல்லான் வருவதூஉம் அவ்இருசொல்லான் வருவதூஉம் என நிரல் நிறை மூன்றாம்.

மாசு போகவும் காய்பசி நீங்கவும்
கடிபுனல் மூழ்கி அடிசில் கைதொட்டு

என்புழி முடிவனவும் முடிப்பனவும் ஆகிய வினைச்சொல் வேறுவேறு நிற்றலின், வினை நிரல்நிறை.

கொடிகுவளை கொட்டை நுசுப்பு உண்கண் மேனி

என முடிவனவும் முடிப்பனவும் ஆகிய பெயர்ச்சொல் வேறுவேறு நிற்றலின் பெயர் நிரல்நிறை.

உடலும் உடைந்தோடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடல்இருள் ஆம்பல்பாம்பு என்ற - கெடல் அருஞ்சீர்த்
திங்கள் திருமுகமாச் செத்து

என்புழி முடிவனவாகிய பெயரும், முடிப்பனவாகிய வினையும் வேறு நிற்றலின் பொது நிரல்நிறை.

நினைய என்றதனாள், சொல்லும் பொருளும் நிரல்பட நில்லாது,

களிறும் கந்தும் போல நளிகடல்
கூம்பும் கலனும் தோன்றும்
எனமயங்கி வருதலும் கொள்க. (9)

**சுண்ணம்**

406. சுண்ணம் தானே
பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்.

இது சுண்ணம் ஆமாறு கூறுகின்றது.

(இ..ள்) சுண்ணம்தானே - சுண்ணம் ஆவது, பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர் - இயல்பாக அமைந்த ஈரடிக்கண் உளவாகிய எண்சீரை, துணித்தனர் ஒட்டுவழி அறிந்து இயற்றல் - துணித்து இயையும்வழி அறிந்துகூட்டி இயற்றப்படுவதாம். (எ-று)

ஈரடி எண்சீர் அளவடி அல்லா விகார அடியினும் பெறப்படுதலின், அவற்றை நீக்குதற்கு அளவடியான் அமைந்த என்பார், பட்டாங்கு அமைந்த ஈரடி என்றார்.

(உ..ம்) சுரைஆழ அம்மி மிதப்ப வரைஅனைய
யானைக்கு நீத்து முயற்கு - நிலை என்ப
கானக நாடன் சுனை.

சுரைமிதப்ப, அம்மி ஆழ, யானைக்குநிலை, முயற்கு நீத்து எனத் துணித்துக்கூட்ட இயையும்.

சுண்ணம் போலச் சிதர்ந்து கிடத்தலின், சுண்ணம் ஆயிற்று. இதனுள் ஆழஅம்மி, நீத்து முயற்கு என ஒட்டிப் பொருள்தந்து நின்றனவேனும், சுரைக்கும் யானைக்கும் சொல்முடிபு நோக்குப்பட நின்று பொருள் உணர்த்தாமையின், மாறவேண்டிற்று. (10)

**அடிமறி**

407. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

இஃது அடிமறி ஆமாறு கூறுகின்றது.

(இ..ள்) அடிமறிச்செய்தி - அடிமறி என்பதன் செய்தி, சீர்நிலை திரியாது அடிநிலை திரிந்து தடுமாறும் - சீர் நின்றாங்கு நிற்ப அடிகள் தத்தம் நிலையின் திரிந்து ஒன்றன் நிலைக்களத்து ஒன்று சென்று நிற்கும். (எ-று)

(உ..ம்) மாறாக் காதலர் மலைமறந் தனரே;
ஆறாக் கண்பனி வரல்ஆ னாவே;
ஏறா மென்தோள் வளைநெகி ழும்மே;
கூறாய் தோழியான் வாழு மாறே.

இது சீரும் பொருளும் திரியாது, அடி திரிந்தவாறு காண்க. இது நான்கு அடிச்செய்யுட்கு அல்லது பெரும்பான்மை வாராது. (11)

**மேலதற்கு ஒரு புறனடை**

408. பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரியும்
தோற்றமும் வரையார் அடிமறி யான.

இது மேலதற்கு ஒருபுறனடை.

(இ..ள்) அடிமறியான - அவ் அடிமறிச் செய்யுளிடத்து, பொருள் தெரிமருங்கின் - பொருள் முடிவை ஆராயும் இடத்து, ஈற்று அடி - அப்பொருள் முடிவினை உடைய அடியின், எருத்துவயின் இறுசீர் - முடிக்கின்ற சீர்க்கு முதற்சீர் இடத்துப் பொருளே தன்பொருளாய் இறும்சீர், திரியும் தோற்றமும் வரையார் - ஏனை அடிகள் போல நேரே முடியாது மீண்டு சென்று முன் நின்றது ஒருசொல்லோடே பொருள் முடியும் தோற்றரவும் நீக்கார் ஆசிரியர். (எ-று)

கூறாய் தோழியான் வாழு மாறே என்பது யாண்டு நிற்பினும் பாட்டின் பொருள் முடிக்கின்ற அடியாம். அதில் வாழும் என்பது எருத்துசீர். மாறு என்னும் இடைச்சொல்லாகிய இறுதிச்சீர் தான் பிரித்துநின்று உணர்த்துதற்குத் தனக்கு ஒரு பொருள் இன்றி வாழும்படியை என எருத்துச்சீரின் பொருளையே உணர்த்தி உருபை ஏற்றுக் கூறாய் என முன்நின்ற சொல்லொடு முடிந்தவாறு காண்க. உம்மையான், இங்ஙனம் முடிதல் சிறுபான்மை ஆயிற்று. (12)

**மொழிமாற்று**

409. மொழிமாற்று இயற்கை
சொல்நிலை மாற்றிப் பொருள்எதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.

இது மொழிமாற்று ஆமாறு கூறுகின்றது.

*(இ..ள்)* மொழிமாற்று இயற்கை - மொழிமாற்றினது இயல்பு ஆவது, சொல் நிலைப் பொருள் எதிர் இயையமுன்னும் பின்னும் மாற்றி - செய்யுட்கண் பா என்னும் உறுப்பிற்கு ஏற்பச் சொல் நின்றநிலை, பொருள் தாராதவழிச் சொல்நின்ற நிலைக்குப் பொருள் எதிரே வந்து பொருந்தும்படி அச்சொல்லின் முன்நின்ற சொல்லைப் பின்னேயும், பின்நின்ற சொல்லை முன்னேயும் மாற்றி, கொள்வழிக் கொளால் - பொருள் கொள்ளுமிடத்தே கொளுத்துலாம். (எ-று)

*(உ..ம்)* குரங்கு உளைப் பொலிந்த கொய்சுவல் புரவி
நரம்பு ஆர்ப்பு, அன்ன வாங்குவள்பரிய (அகநா.4)

புரவியினது வாங்குவள் நரம்பு ஆர்ப்பு அன்னபரிய என முன்நின்ற சொல்லைப் பின்னே மாற்றியவாறு காண்க. இச்சூத்திரமும் அது.

இடைமுலைக் கிடந்தும் நடுங்கல் ஆனீர் (குறுந்.178)

என்புழி முலையிடை எனப் பின் நின்ற மொழியை முன்னேமாற்றியவாறு காண்க.

கடற்படை குளிப்ப மண்டி (புறநா.6)

என்பதும் அது.

இரும்புதிரித் தன்ன மாயிரு மருப்பின்
பரல்அவல் அடைய இரலை தெறிப்ப (அகநா.4)

என்பதும் அது.

பொன்ஓடைப் புகர்அணி நுதல்
துன்னருந்திறல் கமழ்கடாஅத்து
எயிறுப்படை யாக எயிற்கதவு இடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கின்
பெருங்கை யானை இரும்பிடர்த் தலைஇருந்து
மருந்துஇல் கூற்றத்து அருந்தொழில் சாயாக்
கருங்கை ஒள்வாள் பெரும்பெயர் வழுதி! (புறநா.3)

என்றாற்போல வருவன எல்லாம் அணுகி வந்த மாட்டு என்னும் உறுப்பு. ஆரிய மன்னர் பறையின் எழுந்து இயம்பும் என்பதும் அது. அகன்று வந்தமாட்டு முருகாற்றுப்படை முதலியவற்றுள் காண்க. மொழிமாற்று ஆவது கேட்டோர் கூட்டி உணருமாற்றான் ஈரடிக் கண்ணேவருவது என்றும், மாட்டு என்னும் உறுப்பு ஆவது இரண்டு இறந்த பல அடிக்கண்ணும் பலசெய்யுள் தொடரின் கண்ணும் அகன்றும் அணுகியும் வரும் என்றும் உணர்க. அஃது,

அகன்றுபொருள் கிடப்பினும் அணுகிய நிலையினும்
இயன்றுபொருள் முடியத் தந்தனர் உணர்த்தல்
மாட்டுஎன மொழிப பாட்டியல் வழக்கின்
(தொ.செய்யு.210)

என்னும் செய்யுளியல் சூத்திரத்தான் உணர்க. உதாரணங்கள் ஆண்டுக் காட்டுதும்.

பூட்டுவில் பொருள்கோளும், அளைமறி பாப்புப் பொருள்கோளும், தாப்பிசைப் பொருள்கோளும், கொண்டு கூட்டுப் பொருள்கோளும் மாட்டு என்னும் உறுப்பின்கண் அடங்கு மாறும், யாற்றொழுக்குப் பொருள்கோள் யாப்பு என்னும் உறுப்பின்கண் அடங்குமாறும் உணர்க. (13)

**கிளைப்பெயர் பிரிக்கப்படா**

410. தநநுஎ என்னும் அவைமுதல் ஆகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா.

இது, மேல் தொகைச்சொல் கூறுவான், தொகைபோல இருபொருள்படுவன இவை என்கின்றது.

(இ-ள்) தநநுஎ என்னும் அவை முதல் ஆகிய கிளை நுதல் பெயரும் - தநநுஎ என்கின்ற எழுத்துக்களை முதலாக உடைய ஒருவரோடு ஒருவர்க்கு உள்ள தொடர்ச்சிக் கிழமையைக் கருதின ஒட்டுப் பெயர்களும், பிரிப்பப் பிரியா - தொகைச் சொல்போல் இருபொருள்பட்டு நிற்பினும் அவைபோலப் பின்வரும் சொல் தம் பொருள் உணர்த்தாமையின் பிரிக்கப்படா; ஒருசொல்லேயாய் நிற்கும். (எ-று)

(உ-ம்) தமன், தமள், தமர்,
நமன், நமள், நமர்,
நுமன், நுமள், நுமர்
எமன், எமள், எமர்

எனவரும். விளிமரபில் முதலும் ஈறும் பற்றி ஓதி, இடையின் விகற்பம் கூறாமையின் தம்மான் நம்மான் நும்மான் எம்மான் என்றாற் போலும் வாய்பாட்டு விகற்பமும் கொள்க.

சேனாவரையர் தங்கிளை நங்கிளை நுங்கிளை எங்கிளை என்பனவற்றை ஒருமைக்கும் பன்மைக்கும் பொதுவாய் நிற்கும் என்றாரால் எனின், ஆசிரியர்

தாம் என்கிளவி பன்மைக்கு உரித்தே (சொ.186)
யான்யாம் நாம்என வரூஉம் பெயரும் (சொ.164)

என இவ்வதிகாரத்து எடுத்து ஓதிய பன்மைச் சொற்களை, எழுத்ததிகாரத்துள் அவை எழுவாயும் பயனிலையுமாய் நிற்கும் வழித் திரியாது புணரும் என்றுகூறி,

தாம்நாம் என்னும் மகர இறுதியும் (எ.188)

என்னும் சூத்திரத்தான் உருபு ஏற்கும் வழித்திரிந்து புணரும் என்றுகூறி, நும் என்பதனை,

நும் என் ஒருபெயர் (எ.325)

என்னும் சூத்திரத்தான் அஃது எழுவாயும் பயனிலையுமாய் நிற்கும் வழி நீயிர் எனத் திரிந்து பன்மையாயே நிற்கும் எனவும் கூறிப்போந்தார். ஆதலின் ஈண்டும் அதற்கு ஏற்பத் தம்முடைய

கிளை, எம் முடைய கிளை எனப் பன்மை உணர்த்தல் அன்றி ஒருமை உணர்த்தாமை உணர்க. ஏனையவும் அன்ன.

தம்பொருள் என்பதம் மக்கள் (குறள்.63)

எனவும்,

நம்ம னோர்க்கே (மலைபடு.402)

எனவும்,

நும்ம னோரும்மற்று இனையர் ஆயின்
எம்ம னோர்இவண் பிறவலர் மாதோ (புறநா.210)

எனவும், இந்நான்கு சொல்லும் அம்முடிபு பெற்று, முதல்நிலை திரிந்து நின்று, பன்மைப் பொருள் உணர்த்தியவாறு காண்க.

ஈண்டு இவை வெற்பன் பொருப்பன் என்பனவற்றின் முதல் நிலைகளாய வெற்பு பொருப்புப் போல, தம் நம் நும் எம் என்பன பிரிந்து நின்று பொருள் உணர்த்திப் பின்வருகின்ற அன் அள் அர் என்பன பொருள் உணர்த்தாது இடைச் சொல்லாயே நிற்றலின், பிரிப்பப் பிரியா என்றார்.

இனி, உம்மையை எச்சப்படுத்திப் பிற ஒட்டுப் பெயர்களும் பிரிப்பப் பிரியா எனப் பொருள் கூறி, இம்பர் உம்பர் இம்மை உம்மை எம்மை என்றாற் போல்வன பிறவும், இவ்விடம், உவ்விடம், இப்பிறப்பு, உப்பிறப்பு, எப்பிறப்பு என்னும் பொருள் உணர்த்தி நிற்கும் எனக்கொள்க. *(14)*

**ஒருசொல் அடுக்கு**

**411. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல்என்று**
**அவைமூன்று என்ப ஒருசொல் அடுக்கே.**

இதுவும் தொகைச் சொல்போல அடுக்கிவருவன கூறுகின்றது.

**(இ..ள்)** ஒருசொல் அடுக்கே - ஒரு சொல்லை அடுக்கும் அடுக்கு, இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று அவை மூன்று என்ப - இசைநிறையும் அசைநிலையும் பொருளொடு

புணர்தலும் என்று சொல்லப்பட்ட அவை மூன்றும் என்று சொல்லுவர் ஆசிரியர். (எ-று)

(உ..ம்) ஏஎ ஏஎ அம்பல்மொழிந்தனள் - இஃது இசை நிறை
மற்றோ மற்றோ - இஃது அசைநிலை

வந்தது வந்தது கூற்று (நாலடி.4), அவன் அவன், வைதேன் வைதேன், போம்போம் என்பன விரைவும், துணிவும், உடம்பாடும், ஒருதொழில் பலகால் நிகழ்தலும் ஆகிய பொருள் வேறுபாடு உணர்த்தலின் பொருளொடு புணர்தல். (15)

**தொகைமொழிகளின் வகை**

412. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகை என்று
அவ்ஆறு என்ப தொகைமொழி நிலையே.

இது தொகைச் சொற்குப் பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

(இ..ள்) வேற்றுமைத்தொகையே - வேற்றுமை உருபுகள் தொக்க தொகை, உவமத்தொகையே - உவமஉருபுகள் தொக்க தொகை, வினையின் தொகையே - வினைச்சொல் ஈறுகள் தொக்க தொகை, பண்பின் தொகையே - பண்பு உணர்த்தும் ஈறுகள் தொக்கதொகை, உம்மைத் தொகையே - உம் என்னும் இடைச் சொல் தொக்கதொகை, அன்மொழித்தொகை - இத்தொகைச் சொற்களின் இறுதிக்கண் வந்து பொருள் தரும் வேறு சொல் தொக்க தொகை, என்று அவ்ஆறு என்ப - என்று சொல்லப்பட்ட அவ்ஆறும் என்று சொல்லுவர் ஆசிரியர், தொகைமொழி நிலையே - தொகைச் சொல்லினது நிலைமையை (எ-று)

ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும் (எழு.482) எனவும்,

செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்ஒருங்கு இயலும் தொழில்தொகு மொழியும் (எழு.282) எனவும்,

உருபு தொக வருதலும் (சொ.105)

எனவும்,

மெய்உருபு தொகாஅ இறுதி யான (சொ.106)

எனவும்,

பண்புதொக வரூஉம் கிளவி யானும் (சொ.418)

எனவும்,

உம்மை தொக்க பெயர்வயி னானும் (சொ.418)

எனவும்,

வேற்றுமை தொக்க பெயர்வயி னானும் (சொ.418)

எனவும்,

உம்மை எஞ்சிய இருபெயர்த் தொகைமொழி (எழு.223)

எனவும் ஆசிரியர் தொக்கே நிற்கும் எனச் சூத்திரம் செய்தலின், வேற்றுமை உருபும், உவம உருபும், உம்மும், வினைச்சொல் ஈறும், பண்பு உணர்த்தும் ஈறும், இத்தொகைச் சொற்கள் அல்லாதது ஒருசொல்லும் தொக்கு நிற்றலின், தொகைச் சொல் என்பதே அவர் கருத்து ஆயிற்று. ஆயின்,

கேழற்பன்றி (புறநா.152)

வேழக்கரும்பு (பெரிய. ஏனாதி.2)

என்பனவற்றிற்குத் தொக்கன இன்மையின் தொகைச்சொல் ஆமாறு என்னை எனின், அவற்றிற்கும் ஒன்றை ஒன்று விசேடித்து நிற்கின்ற தன்மையை உணர்த்துதற்கு வரும் ஆகிய என்னும் வாசகம் தொக்கு நின்றது என்றேகோடும். அன்றித் தன்கண் தொக்கன இன்றி, அங்ஙனம் வாசகம் தொக்கு நின்றது தொகை என்றற்குச் சாலாமையின் அதனை ஒட்டி ஒருசொல்லாய் நின்று தம் பொருள் உணர்த்தும் என்றுகொண்டு ஏனையவற்றையும் அவ்வாறே கோடும் எனின், எடுத்தோத்தினும் இலேசு சிறத்தல் யாண்டும் இன்மையின் அதுபொருந்தாது. என்னை? அவ்இருபெயரொட்டுப் பண்புத்தொகை அறுவகைத் தொகைச் சூத்திரங்களுள் எடுத்தோத்து இன்றி என்ன கிளவியும் (416) என்ற இலேசினான் கொண்டது ஆகலின். ஆயின் வண்ணத்தின் வடிவின் (416) என்பதன்கண் இருபெயர் ஒட்டாய் ஐம்பால் அறியாத வடிவினையும் எடுத்து ஓதினாரால் எனின், வடிவு முதலியவற்றிற்கும் அறுவகைத் திரிபினுள் ஏற்பன கொணர்ந்து முடித்தலின் குன்றலும் தொகையாம் என்று உணர்க. என்ன

கிளவியும் என்றதனான் கொள்வன வருமொழி இன்றி நிலைமொழியும் பொருள் உணர்த்தி நிற்கும் என்பது ஆண்டுக்கூறுதும்.

அன்றியும், செய்தான் பொருள், இருந்தான் குன்றத்து என வழங்குவன ஒட்டி ஒருசொல் ஆகாமையும், செய்யுட்கண்,

கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே (புறநா.19)

எனவும்,

மாற்றுமைக் கொண்டவழி (கலி.12)

எனவும், இறுதிக்கண் இரண்டாவது தொக்கன,

முயங்கினென் அல்லெனோ (புறநா.19)

எனவும் போற்றாய் (கலி.12) எனவும் வரும் முடிக்குஞ் சொற்களோடு ஒட்டி ஒரு சொல் ஆகாமையும்,

தோன்றல் மறந்தோர் துறைகெழு நாட்டே

எனவும்,

சிறுகுரல் நெய்தல்எம் பெருங்கழி நாட்டே (அகநா.12)

எனவும் இறுதிக்கண் ஏழாவது தொக்கன, தோன்றும் எனவும், சேர்ந்தனை செலினே எனவும் வரும் முடிக்குஞ் சொற்களோடு ஒட்டி ஒருசொல் ஆகாமையும் உணர்க.

இன்னும்,

வல்லே மறவல் ஓம்புமதி எம்மே (அகநா.19)

என இடைக்கண்தொக்கனவும்,

பொன்ஓடை புகர்அணி நுதல்
துன்அருந்திறல் கமழ்கடாஅத்து
எயிறுபடையாக எயிற்கதவு இடாஅக்
கயிறுபிணிக் கொண்ட கவிழ்மணி மருங்கின்
பெருங்கை யானை (புறநா.3)

என அடுக்கி வருவனவும் ஒட்டி ஒருசொல் ஆகாமையும் உணர்க.

அது என் வேற்றுமை (சொ.45) என்னும் சூத்திரத்து அது என் உருபுகெட என்றதனான், அது என் உருபு நின்றால் அல்லது கெடுதல் இன்மையின், அது நின்று கெட்டது என்னும் பொருள்தரல் ஆண்டுக் கூறிப்போந்தாம். அதனான் ஈண்டுச் சேனாவரையர் கூறியபொருட்கு விடை இன்மை உணர்க.

இவற்றுள் வினைத்தொகையும், பண்பின் தொகையும் சிறிது தொக்குத் தொகையாதலும், ஏனைய முழுவதுவும் தொக்குத் தொகையாதலும் உணர்க. *(16)*

**வேற்றுமைத்தொகை**

413. அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல.

இது முறையானே வேற்றுமைத்தொகை கூறுகின்றது.

*(இ..ள்)* அவற்றுள் - முற்கூறிய ஆறனுள், வேற்றுமைத் தொகை - வேற்றுமை உருபுகள் தொக்க தொகைச் சொற்கள், வேற்றுமை இயல - அவ்வுருபுகள் தொக்கனவேனும், தொகாது நின்றாற் போலப் பொருள் உணர்த்தும் இயல்பின. (எ-று)

(உ..ம்) பகடு நடந்தகூழ் பல்லாரோடு உண்க *(நாலடி.2)*
ஒருகுழை ஒருவன் போல *(கலி.26)*
எனவும்,
வல்லவர், செதுமொழி சீத்த செவி செறுவாக *(கலி.68)*
எனவும்,
பருத்திவேலிக் கருப்பை பார்க்கும் *(புறநா.324)*
எனவும்,
வரைஇழி மயிலின் ஒல்குவனள் ஒதுங்கி *(அகம்.158)*
எனவும்,
நின், மைந்தமை மார்பின் சுணங்கும் நினைத்துக்காண் *(கலி.18)*
எனவும்,
மன்ற வேம்பின் ஒண்குழை மலைந்து *(புறநா.79)*
எனவும் வரும். வழக்கு உதாரணம் வேற்றுமையங்கியலுள் காட்டினாம்.

சாத்தனொடு வந்தான், சாத்தற்குக் கொடுத்தான் என்றாற் போல்வன தொக்கால், தொகைப் பொருள் உணர்த்தாது, எழுவாயும் பயனிலையுமாய் நிற்றலின், இந்நிகரன தொகா என்று உணர்க. *(17)*

**உவமத் தொகை**

**414. உவமத் தொகையே உவம இயல.**

இஃது உவமத்தொகை கூறுகின்றது.

(இ..ள்) உவமத்தொகையே - உவம உருபுகள் தொக்க தொகைச் சொற்கள், உவம இயல - அவ்உவம உருபுகள் தொக்கனவேனும், தொகாது நின்றாற்போலப் பொருள் உணர்த்தும் இயல்பின. (எ-று)

மேல் உவமஇயலுள் வினை பயன் மெய் உரு (பொ.276) என்னும் சூத்திரத்தான் உவமை நால்வகைய என்றும், அவைதாம் அன்ன ஏய்ப்ப (பொ.286) என்னும் சூத்திரத்தான் அவற்றின் உருபு முப்பத்தாறு என்றும், கூறுகின்ற ஆசிரியர், ஈண்டு அவ்வுருபுகள் தொக்கு நிற்குமாறு கூறுகின்றார்.

ஒப்பில் வழியான் பொருள் செய்யும் அவ்வுவம உருபுகள் தாம் முதல் நிலையாய் நின்றும், பெயர் எச்சங்கட்கும் முற்றிற்கும் வினை எச்சங்கட்கும் உரிய ஈறுகளை ஏற்ற சொல்லாயே நின்றும் அவற்றிற்கு ஏற்ற முடிவு கொள்ளும் என்று உணர்க.

ஆசிரியர் செய்யுள் இன்பம் நோக்கி அவ்உவம உருபுகளைப் பெரும்பான்மை செய என் எச்ச வாய்பாட்டானும் சிறுபான்மை செய்த என்னும் பெயர் எச்ச வாய்பாட்டானும் ஓதினாரேனும், ஏனைவாய்பாடுகளும் அம்முதல் நிலைக்கண் விரியுமாறு ஆண்டு உணர்க.

புலிப்பாய்த்துள், மழைவண்கை, துடிநடுவு, பொன்மேனி என வினை பயன்மெய் உருவின் கண் வந்த இவ் உவமத்தொகைகள் விரிந்துழிப் போலும் என்னும் உருபானும், அன்ன என்னும் உருபானும், பிற உருபானும் விரிந்து செய்யும் செய்த என்றும் பெயர் எச்சக்குறிப்பு ஆமாறு உணர்க.

அவற்றுள் போலும் என்பது செய்யும் என்னும் குறிப்பு முற்று ஆமாறும் உணர்க. உணர்த்துங்கால், புலிபோலும்

பாய்த்துள், புலி அன்ன பாய்த்துள் என விரித்தால் உணராதானை இதன் பொருள் புலியினது பாய்த்துளை ஒத்த பாய்த்துள் என்றவாறுகாண் என ஒப்பு என்னும் வழக்கு வாசகத்தான் செய்யும் செய்த என்னும் பெயர் எச்சக் குறிப்பு வாசகம் தோன்ற உணர்த்துக.

முறிமேனி முத்தம் முறுவல் வெறிநாற்றம்
வேல்உண்கண் வேய்த்தோ ளவட்கு (குறள்.113)

என்புழி, வேய்த்தோளாட்கு முறிபோலும் மேனி; முத்தம் போலும் முறுவல்; தெய்வமணம் போலும் இயற்கை நாற்றம்; வேல் போலும் கண் என விரித்தால் உணராதானை, இதன் பொருள் வேய்த்தோளாட்குத் தளிரினது நிறத்தை ஒக்கும் நிறம்; முத்தினது நிறத்தை ஒக்கும் பல்லு; தெய்வமணத்தை ஒக்கும் இயல்பான நாற்றம்; வேலினது கொலைத் தொழிலை ஒக்கும் கண் என்றவாறு காண் என ஒப்பு என்னும் வழக்கு வாசகத்தான் செய்யும் என்னும் குறிப்பு முற்று வாசகம் தோன்ற உணர்த்துக. கண் மலர்ந்த காவி என்புழிக் கண்போல மலர்ந்தகாவி என்றால் உணராதனை இதன் பொருள் கண்ணை ஒக்கமலர்ந்த காவி என்றவாறு காண் என ஒப்பு என்னும் வழக்கு வாசகத்தான் செய என் எச்ச வாசகம் தோன்ற உணர்த்துக. இங்ஙனம் கூறிய இருவகை எச்சத்தையும் முற்றையும் இவ்உவம் உருபுகள் தருமாறு காண்க.

இனி முறிமேனி முதலியன உருவகமாம் எனின் ஆசிரியர்க்கு உருவகமும் உவமை ஆமாறு ஆண்டு (உவமவியல்) உணர்க.

இங்ஙனம் வேற்றுமை உருபும் உவமஉருபும் விரிந்துழி, வேற்றுமைத் தொகை என்று கோடுமோ? உவமத்தொகை என்று கோடுமோ? எனின், ஆசிரியர்தாம் மேற் கூறும் உவமஉருபுகளில் சில இரண்டாவதற்கு முடிபு ஆம் என்பது உணர்த்துதற்கு உவமஉருபிற்கு எல்லாம் பொதுவாய் வழக்கு வாசகமாய் நிற்கும் ஒப்பு என்றும் உருபினைக் காப்பின் ஒப்பின் (73) என்று எடுத்து ஓதினார் ஆதலின் அவ்விரண்டாவது அவ்உவமஉருபுகளான் முடிந்து நின்றுழி உவமத்தொடர்மொழி ஒப்புமைப் பொருளே தந்து நிற்றலின், உவமத்தொகை என்றுகோடும்.

ஆயின், எடுத்து ஓதிய ஒப்பு என்பதனோடு அன்றி ஏனை உருபுகளோடும் இரண்டாவது முடிபுமோ? எனின்,

தியின் அன்ன ஒண்செங் காந்தள் (மலைபடு.145)

எனவும்,

கயம் மூழ்கு மகளிர் கண்ணின் மானும் (குறுந்.9)

எனவும்,

மான்ஒக்கு நோக்கு மடநடை ஆயத்தார்
(உவம.12மேற்)

எனவும்,

எழிலி வானம் எள்ளினன் தரூஉம்
கவிகை வண்கைக் கடுமான் தோன்றல் (உவம.14 மேற்)
வீங்குசுரை நல்லான் வென்ற ஈகை (உவம.14 மேற்)

எனவும் வருவனவற்றின்கண் அன்ன, மானும், நோக்கு, எள்ளி, வென்ற என்னும் உவமஉருபுகளை இரண்டாவது கொண்டு முடிந்தமை காண்க. இவற்றுள், எள்ளி என்பது, செய்து என் எச்சமாகிய உருமஉருபு. இங்ஙனம் உவமஉருபு விரிந்துழி நின்று உவமப் பொருள் தருகின்ற இரண்டாவது தொக்குழியும் அவ்வுவமப் பொருள் தந்தே நிற்கும் என்று உணர்க.

என்போல் பெருவிதுப்பு உறுக (புறநா.83)

என்புழிப் போல் என்பது போல என்றும் செய என் எச்சக்குறிப்பு ஆகிய உவமஉருபு.

நும்மனோரும் மற்று இனையர் ஆயின் (புறநா.210)

என்புழி, அன்னோர் என்பது உவமஉருபு ஆகிய இடைச்சொல் முதல்நிலையாகப் பிறந்தபெயர். இனிச் சிறுபான்மை ஏனை உருபுகள் இத்தொகைக்கண் விரியுமாறு உவம இயலுள்காண்க.

சேனாவரையர் இவற்றை உவமஉருபுகள் அல்ல என்றும் உவமஉருபுகளை இரண்டாவது கொண்டு முடியாது என்றும் கூறினாரால் எனின், அவர் ஆசிரியர் கருத்தும், சான்றோர் செய்யுள் வழக்கமும் உணராமல் கூறினார் என்பது இக்கூறியவாற்றான் உணர்க.

**வினைத்தொகை**

**415. வினையின் தொகுதி காலத்து இயலும்.**

இது வினைத் தொகை கூறுகின்றது.

(இ..ள்) வினையின் தொகுதி - வினைச்சொல்லினது ஈறாய்த் தொக்கு நிற்கும் எழுத்துக்கள், காலத்து இயலும் - காலத்தின் கண்ணே தொக்கு நிற்கும். (எ-று)

வினை என்றது உண் தின் முதலிய முதல்நிலைகளை. அவை ஈண்டு ஆகுபெயராய்த் தம்மால் பிறந்த பெயர்எச்சத்தை உணர்த்தின. தொகுதி ஆவன அகரமும், நில், கின்று என்பனவும், உம்மும் ஆம். அவை காலத்து இயலுதலாவது கொல் யானை எனத்தொகுத்துக் கொன்ற யானை என விரித்தால், செய்த என்னும் பெயர் எச்ச வாய்ப்பாட்டுத் தகர ஈறு இறந்தகாலம் உணர்த்துதலும், கொல்லாநின்ற யானை, கொல்கின்ற யானை என விரித்தால், நின்ற, கின்ற என்னும் பெயர் எச்சம் நிகழ்காலம் உணர்த்துதலும், கொல்லும் யானை என்று விரித்தால், செய்யும் என்னும் பெயர் எச்சத்து உம் ஈறு நிகழ்வும் எதிர்வும் உணர்த்தலும் ஆம்.

ஆயின், உம் ஈறு எதிர்காலம் உணர்த்துதல் யாண்டுப் பெறுதும்? எனின், காலத்து இயலும் என மூன்று காலத்திற்கும் பொதுவாகக் கூறிய அதனான் பெறுதும். இக்கருத்தானே பின்பு நூல் செய்தவர்கள் எல்லாரும் உம் எதிர்காலமே உணர்த்தும் என்றார் சேனாவரையரும் இக்கருத்தானே. அகன்றவன் திறத்துஇனி நாடுங்கால் (கலி.16) என்பதே நிகழ்விற்கும் எதிர்விற்கும் காட்டினார்.

கொல்யானை என்பது, அக்காலத்து அஃது உதிரக் கோட்டொடு வந்ததேல் இறப்பும், அதன் தொழிலைக்கண்டு நின்றுழி நிகழ்வும், அது கொல்ல ஒடுவதனைக் கண்டுழி எதிர்வும் விரியும்.

இனி, கொல்யானை என்பதன்கண் இரண்டு ஈறும் ஒருங்குதொக்குநின்றன என்றற்கு விதி,

செய்யும் செய்த என்னும் கிளவியின்
மெய்ஒருங்கு இயலும் தொழில்தொகு மொழியும்

(எழு.482) என்றது ஆம். என்ற தன் பொருள் செய்யும் செய்த என்னும் பெயர் எச்சச் சொற்களினுடைய காலம் காட்டும் உம்மும் அகரமும் ஒருசொற்கண்ணே சேர நடக்கும் புடைபெயர்ச்சி தொக்கு நிற்கும் சொற்கள் என்றவாறு. இங்ஙனம் இரண்டு பெயரெச்ச வாசகமும் சேரத்தொக்கு நிற்றலான், ஆசிரியர் ஒருசொல் ஆக்கிப் புணர்க்கலாகாது என்று புணரியல் நிலையிடை உணரத்தோன்றா (482) என்றார். இவ்எழுத்ததிகாரச் சூத்திரத்தானே பெயர் எச்சம் நின்று தொக்கது என்னாது பெயர்எச்சப் பொருளவாய் நின்று இரண்டு சொல்தொகும் என்று சேனாவரைய்யர் கூறியது பொருந்தாமை உணர்க. அவை தொகுங்கால் தத்தமக்கு உரிய ஆறுபொருட்கண்ணும் தொகும்.

(உ..ம்) ஆடு அரங்கு - நிலம்
செய்குன்று - பொருள்
புணர்பொழுது - காலம்
அரிவாள் - கருவி
கொல்யானை - வினைமுதல்
செல்செலவு - வினை

எனவும்,

நிலன் - உறைபதி அன்றித் துறைகெழு சிறுகுடி (குறுந்.145)
பொருள் - செய்பொருள் சிறப்பு எண்ணி (கலி.16)
காலம் - வான்மடி பொழுதினின் நீர் நசைஇக் குறித்த
கருவி - வென்வேல் அண்ணல் காணா ஊங்கே
(புறநா.141)
வினைமுதல் - நெல்அரி தொழுவர் கூர்வாள் மழுங்கின்
(புறநா.379)
வினை - வெல்போர்ச் சோழர் (ஐங்குறு.56)

எனவும் வரும். இவற்றிற்குப் பொருட்கு ஏற்றகாலங்களை விரிக்க.

**பண்புத் தொகை**

**416. வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று**
**அன்ன பிறவும் அதன்குணம் நுதலி**
**இன்னது இதுஎன வரூஉம் இயற்கை**
**என்ன கிளவியும் பண்பின் தொகையே.**

இது பண்புத்தொகை கூறுகின்றது.

(இ..ள்) இன்னது இது என - ஒரு பொருட்குப் பொதுமை உள்வழி இப்படி இருப்பது இப்பொருள் என்று அதனை விசேடித்துக் கூறும்படியாக, அதன்குணம் நுதலி - பின் வருகின்ற அப்பொருளின் குணத்தைத்தான் கருதி, வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் வருஉம் இயற்கைக் கிளவியும் - அப்பொருட் குணமாகிய வண்ணத்தின்கண்ணும் வடிவின்கண்ணும் அளவின் கண்ணும் சுவையின்கண்ணும் வரும் இயல்பாகிய கிளவியும், அன்ன பிறவும் என்று வருஉம் கிளவியும் - அவை போல்வன பிறவும் என்று சொல்லப்பட்டு வரும் கிளவியும், என்ன கிளவியும் - எத்தன்மையவாகிய சொற்களும். பண்பின் தொகை - பண்புச் சொல்தொக்க தொகையாம். (எ-று)

பண்பு எனப் பண்புச் சொல்லை உணர்த்திற்று. ஆகுபெயராய்.

எழுத்ததிகாரத்து,

உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின்
ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும் (எழு.482)

என்புழிப் பண்புத்தொகை ஐந்து பாலையும் உணர நிற்றலின், அங்ஙனம் நின்றன பிரித்துப் புணர்தற்கு இயையா என்றமையான், ஈண்டும் அதற்குஏற்ப இயற்கை என்றார். ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும் என்றதன் பொருள், ஐந்து பாலையும் ஒருவன் அறிதற்குக் காரணமாகிய பண்புச்சொல் தொக்க தொகைச் சொல்லும் என்றவாறு ஆம். பண்பு உணர்த்துகின்ற ஐம்பால் ஈறுகள் தொக்கு நின்றே விரியும் என்பது உணர்த்துதற்கு அவ்வாசகம் தோன்ற இன்னது என்றார். ஐம்பாலும் பொருள் என்றால், அஃறிணையாய் அடங்கும் ஆதலின், பொருள் ஆக்கி இது என்று அஃறிணையால் கூறினார். இந்நான்களுள் வண்ணமும் அளவும் சுவையும் ஐம்பாற்கண்ணும் வரும்.

(உ..ம்) வண்ணம் - கரும்பார்ப்பான், கரும்பார்ப்பனி, கரும்பார்ப்பார், கருங்குதிரை, கருங்குதிரைகள் என்னும் பண்பு

உணர்த்தும் ஈறுகள் தொக்கனவற்றை விரிப்புழிக் கரியன் ஆகிய பார்ப்பான், கரியள் ஆகிய பார்ப்பனி, கரியர் ஆகிய பார்ப்பார், கரியது ஆகிய குதிரை, கரியன ஆகிய குதிரைகள் எனப்பண்பு உணர்த்தும் ஐம்பால் ஈற்றினையும் விரித்தவாறு காண்க. கரியபார்ப்பான் என்பது ஈறு தோன்றாத பெயரெச்சக் குறிப்பாய் நிற்கும். இனி, வெம்மை முதலியவற்றிற்கும் இவ்வாறே ஒட்டுக. இவற்றுள் கரு ஒழிய ஏனைய தொக்கவாறு காண்க. இவற்றுள் அஃறிணைக்கண் வரும் ஈறுகள் பண்பு கொள் பெயராய் நிற்குமாறு உணர்க.

இனி அளவு : குறுமுனி, குறுமகள் ஆடிய, ஊர்க்குறுமாக்கள் (புறநா.94) குறுந்தாட் கூதளி, குறுங்கோட்டன என்பனவற்றையும் அவ்வாறே விரிக்க. இனி, நெடுமை முதலியவற்றிற்கும் இவ்வாறே ஒட்டுக.

இனி, சுவை : ஐம்பொறியான் நுகர்தற்கு உரிய இனிமைகளை உணர்த்தும். சாயல் மார்பின் கமழ்தார் குழைத்த எனவும், தீங்கரும்பு அனுக்கிய எனவும்,

தீம்புகை கமழ ஊட்டி

எனவும்,

உடைதிரைத் திவலை அரும்பும் தீநீர்

எனவும்,

தீந்தொடை நரம்பின்

என்வும் மெய்யானும் நாவானும் மூக்கானும் கண்ணானும் செவியானும் நுகரும் இனிமையை உணர்த்தின. இவற்றை விரிப்புழி அஃறிணை இருபாற்கும் ஏற்ப, இனிதாகியமார்பு, தீவியனவாகிய கரும்புகள், தீவிது ஆகிய புகை, தீவிது ஆகிய நீர், தீவியன ஆகிய நரம்புகள் என விரிக்க. இனி கட்கு இன்புதல்வன், கட்கு இன்புதல்வி, கட்குஇன்புதல்வர் எனக் கண்ணான் நுகரும் இனிமைக்கண் உயர்திணை முப்பாலுக்கும் ஏற்ப இனியன் ஆகிய புதல்வன் இனியள் ஆகியபுதல்வி, இனியர் ஆகிய புதல்வர் என விரிக்க.

இனி வடிவு : இது வட்டம், சதுரம், கோணம்

முதலியனவாம். வட்டப்பலகை என்பது வட்டமாகிய பலகை என விரிந்து தனக்கு ஏற்ற ஒருமை பன்மையை உணர்த்தும் ஈறுகள் இன்றி நிற்றலின், இஃது ஐம்பால் அறியாத பண்புத் தொகை ஆயிற்று. இங்ஙனம் ஐம்பால் அறியாத பண்புத் தொகையை ஆசிரியர் எழுத்தின்கண் நிலைமொழி வருமொழி செய்து புணர்த்தார். அவை அகங்கை முதலியனவாம்.

கரும்பார்ப்பான் என்புழிக் கருமையும் பார்ப்பானும் தம்மில் வேறு இன்றி நின்று மகனாகிய பொருளையே உணர்த்தியவாறும், கருமை பார்ப்பான் பொதுமையை விசேடித்தவாறும், பார்ப்பான் கருமையின் பொதுமையை விசேடியாதவாறும் காண்க. இவை தொகுங்கால் கரு என்னும் பண்பு மாத்திரம் நின்று பண்புப் பெயராங்கால் பெற்றுநிற்கும் கருமை என்றும் மகர ஐகாரம் தொக்கு நிற்கும் என்றால், கரியது வெளியது கரியன வெளியன என்றும் பண்பு உணர்த்தும் ஈறுகளின் கண்ணும் அவைதொக்கு இவையும் தொகைச் சொல் ஆவான் சேறலின், அது பொருந்தாது.

கரியன், கரியள், கரியர், கரியது, கரியன என்னும் பண்பு உணர்த்தும் ஈறுகளே தொக்கு நிற்பன என்று உணர்க. என்னை? ஆசிரியர் இப்படி இருப்பது இப்பொருள் என வினைக்குறிப்பிற்கு ஏற்றவிரிவு தோன்றச் சூத்திரம் செய்தார் ஆகலின். இன்னது இது என ஒருபொருள்மேல் நிற்றலின், இப்பண்புத் தொகைகள் எல்லாம் பெயரெச்ச வினைக்குறிப்பாய் நிற்பது ஒரு பெயர் என்று உணர்க. அஃது உருபு ஏற்றும் பயனிலை கொண்டும் நிற்றலின்.

உயர்திணை என்பது வினைத்தொகையோ பண்புத் தொகையோ எனின், உயர் என்றும் முதல்நிலை நின்று, உயர்ந்ததிணை என அகர ஈற்றுப் பெயரெச்சமாய் இறந்த காலம் தொக்கு நிற்றலின் வினைத்தொகையாம். இதற்கு ஏனைக்காலமும் தொகுமாறு அறிக. இதனைப் பண்புத்தொகை ஆக்கி விரக்குங்கால் கரியது ஆகிய குதிரை என்று விரிந்தாற்போல விரியாது உயர்ந்தது ஆகிய திணை என்று விரிக்கவேண்டும். அங்ஙனம் விரித்து அஃது உயர் என்றும் முதல்நிலைப்பின் வந்த தகர

அகரம் இறந்த காலம் உணர்த்தியே நிற்றலின், பண்புத்தொகை ஆகாமை உணர்க. என்னை? பண்பும் வினைக்குறிப்பும் முக்காலமும் புலப்படாமை நிற்கும் என்றேமுற் கூறலின். அன்றியும் காலம் புலப்பட நின்றதன்மேல் பண்புகொள் பெயர் விரியாமை உணர்க.

இனி அன்ன பிறவும் என்றதனாள், நுண்ணூல், பராரை, நல்லாடை, வெந்தீ, தண்ணீர், நறும்பூ என்னும் தொடக்கத்தன கொள்க.

மெல்லிலை வினைத்தொகையும் ஆம்.

இத்தொகையை வேற்றுமைத்தொகை என்பார், கருமையை உடைய பார்ப்பான் என்று பண்புப்பெயர் ஆக்கி விரிப்பர். அது பொருந்தாது. கரு என்னும் முதல்நிலை பண்பினை உணர்த்தி, இதனை உடையது இது என நில்லாது, கரியது எனப் பண்புடைய பொருளை நோக்கி நிற்றலின் வேற்றுமைப் பொருண்மை ஆண்டு இன்று என உணர்க.

என்ன கிளவியும் என்றதனான் சாரைப்பாம்பு, கேழற்பன்றி, வேழக்கரும்பு, இடைச்சொற்கிளவி, உரிச்சொற்கிளவி என்றாற் போலப் பண்பு உணர்த்தும் ஈறுகள் தொகாது தம்பொருள் உணர்த்தும் பெயர்ப்பெயர் இரண்டு கூடிநின்று விசேடித்தலை உணர்த்தும் இருபெயர் ஒட்டுப்பண்புத்தொகையும் கொள்க. அவை சாரை எனவும், கேழல் உழுத கரிப்புனக் கொல்லை (ஐந்.எழு.11) எனவும், வேழம் தீவியது எனவும், இடைச்சொல் எல்லாம் (455) எனவும் உரிச்சொல் மருங்கினும் (456) எனவும் பின்வரும் சொல் இன்றியும் தம் பொருள் உணர்த்துதல் பற்றி எடுத்து ஒத்தினுள் முடியாமையின் இலேசான் கொண்டார். வட்டப்பலகை, அகங்கை முதலியன பின்வரும் சொல்லோடு அன்றித் தம் பொருள் உணர்த்தாமையின், நிறுத்த சொல்லும் குறித்துவரு கிளவியுமாய் நிற்கும் என்று அவற்றை முடித்தார். இவற்றிற்குப் பின்வரும் சொல் முன்வரும்மொழியை விசேடியாது நிற்கும். இங்ஙனம் வரும் என்றற்கு அன்றே ஆசிரியர் இன்னது இது என்று முன்மொழியை

விசேடிப்பதாகவும், பின்மொழியை விசேடிக்கப்படுவதாகவும் கூறுவார் ஆயிற்று என்று உணர்க. (20)

**உம்மைத் தொகை**

417. இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண்இயற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே.

இஃது உம்மைத்தொகை கூறுகின்றது.

(இ..ள்) உம்மைத் தொகை - உம்மை தொக்கு நிற்கும் தொகை, இருபெயர் - இரண்டாகிய பெயரும், பலபெயர் - பலவாகிய பெயரும், அளவின்பெயர் - அளத்தலான் உளவாகிய பெயரும், எண் இயல் பெயர் - எண் இயலான் ஆகிய உயர்திணைப் பெயரும், நிறைப் பெயர்க்கிளவி - நிறுத்தலான் ஆகிய பெயர்ச்சொல்லும், எண்ணின் பெயரோடு - எண்ணினான் உளவாகிய அஃறிணைப் பெயரோடே கூட்டப்பட்ட, அவ்அறு கிளவியும் கண்ணிய நிலைத்து - அவ் ஆறு சொல்லையும் கருதின நிலைமையை உடைத்து. (எ-று)

| | | | |
|---|---|---|---|
| (உ..ம்) | உவாஅப் பதினான்கு | - | இருபெயர் |
| | புலிவிற்கெண்டை | - | பல பெயர் |
| | தூணிப்பதக்கு | - | அளவின் பெயர் |
| | முப்பத்து மூவர் | - | எண் இயற்பெயர் |
| | தொடியரை | - | நிறைப்பெயர் |
| | பதினைந்து | - | எண்ணின் பெயர் |

இவற்றை உம்மை விரித்துக் கொள்க.

பலபெயர் எனவே இருபெயரும் அடங்குமேனும், இரண்டாகிய பல பெயரினும், இரண்டு இறந்த பல பெயரினும் தொகும் என்றற்கு இருபெயர், பலபெயர் என்றார். அளவுப் பெயர் முதலியன இருபெயருள் அடங்கும் எனினும் முன்னர்யாண்டும்

பொருள் வேற்றுமையே பற்றி வேறாக ஓதுதலின் ஈண்டும் எடுத்து ஓதினார்.

(21)

**அன்மொழித் தொகை**

418. பண்புதொக வரூஉம் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின்று இயலும் அன்மொழித் தொகையே.

இஃது அன்மொழித்தொகை கூறுகின்றது.

(இ..ள்) அன்மொழித்தொகை - ஒருவன் கூறும் சொற்கள் அன்றிப் பின்னர் வேறு ஒருசொல் தொக்கு நிற்கும் தொகை, பண்பு தொக வரூஉம் கிளவியானும் - பண்புச் சொல் தொக வரும் தொகைப் பெயர்க்கண்ணும், உம்மை தொக்க பெயர் வயினானும் - உம் என்னும் இடைச்சொல் தொக்க தொகைப் பெயர்க்கண்ணும், வேற்றுமை தொக்க பெயர் வயினானும் - வேற்றுமை உருபுகள் தொக்க தொகைப் பெயர்க் கண்ணும், ஈற்று நின்று இயலும் - இறுதிச் சொற்கண்ணே நின்று நடக்கும். (எ-று)

முன்னர் அன்மொழியான் உணரும் பொருள்களை மனத்தான் உணர்ந்து தான் பின்னர்ப் பண்புத்தொகை முதலியனவற்றான் கூறக்கருதியவழி அத்தொகைகளின் இறுதிச் சொற்கள் எழுந்து, படுத்தல் ஓசையான் அத்தொகைச் சொல்தோன்றிப் பொருள் விளக்குதலின் ஈற்று நின்று இயலும் என்றார்.

(உ..ம்) வெள்ளாடை, தகர ஞாழல், பொற்றொடி எனவரும். இவை வெள்ளாடை உடுத்தாள், தகரஞாழல் அணிந்தாள், பொற்றொடி தொட்டாள் என இறுதிச் சொற்கண் எழுந்து, படுத்தல் ஓசையான் தொகை தோன்றியவாறு காண்க.

பெரும்பான்மை வரும் பண்புத் தொகைப் பின்னர் அங்ஙனம் வரும் வேற்றுமைத்தொகையை வையாத

முந்துமொழிந்ததன் தலைதடு மாற்றான் உவமத்தொகைக் கண்ணும் வினைத்தொகைக்கண்ணும் அன்மொழித்தொகை வருதல் கொள்க.

வினையின் தொகையினும் உவமத் தொகையினும்
அன்மொழி தோன்றும் என்மனார் புலவர்

என்பது அவிநயம். அறல் கூந்தல், திரிதாடி என்பனவற்றை அறல் போலும் கூந்தலை உடையாள், திரிந்த தாடியை உடையான் என விரிக்க. *(22)*

**தொகைச் சொல் பொருள்நிலை**

419. அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குஉடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான்கு என்ப பொருள்நிலை மரபே.

இது தொகைச் சொல் பொருள் நிலை கூறுகின்றது.

*(இ..ள்)* அவைதாம் பொருள் நிலை மரபு - அத்தொகைச் சொற்கள் தாம் பொருள் பெற்று நிற்கும் நிலைமையினது முறைமையினை, முன்மொழி நிலையலும் - முன்மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்றலும், பின்மொழி நிலையலும் - பின்மொழிக் கண்ணே பொருள் சிறந்து நிற்றலும், இருமொழி மேலும் ஒருங்கு உடன் நிலையலும் - இருமொழிக்கண்ணும் பொருள் ஒருங்கு சிறந்து நிற்றலும், அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும் - அவ் இருமொழிக்கண்ணும் பொருள் சிறந்து நில்லாது மற்றொரு மொழிக்கண்ணே பொருள் சிறந்து நிற்றலும், அந்நான்கு என்ப - என்று சொல்லப்பட்ட அந்நான்கு கூறு என்று சொல்லுவர் ஆசிரியர். (எ-று)

*(உ..ம்)* வேங்கைப்பூ - முன்மொழி நிலையல். அது நறிது என்பதனொடு கூட்ட வேங்கைக்கண் பொருள் சிறவாது பூவின்கண் பொருள் சிறந்தலின்.

ஆரமாலை - பின்மொழி நிலையல் இவை வேற்றுமைத் தொகை.

வேற்கண் - முன் மொழி நிலையல்

பெண் அணங்கு - என்பது அணங்கு போலும் பெண் என்பதாகலின் பின்மொழி நிலையலாம். இவை உவமத்தொகை.

கொல்யானை - முன்மொழி நிலையல் இவ்வினைத் தொகைக்கும் பின்மொழி நிலையல் இன்று.

தீந்தேன் - முன்மொழி நிலையல்

அடைகடல் - பின்மொழி நிலையல்.

இது கடலாகிய அடை எனக் கரை கூறுதலே கருத்தாகலின். இவை பண்புத் தொகை.

இவை இடம் பற்றி வந்த முன்னும் பின்னும் ஆம். காலம் பற்றி வருவனவும் வந்துழிக்காண்க.

பண்புத்தொகையே அன்றி ஏனைத் தொகைக்கும் விசேடித்தல் சிறுபான்மை வருதலின், ஒன்றன் கண்ணது பொருட் சிறப்பு என்றார்.

உவா அப்பதினான்கு - இருமொழி மேலும் நின்றது. புலிவிற்கெண்டை எனப்பன்மொழிமேல் நிற்றலும் கொள்க.

வெள்ளாடை என்பது இருமொழி மேலும் நில்லாது, உடுத்தாள் மேல் பொருள் நின்றது. (23)

**தொகைகள் ஒருசொல் நீர்மைய**

420. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய.

இது தொகைச் சொற்கள் எல்லாம் ஒரு சொல்லாய் நிற்கும் என்கின்றது.

(இ..ள்) எல்லாத் தொகையும் - இரு மொழித் தொடரின் கண்ணும் பன்மொழித் தொடரின் கண்ணும் தொக்கு நிற்கும் எல்லாத் தொகைச் சொற்களும், ஒருசொல் நடைய - ஒருசொல் நின்று தன்னை முடிக்கும் சொற்களொடு முடியுமாறு போலத்தாமும் தம்மை முடிக்கும் சொற்களொடு முடிதலை உடைய (எ-று)

அங்ஙனம் முடியுங்கால் பெயரின் ஆகிய தொகையுமார் உளவே (68) என்னும் சூத்திரத்தான், தொகைச் சொல் இருவகைய என்றும், அவற்றுள் பெயரும் பெயரும் தொக்கன ஒருசொல் நீர்மையைவாய்ப் பயனிலை கொள்ளும் என்று கூறிய விதி ஒழிந்த இலக்கணங்கள் எல்லாம் ஈண்டுக்கொள்க.

அவை யானைக்கோடு என்றும் பெயரின் ஆகியதொகை, யானைக் கோட்டைக் குறைத்தான் என உருபு ஏற்றலும், நிலம் கடந்தாள், குன்றத்து இருந்தான் என்றும் வினையின் ஆகிய தொகைகளும் ஒரு முற்றுச் சொல்லாயச் சாத்தன் என்றும் பெயர் கோடலும்.

மா ஊர்ந்து போயினார், குன்றத்து இருந்து போயினார் என வினையெச்சச் சொல்லாய் நிற்றலும், மா ஊர்ந்த சாத்தன், குன்றத்து இருந்த சாத்தன் எனப் பெயரெச்சச் சொல்லாய் நிற்றலும் ஆம். இவ்வினையின் ஆகியதொகை படுத்தல் ஓசையான் பெயர் ஆகிய வழிப் பயனிலை கோடலும் கொள்க. எழுத்தினுள் பெயரும் தொழிலும் (எ.132) என்னும் சூத்திரத்துள், பெயரும் தொழிலும் பிரிந்து இசைத்த வழியும், பெயரும் பெயரும் ஒருங்கு இசைத்த வழியும் வேற்றுமை தொக்கு நிற்கும் என்றலின், நிலங் கடந்தான், குன்றத்து இருந்தான் எனப் பெயரும் தொழிலும் பிரிந்து இசைத்த வழியும் தொகையாதல் ஆசிரியர்க்குக் கருத்து ஆயிற்று. இப்பெயரும் வினையும் தொகுதல் உவமத்தொகைக்கும் வினைத்தொகைக்கும் கொள்க. இவை இருமொழித்தொடர்

உயர்சொற் கிளவி (சொ.27)
இடைச்சொற் கிளவி (சொல்.161)
உரிச்சொற் கிளவி (சொல்.161)

என்புழி உயர்சொல், இடைச்சொல், உரிச்சொல் என்னும் தொகைச்

சொற்கள் ஒருசொல் நடையவாய், அவை கிளவி என்பதனொடு தொக்கு ஒருசொல் நடையவாய், மேல்வந்து முடிப்பனவற்றொடு முடிந்தன. கற்சுனைக்குவளை இதழ் என்றாற் போல்வனவும் அது.

இது,

கரிய மலர் நெடுங்கண் காரிகைமுன் (சிலப்.7.5)
முட்புற முதிர்கனி
பெடைமயில் உருவின் பெருந்தகு பாடினி (பொருந.47)
கன்னிப் பெண்ஆர் அமுதின் (சீவக.24)

எனச் செய்யுட்கண் பலதொகையும் விராய்வந்து, ஒருசொல் நடையவாய்த் தம்மை முடிப்பனவற்னொடு முடிந்தன.

துடை இடைநெடுங்கண் துணைமுலைப் பொற்றொடி
இஃது அறுவகைத் தொகையும் ஒருங்கு தொக்கது.
கலனே தூணிப்பதக்கு, தொடியே கஃசு அரை, பதினொன்றரை
இவை அளவும் நிறையும் எண்ணும் ஒருசொல் நடையவாய் நின்றன.

இப்பன்மொழித் தொகைக்கு முற்கூறிய முடிபுகளும் கொள்க.

இனி, உம்மை எச்ச உம்மை ஆகலின் தொகைஅல் தொடர் மொழிகளிலும் ஒருசொல் நடையவாய் முடிவன உள எனக்கொள்க. அவை,

யானைக் கோடு கூரிது
இரும்பு பொன் ஆயிற்று
மன்று பாடவிந்தது
மக்களை உயர்திணை என்ப

எனவரும்.

**உயர்திணை உம்மைத் தொகை**

421. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்துஎன மொழிமனார் புலவர்.

இஃது உம்மைத்தொகைக்கு வழு அமைக்கின்றது.

(இ..ள்) உயர்திணை மருங்கின் உம்மைத்தொகையே - உயர்திணைப் பெயரிடத்துத் தொக்க உம்மைத் தொகையின் ஈறு, பலர் சொல் நடைத்து என மொழிமனார் புலவர் - பலரைச் சொல்லும் சொல்லின் இறுதிபோலப் பன்மை உணர்த்தி நிற்கும் என்று கூறுவர் ஆசிரியர். (எ-று)

(உ..ம்) கபிலபரணர்.

கபிலன்பரணன் என்பதில் கபிலன் என்னும் னகர ஈறு சந்தியான் கெட்டுக் கபிலபரணன் என நின்றவழி இருவராய் நின்றமையின், வந்தார் என்றும் பன்மையொடு முடிதல் வேண்டுதலின், ஆண்டு நின்ற ஒருமை ஈறு பன்மையொடு முடிதல் வழு என்று கருதி, னகர ஈறு ரகர ஈறாய் நிற்கும் என வழு அமைத்தார். கல்லாட மாமூல சீத்தலைச்சாத்தர் என்றாற் போல்வனவும் அது. இவை ஓசைபகுத்து இசைத்தலின், ஒருசொல்லாய் ஒட்டாமை காண்க.

உயர்திணைப் பெயர் என்னாது மருங்கின் என்றார், உயர்திணை விரவுப் பெயரும் அடங்குதற்கு. (25)

**குறிப்பு மொழிகள்**

422. வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றுஅவற்று இயல்பான்
இன்ன என்னும் குறிப்பு உரை ஆகும்.

இது, தொகை அதிகாரம் விட்டு மரபுவழுக்காக்கின்றது.

(இ..ள்) வாராமரபின வரக் கூறுதலும் - இயங்காதனவற்றை இயங்குவனவாகக் கூறுதலும். என்னா மரபின எனக் கூறுதலும் - சொல்லாதனவற்றைச் சொல்லுவனவாகச் சொல்லுதலும் ஆகிய, அன்னவை எல்லாம் - அத்தன்மையன எல்லாம், அவற்று அவற்று இயல்பான் - அவ்வப் பொருள்களின் இயல்பு காரணத்தான், இன்ன என்னும் குறிப்புரை ஆகும். இத்தன்மையை என்று சொல்லும் குறிப்பு மொழியாம். (எ-று)

(உ..ம்) அந்நெறி ஈண்டுவந்து கிடந்தது,
அம்மலை வந்து இதனோடு பொருந்திற்று எனவும்,
அவல்அவல் என்கின்றன நெல்,
மழைமழை என்கின்றது பைங்கூழ்

எனவும் வரும். இவை வரவும் சொல்லும் உணர்த்தாது இன்ன என்பதனைக் குறிப்பான் உணர்த்தியவாறு காண்க.

இனி, ஒன்று என முடித்தல் என்பதனாள், கவவு அகத்திடும் (357) என்றாற்போல அச்சொல்லின் பொருள் தொழிலை அச்சொல்மேல் ஏற்றிக் கூறுவனவும், ஆயிரம் காணம் வந்தது என்றாற் போல ஒருவனான் இயக்கப்பட்டதனைத் தானே இயங்கிற்றாகப் பொருள் கூறுவனவும், நீல் உண்துகிவிகை என்றவழி நீலம் பற்றியதனை நீலம் உண்டதாக்கிப் பொருள் கூறுதலும் இப்பொருளை இச்சொல்சொல்லும் என்றாற் போலவருவனவும் கொள்க. (26)

**இசைநிறை அடுக்கு**

423. இசைப்படு பொருளே நான்குவரம்பு ஆகும்.

இது முற்கூறிய (411) இசைநிறை அடுக்கிற்கு வரையறை கூறுகின்றது.

(இ..ள்) இசைப்படு பொருளே நான்குவரம்பு ஆகும் - முற்கூறிய ஒருசொல் அடுக்கினுள் இசை நிறைத்தலான்படும் பொருண்மைக்கு வரும் அடுக்கு நான்காகிய எல்லை உடைத்தாம். (எ-று)

(உ..ம்) பாடுகோ பாடுகோ பாடுகோ பாடுகோ எனவரும். (27)

**விரைசொல் அடுக்கு**

424. விரைசொல் அடுக்கே மூன்றுவரம்பு ஆகும்.

இது முற்கூறிய பொருளொடு புணர்தல் அடுக்கிற்கு (411) வரையறை கூறுகின்றது.

(இ..ள்) விரைசொல் அடுக்கே மூன்று வரம்பு ஆகும் - முற்கூறிய ஒருசொல் அடுக்கினுள் பொருளொடு புணர்தற்கண் விரைவு பொருள்பட அடுக்குவது மூன்றாகிய வரம்பை உடைத்து. (எ-று)

(உ..ம்) தீத்தீத்தீ

எனவரும். அசைநிலை இருமுறை அல்லது அடுக்காமையின் அதற்குப்பே ரெல்லை கூறார் ஆயினார். ஒரு முறைவருவது அடுக்கு அன்மையின், ஒருசொல் அடுக்கு எனவே, இருமுறை அடுக்கினமை பெறுதும். அவை பெறவே, தீத்தீ, படைபடை என விரைவு பொருளின் சிற்றெல்லை இருகால் அடுக்குதல் கொள்க. இஃது இசைப்படு பொருளுக்கும் ஒக்கும். விரைவிக்கும் சொல் விரைசொல். *(28)*

அசைநிலை அடுக்கு

425. கண்டீர் என்றா கேட்டீர் என்றா
சென்றது என்றா போயிற்று என்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி அசைக்கும் கிளவி என்ப.

இது வினைச் சொற்களுள் ஒரு சாரன அசையாம் என்கின்றது.

(இ..ள்) கண்டீர் என்றா கேட்டீர் என்றா சென்றது என்றா போயிற்று என்றா அன்றி அனைத்தும் - கண்டீர் எனவும் கேட்டீர் எனவும் சென்றது எனவும் போயிற்று எனவும் அவ்வினைச்சொல் நான்கும், வினாவொடு சிவணி நின்றவழி அசைக்கும் கிளவி என்ப - வினாவொடு பொருந்தி நின்றவழி அசைநிலை அடுக்காம் என்று கூறுவர் புலவர். (எ-று)

எனவே, வினாவொடு சிவணாதவழி வினைச்சொல்லே யாம். ஒருவன் கூறிய கூற்றிற்கு உடன்படாதான் கண்டீரே கண்டீரே, கேட்டீரே கேட்டீரே என்றால் வினைச்சொற் பொருண்மையும் வினாப் பொருண்மையும் இன்றி நிற்கும்.

இது வரையாது கூறினமையின், அடுக்காதும் வரும். ஏனையவும் ஏற்புழி அடுக்கியும் அடுக்காதும் வரும் ஆயினும் அவை இக்காலத்து அரிய. (29)

**இதுவும் அது**

426. கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்உறக் கிளந்த இயல்புஆ கும்மே.

இதுவும் அது.

(இ..ள்) கேட்டை என்றா நின்றை என்றா காத்தை என்றா கண்டை என்றா அன்றி அனைத்தும் - கேட்டை எனவும் நின்றை எனவும் காத்தை எனவும் கண்டை எனவும் வரும் அம்முன்னிலை வினைச்சொல் நான்கும், முன்னிலை அல்வழி - முன்னிலைப் பொருளை உணர்த்தி நில்லாக்கால், முன்உறக்கிளந்த இயல்பு ஆகும்மே - மேல் சொல்லப்பட்ட அசைநிலையாம். (எ-று)

இவையும் கட்டுரைக்கண் அடுக்கியும் சிறுபான்மை அடுக்காதும் வந்து, ஏற்புழி அசைநிலையாய் நிற்கும். இவையும் இக்காலத்து அரிய. இவை சிறுபான்மை வினாவொடு வருதலும் கொள்க. (30)

**ஒருசார் வினைமுற்றுக்குக் குறியீடு**

427. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்ற
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ இடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் ஈர்இரண்டு ஆகும்
அவ்ஆறு என்ப முற்றுஇயல் மொழிபே.

இது வினைச் சொல்லுள் ஒருசாரவைற்றிற்கு ஆட்சி வேண்டி, அதன் குணம் காரணமாகக் கொண்டு ஒரு குறியிடுதல் கூறுகின்றது.

(இ..ள்) தன்மை முன்னிலை படர்க்கை என்னும் அம்மூ இடத்தான் - தன்மை முன்னிலை படர்க்கை என்று சொல்லப்பட்ட அம்மூன்று இடத்தின்கண்ணும் வரும், மெய்ம்மையானும் - உயர்திணை, அஃறிணை, விரவுத்திணை என்னும் மூவகைப்பபொருள் தோறும், வினையினும் குறிப்பினும் ஈர இரண்டு ஆகும் அவ்ஆறு என்ப - தெரிநிலை வினையானும் குறிப்பு வினையானும் இவ்விரண்டாய் வரும் என்று யான் முற்கூறிய அவ்ஆறுவகைச் சொல்லை. இறப்பின் நிகழ்வின் எதிர்வின்என்ற சிறப்பு உடை மரபின் அம்முக் காலமும் இயல் முற்று மொழி என்ப - இறப்பு ஒன்றானும் நிகழும் சிறப்புடை மரபானும், நிகழ்வு ஒன்றானும் நிகழும் சிறப்புடை மரபானும் எதிர்வு ஒன்றானும் நிகழும் சிறப்புடை மரபானும் அம்முக்காலத்தும் நிகழும் சிறப்புடை மரபானும் இயலும் முற்றுச்சொல் என்று பெயர் கூறுவர் ஆசிரியர். (எ-று)

அம்ஆம் என்னும் சூத்திரம் முதலாக (207) பல்லோர் படர்க்கை (229) என்னும் சூத்திரம் இறுதியாக மூவகை இடமும் மூவகைப் பொருளும் இருவகை வினையும் எடுத்து ஓதியவற்றை ஈண்டும் ஓதியது அநுவாதம் ஆயிற்று. ஆண்டு ஓதாது எஞ்சி நின்ற காலமும் குறியீடும் ஈண்டு ஓதியது இலக்கணம் ஆயிற்று. முன்னர்க் குறிப்பினும் வினையினும் (203) என்னும் சூத்திரத்தின் காலமொடு வரூஉம் வினைச்சொல் எல்லாம் என்றது மூவகை வினைக்கும் பொதுவாய் நின்று ஒரோ ஒரு முற்றுவினையும் முக்காலமும் பெற்றே வரும் என்னும் ஐயம் நிகழ்த்திற்றதனை ஒரோ ஒருகாலம் பெற்று வருவனவும் முக்காலமும் பெற்று வருவனவுமாய் நிற்கும் முற்றுஎன ஐயம் அகற்றினார் இச்சூத்திரத்தான். எச்சங்கட்கு மேலிற் சூத்திரத்தான் ஐயம் அகற்றும். மேல் பிரிநிலைவினை (430) என்னும் சூத்திரத்தான் எச்சங்களுக்குக் குறியீடு கூறுகின்றார் ஆதலின், அதற்கு ஏற்பமுற்றிற்கும் குறியீடு கூறினார்.

இனி, அவை காலத்தொரு வருங்கால் றகர உகரம் இறந்த காலத்தான் சிறந்தது. உம்மொடு வரூஉம் கடதறவும் கடதற என்னும் அந்நான்கு ஊர்ந்த குன்றியலுகரமும், அல்லும் பகரமும் மாரும் ஆவும் வவ்வும் ஆகிய பதின்மூன்றும் எதிர்காலத்தான் சிறந்தன.

அம் ஆம் எம் ஏம் என் ஏனும், அன் ஆனும், அள் ஆளும், அர் ஆரும், அகரமும், தகர உகரமும் ஆகிய பதினான்கும் முக்காலத்தால் சிறந்தன.

முற்று இருபத்தொன்பதின்கண் டகர உகரம் வினைக் குறிப்பு ஆதலின் அதுவும் முக்காலத்தான் சிறந்தாம். ஆகத்தெரிநிலை முற்று இருப்த்தெட்டும் காண்க.

யார் (212) எவன் (221) என்பனவோ எனின், அவையும் முறையே முப்பாற்கும் இருபாற்கும் பொதுவாகி இடம் உணர்த்தாவேனும், வினைக்குறிப்பு ஆகலின், முக்காலமும் உடைய என்று உணர்க.

இருதிணைக்கு ஓதிய குறிப்புவினை பதினெட்டும் முக்காலமும் உடைய.

இனி, பொருள் உணர்த்தாது இடம் உணர்த்தும் முன்னிலையும் வியங்கோளும் ஆகிய விரவு வினைமுற்றுக்களும், இடமும் பொருளும் உணர்த்தா விரவு வினைமுற்றுக்களும் பிரிவு வேறுபடுஉம் செய்தியவாய் நிற்றலின், இடமும் பொருளும் உணர்த்திக் காலம் கொண்டே நிற்கும் என்று உணர்க.

இவற்றுள் ஐயும் ஆயும் இருவும் ஈரும் முக்காலத்தான் சிறந்தன, இகரமும் மின்னும், வியங்கோளும் செய்ம்மனவும் எதிர்காலத்தான் சிறந்தன செய்யும் என்பது நிகழ்காலத்தான் சிறந்தது. இன்மை செப்பலும் வேறு என் கிளவியும் வினைக்குறிப்பு ஆதலின் முக்காலத்தான் சிறந்தன.

இனி, விரவு வினையுள் வினை எச்சமும் பெயர்எச்சமும் மேல் கூறுதும். இவை ஈர் இரண்டு ஆங்கால் ஓர் ஈற்றின் கண்ணே கொள்க.

(உ..ம்) சென்றனன், கரியுன் எனவும்,
சென்றனை, கரியை

எனவும் வரும். ஈண்டுக் காலமும் குறியீடும் கூறினாரேனும் வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் என்றும் உத்தி பற்றி வினையியலுள் காலமும் குறியீடும் விரித்து ஆசிரியர் எல்லாரும் உரையும் காண்டிகையும் கூறினார் என்று உணர்க. இவை முற்றி நிற்குமாறு அவற்றொடு வருவழி (237) என்னும் சூத்திரத்துள் கூறினாம்.

மெய்ம்மையானும் என்றது, ஊரான் ஓர்தேவகுலம் என்றாற்போலத் தொறு என்பதன் பொருட்டாய் நின்றது.

இச்சூத்திரத்தில் கூறியன எல்லாம் முற்றுப்பெறுவனவும் குறையப் பெறுவனவும் வினையியலுள் விரித்து ஓதியவாற்றான் உணர்க. *(31)*

**மேலதற்கு ஒரு புறனடை**

**428. எவ்வயின் வினையும் அவ்இயல் நிலையும்.**

இது மேலதற்கு ஒருபுறனடை

(இ..ள்) எவ்வயின் வினையும் - மூன்று இடத்தும் வரும் வினை எச்சமும் பெயர் எச்சமும், அவ்இயல் நிலையும் - அம்முற்று இயல்பிலே நிற்கும். (எ-று)

என்றது, இறப்புப் பற்றி வருவனவும், இறப்பும் நிகழ்வும் பற்றி வருவனவும், எதிர்வு பற்றி வருவனவும் முக்காலமும் பற்றி வருவனவும் ஆம் என்றவாறு.

வினை எச்சங்களுள் உகரமும், ஊகாரமும் எனவும் முன்னும் கடையும் இறப்பும், புகரமும் பின்னும் இறப்பும் நிகழ்வும், இயரும் இயவும் குகரமும் எதிர்வும் அகரமும் காலும் வழியும் இடமும் முக்காலமும் பற்றி வந்தவாறும். பெயர் எச்சங்களுள் உம்ஈறு நிகழ்வும் எதிர்வும், அகர ஈறு இறப்புப் பற்றி வந்தவாறும் காண்க.

இருவகை எச்சத்திற்கும் காலமொடு வருஉம் வினைச் சொல் எல்லாம் (203) என்ற பொது விதியான் முக்காலமும் ஒன்றற்கு வருமோ? என்னும் ஐயம் நிகழ்ந்ததனை இச்சூத்திரத்தான் அகற்றினார். ஆசிரியர் அவற்றிற்கு ஓதிய வாசகங்களான் அவற்றிற்கு உரிய காலங்களும் உணர்த்தினாரால் எனின், அவ்வாசகங்களான் காலம் உணராதவையும் உள ஆகலின், அவையும் விளங்குதற்கு ஈண்டுக் கூறினார் என்று உணர்க.

சேனாவரையர் வினை என்றது முதல்நிலை என்று பொருள் உரைத்து, அவையும் முற்றுச்சொல் போல முற்றி நிற்கும் என்றாரால் எனின், அம்முதல்நிலை படுத்தல் ஓசையான் பெயர்த் தன்மைப்பட நிற்குமாறும், எடுத்தல் ஓசையான் முன்னிலை ஏவல் ஒருமை வினை முற்றாய் நிற்குமாறும் இர்ஈர்மின் (226) என்னும் சூத்திரத்துள் கூறினாம்.

முற்று இலக்கணம் கூறுதற்கு இடையே, இச்சூத்திரத்தான் எச்ச இலக்கணத்தைக் கூறினார், பருந்து விழுக்காடாக மாட்டேற்றிற்று என்று கருதி. (32)

**வினைமுற்றுக்கள் பெயரொடு முடிதல்**

429. அவைதாம்,
தத்தம் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர்முடி பினவே.

இது முற்றுச்சொற்கு முடிபு கூறுகின்றது.

(இ..ள்) அவைதாம் - முற்கூறிய முற்றுச்சொற்கள்தாம் தத்தம் கிளவி அடுக்குந வரினும் - தத்தமக்கு உரிய வாய்பாடுகள் பலவாய் அடுக்கிவரினும் உம்மையான் அடுக்காது ஒன்றே வரினும், எத்திறத்தானும் பெயர் முடிபினவே - எவ்வாற்றானும் பெயர்ச் சொல்லை முடிபாக உடைய. (எ-று)

(உ..ம்) உண்டான், நின்றான் ஓடினான் பாடினான் சாத்தன்
நல்லன் அறிவுடையன் செவ்வியன் சான்றோர் மகன்

எனவும்,

வந்தான் வழுதி
கரியன் மால்

எனவும் வரும்.

எத்திறத்தானும் என்றதனான்,

உண்டான் சாத்தன்
சாத்தன் உண்டான்

என முன்னும் பின்னும் பெயர் நிற்றலும்,

நின்றான் இருந்தான் கிடந்தான்தன் கேள்அலறச்
சென்றான் (நாலடி.29)

என அடுக்கிப் பெயர் வெளிப்படாது நிற்றலும்,

முப்பஃது என்ப (எ.1)

என அடுக்காது பெயர் வெளிப்படாது நிற்றலும் கொள்க.

ஈண்டும் இலேசான் கொண்டது முடிக்கும் பெயர் வெளிப்படாது நின்றதற்கு என்றும், எவ்வயின் பெயரும் (69) என்னும் சூத்திரத்தான் கொண்டது முடிக்கப்படும் பெயர் வெளிப்படாது நின்றதற்கு என்றும் உணர்க.

வேற்றுமைச்சொல் என வேறுஒரு சொல் இன்றி முற்றும் எச்சமும் வேற்றுமையை விரிக்குமாறு போல, எழுவாயும் பயனிலையும் என வேறு ஒருசொல் இன்றி முற்றும் எச்சமும் எழுவாயும் பயனிலையுமாய் நிற்கும் என்றும் உணர்க.

முற்றுப் பெயர் கொண்டு அல்லது தாமாக முற்றி நில்லாமைக்குக் கரணம் அவற்றொடு வருவழி (237) என்னும் சூத்திரத்துள் கூறினாம்.

**பத்துவகை எச்சங்கள்**

430. பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே
குறிப்பே இசையே ஆஈர் ஐந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி.






இது முற்கூறிய எச்சச் சொற்களுக்கு முடிபு கூறுவான் அவற்றது பெயரும் முறையும் தொகையும் கூறுகின்றது.

(இ..ள்) நெறிப்படத் தோன்றும் - முன்னர் எடுத்து ஓதிய இடங்களிலே முறைமைப்படத் தோன்றும், பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை எதிர்மறை உம்மை எனவே சொல்லே குறிப்பே இசையே ஆ ஈரைந்தும் - பிரிநிலை முதல் இசை ஈறாகிய அப்பத்தும், எஞ்சு பொருட்கிளவி - எச்சச் சொல் என்று பெயராம். (எ-று)

எஞ்சி நிற்பது ஒரு பொருளை உடைய சொல் எனவே, எச்சச் சொல் என்று பெயர் ஆயிற்று. இப்பத்தோடும் எச்சம் என்பதனைச் சுட்டுக. இவற்றுள் பிரிநிலை எச்சம் முதலிய ஏழும் எச்சச் சொல் வந்து முடித்தலை உடைய; ஏனைய மூன்றும் அச்சொல் வந்து முடியா என்று உணர்க.

வினையெச்சமும் பெயரெச்சமும் வினைச்சொல் ஒழிபு. ஏனை இடைச்சொல் ஒழிபு ஆம். (34)

**பிரிநிலை எச்ச முடிபு**

431. அவற்றுள்,
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.

இது முறையே பிரிநிலை எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ..ள்) அவற்றுள் - முற்கூறிய பத்தனுள், பிரிநிலைஎச்சம் - ஏகாரமும் ஓகாரமும் ஆகிய பிரிநிலை எச்சங்கள், பிரிநிலை முடிபின - பிரிக்கப்பட்ட பொருள்மேல் வரும் சொல்லையே தமக்கு முடிபாக உடையவாம். (எ-று)

(உ..ம்) அவனே கொண்டான்,
அவனோ கொண்டான்

எனப் பிரிக்கப்பட்ட சுட்டுப் பெயரின் வினைகொண்டு முடிந்தன. இடைச்சொற்குத் தமக்கு இயல்பு இன்மையின், சோற்றைப் பசித்து

உண்டான் என்றாற்போல அவன் என்னும் சுட்டுப் பெயரும், இடைநின்ற ஏகாரமும் ஓகாரமும் கொண்டான் என்பதனொடு முடிந்தன.

அன்றி அவன் என்பது கொண்டான் என்பதனொடு முடிய, ஏகார ஓகாரங்கள் பிறர் கொண்டிலர் என்பதனொடு முடிந்தன என்றல் பொருத்தம் உடைத்து எனின், வினைஎச்சமும் பெயர் எச்சமும் ஒழித்து இடைச்சொல்லான் வரும் எச்சங்கள் பொருள் தருமாறு இடைச்சொல் ஓத்தினுள் கூறி, ஈண்டு அவற்றிற்கு முடிபு சொல் கூறுகின்றார் ஆதலின், கொண்டான் என்றும் சொல் வந்து அவ்எச்சங்களை முடித்தால் அல்லது பிறர் கொண்டிலர் என்னும் பொருண்மை முடிபு தோன்றாது ஆதலின், கொண்டான் என்பதே முடிக்குஞ் சொல்லாய் நிற்பப் பிறர் கொண்டிலர் என்னும் பொருண்மை முடிபு தோன்றிற்று என்றலே பொருத்தம் உடைத்து என்றுகோடும். அன்றியும், மும்மை எச்சத்திற்கு உள் நின்ற பொருண்மை முடிபு முன்னர்க்கூறி, அதனை நீக்கிச் சொன்மை முடிபு ஈண்டுக் கூறுகின்றதனானும், இஃதே ஆசிரியர் கருத்து என்று உணர்க.

**வினைஎச்சத்திற்கு முடிபு**

432. வினைஎஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபுஆ கும்மே
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே.

இது வினைஎச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ..ள்) வினை எஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும் நினையத் தோன்றிய முடிபு ஆகும் - வினை எச்சத்திற்குத் தெரிநிலை வினையும் குறிப்பு வினையும் ஆராயத்தோன்றிய முடிபு சொல்லாம்; ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே - ஆண்டுக் குறிப்பு முற்று ஆக்க வினையொடு வரும். (எ-று)

(உ..ம்) உழுது வந்தான்
மருந்து உண்டு நல்லன் ஆயினான்

எனவரும்.

நினைய என்றதனான்,

உழுது வந்தவன்
உழுது வருதல்

எனத் தொழிற்பெயரொடும் வினைப்பெயரொடும் முடிதல் கொள்க.

ஈண்டு இவ்வினைஎச்சமுடிபு கூறுகின்றவர், வினையியற்கண் முதல் நிலை மூன்றும் (232) என்னும் சூத்திரம் முதலிய மூன்று சூத்திரத்தான் வினை எச்சத்திற்கு முடிபு கூறியது என்னை? எனின், ஈண்டுக் கூறிய பொதுவிதிக்கு ஆண்டு மூன்று சூத்திரத்தானும் மூவகையாகச் சிறப்பு விதி கூறினார், எதிரது போற்றல் என்னும் சூத்திர உத்தியான் என்க.

இனி,

வேங்கையும் காந்தளும் நாறி
ஆம்பல் மலரினும் தான் தண்ணியளே (குறுந்.84)

வில்லக விரலின் பொருந்தி அவன்
நல்அகம் சேரின் ஒருமருங் கினமே (குறுந்.370)

என்றாற் போல்வன பிறவும் ஆக்கம் விரிந்து அல்லது பொருள் உணர்த்தாமை உணர்க. (36)

**பெயர் எச்சத்திற்கு முடிபு**

433. பெயர்எஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

இது பெயர் எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ..ள்) பெயர் எஞ்சு கிளவி பெயரொடு முடிமே - பெயர் எச்சம் பெயர்ச் சொல்லொடு முடியும். (எ-று)

(உ..ம்) உண்ணும் சாத்தன்
உண்ட சாத்தன்

எனவரும்.

ஈண்டுப் பெயரொடு முடியும் என்னும் பொதுவிதி நோக்கி நிலனும் பொருளும் (236) என்னும் சூத்திரத்தான் இப்பெயர்தாம் பொருள் வகையான் ஆறு வகையவாம் என்று எதிரது போற்றல் என்னும் உத்தியான் கூறினார். (37)

**ஒழியிசை எச்சத்திற்கு முடிபு**

**434. ஒழியிசை எச்சம் ஒழியிசை முடியின.**

இஃது ஒழியிசை எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ..ள்) ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின - மன்னும் தில்லும் ஓகாரமும் ஆகிய ஒழியிசை எச்சம் மூன்றும் அவ்ஒழியிசைப் பொருள்மேல் வரும் சொல்லையே தமக்கு முடிபாக உடைய. (எ-று)

(உ...ம்) கூறியதோர் வாள்மன் என்பது திட்பம் இன்று என்பதனோடும், வருகதில் அம்ம (அகநா.276) என்பது வந்தால் இன்னது செய்வேன் என்பதனோடும் முடியும். ஆண்டுப் பொருண்மை முடிபு கூறினார், ஈண்டும் பொருண்மையை உணர்த்தும் சொன்மை முடிபு கூறினார்.

கொளலோ கொண்டான் என்பது கொண்டான் என்பதனொடு முடியும். அது கொண்டுய்யப் போமாறு அறிந்திலன் என்பதனொடு முடிந்தது எனின், கொண்டான் என்பது வந்து முடியாக்கால் அப்பொருண்மை முடிபு தோன்றாமை உணர்க.(39)

**எதிர்மறை எச்சத்திற்கு முடிபு**

**435. எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின.**

இஃது எதிர்மறை எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ..ள்) எதிர் மறை எச்சம் எதிர்மறை முடிபின - மாறு கோள் எச்சம் என்னும் ஏகாரமும் ஓகாரமும் (எழு.275,290) உம்மையாகிய எதிர்மறை எச்சமும் என்ற மூன்றும் எதிர்மறைப் பொருளை உணர்த்தும் சொல்லை முடிபாக உடைய. (எ-று)

(உ..ம்) யானே கொள்வேன்
யனோ கொள்வேன்
சாத்தன் வரலும் உரியன்

என அவ்இடைச்சொற்களின் பின்னர் நின்ற சொற்கள் அவற்றை முடித்தலான், கொள்ளேன், கொள்ளேன், வாராமையும் உரியன் என்னும் பொருண்மை முடிபு தோன்றியவாறு காண்க. (39)

**உம்மை எச்ச முடிபு**

**436. உம்மை எச்சம் இருவீற் றானும்**
**தன்வினை ஒன்றிய முடிபுஆ கும்மே.**

இஃது உம்மை எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

(இ..ள்) இருவீற்றானும் - ஒன்றற்கு ஒன்று முடிவனவும் முடிப்பனவும் ஆகிய இரண்டு கூற்றின்கண்ணும் வரும், உம்மை எச்சம் தன்வினை - உம்மை எச்சங்களை முடிக்கும் தன்னுடைய வினைச்சொற்கள், ஒன்றிய முடிபு ஆகும் - ஓர் உம்மைக்குப் பொருந்திய வினையே மற்றை உம்மைக்கும் முடிவாய் வரும். (எ-று)

(உ..ம்) சாத்தனும் வந்தான் கொற்றனும் வந்தான் என எதிரது தழீஇய உம்மைக்கு முடிவாய வினையே இறந்தது தழீஇயதற்கும் முடிபு ஆயிற்று.

சாத்தனும் வந்தான், கொற்றனும் வரும் என்பதூஉம் ஒன்றிய முடிபாம். கொற்றனும் உண்டான் என்றால் ஒன்றிய முடிபு ஆகாது.

எனவே, எச்சப்பொருட்கும் உம்மையை முடியாகக் கூறாது அதனொடு தொடர்ந்த வினை முடிபு ஆமாறு கூறவே, உள்நின்ற

பொருள் முடிபு கூறாது, சொல் முடிபு கூறுதலே ஆசிரியர் கருத்து ஆயிற்று. எனவே, முற்கூறியனவற்றிற்கும் சொல்முடிபே கூறினார் ஆயிற்று.

வேங்கையும் ஒள்இணர் விரிந்தன
நெடுவெண் திங்களும் ஊர்கொண் டன்றே (அகநா.2)

என்பது இணர்விரிதலும், ஊர்கோடலும் மணம் செய்யும் காலம் குறித்தலின், அவை ஒரு வினையே ஆம்.

இனி எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் ஆயவழியும் தன்வினை கோடல் தன்னினம் முடித்தலான் கொள்க. அது சாத்தன் வந்தான், கொற்றனும் வந்தான், வரும் என்பதாம். *(40)*

**எச்ச உம்மையின் கால மயக்கம்**

437. தன்மேல் செஞ்சொல் வருஉங் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

இதுவும் அவ்எச்ச உம்மையது கால மயக்கம் கூறுகின்றது.

(இ..ள்) தன் மேல் செஞ்சொல் வருஉம் காலை - அவ் உம்மை எச்சத்தின் முன்னர் முடிக்கும் சொல் உம்மை இல்சொல்லாய் வருங்காலத்து, நிகழும் காலமொடு வாராக்காலமும் - நிகழ்காலத்தோடு எதிர் காலமும், இறந்த காலமொடு வாராக் காலமும் - இறந்த காலத்தோடு எதிர்காலமும், மயங்குதல் வரையார் முறைநிலையான - மயங்குதலை நீக்கார் அவ்வாறு மயங்கும் முறைமைக்கண். (எ-று)

(உ..ம்) கூழ் உண்ணா நின்றான்; சோறும் உண்பன்.
கூழ் உண்டான்; சோறும் உண்பன்.

எனவரும். முறைநிலை என்றதனான், சிறுபான்மை நிகழ்வோடு இறப்பும் மயங்குதல் கொள்க.

(உ..ம்) கூழ் உண்ணா நின்றான்; சோறும் உண்டான் எனவரும். (41)

**என என் எச்ச முடிபு**

**438. எனஎன் எச்சம் வினையொடு முடிமே.**

இஃது என என் எச்சம் ஆமாறு கூறுகின்றது.

(இ..ள்) என என் எச்சம் வினையொடு முடிமே - முன்னர் வினையும் குறிப்பும் இசையும் பண்பும் எனக் கூறிய நால்வகைய ஆகிய என என் எச்சம், வினையொடு முடிமே - தெரிநிலை வினையொடும் குறிப்பு வினையொடும் முடியும். (எ-று)

செய்தென என்னும் வினை எச்ச என வினைகோடல் முற்கூறினார் (230) எண் எனவும் பெயர் எனவும் வினை கொள்ளா. எனவே என என்னும் இடைச்சொல் எழுவகையது ஆயிற்று.

(உ..ம்) கார்வரும் எனக்கருதி நொந்தாள்
துண்ணெனத் துடித்தது
ஒல்லென ஒலித்தது
கார்எனக் கறுத்தது
என நான்கனுள் இருவகை வினையும் காண்க.

என்று என்பதற்கும் இவ்விதி ஒக்கும்
கொள்ளென்று கொண்டான்
மலைவான் கொள்என்று உயர்பலிதூஉய் (புறநா.143)
என்பன கொள் என்று சொல்லிக் கொண்டான் எனவும் மலைவான் கொள்ளவேண்டும் என்று சொல்லி எனவும் பொருள் தருதலின், சொல்லெச்சமும் ஆம். (42)

**ஏனை எச்சங்களுக்கு முடிபு வேற்றுமை**

**439. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்**
**எஞ்சுபொருட் கிளவி இலஎன மொழிப.**

இஃது ஏனை எச்சங்களுக்கு முடிபுவேற்றுமை கூறுகின்றது.

*(இ..ள்)* எஞ்சிய மூன்றும் - ஒழிந்த சொல் எச்சமும் குறிப்பு எச்சமும் இசை எச்சமும் ஆகிய மூன்றும், மேல்வந்து முடிக்கும் எஞ்சு பொருள் கிளவி இல எனமொழிப - ஒழிந்த எச்சங்கள் போலத் தமக்கு மேல் வேறாய்வந்து தம்மை முடிக்கும் எஞ்சிய பொருட்கிளவியை உடைய அல்ல என்று கூறுவர் ஆசிரியர். (எ-று)

எனவே, பிறசொல்லை அவாவி நின்றாலும், அவை வந்து முடியாமல் தாமே அவற்றைக் கூறிநிற்கும் ஆயின. அவை மேல்காட்டுதும். சொல்லை எச்சமாக உடைய சொல் எனவும், குறிப்பின்கண் தோன்றிய எச்சம் எனவும் இசையின்கண் தோன்றிய எச்சம் எனவும் விரிக்க. *(43)*

**குறிப்பெச்ச இசையெச்ச முடிபு**

440. தத்தம் குறிப்பின் எச்சம் செப்பும்.

இது குறிப்பு எச்சமும் இசைஎச்சமும் முடியுமாறு கூறுகின்றது.

*(இ..ள்)* எச்சம் - சொல் எச்சம் ஒழிந்த இருவகை எச்சங்கள், தத்தம் குறிப்பின் செப்பும் - தம்மைக் கூறுவோர் தம்முடைய குறிப்புக்களாலே தம்முடைய எஞ்சு பொருளைத்தாமே கூறி நிற்கும். (எ-று)

*(உ..ம்)* கல்கறிக்க நன்கு அட்டான் என்றால் தீங்கு அட்டான் என்னும் குறிப்புத் தோன்றிய எஞ்சு பொருளைத் தானே கூறி நின்றது.

வயிறு மொடுமொடுத்தது என்றால் இசையின் குறிப்பாகிய உண்ண வேண்டா என்னும் எஞ்சு பொருளினைத்தானே கூறிநின்றது; இவ் இசையின் குறிப்பு வயிற்றின்கண்ணும் கொள்க.

இனி, பிற சொல்வாராது தம்மைத்தாமே முடிக்கும் என்று விணணென விணைத்தது, ஒல்லென ஒலித்தது என்பன காட்டினாரால் உரையாசிரியர் எனின், அவை தம்மைத்தாமே

முடியாமல், அது விண்ணென வீங்கிற்று, ஒல்லென ஓடிற்று எனப் பிற சொல்வந்து முடித்தலும் அவற்றிற்கு ஏற்கும் ஆகலானும், அவை என என்னும் இடைச்சொல் ஆகலானும், அவற்றைக் கொண்டால் கார் எனக் கறுத்தது என்னும் பண்பும் கோடல் வேண்டும் ஆகலானும் அது போலி உரையாம்.

இனிச் சேனாவரையர் குறிப்பு எச்சத்திற்கு,
இளைதாக முள்மரம் கொல்க (குறள்.879)

என்னும் குறள் வெண்பாவும், இசை எச்சத்திற்கு அகரமுதல (குறள்.1) என்னும் குறள் வெண்பாவும் காட்டினாரால் எனின், அவர் காட்டின குறிப்பு எச்சம் செய்யுள் இலக்கணம் கூறுகின்ற செய்யுளியல் சொல்லொடும் குறிப்பொடும் (செய்.206) என்னும் சூத்திரத்தான் பலசொல் தொடர்ந்து ஒரு செய்யுள் முடிந்தக்கால் வரும் என்று கொண்ட குறிப்பு எச்சம் ஆகலின், அதனைச் சொல் இலக்கணத்தில் கூறுகின்ற குறிப்பு எச்சத்திற்குக் காட்டினால் ஆண்டைக் குறிப்பு எச்சத்திற்கு வேறு பொருள் இன்றாம் ஆகலானும், அவர் இசை எச்சம் என்ற அகர முதல என்பதன்கண் அதுபோல எனவிரிந்த உவமச் சொல் ஒன்றற்குத் துணியுமாறு விரியாது, இரண்டற்கும் பொதுவாய் வேறுபடவந்த உவமத்தின் பால்படுதல் அல்லது இசையான் பிறவாமையானும் அவை பொருந்தாமை உணர்க. (49)

**சொல் எச்ச முடிபு**

**441. சொல்என் எச்சம் முன்னும் பின்னும்**
**சொல்அளவு அல்லது எஞ்சுதல் இன்றே.**

இது சொல் எச்சத்திற்கு முடிபு கூறுகின்றது.

**(இ..ள்)** என் எச்சம் - என் என்கின்ற எச்சமாவது. சொல் -அளவு அல்லது - சொல் என்னும் முதல் நிலை மாத்திரை தன்னுள்ளே எஞ்சி நிற்றல். அல்லது, சொல் முன்னும் பின்னும் எஞ்சுதல் இன்று - செய்யுளியலில் கூறும் சொல்லெச்சம்போல ஒரு சொல் செய்யுட்கு முன்னும் பின்னும் எஞ்சி நிற்றல் இல்லை. (எ-று)

என் என்னும் இடைச்சொற்கண்ணே சொல் என்பது தோன்றுதலின் என் எச்சம் என்றார். என் என்பது சொல்லை ஒழிபாக நிற்றலின், முன்னர்ச்சொல் எச்சம் என்றார்.

வினை எனப்படுவது (200) என்றது வினை எனச் சொல்லப்படுவது என்று பொருள் தந்த இடத்து, என் என்னும் எச்சம் தான் அவாவுதலின், இடையே நின்றசொல் என்னும் முதல்நிலைக்குத்தன் ஈற்றில் நின்ற செய என் எச்சத்தை உணர்த்தும் அகரத்தை ஏற்பித்து நின்றவாறு காண்க.

நளி என் கிளவி (327) என்றது நளி என்று சொல்லும் சொல் என்று பொருள் தந்த இடத்தும் என் என்னும் எச்சம்தான் அவாவுதலின், இடைநின்ற சொல் என்னும் முதல்நிலைக்குத் தன் ஈற்றில் நிற்கும் செய்யும் என்னும் எச்சத்தை உணர்த்தும் உம் என்பதனை ஏற்பித்து நின்றவாறு காண்க.

தா என நின்றான் என்பது, தா என்று சொல்லி நின்றான் என, என என் எச்சம் சொல்லி என்னும் வினைகொண்டு நின்றது. இது சொல்லெச்சம் அன்று. இங்ஙனம் எச்ச ஈறுகளை ஏற்றலின், சொல் என்பது முதல்நிலை ஆயிற்று. என் என்பதற்கும் சொல் என்பதற்கும் இடைநின்ற றகர உகரம் அவ்விரண்டனையும் கூட்டுதற்கு வந்து நின்றது.

எழுத்து எனப்படுப, பெயர் எனப்படுப, இடைஎனப்படுப எனவும், இலம் என் கிளவி, முழுது என் கிளவி, கடி என் கிளவி, மீன் என் கிளவி, தேன் என் கிளவி எனவும் வருவன எல்லாம் இக்கூறியவாறே வந்த சொல்லெச்சம்.

இனி, செய்யுட்கண் வரும் சொல்லெச்சமாயின், எமக்கு என,

கல்கெழு கானவர் நல்குறு மகள்
மருந்து எனின் மருந்தே; வைப்பு எனின் வைப்பே (குறுந்.71)

என்புழி முன்னும்,

குன்றம், குருதிப்பூவின் குலைக்காந் தட்டே (குறுந்.1)

என்புழி, யாம் காந்தள் பூவான் குறைவிலம் எனப் பின்னும் கூற்று சொல்லெச்சமாக நிற்குமாறு உணர்க.

இதற்கு விதி,

சொல்லொடும் குறிப்பொடும் முடிவுகொள் இயற்கை
புல்லிய கிளவி எச்சம் ஆகும் (செய்.206)

என்னும் சூத்திரம் என்று உணர்க.

இனி, உயர்திணை என்மனார் என்பதற்கு ஆசிரியர் எனவரும் பெயர் சொல்லெச்சம் என்று உதாரணம் காட்டினால், அது பொருந்தாது. சூத்திரம் செய்யுள் ஆதலானும், அதுதான் முற்றுச்சொற்குப் பெயர் தோன்றாமலும் நிற்கும் என்று முற்கூறியது ஆகலானும், இது சொல் எச்சம் ஆகாமை உணர்க. *(46)*

**இடக்கர் அடக்கல்**

442. அவைஅல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

இது மரபுவழுக் காக்கின்றது.

*(இ..ள்)* அவை அல்கிளவி - நன் மக்களிடைக் கூறப்படுவது அல்லாத சொல்வினை, மறைத்தனர் கிளத்தல் - அவ்வாய்பாடு மறைத்துப் பிறவாய்பாட்டான் கூறுக. (எ-று)

(உ..ம்) ஆன்முன் வருஉம் ஈகார பகரம் (எ.233)
கண் கழீஇ வருதும்
கருமுகமந்தி
செம்பின் ஏற்றை
புலிநின்று இறந்த நீர் அல் ஈரத்து (நற்.103)

எனப்படும். ஈகார பகரம் என்றது ஓர் உயிர் மெய் எழுத்தாகக் கூறின் அவை அல் கிளவியாம் என்று உயிரும் மெய்யுமாகப் பிரித்து அவ்வுயிர் மெய் எழுத்தையே கூறியது. ஒழிந்தன, அவ்வாறு அன்றி, அவைஅல் கிளவிப் பொருளைப் பிற சொல்லான் உணர்த்தினவேனும், அப்பொருளையே உணர்த்தி நிற்றலின் அதனைப் பிறிது ஓர் ஆற்றான் மறைத்தனவேயாம்.

தகுதியாவது செத்தான் எனப் பெரும்பான்மை வழங்கப்பட்டன, தகுதி நோக்கித் துஞ்சினான் எனச் சிறுபான்மை

வழங்கப்பட்டு நிற்கும்; அவை அல் கிளவியாவது, இழிந்தோர் கூறும் இழிசொற்களை நன்மக்களிடை மறைத்துக் கூறப்படும். இஃது இரண்டற்கும் வேற்றுமை.

இங்ஙனம் மறைத்துக் கூறாக்கால் வழு ஆதல் கருதி வழு அமைத்தார். இது பொருள் இடைஇடுதல் என்றும் தந்திர உத்தி. *(46)*

**மேலதற்கு ஒரு புறனடை**

**443. மறைக்குங் காலை மரீஇயது ஒராஅல்.**

*(இ..ள்)* மறைக்குங் காலை - அவைஅல் கிளவியை மறைத்துக் கூறுங்கால், மரீஇயது ஒராஅல் - மேல்தொட்டு மரீஇ வழங்கியதனை மறைத்தலை நீக்குக. (எ-று)

*(உ..ம்)* மெழுகும் ஆப்பிகண் கலுழ்நீ ரானே (புறநா.249),
ஆப்பி நீர் எங்கும் தெளித்துச் சிறுகாலை,
யானை இலண்டம்,
யாட்டுப் பிழுக்கை,

எனவரும். தன்பொருள்மேல் நில்லாது அணி குறித்து நின்ற பகல்கான்று எழுதரு பல்கதிர்ப் பகுதி (பெரும்.2) என்றாற் போல்வன தம்பொருளை உணர்த்துங்கால் மறைத்துக் கூறப்படுமாறு உணர்க. *(47)*

**இரப்பு உரைச் சொற்கள்**

**444. ஈதா கொடுஎனக் கிளக்கும் மூன்றும்**
**இரவின் கிளவி ஆகுஇடன் உடைய.**

இஃது ஒருபொருள்மேல் வரும் ஈதாகொடு என்னும் பலசொற்கு மரபு வேறுபாடு கூறுகின்றது.

*(இ..ள்)* ஈதா கொடு எனக் கிளக்கும் மூன்றும் - ஈதா கொடு என்று முன் நின்றானை நோக்கிக் கூறும் சொற்கள் மூன்றும், இரவின் கிளவி ஆகு இடன் உடைய - ஒருவன் ஒன்றை இரத்தற்கண் வரும் சொல்லாம் இடம் உடைய. (எ-று)

ஈச்சிறகு (நாலடி.41) எனவும்,

தாஇல் நன்பொன் (அகநா.212) எனவும்,

கொடுங்கோல் (சிலப்.23 - 111) எனவும்,

இவை பிறபொருளையும் உணர்த்துதலின் ஆகு இடன் உடைய என்றார்.

இவை மூன்றும் இல் என இரப்போர்க்கும், இடன் இன்றி இரப்போர்க்கும், தொலைவு ஆகி இரப்போருக்கும் உரிய என்று உணர்க. (கலி.2) (48)

**ஈ–இரப்பு**

445. அவற்றுள்,

ஈஎன் கிளவி இழிந்தோன் கூற்றே.

இது முதலதன் மரபு கூறுகின்றது.

(இ..ள்) அவற்றுள் ஈ என் கிளவி - முற்கூறிய மூன்றனுள் ஈ என்னும் சொல். இழிந்தோன் கூற்று - இரக்கப்படுவானின் இழிந்த இரவன் அவனை இரக்குங்கால் கூறும் கூற்றாம் (எ.2)

(உ..ம்) பெருமா! எனக்கு ஒருபிடி சோறு ஈ எனவும்,

ஈ என இரத்தலோ அரிதே நீயது (புறநா.154)

எனவும், இவ்விரண்டும் தன்மையும் முன்னிலையும் பற்றி வந்தன.

சிறியகள் பெறினே எமக்கு ஈயும் மன்னே (புறநா.235)

என்றது உளப்பாட்டுத் தன்மையும் படர்க்கையும் பற்றி வந்தது.

இவற்கு ஈத்து உண்மதி கள்ளே (புறநா.290)

என்புழியும் இவன் என்பது முன்னிலையும் படர்க்கையும் என்று உணர்க. (49)

**தா என்பதன் மரபு**

446. தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே.

இஃது இரண்டாவதன் மரபு கூறுகின்றது.

**(இ..ள்)** தா என் கிளவி - தன்மை முன்னிலைக்கு உரிய தா என்னும் சொல். ஒப்போன் கூற்றே - இரக்கப்படுவானோடு ஒக்கும் இரவலன் அவனை இரங்குங்கால் கூறும் கூற்றாம். (எ-று)

**(உ..ம்)** எனக்குச் சோறுதா எனவரும்.

*மாண்நலம் தாஎன வருந்தற் கண்ணும்* (பொ.*150*)

எனவும், *எந்நலம் தாராய்* (கலி.*128*) எனவும், கொடுபோல வருவன கொடுப்பான் பொருளாய்க் கொள்வான்கண் செல்லாதனவற்றை இரந்தனவாம்.

ஒப்போன் கூற்று என்றாரேனும் சிறுபான்மை வலியால் கொள்ளும் இடத்தும் தா என்பது வரும் எனக் கொள்க.

*நின்னது தாஎன நிலைதளரக்*
*குரங்கு அன்னபுன் குறுங்கூளியர்*
*பரந்துஅலைக்கும் பகைஒன்று என்கோ* (புறநா.*136*)

எனவரும். *(50)*

**கொடு என்பதன் மரபு**

**447. கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே.**

இது மூன்றாவதன் மரபு கூறுகின்றது.

**(இ..ள்)** கொடு என் கிளவி - கொடு என்னும் படர்க்கை ஆகிய முதனிலைச் சொல், உயர்ந்தோன் கூற்று - இரக்கப்படுவோனின் உயர்ந்த இரவலன் அவனை இரக்குங்கால் கூறும் கூற்றாம். (எ-று) *(51)*

**448. கொடுஎன் கிளவி படர்க்கை ஆயினும்**
**தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்**
**தன்இடத்து இயலும் என்மனார் புலவர்.**

இது கொடு என்பதற்கு இடவழு அமைக்கின்றது.

**(இ..ள்)** தன்னைப் பிறன்போல் ஆயினும் கூறும் குறிப்பின் கொடு என் கிளவியும் - இரப்போர் பலரும் தம்மில் ஒருவனைக்காட்டி

இவற்குக்கொடு எனத் தம்மைப் பிறரைப் போலாயினும் கூறி இரக்கும் கருத்தினான் கூறப்படும்கொடு என்னும் சொல்லும், தன்னைப் பிறன்போல் ஆயினும் கூறும் குறிப்பின் படர்க்கைக் கிளவியும் - கூறுகின்றார் பலரும் தம்மைப் பிறரைப் போல ஆயினும் கூறும் கருத்தினான் கூறப்படும் படர்க்கைச் சொற்களும், தன்னிடத்து இயலும் என்மனார் புலவர் -இவ்விரண்டும் தன்மை இடத்துக்கு உரியவாய் நடக்கும் என்று கூறுவர் புலவர். (எ-று)

(உ..ம்) இவர்க்கு ஊண் கொடு
எனவரும். அங்ஙனம் சொல்லுவானோ பெருஞ்சாத்தன் தந்தை. அங்ஙனம் சொல்லப்படுவாளோ பெருஞ்சாத்தன் தாய்.

இந்நான்கு சூத்திரத்தானும் ஆண்பால் உரிமையான் கூறினா ரேனும் அது முப்பாற்கும் உரித்து ஆமாறு மேலே உணர்க.

சேனாவரையர் கொடு என்பதுதானே தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பினையும் உணர்த்தும் என்று, அவற்குச் சாந்துகொடு என்பது உதாரணம் காட்டினாரால் எனின், கொடு என்பது கொடுப்பதொரு பொருளை ஏற்றற்கு உரிய நான்கன் உருபு வந்தால், அதனை முடித்தற்குவந்த சொல் ஆதலின், அவற்கு, இவற்கு, உவற்கு என்னும் சொற்களை அவாய் அவற்றை முடித்தே நிற்றல்வேண்டும். வேண்டவே அவற்குக்கொடு என்பது ஏனை இரண்டும் (சொல்.30) என்புழிக் கூறியதாம். எனக்குக் கொடு என்பது தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பு இல்லாத தாயிற்று. ஆதலின் தன்னைப் பிறன் போலக் கூறும் குறிப்பிற்றாய் வழு அமைதியும் ஏற்றுநிற்பது இவற்குச்கொடு என்னும் உதாரணமே ஆயிற்று என்க. (52)

**ஒருசார்ச் சொற்களின் வழுவமைதி**

449. பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே.

இதுவும் ஒருசார் வழு அமைக்கின்றது.

(இ..ள்) பெயர் நிலைக் கிளவியின் ஆஅ குநவும் - தத்தம் பொருள் உணர்த்தாது பெயர்ந்த நிலைமையை உடைய சொல்லான் வரும் செய்யுளும்,

திசை நிலைக் கிளவியின் ஆஅ குநவும் - திசையான் நிலைபெற்ற பெயரான் வரும் சொல்லும்.

தொன்னெறி மொழிவயின் ஆஅ குநவும் - சொல்லிடத்துப் பழைய நெறியான் ஆய் வரும் சொல்லும்,

மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும் - ஒருமை கூறவே பன்மைப் பொருள் தோன்றி மயங்கும் மயக்கினான் ஆகும் செய்யுள்களும்.

மந்திரப் பொருள் வயின் ஆஅ குநவும் - மந்திரத்தை உடைய தெய்வங்களிடத்தே அம்மந்திரமா வரும் சொற்களும், அன்றி அனைத்தும் - ஆகிய அவ்வனைத்தும், கடப்பாடு இல - வழங்கிய வாறே கொள்வது அல்லது இலக்கணத்தான் யாப்புறவு உடைய அல்ல. (எ-று)

(உ..ம்) ........................ஒள்வாள்
கறையடி யானைக்கு அல்லது
உறைகழிப்பு அறியா வேலோன் ஊரே (புறநா.323)

என்புழி வேலோன் என்பது வேலை உடையோன் என்னும் பொருள் பெயர்ந்து ஒருபெயர்த் தன்மையாய் நின்றது

செழுந்தாமரை அன்ன வாள்கண் (சீவக.8)

என்பதூஉம் அது.

தென்னன், வடமன், குடக்கோ, தென்பாண்டி என இவை திசை நிலைக்கிளவி. முதுமொழி பொருள் உடையனவும் பொருள் இல்லனவும் என இருவகைப்படும். யாட்டுளான் இன் உரைதாரான் என்றது இடையன் எழுத்தொடு புணராது பொருள் அறிவுறுக்கும் மொழியைக் கூறுதல் அன்றி, எழுத்தொடு புணர்ந்து பொருள் அறிவுறுக்கும் மொழியைக் கூறான் என்றும் பொருள் தந்து நின்றது.

யாற்றுள் செத்த எருமை ஈர்த்தல் ஊர்க் குயவர்க்குக்கடன் என்பது, குயவன் சுள்ளையின் எழுத்த புகையான் ஆய மேகம் தந்த நீரான் எருமை சாதலின் அதனை இழுத்தல் குயவர்க்குக் கடன் ஆயிற்று என ஒரு காரணம் உள்ளது போலக் கூறுகின்றது, உண்மைப் பொருள் அன்றி, ஒருவன் இயைபு இன்றிக் கூறிய சொற்கு எடுத்துக்காட்டாகக் கூறப்படுதலின், பொருள் உணர்த்தா தாயிற்று.

இல்வாழ்வான் என்பான் (குறள்.41)
தினைத்துணையும் தேரான் பிறன் இல்புகல் (குறள்.144)
நட்பு அரண் ஆறும் உடையான் (குறள்.381)
வறியவன் இளமைபோல் (கலி.10)

என்றாற்போலவன எல்லாம் ஒருமைப் பொருள் கூறினவேனும் பன்மைப் பொருளை உணர்த்தலின் மெய்ந்நிலை மயக்கம் ஆயிற்று மெய் - பொருள்.

மந்திரச் சொல் மந்திர நூல்கள் வல்லார்வாய்க் கேட்டு உணர்க.

நம்பி, நங்கை என அஃறிணையைக் கூறுவனவும்,
எழுதுவரிக் கோலத்தார்

என்னும் பிரேளிகைச் செய்யுளின் திணைவழுவும்

ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும் (சொ.27)

என்னும் சூத்திரத்துள் அடங்குமாறும். புலியான் பூசையான் என்பன திசைச் சொற்கண் அடங்குமாறும் உணர்க.

வெண்கொற்றப் படைத்தலைவனும் சிறப்பினாகிய பெயர்க்கண் அடங்கும். (53)

**செய்யாய் செய் என நிற்றல்**

450. **செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்**
**செய்என் கிளவி ஆகுஇடன் உடைத்தே.**

இஃது ஓசை வேறுபாட்டான் ஒருசொல் ஒருசொல்லாம் என்கின்றது.

(இ..ள்) செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல் - ஒரு தொழிலினைச் செய்யாய் என்னும் மறையாகிய முன்னிலை வினைச்சொல், செய் என் கிளவி ஆகுஇடன் உடைத்து - அத்தொழிவினைச்செய் என்றும் உடன்பாட்டு முன்னிலை வினைச்சொல்லாம் இடத்தினை உடைத்து (எ-று)

இடன் உடைத்து என்றதனாள் உண்ணாய் என்பது மறையாய் வருதலே பெரும்பான்மை ஆயிற்று. அது சிறுபான்மை உடன்பாட்டின்கண் வருங்கால் வேண்டிக் கோடல் பொருண்மைக்கண் வரும் என்று உணர்க.

உண், தின் என்பன முதலிய முன்னிலை ஏவல் உயர்ந்தான் இழிந்தானை ஏவுதற்கண் வரும்.

அறியாய் வாழி தோழி!
..............................
பொருளே காதலர் காதல்
அருளே காதலர் என்றி நீயே (அகநா.53)

என்னும் அகப்பாட்டினுள், அறியாய் என்றது, காதலர் அருளே காதலித்திருப்பார் என்று நீ கூறுகின்றமையான், காதலர் கருத்தினை அறியாய் என முன்னிலை மறையாய் நின்றவாறும், அறியாய் வாழி தோழி! பொறிவரிப் பூநுதல் யானை யொடு(அகநா.268) என்னும் அகப்பாட்டினுள் அறியாய் என்றது.

காமம் கலந்த காதல் உண்டு எனின்
நன்றுமன்; அது நீ நாடாய் கூறுதி

என்றதனோடு இயையுங்கால் அவனொடு கூட்டம் உண்டு எனின், அது மிக நன்று. அதனை நீ ஆராயாமல் கூறுகின்றாய்; அதனை நின் மனத்தான் ஆராய்ந்து பாராய் என வேண்டிக் கோடல் பொருள் தந்து முன்னிலை ஏவல் உடன்பாடாய் நின்றவாறும் உணர்க. இங்ஙனம் மறைச்சொல் உடம்பாட்டுப் பொருளைப் படுத்தல் ஓசையான் உணர்த்திநிற்றல் சான்றோர் செய்யுளுள் பெரும்பான்மை என்று உணர்க.

இனி, வழக்கினுள்ளும்,
இந்நாள் எம் இல்லத்து உண்ணாய்,
இப்பொழுது சொல்லாய்

என்றாற் போலப் பெரும்பான்மையும் வழங்குமாறு உணர்க.

உண்பாய் என்னும் சொல், ஓசை வேற்றுமையான் முற்றும் தொழிற் பெயரும் வினை எச்சமும், வியங்கோளுமாய் நின்றாற் போலவும்; தபு என்பது ஓசைவேற்றுமையாள் ஒன்றனைக்கொல் என்றும் நீசா என்றும் நின்றாற் போலவும், மறைச்சொல் ஓசை வேற்றுமையான் உடன்பாடு உணர்த்திற்று என்று உணர்க. அங்ஙனம் உணர்த்திற்றேனும் மறை உணர்த்தும் ஆகாரம் உடம்பாடு உணர்த்துமோ? எனின், அதனை ஏகாரம் உண்பேனே, உண்ணேனே என விதிக்கும் மறைக்கும் வந்தாற் போலக் கொள்க.

மறை என்பது செய்யாய் என்னும் வாசகத்தான் சூத்திரம் செய்தமையின் பெற்றாம். செய் என்பது விதி வினையே உணர்த்துதல் பற்றிச் செய் என் கிளவி என்றார்.

இனி, சேனாவரையர் செய்யாய் என்னும் முன்னிலை முற்றுச்சொல் ஆய் என்னும் ஈறுகெடச் செய் என்னும் முன்னிலை ஏவல் முற்றாய் நிற்கும் என்று பொருள் கூறி உண்ணாய் தின்னாய் நடாவய் கிடவாய் என்பன உண்தின் நடகிட என நிற்கும் என்றாரால் எனின், உண்ணாய் என்பதும் உண் என்பதும் தம்மில் பொருள் வேறுபாடு உடைமையின், உண்ணாய் என்பதன் பொருளை உண் என்பது உணர்த்தி ஈறுகெட்டு நிற்கும் என்றல் பொருந்தாதாம். நீ கலாய்த்திராது உண்ணாய் என்ற பொருளை உண் என்றது தாராது ஏவல் பொருட்டாய் நின்றவாறு காண்க. அன்றியும் இவ் உண்தின் நடகிட என்பனவற்றை முதல்நிலை என்றே தாமும் கூறிப்போர்தார் ஆதலின், இவை முதல்நிலையாய் நிற்கும் இடத்துக் கருசெய்வெள் என்னும் முதல் நிலைகள் பண்பு மாத்திரையே உணர்த்தி ஈறுகெடுதலும் பொருள் உணர்த்துதலும் இன்றி நின்றாற்போல, இவையும் வினை மாத்திரையே உணர்த்தி, ஈறுகெடுதலும் பொருள் உணர்த்துதலும் இன்றி நிற்றல் வேண்டும். இவை அங்ஙனம் நில்லாது ஆய் என்னும் ஈறு கெட்டு முன்னிலை ஏவல் பொருண்மையே உணர்த்தி நிற்கும் என்றலின், முதல் நிலை என்றல் பொருந்தாதாம். ஆகவே, வினைச்சொற்கு முதல்நிலைகள் உண்தின் நடகிட முதலிய என்ற இவர் ஈண்டுப் பிறர் மதமே கூறினார். இஃது ஆசிரியர்க்குக் கருத்து அன்மை உணர்க. அன்றியும் உண்தின் நடகிட முதலியன முன்னிலை உணர்த்தி நிற்குமேல், உண்டான், உண்டேன் என உண் என்னும் முதல்

நிலையின் விரிந்து நின்ற ஈற்றான் உணர்த்தும் படர்க்கைக்கும், தன்மைக்கும் வழு ஆமாறு காண்க.
(54)

**ஈ, ஏ– நிலைவேறுபடுதல்**

451. முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே.

இது பொருள்தரும் இடைச்சொற்களுள் சில நிலை வேறுபடுமாறு கூறுகின்றது.

(இ..ள்) முன்னிலை முன்னர் ஈயும் ஏயும் - முன்னிலை வினைச்சொல் முன்வரும் ஈகாரமும்; ஏகாரமும், அந்நிலை மரபின் மெய் ஊர்ந்து வருமே - அம்முன்னிலைச் சொற்கண் தாம் நிற்றற்குஉரிய முறைமையை உடைய மெய்களை ஊர்ந்து வரும். (எ-று)

முன்னிலைச்சொல் ஆவன செல் நில்புகு உண் தின்உரை என்றாற்போல வருவனவாம்.

(உ...ம்) சென்றீ பெரும! நின் தகைக்குநர் யாரோ! (அகநா.46), அட்டில் ஓலை தொட்டனை நின்மே (நற்.300) எனவரும்.

இவற்றுள் ஈகாரம், புக்கீ, உண்டீ, உரைத்தீ, சென்றீ எனக் கடதறவை ஊர்ந்து வரும் என்பது தோன்ற அந்நிலை மரபின்மெய் என்றார். ஏகாரம் மகரம் ஊர்ந்துவரும். இவை நிலைமொழி வருமொழி செய்து புணர்க்கப்படாமையின், புணர்ச்சி விகாரம் அன்றி முன்னிலைச்சொல் விகாரம் ஆயின. உண்பாய் என்பதற்குமறை ஆகிய உண்ணாய் என்னும் சொல், படுத்தல் ஓசையான் உண்டலைச்செய் என்னும் பொருள் தந்து நிற்றலின், செய்என் கிளவி ஆகுஇடன் உடைத்து (450) என்று சூத்திரம் செய்ததன் பின்னர், சொல்லுதலைச் செய், நிற்றலைச்செய் என இச்சூத்திரத்தின் முதல்நிலைகளும் செய் என்னும் வாசகத்தினையே உணர்த்தி நிற்கும் என்பது கருதி, செய் என் கிளவி அகுஇடன் உடைத்து (சொ.450) என்றதன்பின் இதனை வைத்தார். (55)

**புதியன புகுதல்**

452. கடிசொல் இல்லைக் காலத்துப் படினே.

இதுகாலம் தோறும் புதியவைாகத் தோன்றிய சொற்களும் கொள்க என்கின்றது.

(இ..ள்) கடிசொல் இல்லை - இவை தொன்று தொட்டுவந்தன அல்ல என்று கடியப்படும் சொற்கள் இல்லை, காலத்துப்படினே - அவ்வக் காலத்துத் தோன்றி நன்மக்கள் வழக்கினுள்ளும் செய்யுளுள்ளும் வழங்கப்பட்டு வருமாயின். (எ-று)

(உ..ம்) சட்டி, சள்ளை, சமை எனவும்,
சான்றோர் சமழ்த்தனர் நிற்பவே,
தைய லாய்சம மாதுஉரை என்றதே (சீவக.1000)
எனவும் சகரம் மொழிக்கு முதலாய் வந்தவாறு காண்க.
சகரக் கிளவியும் அவற்றோ ரற்றே
அஐ ஔஎனும் மூன்றுஅலங் கடையே (எ.62)
என ஆசிரியர் விலக்கலின், அக்காலம் மொழிக்கு முதலாகாது என்று விலக்கிய சகரம் பிற்காலத்து வழங்கியது ஆயிற்று.

ஞெண்டு (குறுந்.117) என்பது ஞண்டு என்றாய்ப் பின்னர் நண்டு என மரீஇயிற்று.

இச்சூத்திரம் எதிர் பொருள் உணர்த்தல் என்னும் உத்தி ஆம். இவ்வாறு பின்னர் வழங்குவன எல்லாவற்றிற்கும் இதுவே விதி.

இனி, ஒன்று என முடித்தலான் புதியன தோன்றினால் போலப் பழையன கெடுவனவும் உள. அவை அழன், புழன் முதலியனவும், எழுத்தில் புணர்ந்த சொற்கள் இக்காலத்து வழங்காதனவும் ஆம். (56)

**செய்யுள் விகாரம்**

453. குறைச் சொல் கிளவி குறைக்கும்வழி அறிதல்.

இது செய்யுள் விகாரம் கூறுகின்றது.

(இ..ள்) குறைச்சொல் கிளவி - குறைக்கப்படும் சொல்லாகிய சொற்கள். குறைக்கும் வழி அறிதல் - குறைக்கும் இடம் அறிந்து குறைக்க. (எ-று)

குறைக்கும் வழி அறிதல் என்றது, ஒரு சொற்குத் தலை இடைகடை என இடம் மூன்றே; அவற்றுள் இன்னுழி குறைக்கப்படும் இச்சொல் என்று அறிந்து குறைக்க என்றவாறு ஆம்.

(உ..ம்) மரை இதழ் புரையும் அஞ்செஞ் சீரடி
எனவும்,
வேதின வெரிநின் ஓதிமுது போத்து (குறுந்.140)
எனவும்,
நீல்உண் துகிலிகை கடுப்பப் பலவுடன்
எனவும் மூன்று இடத்தும் குறைத்தவாறு காண்க.

இது, ஒருசொல்லின்கண் சிறிது நிற்பச் சிறிது கெடுத்தல் ஆதலின், முழுவதும் கெடுத்தல் ஆகிய தொகுக்கும் வழித் தொகுத்தலின் வேறுதல் அறிக.

குறைச்சொற்கிளவி எனவே, இவ்விதி செய்யுட்கண் என்பது பெறுதும். இது பொருள் இடைஇடுதல் என்னும் உத்தி ஆம். (57)

**மேலதற்கு ஒருபுறனடை**

454. குறைத்தன ஆயினும் நிறைப்பெயர் இயல.

இதுமேலதற்கு ஒருபுறனடை.

(இ..ள்) குறைத்தன ஆயினும் - செய்யுள்கத்துச் சொற்கள் குறைக்கப்பட்டன ஆயினும், நிறைப்பெயர் இயல - அவை பொருள் உணர்த்தும் வழி நிறைந்து நின்ற பெயரின் இயல்பை உடையவாம். (எ-று)

என்றது முற்கூறிய உதாரணங்கள் தாமரை ஓந்தி நீலம் என்ற நிறைந்த பெயரின் பொருள்களைத் தந்தே நிற்கும் என்றவாறு ஆம். கண்திரள் முத்தம் கொண்டு வந்து என்புழி வந்தன்று என்னும் வினையும், சென்றார் என்பிலர் தோழி என்புழி என்பார் இலர் என்னும் வினையும் சிறுபான்மை குறைத்தல், தன்னினம் முடித்தலான் கொள்க. (58)

**விசேழக்கும் சொற்கள் நிற்குமாறு**

455. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

இது, விசேடிக்கும் சொல் இவ்வாறு நிற்கும் என்கின்றது.

(இ..ள்) வேற்றுமைச் சொல் எல்லாம் - முடிக்குஞ் சொல்லை விசேடித்து நிற்கும் சொல் எல்லாம், இடைச்சொல் - முடிக்கப்படும் சொற்கும் முடிக்கும் சொற்கும் நடுவே வரும் சொல்லாய் நிற்கும். (எ-று)

வேற்றுமைச்சொல் வேறுபாட்டினைச் செய்யும் சொல் என விரியும்.

எழுவாயை முடிக்கும் பயனிலைக்கும், முற்றை முடிக்கும் பெயரிற்கும், வினை எச்சத்தை முடிக்கும் வினைக்கும், பெயரெச்சத்தை முடிக்கும் பெயர்க்கும் இடையே வருதலின் இடைச்சொல் என்றார்.

கண்ணி கார்நறுங் கொன்றை
ஊர்தி வால்வெள் ஏறே (புறநா.1)

என்புழக் கொன்றையையும் ஏற்றையும் இடைவந்த சொற்கள் விசேடித்து வந்தன.

ஈர்ந்தை யோனே் பாண்பசிப் பகைஞன் (புறநா.180)

என்புழி ஈர்ந்தையோன் என்னும் முற்றிற்கு முடிபாகிய பகை ஞன் என்னும் பெயரை இடையில் நின்ற சொற்கள் விசேடித்து நின்றன.

இழிபிறப்பினோன் ஈயப்பெற்று
நிலம்கல னாக விலங்குபலி மிசையும் (புறநா.363)

என்புழிப் பெற்று என்னும் செய்து என் எச்சத்திற்கு முடிபு ஆகிய

மிசையும் என்னும் வினையை இடைநின்ற சொற்கள் விசேடித்து நின்றன.

ஏந்து எழில் மழைக்கண் இளையோள் மடுப்பத்
தேம்பாய் தேறல் நீசிறிது உணினே

மடுப்ப என்னும் செய என் எச்சத்திற்கு முடிபாகிய உணின் என்னும் வினையை இடைநின்ற சொற்கள் விசேடித்து நின்றன.

வெற்பர் ஆடும் வெற்புச்சேர்பு இருக்கை, பயம் பிறகொள்ளாப் பைங்கண்யானை என்புழிச் செய்யும் என்னும் பெயர் எச்சத்திற்கும் அதன் மறைக்கும் முடிபு ஆகிய இருக்கையையும் யானையையும் இடைவந்த சொற்கள் விசேடித்து நின்றன.

குரங்குஉளைப் பொலிந்த கொய்சுவல் புரவி (அகநா.4)
நின்னொடு தூக்கிய வென்வேல் செழிய (புறநா.19)

என்புழிச் செய்த என்னும் பெயரெச்சங்களுக்கு முடிபு ஆகிய புரவியையும் செழியனையும் இடைவரும் சொற்கள் விசேடித்து நின்றன. சான்றோர் செய்யுட்கண் இங்ஙனம் அச்சொற்களை விசேடித்து வருதல் பெரும்பான்மை என்று உணர்க. பண்பும் உடைமையும் முதலிய இடைவந்தால் அவை விசேடித்து நிற்குமாறும் உணர்க.

இனி, இடைச்சொற்கள் எல்லாம் தாம் அடைந்த பெயர் வினைகளின் பொருள்களை வேறுபடுத்தி நிற்றலின் வேற்றுமைப் பொருள் என்று சொல்லப்படும் என்று பொருள் கூறினாரால் உரையாசிரியர் எனின், அவை வேறுபாடுசெய்தல் அவ் ஓத்தில் கூறிய சூத்திரங்களின் பொருளான் ஆண்டுப் பெறப்படுதலின், ஈண்டுக் கூறல் கூறியது கூறலாம் ஆகலின் அது பொருந்தாது என்க. கூரியது ஒருவாள் மன் என்புழித் திட்பம் இன்று என்பது வாளை வேறுபடுத்தினவாறு அச்சூத்திரத்தான் (254) பெற்றாம். பிறவும் இவ்வாறே கொள்க.

இனிச் சேனாவரையர் இடைச்சொல் எல்லாம் விசேடித்து நிற்கும் என்றாரால் எனின்,

கொன்ஊர் துஞ்சினும் (குறுந்.138)

கொன்னே கழிந்தன்று இளமையும் (நாலடி.55)

என்றாற் போலச்சில இடைச்சொற்கள் விசேடித்தல் அன்றி, எல்லா இடைச்சொற்களும் விசேடித்து நில்லாமை ஆண்டு அவர் காட்டிய உதாரணங்களை நோக்கி உணர்க.

**உரிச்சொல்லும் விசேடித்தல்**

456. உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.

இஃது உரிச் சொற்கும் விசேடித்தல் உண்டு என்கின்றது.

(இ..ள்) உரிச்சொல் மருங்கினும் - உரிச்சொல் இடத்தும். உரியவை உரிய - விசேடிக்கும் சொல்லாதற்கு உரியன உரியவாம். (எ-று)

எல்லாம் உரியன ஆகா எனவே, உரிச்சொற்கள் விசேடித்தும் விசேடிக்கப்பட்டும் நிற்பன உள என்பது பெற்றாம்.

(உ..ம்) உறுகால், தவப்பல, நனி சேய்த்து, ஏகல் அடுக்கம் (அகநா.52) என்பன ஒன்றை விசேடித்து அல்லது வாரா.

| | |
|---|---|
| குருமணி | விளங்கு குரு |
| கேழ்கிளர் அகலம் | செங்கேழ் |
| செல்லல் நோய் | அருஞ்செல்லல் |
| இன்னற் குறிப்பு | பேர் இன்னல் |

இவைதாம் ஒன்றனை விசேடித்தும், பிற தம்மை விசேடிக்கப் பட்டும் நின்றன.

குருவிளங்கிற்று, செல்லல் தீர்கம் (நற்.284)

எனத் தாமே நின்று வினை கொள்வன விசேடிக்கப்படும் தன்மை உடையன என்று உணர்க. பிறவும் இவ்வாறு வருவன உளவேல் கண்டு கொள்க.

மருங்கினும் என்ற உம்மையை எச்ச உம்மையாக்கி இடைச்சொற்களினும் விசேடித்து நிற்றற்கு உரியன சில உள; எல்லாம் உரியன ஆகா எனப்பொருள் உரைத்து,

கொன்ஊர் துஞ்சினும் (குறுந்.138)
கொன்முனை இரவு ஊர்போல (குறுந்.91)
கொன்னே கழிந்தன்று இளமையும் (நாலடி.55)

என்றாற் போல வருவன பிறவும் கொள்க.

முன்னிற் சூத்திரத்தான் கூறிய விசேடித்தல் உரிச்சொற்கும் இடைச்சொற்கும் ஏற்றலின், அவற்றையும் ஈண்டுக் கூறினார். விசேடித்தல் இடைச்சொற்குச் சிறுபான்மை ஆகலின், அதனை உம்மையான் தழீஇயினார். (60)

**வினைஎச்சம் முதலியன வேறு பெயர்பெறல்**

**457. வினைஎஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.**

இது வினையெச்சம் முதலியன வேறு பெயர்பெறும் என்கின்றது.

(இ..ள்) வினை எஞ்சு கிளவியும் - வினை எச்சமாகிய சொற்களும் உம்மையாள் பெயர் எச்சம் ஆகிய சொற்களும், முற்றுச் சொற்களும், வேறு பல்குறிய - முற்கூறிய பெயர்களொடு வேறுவேறாகப் பல பெயர்களையும் உடையவாம். (எ-று)

(உ..ம்) பெயர்த்தனென் முயங்க யான் (குறுந்.84)

இது வினை எச்சத் தன்மைத் தெரிநிலை முற்று.

வந்தனை சென்மோ வளைமேய் பரப்ப (அகநா.200)

இது வினை எச்ச முன்னிலைத்தெரிநிலை முற்று.

முகந்தனர் கொடுப்ப (புறநா.33)
மோயினள் உயிர்த்த காலை (அகநா.5)

இவை வினை எச்சப்படர்க்கைத் தெரிநிலை முற்று.

ஒலி சினை வேங்கை கொய்குவம் சென்றுழி (அகநா.48)

இது வினைஎச்ச உளப்பாட்டுத் தன்மைத் தெரிநிலை முற்று.

வறுவியேன் பெயர்கோ வாள்மேம் படுந (புறநா.209)

இது வினை எச்சத் தன்மை வினைக்குறிப்பு முற்று.

நன்னர் நறுநுதல் நயந்தனை நீவி (கலி.21)
வெள்வேல் வலத்திர் (கலி.4)

இவை வினை எச்ச முன்னிலை வினைக் குறிப்பு முற்று.

சுற்று அமை வில்லர் சுரிவளர் பித்தையர்
அற்றம் பார்த்து அல்கும் கடுங்கண் மறவர் (கலி.4)

இவை வினை எச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்று.

இன்னும் வேறுவேறு பெயர் பெற்று வருவனவும் கொள்க.

எல்வளை நெகிழ்த்தோர்க்கு அல்லல் உறீஇயர் (நற்.56)
உள்ளேன் தோழி! படீஇயர் என் கண்ணே (குறுந்.243)
கேட்டீவாய் ஆயின் (கலி.93)

என்பன வினை எச்ச வினைத் திரிசொல். இங்ஙனம் வினை எச்சம் திரிந்து நிற்கும் எனவே, ஈறு திரிந்து நிற்கும் என வினையியலுள் காட்டியவற்றிற்கும் இதுவே விதி ஆயிற்று.

இனி, பெயர் எச்சம் வேறுபெயர் பெறுமாறு,

அவர்தம்முளான்
தருமதத்தன் என்பான் (சீவக.242)

எனவும்,

கச்சினன் கழலினன் தேந்தார் மார்பினன்
வகைஅமைப் பொலிந்த வனப்பு அமை தெரியல்
சுரியல்அம் பொருநனைக் காணிரோ (அகநா.76)

குவளையே அளவுஉள்ள கொழுங்கணாள் அவளையே
(சீவக.243)

எனவும்,

புரிமாலையர் பாடினியரும்

எனவும் வந்தன உயர்திணை முப்பாற் கண்ணும் வந்த பெயரெச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்று.

பெருவரை மிசையது நெடுவெள் அருவி (குறுந்.78),
தெரிநடைய மாகளிறு
தன்தாள் பாடுநர்க்கு நன்கு அருளியும்

இவை அஃறிணை இருபாற்கண்ணும் வந்த பெயர் எச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்று.

பெருவேட்கையேன் எற்பிரிந்து

இதுபெயர் எச்சத் தன்மை ஒருமை வினைக்குறிப்பு முற்று.

கண்புரை காதலேம் எம்மும் உள்ளாள்

இது பெயர் எச்சத் தன்மை உளப்பாட்டுப் பன்மை வினைக் குறிப்பு முற்று.

உலம்கொள் தோளினை ஒரு நின்னால்

இதுபெயர்எச்ச முன்னிலை ஒருமை வினைக்குறிப்பு முற்று.

வினைவேட்கையிர் வீரர் வம்மின்

இது பெயரெச்ச முன்னிலைப் பன்மை வினைக்குறிப்பு முற்று. இன்னும் வேறு வேறு பெயராய் வருவனவும் கொள்க.

பின்பு நூல் செய்தோர் வினைஎச்சமுற்று என்று பெயர் கூறாமல், முற்று வினையெச்சம் என்று பெயர் கூறினாரேனும், பெயரெச்ச வினைக்குறிப்பு முற்று என்று பெயர் எச்சத்திற்குக் குறியிட்டு ஆளவேண்டுதலின், அதற்கும் அப்பெயரே கொள்ள வேண்டும் என்று உணர்க.

இனி,

பாயுந்து, தூங்குந்து (புறநா.24)

எனவும்,

சினைஇய வேந்தன் எயில்புறத்து இறுத்த

எனவும்,

கடைஇய நின்மார்பு (கலி.77)

எனவும் வருவன பெயரெச்ச வினைத் திரிசொல்.

இனி,

கண்ணும்படுமோ என்றிசின் யானே (நற்.61)

இது தன்மை முற்றுவினைத் திரிசொல்.

ஈங்குவந் தீத்தந்தாய் (கலி.96)

இது முன்னிலை முற்றுவினைத்திரி சொல்.

புகழ்ந்திகும் அல்லரோ

இது படர்க்கை முற்றுவினைத்திரி சொல்.

இவ்வாறு மூவகைச் சொற்களும் வேறுவேறு பெயர் பெற்று நிற்றல் கூறவேண்டுதலின், இதனை இவ்வோத்தினுள் கூறினார். இங்ஙனம் பெயர்கள் கூறவே, அவற்றிற்கு உரிய இலக்கணமும் கூறினார் ஆயிற்று.

இனி, ஓர் எச்சமும் ஓர் எச்சமாய்த் திரிந்து வருவனவும் வேறே பெயர் பெறுதலின், அவற்றிற்கும் இதுவே இலக்கணமாம். இவற்றுள்ளும் விசேடித்து நிற்பனவும் உள என்பது உணர்த்துதற்கு உரிச்சொல் மருங்கினும் (456) என்னும் சூத்திரத்தின் பின் இதனைவைத்தார்.

இதனை விரவு வினை ஆகிய வினைஎச்சமும் பெயர் எச்சமும், பாலும் இடமும் காட்டி நிற்றலின் முற்று எச்சமாய்த் திரிந்தது என்னாமோ எனின் என்னாம்.

அளி நிலை பெறாஅது (5) என்னும் அகப்பாட்டினுள், ஒண்ணுதல் குறுகவந்து முகம்மாறிக்கொள்ளாது, தனித்து, வடுக்கொளுத்தி, நக்கு, முகத்தின் உரைத்து, ஒற்றி, மோந்து, உயிர்த்தகாலை என வினை எச்ச அடுக்ககாகச் செய்யுள் செய்கின்றவர், தம் பேரறிவு உடைமை தோன்ற, எழுவாய்க்கும் பயனிலைக்கும் இடையே கிடந்து, பயனிலை விசேடிக்கும் எச்சங்களுள் சிலவற்றைத் திரித்தும் பாலும் இடமும் காட்டி நிற்பச் செய்யுள் செய்தார் ஆகலின்.

இனிப் பெயர் எச்ச வினைக் குறிப்பு முற்றிற்கு,
அவர் தம்மிடத்தே நின்ற தருமதத்தன்
புரிமாலை அணிந்த பாடினியார்

எனப்பெயர்எச்சம் விரிந்தவாறு காண்க.

பெரும்பான்மை இங்ஙனம் செய்யுள் செய்தற்குக் காரணம் விரவு வினை பிரிபு வேறுபடூஉம் செய்தியவாய்ப் (224) பிரிந்து நிற்குங்கால்பாலும் இடமும் காட்டும் தன்மையும் தம்முள்ளே உடைய ஆயினமையின், அவ்எச்சம் முற்றாய்த்திரிந்தது என்பது உணர்த்துதற்கு அன்றே, இடைஇடை வினை எச்ச வாய்பாடும் உடன் ஓதி எல்லாவற்றிற்கும் ஒருவினையே முடிபு கூறிற்று என உணர்க. அன்றியும் முற்று எச்சமாய்த் திரிந்து அடுக்கியும் தனித்தும் வந்து வினைகோடல் ஆசிரியருக்குக் கருத்தாயின் சிறுபான்மைய வாய் வினை கொள்ளும் முற்றிற்குச் (206,209)சூத்திரம் செய்தாற் போலவும் முற்றுச்சொல் அடுக்கியும் அடுக்காதும் வந்து

பெயரொடு முடிதற்கு, அவைதாம் தத்தம் கிளவி (429) என்று, சூத்திரம் செய்தாற்போலவும் முற்றுச் சொல்லே எச்சம் ஆகி அடுக்கியும் தனித்தும் வந்தும் வினை கொள்ளும் என்று ஒரு சூத்திரம் செய்திருத்தல் வேண்டும். அங்ஙனம் பெரும்பான்மையும் வழங்குவது ஓர் இலக்கணத்திற்குச் சூத்திரம் செய்யாமையின், அவர்க்கு அது கருத்து அன்மை உணர்க.

அன்றியும், வினைஎச்சம் முற்றாய்த் திரிந்து பின்னும் அதன் பொருள் உணர்த்தி நிற்றல், இன்றி என்றும் வினை எஞ்சு இறுதி (எழு.237) என்னும் சூத்திரத்தானும் உணர்க.

இவ்இலக்கணத்து நுண்மையை உணர்தல் ஆற்றாப் பின்னுள்ளோர், முற்றே எச்சம் ஆகலும் உரித்தே (நன்.351) எனச் சூத்திரம் செய்தார். அவர் கருத்தைப் பற்றிச் சேனாவரையரும் முற்று எச்சமாம் என்றார் அது பொருந்தாமை இக்கூறியவாற்றானும் சான்றோர் செய்யுட்கு முன்னுள்ளோர் கூறிய உரைகளானும் உணர்க.

இனி, ஞாயிறுபட என்னும் செய என் எச்சத்து அகர ஈறு பட்டு என உகர ஈறாய்த்திரிந்து நின்றது என்றாரால் உரையாசிரியர் எனின், ஞாயிறுபட வந்தான் என்பது ஞாயிறுபடா நிற்க வந்தான் என நிகழ்காலம் உணர்த்துதல் வழக்கு ஆதலின், அது திரிந்து இறந்தகாலம் உணர்த்தும் என்றல் பொருந்தாமை உணர்க. (61)

**தொடர்மொழிப் பொருள் வேறுபாடு**

**458. உரைஇடத்து இயலும் உடன்நிலை அறிதல்**

இது தொடர் மொழிப் பொருள் வேறுபாடு கூறுகின்றது.

(இ..ள்) உரை இடத்து இயலும் - ஓர் எச்ச வாய்பாடாகக் கூறுமிடத்து அது தானே மற்றோர் எச்ச வாய்பாட்டிற்கும் ஏற்று நடக்கும், உடன்நிலை அறிதல் - கூட்டத்தினை அறிந்து தொடர்மொழிக்கு ஏற்ப வெவ்வேறு ஆகப்பொருள் உரைக்க. (எ-று)

(உ..ம்) பெண்மை சுட்டிய உயர்திணை மருங்கின்
ஆண்மை திரிந்த பெயர்நிலைக் கிளவியும் (சொல்.4)

என்புழிப் பெண்மை சுட்டவேண்டி ஆண்மை திரிந்தஎன வினை எச்ச வாய்பாடாயும், பெண்மை சுட்டிய பெயர்நிலைக் கிளவி எனப் பெயரெச்ச வாய்பாடாயும் நிற்றவாறு காண்க.

ஆடிய கூத்தனும் வந்தான்அவனொடு
கூடிய கூத்தியையும் கொண்டு

என்றாற் போல்வனவும், சான்றோர் செய்யுட்கண் இவ்வாறு வருவனவும், பிறவும் இதனான் முடித்துக்கொள்க.

இன்னும் உடன்நிலை என்றதனானே, ஓடிவந்தான், விரைந்து போயினான் என முடிக்கும் வினையோடு உடன் நிகழ்வனவும் கொள்க.

இச்சூத்திரத்துக்கு வழக்கிடத்து உடன் நிற்கற்பால அல்லனவற்றது உடன்நிலை போற்றுக என்று பொருள் கூறி, இந்நாழிக்கு இந்நாழி சிறிது பெரிது என்பது காட்டினாரால் உரையாசிரியர் எனின், அது சிறப்பின்கண் வரும் நான்காம் வேற்றுமைப் பொருளாய் அடங்குதலானும், சிறிது என்பது பெருமையை விசேடித்து நிற்றலானும், அது தான் முன்னர்ப் பெறப்பட்டமையானும், இவ் எச்சமயக்கம் கூறுதலே ஆசிரியர் கருத்து என்று உணர்க. *(61)*

**வினைக்குறிப்புச் சொல் பொருள் தரும் வேறுபாடு**

459. முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான.

இது வினைக்குறிப்புச் சொல்பொருள் தரும் வேறுபாடு கூறுகின்றது.

**(இ..ள்)** இன்ன என்னும் சொல் முறையான - இத்தன்மைய என்று சொல்லப்படும் வினைக்குறிப்புச் சொற்கள் பொருள் தரும் முறைமையிடத்து, முன்னத்தின் உணரும் கிளவியும் உள - அவற்றுள் சில நுண்உணர்வு உடையோர்க்குக் குறிப்பினான்

தெரிநிலைப் பொருள் உணரப்படும் சொற்களும் உள; அவற்றை உணர்க. (எ-று)

உம்மையான் தெரிநிலைப்பொருள் உணரப்படாத சொற்களும் உள என்று உணர்க. தெரிநிலைப் பொருள் உணர்த்துவன, வினைஎச்ச வினைக்குறிப்பு முற்றும், பெயர் எச்ச வினைக்குறிப்பு முற்றும் ஆம். தெரிநிலைப் பொருள் உணர்த்தாதன ஏனைவினைக்குறிப்பு முற்றாம்

முருகாற்றுப்படையுள்,

கச்சினன் கழலினன் செச்சைக் கண்ணியன்
குழலன் கோட்டன் குறும்பல் இயத்தன்
தகரன் மஞ்ஞையன் புகர்இல் சேவல்அம்
கொடியன் நெடியன் தொடிஅணி தோளன்
நரம்புஆர்த் தன்ன இன்குரல் தொகுதியொடு
குறும்பொறிக் கொண்ட நறுந்தண் சாயல்
மருங்கில் கட்டிய நிலன்நேர்பு துகிலினன்
முழவுஉறழ் தடக்கையின் இயல ஏத்தி
மென்தோள் பல்பிணை தழீஇத் தலைத்தந்து
குன்றுதோறு ஆடலும் நின்றதன் பண்பே (208 - 217)

என்புழி வந்த வினைஎச்ச வினைக்குறிப்பு முற்றுக்கள் ஆக்கம் பெற்றுப்பொருள் உணர்த்துங்கால் கச்சைக் கட்டி, கழலை அனிந்து, கண்ணியைச்சூடி, குழலை ஊதி, கோட்டைக் குறித்து, பல் இயங்களை எழுப்பி, தகரைப் பின்னிட்டு, மயிலை ஏறி, கொடியை உயர்த்து, வளர்ந்து, தோளிலே தொடியை அணிந்து, துகிலை உடுத்து, ஏந்தி, தழீஇ, தலைக்கை கொடுத்து ஆடலும் அவற்கு நிலைநின்ற பண்பு எனச்செய்து என் எச்சப்பொருளை உணர்த்தி நின்றவாறு காண்க.

முன்னர்க் காட்டிய பெயர் எச்ச வினைக்குறிப்பு முற்றுக்களுக்கும் தெரிநிலைவாசகமாக விரித்துப் பொருள் கூறுதற்கு ஏற்பனவற்றை உணர்ந்து, அவற்றிற்கு ஏற்கத் தெரிநிலையாகப் பொருள் கூறிக்கொள்க.

நல்லன் அறிவு உடையன் செவ்வியன் சான்றோர் மகன் எனக் குறிப்பு முற்று அடுக்கிப் பெயரொடு முடிவுழி, நல்லனாய் இருப்பன், அறிவு உடையவனாய் இருப்பன், செவ்வியனாய் இருப்பன், சான்றோர் மகன் என விரித்துப் பொருள் கூறியக்காலும் அத்தெரிநிலைப் பொருள் உணர்த்தாதவாறு காண்க.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் சொல்லுவான் குறிப்பான் பொருள் உணரப்படும் சொற்களும் உள, இப்பொருள் இத்தன்மையது என்று கூறுதற்கண் எனப் பொருள்கூறிச் செஞ்செவி, வெள் ஒக்கலர் என்பன காட்டினாரால் எனின், அது குறிப்பின் தோன்றலினது வேறுபாடாம் என மறுக்க.

**மரபு வழு அமைதி**

460. ஒரு பொருள் இருசொல் பிரிவில வரையார்.

இஃது ஒருசொல் இருபொருள் உணர்த்துவது ஒரு மரபு வழு வமைதி அமைக்கின்றது.

இதனை ஒருசொல் இரு பொருள் பிரிவிலவரையார் என மாறுக.

(இ..ள்) இருபொருள் ஒருசொல் பிரிவில வரையார் - ஒருசொல் ஒருகால் கூறுதற்கண்ணே இரண்டு பொருளைப் புலப்படுத்தி இரண்டற்கும் பிரிவு இலவாய் நிற்றலைச் சிறப்புடையது என்று கொள்வர் ஆசிரியர் (எ-று)

பிரிவில என்றது இரண்டற்கும் ஒப்ப நிற்றலை.

(உ..ம்) குழல்வளர் முல்லையின் கோவலர் தம்மொடு
மழலைத் தும்பி வாய்வைத்து ஊத (சிலப்.4.15.16)

என்புழிக் குழல்வளர் முல்லை என்று கூறிய பொழுதே, ஆயர் ஊதும் குழலிலே எழுந்த முல்லை என்னும் பண்ணினையும், மயிரிலே கிடந்த முல்லை என்னும் பூவையும் ஒரு காலத்தே புலப்படுத்தி இரண்டற்கும் பிரிவு இலவாய் நின்றவாறு காண்க.

இஃது ஒருசொல் ஒருகால் கூறுதற்கண் இரண்டு பொருளை உணர்த்துதல் வழுவேனும் அமைக என அமைத்தார்.

இதனை உவமவியலுள் ஒரீஇக் கூறலும் (பொ. ) என்னும் சூத்திரத்துச் செய்யுட்கு இலக்கணமாகக் கூறுமாறும் உணர்க. இங்ஙனம் சான்னோர் செய்யுட்கண் பல இடத்தும் வருமாறு உணர்க.

வரையார் என்பதனான் இவை விகாரப்பட்டு நிற்பனவும் கொள்க.

பாடுதும் பாவை பொற்பே (சீவக.2046)

என்ற வழி, ஒருகால் பொலிவே என ஏகார ஈறாயும், ஒருகால் பொன்னான் செய்தபேய் என யகர ஈறாயும் விகாரமாயும் நின்றவாறு காண்க. இவ்வாறு வருவன பிறவும் உணர்க.

இன்னும் உய்த்துக்கொண்டு உணர்தல் என்னும் தந்திர உத்தியான் இச்சூத்திரத்திற்குச் செவ்வனே கிடந்தவாறும் பொருள் கொள்க.

ஒருபொருளை உணர்த்தி நிற்கும் இரண்டு சொற்கள் தம்மில் பிரிதல் இன்றி நிற்பனவற்றை நீக்கார் கொள்வர் ஆசிரியர். (எ.று)

(உ..ம்) நிவந்து ஓங்கு பெருமலை
துறுகல் மீமிசை

என்றாற் போல்வன ஒரு சொல் இடைவாராமல் அடுக்கி நின்றனவாம். (64)

**பால்வழு அமைதி**

461. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே.

இது பால்வழு அமைக்கின்றது.

(இ..ள்) ஒருமை சுட்டிய பெயர் நிலைக்கிளவி - ஒருமையைக் கருதிய பெயராகிய நிலைமையை உடைய சொல், பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே - பன்மைக்குப் பொருந்தி நிற்கும் இடமும் உண்டு. (எ-று)

எனவே, பன்மை சுட்டிய பெயர்ச்சொல் ஒருமைக்குப் பொருந்தி நிற்கும் இடமும் உண்டு என்றும் பொருள் அடுத்தாபத்தியான் தந்தது.

(உ..ம்) அஃதை தந்தை
அண்ணல் யானை அடுபோர்ச்சோழர் (அகநா.96)

என்புழிச் சோழர் எல்லோரும் அஃதைக்குத் தந்தையாம் முறையராய் நிற்றலின், தந்தை என்னும் ஒருமை சோழர் என்னும் பன்மையொடு தனித்தனிச் சென்று கூடுதலின் வழுஇன்றேனும் ஈற்றுப் பன்மைபற்றி வழு அமைத்தார்.

புலையன் எறிந்த பூசல் தண்ணுமை
ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப

என்புழி இளையர் என்னும் பன்மை, தாய் என்னும் ஒருமையொடு பொருந்தும் வழி ஒருவற்கு ஒருத்திதாயாம் தன்மையான் வழு இன்றேனும் ஈற்றுப் பன்மை பற்றி வழுஅமைத்தார். இவை பொருள் இடையிடுதல் என்னும் உத்தியாம்.

இன்னும் இதனானே,

தினைத்தாள் அன்ன சிறுபசுங் கால
ஒழுகுநீர் ஆரல் பார்க்கும்
குருகும் உண்டுதான் மணந்த ஞான்றே (குறுந்.25)

எனப்பன்மை சுட்டிய பெயர்ச்சொல் ஒருமையோடு இயைபு இன்றி இயைதலின், வழுவாய் அமைவதூஉம் கொள்க. குருகு என்பது இயற்பெயர் ஆதலின், அதன்கண் பன்மையொடு கால என்பது இயைந்து, காலனவாகிய குருகுகள் என நிற்பின், அஃது உண்டு என்னும் ஒருமைக்கு ஏலாமையின், குருகு என்பது ஒருமையாயே நின்றது ஆதலின், வழுவேயாம்;

கள்வன் தான் ஒருவனுமே; வேறு சிலர் ஆண்டு இல்லை என்று கூறுகின்றாள், இரை தேரும் மனக் குறிப்பு உடைமையின் கேளாது; சிறிது கேட்டதாயினும் கொலை சூழ் குருகு ஆதலின், கூறுவது செய்யாது; இத்தன்மைத்து ஆயது ஒரு குருகும் உண்டு என்று கூறுதலின், உண்டு என்று ஒருமை வாசகத்தான் கூறினார்.

இனி, அவ்இரண்டனுள் கூர்ங்கோட்ட காட்டுவல் என்புழி இரண்டனுள் என ஒன்றை வகுத்தமையான் கூர்ங்கோட்டது என ஒருமை ஆகற்பாலது கோட்ட எனப்பன்மையாய் நிற்றலும் இதனான் கொள்க.

என்நீர் அறியாதீர் போல இவைகூறின் (கலி.6)

என ஒருவனைப் பன்மையான் கூறிப்பின்னர்,

நின்நீர அல்ல நெடுந்தகாய் (கலி.6)

என அவனை ஒருமையான் கூறுவன போல்வனவும்,

இறப்பத் துணிந்தனிர் கேண்மின் மற்று ஐய (கலி.2)

என்றாற் போல்வனவும் இதனான் கொள்க.

இன்னும் இதனானே, நம்பிமார், நங்கைமார், அன்னைமார் என்றாற் போல்வன ஒருமைப்பெயர் அடுத்து நின்று மார் ஈறு பன்மை உணர்த்துதலும் கொள்க.

யான் எம் ஊர் புருவல்; நீநும் ஊர் புருவை என்றாற் போல்வனவோ எனின், அவையான்புகுவல், நீபுகுவை என ஒருமை முடிபொடு முடிந்து நிற்ப, எம் ஊர் நும் ஊர் என்பன வேறு ஒரு முடிபாய் நின்றன எனக் கொள்க.

இனி,

மன்ற மராஅத்த பேம்முதிர் கடவுள் (குறுந்.87)

என்பது மரா அத்துக்கடவுள் என் நிற்கும். இவை போல்வன அன்றி முன்னர்க் காட்டிய உதாரணங்கள்போல மயங்கி வருவன உளவேல், அவற்றையும் இச்சூத்திரத்தான் அமைத்துக் கொள்க. (65)

**ஆற்றுப்படையில் முடிபு**

462. முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே
ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும்.

இது ஆற்றுப்படையின்கண் முன்னிலை ஒருமை பன்மையொடு முடிக என்கின்றது.

*(இ..ள்)* முன்னிலை சுட்டிய ஒருமைக்கிளவி - முன்னிலை இடத்தைக் கருதின ஒருமைப்பெயர், பன்மையொடு முடியினும் வரைநிலை இன்று - பன்மைச் சொல்லொடு முடியினும் நீக்கும் நிலைமை இன்று, ஆற்றுப்படை மருங்கின்போற்றல் வேண்டும் - அம்முடிபு ஆற்றுப்படைச் செய்யுளிடத்துச் சுற்றத்தார் தலைவனை ஆற்றுப்படுத்தற்கண்ணதாகப் பாதுகாத்து உணர்த்தல் வேண்டும்.

*(உ..ம்)* கூத்தர் ஆற்றுப்படையுள், கலம்பெறு கண்ணுளர் ஒக்கல்
தலைவ *(மலைபடு.50)*

என நின்ற ஒருமைச் சொல் முடிவுழி
இரும்பேர் ஒக்கலொடு பதம்மிகப் பெறுகுவிர்
*(மலைபடு.157)*

என்னும் பன்மையொடு முடிந்தவாறு காண்க.

இவ்விரண்டு சூத்திரத்தானும் கூறியமயக்கம் சிறுவரவிற்றாய் இலக்கண வழக்கு உண்மையின், பால் மயக்கு உற்ற *(சொ.23)* என்னும் சூத்திரத்தான் கூறிய ஒருமைபன்மை வழுவமைதி ஆகிய இலக்கண வழக்கோடு உடன்வையாது ஈண்டு வைத்தார். *(66)*

**அதிகாரப் புறனடை**

463. செய்யுள் மருங்கினும் வழக்குஇயல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்.

இஃதுயான் விரித்துக் கூறாதனவற்றை விரித்துக் கூறிக் கொள்க என அதிகாரப் புறனடை கூறுகின்றது.

(இ..ள்) செய்யுள் மருங்கினும் வழக்கு இயல் மருங்கினும் - இவ் அதிகாரத்தின்கண் செய்யுள் இடத்தும், வழக்கு இடத்தும் மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம் - சிலவற்றிற்கு ஞாபகமாகப் பொருள் பெறச் சொல்லப்பட்ட சொற்கள் எல்லாவற்றையும், பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது - செம்பொருளவாய் பலவாக வேறுபடுத்திய விரிவுகளை உடைய அகத்தியத்தில் கூறிய நெறியின் தப்பாமல், சொல் வரைந்து அறியப்பிரித்தனர் காட்டல் - சொல்லை வேறுபடுத்து மாணாக்கள் உணருமாறு நுண்ணுணர்வு உடையோர் உரையானும், காண்டிகையானும் பிரித்துக்காட்டுக. (எ-று)

அங்ஙனம் உணரப் பிரித்துக் காட்டுமாறு என்னை எனின், இரண்டாவது.

வினையே வினைக்குறிப்பு
அவ்இருமுதலின் தோன்றும் (சொ.72)

என்றதற்கு மூவகையவாகிய வினைச் சொல்லினும் வினைக் குறிப்புச் சொல்லினும் பிறக்கும் காரணங்கள் எட்டனுள் செயப்படு பொருட்கண்ணே இரண்டாவது தோன்றும் என்றும்,

மூன்றாவதற்கு ஓதியவினைமுதல் இயற்றும் வினைமுதலும் ஏவும் வினைமுதலும் என இருவகையது என்றும், கருவி முதற்காரணமும் துணைக்காரணமும் என இரவகையது என்றும், நான்காவதற்கு ஒதிய கொடைப் பொருள் இருவகைத்து என்றும், ஐந்தாவதற்குப் பொருள் நால்வகைத்து என்றும், அதன்கண்பொரு உறழ் பொருவும் உவமப்பொருவுமாம் என்றும், ஏது காரக ஏதுவும் ஞாபக ஏதுவும் ஆம் என்றும் ஆறாவதற்குத் தற்கிழமை ஐவகைத்து, பிறிதின் கிழமை மூவகைத்து என்றும் பிறவும் வேற்றுமை ஒத்தினுள் பிரித்துக்காட்டினாம்.

இனி, வினை எனப்படுவது எனப்பொதுப்படக் கூறிய முதல் நிலைகளை இன்னவாறு வரும் எனப்பிரித்துக் காட்டியும்,

அவை எடுத்தல் ஓசையான் முன்னிலை ஏவல் ஒருமை முற்றாய் நிற்கும் என்றும், கடதறக்கள் முதல்நிலையை அடுத்து வருங்கால் இறப்பும், ஈற்றினை அடுத்து வருங்கால் எதிர்வும் உணர்த்தும் என்றும், நில், கின்று என்பன நிகழ்காலம் உணர்த்தும் என்றும், பகர வகரம் எதிர்காலம் உணர்த்தும் என்றும், ஏனை எழுத்துக்கள் இன் பெற்றும் பெறாதும் உகரம் பெற்றும் பெறாதும் வரும் என்றும், வினைக்குறிப்புக்கள் பண்பு ஆம் காலத்தும் வினைக்குறிப்பாம் காலத்தும் வேறுவேறு பொருள் உணர்த்தும் என்றும், விரவு வினைகள் பிரிபு வேறு படூஉம் செய்திய ஆம் காலத்து முடிக்கும் சொல்லானும் அன்றித் தம்முள்ளே பாலும் இடமும் குறித்துக் கொள்ளும் தன்மையை உடைய என்றும், வினைஎச்சங்கள் காலம் காட்டும் எழுத்துக்கள் பெறும் என்றும், அவைதிரியும் என்றும், அவை காரண காரியம் பெறும் என்றும், பெயர் எச்சங்களுள் காரணப் பொருட்டாய் வருவன கருவிக்கண் அடங்கும் என்றும் பிறவும் வினையியலுள் பிரித்துக்காட்டினாம்.

இனி, அறுவகைத்தொகையும் தொகுங்கால் இன்ன சொற்கண்ணே இன்ன தொகைதொகும் என்றும், முற்கூறிய வினைச்சொற்கள் தாமும் சில முக்காலமும் சில ஒரோவொரு காலமும் உணர்த்தும் என்றும், அவை பெயர்கள் பெறுங்கால் இன்னவாறே பெயர்கள் பெறும் என்றும் பிறவும் எச்சவியலுள் பிரித்துக்காட்டினாம்.

இனி, சொல் வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல் என்பதனான், திரையன் ஊர் என்பது திரையனால் செய்யப்பட்ட ஊர் எனவும் திரையனது ஊர் எனவும் மூன்றாவதும் ஆறாவதும் விரிந்தது.

கடிப்பகை என்பது, நான்காவதும் ஆறாவதும் கடியாகிய பகை எனப் பண்பும் விரிந்தது. ஏழேகால் என்பது ஏழும் காலும் என உம்மையும் ஏழேகால் நிலமான ஊர் என அன்மொழியும் விரிந்தது. சொல் இலக்கணம் என்பது ஆறாவதும் நான்காவதும் ஏழாவதும் விரிந்தது, சொல் இலக்கணம் கூறிய நூல் என ஆகுபெயருமாய் நின்றது.

பொன்மணி என்பது மூன்றாவதும் ஐந்தாவதும் ஏழாவதும் பொன்னும் மணியும் என உம்மையும் விரிந்தது. கருப்புவேலி என்பது நான்காவதும் ஆறாவதும் ஏழாவதும் மூன்றாவதும் ஐந்தாவதும் விரிந்தது. இயல்இசை என்பது ஆறாவதும் ஏழாவதும் இயலும் இசையும் என உம்மையும், இயல்கின்ற இசை என வினையும் இயலாகிய இசை எனப்பண்பும் விரிந்தது.

உரைவிரி என்பது, ஆறாவதும் ஏழாவதும், நான்காவதும், இரண்டாவதும், உரைக்கும் விரி என வினையும் உரை விரியை உடையது என அன்மொழியும் விரிந்தது. கருத்துப் பொருள் என்பது இரண்டாவதும், மூன்றாவதும், ஐந்தாவதும், நான்காவதும், ஆறாவதும், ஏழாவதும், கருத்தும் பொருளும் என உம்மையும் விரிந்தது.

சொற்பொருள் என்பது மூன்றாவதும் நான்காவதும் ஐந்தாவதும் ஆறாவதும் சொல்லும் பொருளும் என உம்மையும், சொல்லாகிய பொருள் எனப் பண்பும் விரிந்தது.

இவ்வாறே பிற சொற்களும் தொக்கு விரியுமாறு அறிந்து பிரித்துக்காட்டுக.

இவன்யார் என்குவை ஆயின் இவனே (புறநா.13)

என்னும் புறப்பாட்டினுள் சேரனை முன்னிலை யாக்கி முடமோகியார் கூறுகின்ற காலத்து இவன் என்பது முன்னிலைப் படர்க்கையாய் நின்றது. இவ்வாறு வருவன பிறவும் பிரித்துக் காட்டுக.

கொல், செல், வெல் என்பன லகரம் னகரமாய்த்திரிந்தும், தமக்கு ஏற்ற றகர ஒற்றுப் பெற்று, பாலும் இடமும் காட்டும். ஆன் ஏறிக் கொன்றான், சென்றான், வென்றான் என நின்றன.

கோறு கோறும், சேறு, சேறும்; வேறு வேறும் என்பன, முதல் நிலை நீண்டு, லகர ஒற்றுக்கெட்டு, தமக்கு உரிய ஒருமைத் தன்மை ஈறும் பன்மைத் தன்மை ஈறும் பெற்று நின்றன.

வா என்பது வந்தான், வருகின்றான் என முதல் நிலை குறுகிக்கால எழுத்திற்கு ஏற்ற இடைநிலை எழுத்துப் பெற்றுவந்தன.

கொள் என்பது கொண்டான், கோடு, கோடும் என ளகாரம் ணகார மாயும் கெட்டும் முதல்நிலை நீண்டும் வந்தன.

கைவாரம் கொள்வானைக் கைவாரி எனவும், திரு இல்லாதானைத் திருவிலி எனவும், அறிவு இல்லாதானை அறிவிலி எனவும், நூல் ஓதினானை நூல் ஓதி எனவும், இவ்வாறே ஈறு திரிந்து வருவனவும் பிறவும் பிரித்துக்காட்டுக.

வில்லி, வாளி - வினைக் குறிப்பு முற்று ஈறு திரிந்த பெயர்.

வலைச்சி, பன்த்தி, வெள்ளாட்டி முதலியன சகரமும் தகரமும் டகரமும் ஆகிய இடைநிலை பெற்றன. செட்டிச்சி, கணக்கிச்சி முதலியன இச் என்றும் இடைநிலை பெற்றன.

கணவாட்டி - இவ்வினைப் பெயர் டகரம் பெற்றது.

இன்னும் இவ்வாறே வருவன பிறவும் விரித்துக்காட்டுக.

கிள்ளிகுடி - கிள்ளியுடைய குடிமக்கள் இருக்கும் ஊர் எனவும் கீழ் வயிற்றுக்கழலை - கீழ் வயிற்றின்கண் எழுந்த கழலை போல்வான் எனவும் அன்மொழித் தொகையாம்.

வடுகக்கண்ணன் - வல்லொற்று அடுத்தால் வடுக நாட்டில் பிறந்த கண்ணன் என்று ஆம். வடுகங்கண்ணன் என மெல்லொற்று அடுத்தால் வடுகனுக்கு மகனாகிய கண்ணன் என்று ஆம்.

நனிநீடு உழந்தன்று மன்னே, இனியே (குறுந்.149)

இனி என்பது பின்வரும் காலம் உணர்த்திற்று.

இனி எம் எல்லை எனப் பின் என்னும் இடம் உணர்த்திற்று

ஏனோன் என்பது ஒழிபொருள் உணர்த்திற்று

ஏதிலன் என்பது அயலான் என்னும் பொருள் உணர்த்திற்று. உண்ணாநின்றான் என்புழி ஆ என்பது இடைநிலை எழுத்து என்று உணர்க.

வா, தா என்றாற் போல்வன, மறை உணர்த்துங்கால் வாரான், தாரான், வாராது போயினான், தாராது போயினான், வாராத சாத்தன், தாராத சாத்தன் என முதல் நிலை குறுகாது நிற்கும் என உணர்க.

நன் தீ சிறு பெரு வன் மென் கடு முது இள புது பழ இன் உடை அல் என்பன முதலிய முதல்நிலைகள் மகர ஐகாரம் பெற்று நன்மை தீமை சிறுமை பெருமை என வினைக்குறிப்புப் பெயராய் நிற்குமாறும்,

இவைதாம் நன்று தீது சிறிது பெரிது வலிது மெலிது கடிது முதிது இளைது புதிது பழைது இன்று உடைத்து அன்று என அஃறிணை வினைக்குறிப்பு முற்றாய் நிற்குமாறும்,

நல்லன் தீயன் சிறியன் பெரியன் வலியன் மெலியன் கடியன் முதியன் இளையன் புதியன், பழையன், இல்லன், உடையன், அல்லன் என அன் பெற்று உயர்திணை வினைக்குறிப்பாய் நிற்குமாறும்.

இவைதாம் ஆன் என்னும் ஈறுபெற்று முற்றாயும், படுத்தல் ஓசையான் வினைக் குறிப்புப் பெயராய் உருபு ஏற்றும் பயனிலைகொண்டும் நிற்குமாறும் பிரித்துக்கொள்க. இவ்வாறே ஏனைப்பால்களோடும் ஒட்டுக.

இவை பண்பாய் நிற்குமாறும் உரிய என்று உணர்க.

இவைதாமே, நன்றாய் வளர்ந்தான், வளர்ந்தது
தீதாய்ப் போயினான், போயிற்று

என வினை எச்சக் குறிப்பு ஆமாறும். நல்ல சாத்தன், தீய சாத்தன் எனப் பெயரெச்சக் குறிப்பு ஆமாறும் காண்க.

சிற, இழி, தீர் என்னும் முதல் நிலைகள் அல் ஈறு பெற்றும் அன் ஈறும் ஆன் ஈறும் பெற்றும் முற்கூறியவாறே நிற்குமாறும்,

சிறந்து இழிந்து திர்ந்து எனவும், சிறந்த இழிந்த தீர்ந்த எனவும் வினை எச்ச வினைக்குறிப்பும், பெயரெச்ச வினைக் குறிப்பும் ஆமாறும் உணர்க. இவ்வாறு வருவன பிறவும் பிரித்துக் கொள்க.

சுடர் இழாய் பன்மாணும் (கலி.47)

என்புழி மாண் என்னும் இடைச்சொல் பலபடியும் என்னும் பொருட்டாய் நின்றவாறு காண்க.

பிரிதல் வல்லியார் ஈதும் துறந்தோர்

என்புழி வல்லாராய் எனவினையெச்சமாய் நின்றவாறு காண்க.

கால்பொர நுடங்கல கறங்குஇசை அருவி (கலி.45)

என்புழி நுடங்குதலை உடைய அருவி என நிற்குமாறு உணர்க. இவை போல்வன ஓசை வேற்றுமையான் வேறுபடுவனவும் உணர்ந்துகொள்க.

நில்லாது பெயர்ந்த பல்லோருள்ளும் (அகநா.110)

என்புழி, முன்னர் எல்லாரும் உளப்பாடாகக் கூறிய தோழி ஈண்டும் பல்லே முள்ளும் என்னாது தன்னை நீக்கிக் கூறியது என்னை எனின், தலைமகன் தன்னை நோக்கி அழிவு தக்க கூறி ஆற்றாளாகி நின்ற நிலைமையைக் கண்டும் அருள் பிறவாது ஆயமும் தலைவியும் போயவாறும், அதற்குத்தான் அழிவு தக்கு நிற்றலின் அவரொடுபோதல் ஆற்றாது பின்னர்ப் போயவாறும் தோன்றக் கூறுகின்றாள் ஆதலின் பல்லோருள்ளும் எனக் கூறினாள் என்று பொருள் கூறுக.

முரசு முழங்கு தானை மூவருள்ளும்
அரசு எனப்படுவது நினதே பெரும (புறநா.35)

என்புழி மூவிர் என்னாதது என்னை எனின், புலவன் கூறுகின்ற இவனை ஒழிந்த இருவகைக் குலதோரும் இவன் முன்னுள்ளோரும் படர்க்கையர் ஆதலின், அம்மூவகைக் குலத்து உள்ளோரையும் கூட்டி முரசு முழங்குதானை மூவர் அரசுள்ளும் அரசு என்று ஈண்டுச் சிறப்பித்துச் சொல்லப்படுவது அச்சோழன் வழித் தோன்றிய நின் அரசே என்றான் எனப்பொருள் கூறுக.

இங்ஙனம் சான்றோர் செய்யுட்கண் இவ்வாசிரியர் கூறிய இலக்கணங்களுள் அடங்காதன போன்று கிடப்பன பிறவும் உளவேனும் நுண்ணுர்வு உடையோர் அவற்றின் பொருட்பயனை நோக்கி ஒருவாற்றான் இக்கூறிய இலக்கணங்களுள் அடக்கிக் கொள்க.

இச்சூத்திரத்தின் கருத்து இவ்வதிகாரத்துள் சிலவற்றிற்கு விரித்துக் கூறாது நுண்ணுணர்வு உடையார் உணருமாறு கூறிய இலக்கணங்களும் உள. அவற்றிற்கு முதல் நூலானும் விரித்துரையானும் காண்டிகையானும் உணர்த்துக என்று கூறுதலாம். இங்ஙனம் கூறினார், முடிந்தது காட்டல் என்னும் தந்திர உத்திக்கு இனமாக என்று உணர்க.

இங்ஙனம் கூறாது என்னால் கூறப்படாத இலக்கணங்களை முதல் நூல்களான் கூறிக்கொள்க. எனின், அது குன்றக் கூறல் என்னும் குற்றமாம் என்று உணர்க.

சொல்லதிகாரத்திற்கு மதுரை ஆசிரியன் பாரத்துவாசி நச்சினார்க்கினியன் செய்த காண்டிகை முற்றும்.

**எச்சவியல் முற்றும்**
**நச்சினார்க்கினியர் உரை முற்றும்.**

# தெய்வச் சிலையார் உரை

## 7. இடையியல்

246. இடைஎனப் படுவ பெயரொடும் வினையொடும்
நடைபெற்று இயலும் தமக்குஇயல்பு இலவே.

இவ்ஒத்து என்ன பெயர்த்தோ எனின், இடைச்சொல் ஒத்து என்னும் பெயர்த்து. இடைச்சொல் உணர்த்தினமையான் பெற்ற பெயர். இது பெயரையும் வினையையும் சார்ந்து தோன்றுதலின் அவற்றின்பின் கூறப்பட்டது.

இடை எனப்படுவ........தமக்கு இயல்பு இலவே என்பது இடைச் சொல் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இடை என்று சொல்லப்படுவன பெயரொடு கூடியும், வினையொடு கூடியும் வழக்குப் பெற்று இயலும் அல்லது தமக்குஎன வழக்குஇல (எ-று)

என்றது, மேல் அதிகரிக்கப்பட்ட சொல் நான்கினுள் இடைச்சொல் ஆவது பெயரும் வினையும் போலத் தனித்தனி பொருள் உணர உச்சரிக்கப்படாது; பெயர் வினைகளைச் சார்ந்து புலப்படும் (எ-று)

பெயரும் வினையும் இடம்ஆக நின்று பொருள் உணர்த்துதலின் இடைச்சொல் ஆயிற்று.

மேல் பெயர் இயலுள்ளும் அவற்றுவழி மருங்கின் தோன்றும் (சூ.155) என ஓதி, ஈண்டும் இவ்வாறு கூறுதல், கூறியது கூறலாம் பிறஎனின், ஆண்டுத் தோற்றுவாய் செய்தார்; ஈண்டு இலக்கணம் கூறினார் என்க. பெயரொடும் வினையொடும் நடை பெற்று இயலும் என்றதனான், பொருள் உணர்த்தும் வழிப் பெயர்ப்பொருண்மை உணர்த்தியும், வினைப் பொருண்மை உணர்த்தியும் வருமது அல்லது வேறுபொருள் இலது என்றதாம். (1)

247. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்கு உதநவும்
வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபுஆ குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பின் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியான் பொருள்செய் குநவும்
அப்பண் பினவே நுவலும் காலை.

இடைச்சொல் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) அவைதாம் புணர் இயல் நிலையிடைப் பொருள் நிலைக்கு உதநவும் என்பது மேல் சொல்லப்பட்ட இடைச் சொற்கள்தாம் ஒருசொல்லோடு ஒருசொல் புணர்ந்து இயலும் வழி அப்பொருள் நிலைக்கு உதவியாகி வருவனவும் (எ-று)

பொருள் நிலைக்கு உதவல் ஆவது அல்வழிப் பொருட்கு உரியன இவை, வேற்றுமைப் பொருட்கு உரியன இவை என வருதல். அவையாவன இன்னே, வந்றே என்பன முதலாயின. அவை சாரியை அன்றோ எனின், அவை இடைச்சொல் எனவும் ஒரு குறிபெறும் என்றவாறு.

வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும் என்றது வினைச்சொல் முடிவுபெறும் இடத்துக் காலம்காட்டும் சொல்லொடு பால்காட்டும் சொல்லும் (எ-று)

அவையாவன: உண்டனம், உண்டாம், உண்ணா நின்றனம், உண்கின்றனம், உண்பம், உண்குவம் என்புழி இறந்த காலம் குறித்த டகரமும், நிகழ்காலம் குறித்த நின்று, கின்று என்பனவும், எதிர்காலம் குறித்த பு,கு என்பனவும், அம், ஆம் எனப்பால் காட்டுவனவும், இவ்வாறு வருவன பிறவும் ஆம்.

வேற்றுமைப் பொருள்வயின் உருபு ஆகுநவும் என்பது அவ்வேற்றுமைப் பொருள் இடத்து உருபுஆகி நிற்கும் சொற்களும் (எ-று)

அவையாவன ஐ,ஒடு,கு முதலியன. இவையும் இடைச் சொல் எனக் குறிபெற்றன.

அசைநிலைக் கிளவி ஆகி வருநவும் என்பது பொருள்பட நில்லாது அசைநிலை ஆகி நிற்பனவும் (எ-று)

இசை நிறைக் கிளவி ஆகி வருநவும் என்பது அசைநிலைக் கிளவி போலப் பிரிந்து நில்லாது, ஒரு சொல்லோடு ஒற்றுமைப்பட்டு இசைநிறைத்தல் பொருட்டு ஆகி நிற்பனவும் (எ-று)

தத்தம் குறிப்பின் பொருள் செய்குநவும் என்பது தத்தம் குறிப்பினான் பொருள் உணர்த்துவனவும் (எ-று)

ஒப்புஇல் வழியான் பொருள் செய்குநவும் என்பது குறிப்பினான் வருதல் அன்றிப் பொருத்தம் இல்லாத இடத்துப் பொருள் உணர்த்துவனவும் (எ-று)

அப்பண்பினவே நுவலும் காலை என்பது அவ்இயல்பினை உடைய சொல்லும் காலத்து. (எ-று)

தத்தம் குறிப்பின் என்பதற்குச் சார்ந்த சொல்லின் குறிப்பினான் எனவும் ஒப்புஇல்வழி என்பதற்கு ஒருசொல்லொடு பொருத்தம் இன்றித் தனிவந்துழி எனவும் பொருள் உரைப்பினும் அமையும்.

அஃது அற்று ஆக, ஒப்பு இல்வழி என்பதற்கு ஒக்கும் என்னும் சொல் வாராத உவம உருபு எனப் பொருள் உரைப்பவால் எனின், ஒப்பினானும் பண்பினானும் என்று, அப்பால் காலம் குறிப்பொடு கொள்ளும் (சூ.207) என்றமையானும், போல, அன்ன, ஏய்ப்ப, உறழ என்பன, சாத்தன் புலிபோலும் எனவும்,

புலிபோலப் பாய்ந்தான் எனவும், புலி போன்ற சாத்தன் எனவும், இவ்வாறு பிறவும் முற்றும், வினைஎச்சமும், பெயர் எச்சமும் ஆகி வருதலினானும் அவை எல்லாம் வினைக்குறிப்பு என்று கொள்க.

அவற்றுள், புணர்இயல் நிலைஇடைப் பொருள் நிலைக்கு உதவுந எழுத்து அதிகாரத்துக் கூறப்பட்டன. வினைசெயல் மருங்கின் காலமொடு வருந வினை இயலுள் கூறப்பட்டன. வேற்றுமைப் பொருள்வயின் உருபுஆகுந வேற்றுமை ஒத்தினுள் கூறப்பட்டன. ஏனை நான்கும் ஈண்டு ஓதப்படுகின்றன. (2)

248. அவைதாம்,
முன்னும் பின்னும் மொழிஅடுத்து வருதலும்
தம்ஈறு திரிதலும் பிறிதுஅவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப.

இதுவும் இடைச்சொற்கு உரியது ஒரு மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல் சொல்லப்பட்ட இடைச்சொல்தாம் மொழியை முன்னும் பின்னும் அடுத்துவருதலும், தத்தம் ஈறுதிரிந்து வருதலும், பிறிது ஓர் இடைச்சொல் ஆண்டு அடுத்து வருதலும் ஆகிய அத்தன்மைய எல்லாம் உரிய (எ-று)

(உ..ம்) அதுமன், கேண்மியா என்பன மொழிமுன்வந்தன. கொன்ஊர், ஓஒகொடியை என்பன மொழிப்பின் வந்தன. மன்னைச் சொல் (சூ.249) என்றவழி ஈறுதிரிந்தது. வருகதில் அம்ம (அகம்.276) என்பது பிறிது அவண் நின்றது. பிறவும் அன்ன. (3)

249. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவிஎன்று
அம்மூன்று என்ப மன்னைச் சொல்லே.

ஈண்டு உரைக்கப்படுகின்ற இடைச்சொல் நான்கும் பொருள் புணர் இடைச்சொல்லும், பொருள் புணரா இடைச் சொல்லும் என இருவகைப்படும். அவற்றுள்,

பொருள்புணர் இடைச்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* கழிந்தது என்னும் பொருண்மையும், ஆம் என்னும் பொருண்மையும், எஞ்சிய இசையான் உணரும் பொருண்மையும் உணர வரும் மன் என்னும் சொல் (எ-று) மன் மன்னை என நின்றது.

*(உ..ம்)* சிறியகள் பெறினே எமக்கு ஈயும் மன்னே (புறம்.235) என்புழி மன் கழிந்தது என்னும் பொருள்பட நின்றது. புதுமலர் அணிய இன்றுவரின், அதுமன் எம் பரிசில் ஆவியர் கோவே! (புறம்.147). இதனுள் மன் என்பது ஆம் என்பது குறித்து நின்றது. கூரியது ஒருவாள்மன் என்றவழித் திட்பம் இன்று என்றானும், வெட்டவல்லார் உளர் ஆயின் என்றானும் ஒழிந்த சொல்லினான் உணரும் பொருள்பட்டது. *(4)*

250. விழைவே காலம் ஒழியிசைக் கிளவிஎன்று
அம்மூன்று என்ப தில்லைச் சொல்லே.

இதுவும் அது.

*(இ..ள்)* விழைவுப் பொருளையும், காலப்பொருளையும், ஒழியிசைப் பொருளையும் உணரவரும் தில் என்னும் சொல் என்றவாறு.

*(உ..ம்)* அரிவையைப் பெறுகதில் அம்மயானே! (குறுந்.14) இது விழைவு பற்றி வந்தது. பெரும்காட்டுப் பண்ணிய கரும்கோட்டு ஈமம், நுமக்கு அரிது ஆகுக தில்ல எமக்கு எம், பெரும்தோள் கணவன் மாய்ந்தென அரும்புஅற, வெள்இதழ் அவிழ்ந்த தாமரை, நள்இரும் பொய்கையும் தீயும்ஓ ரற்றே (புறம்.246). இதனுள் ஈமம் புகுதல் நுமக்கு அரிது ஆகுக. எமக்கு இக்காலத்துப் பொய்கையோடு ஒக்கும் என்றமையான் காலம் குறித்தது. வருகதில் அம்ம எம் சேரி சேர (அகம்.276) வந்தால் இவ்வாறு செய்வல் என்னும் ஒழியிசை குறித்து நின்றது. *(5)*

251. அச்சம் பயம்இலி காலம் பெருமைஎன்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.

இதுவும் அது.

*(இ..ள்)* அச்சப்பொருண்மையும், பயன்இன்று என்னும் பொருண்மையும், காலப்பொருண்மையும், பெரிது என்னும் பொருண்மையும் பற்றி வரும் கொன் என்னும் சொல் (எ-று)

**(உ..ம்)** கொன்முனை இரவு ஊர் போல (குறுந்.*91*) என்பது அச்சம் உணர நின்றது. கொன்னே கழிந்தன்று இளமையும் (நாலடி.*55*) என்புழிப் பயன்இன்மை உணர நின்றது. கொன்வரல் வாடை என்றவழிப் பிரிந்த காலத்துவருகின்ற வாடை எனக் காலம் உணர நின்றது. கொன் ஊர் துஞ்சினும் (குறுந்.*138*) என்றவழிப் பெருமை உணர நின்றது.

இம்மூன்று சொல்லும் பெயர் வினையை ஒட்டி வாராது தனிவந்து ஒப்புஇல் வழியான் பொருள் உணர்தினமையான், ஒப்புஇல் வழியான் பொருள் செய்தன. பிறவும் இவ்வாறு வருவன அறிந்து கொள்க. *(6)*

252. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம்என்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே.

இதுவும் அது.

எச்சம் முதலாகச் சொல்லப்பட்ட எண் வகைப் பொருளும் உணரவரும் உம்மைச் சொல் (எ-று)

**(உ..ம்)** எச்சம் இறந்தது தழீஇயதும், எதிரது தழீஇயதும் என இருவகைப்படும். சாத்தனும் வந்தான் என்றவழி, முன் ஒருவன் வரவு குறித்தான் ஆயின் இறந்தது தழீஇயதாம். பின் ஒருவன் வரவு குறித்தான் ஆயின் எதிரது தழீஇயதாம். தன்னை ஒழிந்த பொருளைக் குறித்தமையான் எச்சம் ஆயிற்று.

சிறப்பு என்பது மிகுதி. அஃது உயர்பான் மிகுதலும், இழிபான் மிகுதலும் என இருவகைப்படும். அக்காரம், யாவரே தின்னினும் கையாது ஆம் கைக்குமே, தேவரே தின்னினும் வேம்பு (நாலடி.112) என்றவழி யாவர் என்பது இழிபு குறித்து நின்றது. தேவர் என்பது உயர்பு குறித்து நின்றது.

ஐயம் என்பது ஐயப்பட்ட பொருண்மை குறித்து வருவது. ஏனல் காவல் இவளும் அல்லள், மான்வழி வருகுநன் இவனும் அல்லன், நரந்தம் கண்ணி இவனோடு இவளிடை, கரந்த உள்ளமொடு, என்றவழிக் காரணம் பிறிது ஆகல் வேண்டும் என்னும் ஐயம் குறித்து நின்றது.

எதிர்மறையாவது யாதானும் ஒரு தொழிலை எதிர்மறுத்த தொழில்கண் வரும். சாத்தன் வருதற்கும் உரியன் என்றவழி வாராமைக்கும் உரியன் எனவரும்.

முற்று என்பது மற்றொரு பொருளை நோக்காது நிற்கும். தமிழ்நாட்டு மூவேந்தரும் வந்தார் எனவரும். முழுதும் உணர்ந்தார் என்பதும் அது.

எண் என்பது பல பொருளை எண்ணுதல் குறித்துவரும். மண்திணிந்த நிலனும், நிலன் ஏந்திய விசும்பும், விசும்புதைவரு வளியும், வளித்தலைஇய தீயும், தீமுரணிய நீரும் (புறம்.2) எனவரும்.

தெரிநிலை என்பது ஒருபொருளை ஐயப்படுதலும் துணிதலும் இன்றி ஆராயும் நிலைமைக்கண் வரும். ஐதேய்ந்தன்று பிறையும் அன்று, மைதீர்ந் தன்று மதியும் அன்று (கலி.55) என வரும்.

ஆக்கம் உம்மை அடுத்த சொல்பொருள்மேல் ஆகும் நிலைமையைக் குறித்து வரும். வாழும் வாழ்வு, உண்ணும் ஊண் எனத் தொழிலினது ஆக்கம் குறித்து நின்றவாறு கண்டுகொள்க. இது பெயர் எச்ச வினைச்சொல் அன்றோ எனின், ஆம். அதன்கண் உம்

இடைச்சொல் என்க. அதனானே அன்றே உம் உந்து ஆகும் இடனுமார் உண்டே (சூ.288) என்னும் இலக்கணத்தான், நெல்லரியும் இரும்தொழுவர் என்னும் பாட்டினுள் (புறம்.24) செஞ்ஞாயிற்று வெயில் முனையின், தென்கடல்திரை மிசைப்பாயும் எனல்பாலது பாயுந்து என வந்தது. இவ் இலக்கணம் வினை இயலுள் ஓதாமையான் பெயர்எச்ச உம் இடைச்சொல் என்று கொள்ளப்படும். பாயும் புனல் என்பது பாய்புனல் எனத் தொக்குழி, வேற்றுமைப் பொருட்கண் உருபு, பெயர் நிற்பத் தொக்கவாறு போல, வினை நிற்ப உருபு தொகுதலானும், செய்யும் என்பது வினையும் உருபும் ஆகிய இருநிலைமைத்து என்று கொள்க. செய்யும் என்னும் முற்றுச்சொல்லின்கண் உம் எவ்வாறு வந்தது எனின், அது மற்றொரு பொருளைக் குறித்து நில்லாமையின் ஈண்டு இடம் இன்று என்க. முற்றி நிற்றலின் முற்றும்மை எனினும் இழுக்காது.

ஆக்க உம்மை என்பதற்கு நெடியனும் வலியனும் ஆயினான் என உதாரணம் காட்டுபவால் எனின், அஃது எண் உம்மை என்க. தனிவரின் எச்ச உம்மையாம். (7)

253. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன்று என்ப ஓகா ரம்மே.

இதுவும் அது.

(இ..ள்) பிரிநிலை முதலாக ஓதப்பட்ட ஆறு இடமும் என்று சொல்லுவார்; ஓகாரம் ஆகிய இடைச்சொல் பொருள் உணர்த்தும் இடம். (எ-று)

(உ..ம்) பிரிநிலையாவது பிறபொருளினின்றும் பிரித்தமை தோன்றவருவது. கானம் கார் எனக் கூறினும், யானோ தேறேன்அவர் பொய்வழங் கலரே (குறுந்.29), அவரோ வாரார் (குறுந்.221) எனவரும். எல்லாரும் தேறினும் யான் தேறேன், எல்லாரும் வரினும் அவர் வாரார் எனப் பிரிநிலைப் பொருண்மை தோன்றியவாறு கண்டுகொள்க.

வினா என்பது வினாவுதல் பொருள்மேல் வரும். அதுவோ?, உண்டாயோ? எனவரும். எதிர்மறையாவது தன்னான் சொல்லப்பட்ட பொருளின் மாறுபட்டு வருவது உண்ணேனோ; வாரேனோ என்றவழி உண்பல், வருவல் என்னும் பொருள்பட்டது.

ஒழியிசையாவது தன்னான் சொல்லப்பட்ட பொருள் அன்றி மற்றொரு பொருளும் கொள்ள நிற்பது. செய்கையோ செய்தான் என்றவழிப் பின்னும் இவ்வாறு செய்திலன் என்னும் பொருளும் குறித்து நின்றவாறு கண்டுகொள்க.

தெரிநிலை என்பது ஒரு பொருளை ஆராயும் நிலைமைக்கண் வருவது. திருமகளோ அல்லள், நாமகளோ அல்லள், இவள் யார் ஆகும் என வரும்.

சிறப்பு என்பது பொருளின் உயர்வு குறித்து நிற்கும். கானக நாடனை நீயோஒ பெரும என வரும். அஃதேல் எழுத்து அதிகாரத்து ஓகார ஈற்றுள் ஐயம் என்றும் (உயிர் மயங்கு.88) ஓர் ஒகாரம் ஓதினாரால் எனின், அது தெரிநிலைக்கண் அடங்கும் என்பதூஉம் ஒன்று.

வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் என்பதனான் ஆண்டு மாறுகொள் எச்சமும், வினாவும், ஐயமும் என ஓதப்பட்டவற்றுள் வாராத ஐயமும் கொள்ளப்படும். ஒருவனோ ஒருத்தியோ தோன்றுகின்றார் எனவரும். (8)

254. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றுஅசை இவ்ஐந்து ஏகா ரம்மே.

இதுவும் அது.

(இ..ள்) தேற்றம் முதலாக ஐந்து பகுதிய ஏகார இடைச்சொல். (எ-று)

(உ..ம்) அவனேஎ செய்தான் என்பது துணிவு குறித்தவழித் தேற்றேகாரமாம். ஈண்டு அளபெடை வரும். அவனே செய்தான்

என்பது வினாக் குறித்தவழி, வினா ஏகாரமாம். யானே வந்தேன் என்றவழிப் பிறர் கூடல் இன்றியே எனப் பொருள்படுதலின் பிரிநிலை ஏகாரமாம். எண் - எண்ணுக்குறித்து வரும். சொல்லே குறிப்பே ஆயிரண்டும் எச்சம் - எண்ணுக் குறித்தது. ஈற்று அசை என்பது சொல்லின் இறுதிக்கண் அசைநிலை ஆகி நிற்பது. கடல்போல் தோன்றல காடு இறந்தோரே (அகம்.1) எனவரும்.

அஃதேல் எழுத்து அதிகாரத்துள் மாறுகொள் எச்சமும் வினாவும் எண்ணும் (உயிர் மயங்கு.73) என ஏகார ஈறு ஓதினார். அவற்றுள் மாறுகொள் எச்சம் ஈண்டு ஓதாதது என்னை எனின், வன்புற வரூஉம் வினாவுடை வினைச்சொல், எதிர்மறுத்து உணர்த்துதற்கு உரிமையும் உடைத்தே (சூ.238) என்றார் ஆகலின், அது வினாவினுள் அடங்கும். அன்றியும் வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் என்பதனானும் கொள்க. யான் வைதேனே என்றவழி வைதிலேன் என்னும் எதிர்மறைப் பொருள்பட்டது.

இவை மூன்று சொல்லும் பெயரோடு ஒட்டுப்பட்டு நின்று தத்தம் குறிப்பினான் பொருள் உணர்த்தின. பிறவும் இவ்வாறு வருவன அறிந்துகொள்க. (9)

**255.** வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனஎன் கிளவி.

இதுவும் அது.

**(இ..ள்)** வினை முதலாகப் பெயர் ஈறாகச் சொல்லப்பட்ட ஆறு சொல்லினையும் குறித்த நிலைமைத்து என என்னும் சொல். (எ-று)

**(உ..ம்)** கொள் எனக் கொடுத்தான் என்பது வினை குறித்து நின்றது. பொள் என ஆங்கே புறம்வேரார் (குறள்.487) என்பது விரைவு என்னும் குறிப்பு உணர நின்றது. கல் எனக் கவின்பெற்ற விழவு ஆற்றுப்படுத்தபின் (கலி.5) என்பது இசைப் பொருண்மை குறித்து நின்றது. கல்முகை அருவி தண்எனப் பருகி (புறம்.150) என்பது

பண்புகுறித்து நின்றது. பாழ்எனக் கால்எனப் பாகுஎன, ஒன்றுஎன, இரண்டு என (பரிபாடல்.3.77,78) என்பது எண்ணுக்குறித்து நின்றது.

நாள்என ஒன்றுபோல் காட்டி (குறள்.334) என்றவழிப் பெயர் குறித்து நின்றது. எழுத்து அதிகாரத்துள் என என் எச்சம் என (உயிர்மயங்கு.2) ஓதுதலான் இவை எல்லாம் வினைஎச்சப் பொருண்மை உணரவும், பெயர்எச்சப் பொருண்மை உணரவும் வரும் என்று கொள்க. ஊர் எனப்படுவது உறையூர் எனச் சிறப்புப் பற்றியும் வாருமால் எனின், அது பெயர்ப்பொருளின் பாகுபாடு ஆதலின் பெயர்என அடங்கும். (10)

256. என்றுஎன் கிளவியும் அதன்ஓ ரற்றே.

இதுவும் அது.

(இ..ள்) என்று என்னும் இடைச்சொல்லும் மேல் சொல்லப்பட்ட அறுவகைப் பொருண்மையும் குறித்து நிற்கும் (எ-று)

(உ..ம்) கொள் என்று கொடுத்தான், துண் என்று துடித்தது, ஒல் என்று ஒலித்தது, பச்சென்று கிடந்தது, நிலன் என்று நீர் என்று, சினத்தைப் பொருள் என்று கொண்டவன் (குறள்.307) என வரும்.

இது மாட்டேற்று வகையான் எச்ச வாய்பாட்டது என்று கொள்க. இச்சொற்களானும், செய்யும் என்பதன்கண் உம் இடைச்சொல் ஆயினவாறு கண்டுகொள்க. (11)

257. விழைவின் தில்லை தன்இடத்து இயலும்.

இத்துணையும் பலபொருள் குறித்த இடைச்சொல் ஓதி, இனி ஒரு பொருள் குறித்த இடைச்சொல் ஓதுகின்றார் ஆகலின், மேல் சொல்லப்பட்டவற்றுள் ஒரு சொற்குப் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) விழைவுப் பொருள்கண் வரும் தில்லைச்சொல் சொல்லுவான் மாட்டே நிகழும். (எ-று)

உதாரணம் மேல் காட்டப்பட்டது. (12)

258. தெளிவின் ஏவும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப.

இதுவும் அது.

(இ..ள்) தேற்றேகாரமும், சிறப்பின் வரும் ஓகாரமும் அளபெடை பெற்றுவரும் என்று சொல்லுவர் (எ-று)

உதாரணம் மேல்காட்டப்பட்டன. (13)

259. மற்றுஎன் கிளவி வினைமாற்று அசைநிலை
அப்பால் இரண்டுஎன மொழிமனார் புலவர்.

ஒருபொருள் குறித்த இடைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மற்று என்னும் இடைச்சொல் ஒரு வினையை மாற்றுதல் பொருள்கண்ணும், அசைநிலை ஆகியும் வரும் (எ-று)

(உ..ம்) மற்று அறிவாம் நல்வினை யாம் இளையம் (நாலடி.19) என்றவழி மற்று என்பது பின்பு அறிவாம் என அக்காலத்துச் செய்கின்ற வினையை மாற்றி நின்றது. மற்று அடிகள் கண்டுஅருளிச் செய்கமலர் அடிக்கிழ் (சீவக.1873) என்றவழி அசைநிலை ஆயிற்று. (14)

260. எற்றுஎன் கிளவி இறந்த பொருட்டே.

இதுவும் அது.

(இ..ள்) எற்று என்னும் சொல் கழிந்தது என்னும் பொருண்மை உடைத்து (எ-று)

(உ..ம்) எற்றுஎன் உடம்பின் எழில்நலம் எனவரும். (15)

261. மற்றையது என்னும் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனம்குறித்த தன்றே.

இதுவும் அது.

(இ..ள்) மற்றையது என்னும்சொல் சுட்டி நின்ற பொருள் ஒழிய அதற்கு இனம் ஆகிய பொருளைக் குறித்துநிற்கும் (எ-று)

அது என்பது எவ்வாறு வந்தது எனின், மேல் வினைமாற்று என்றார். இது பொருள் மாற்று என்பதனை விளக்குதற்கு அது என்பதனைச் சுட்டி உரைத்தார். அது என்பது பெயர் ஆதலின், ஒருபால் கிளவி எனைப்பால் கண்ணும், வருவகை தாமே வழக்கென மொழிப (பொருள்இயல். 28) என்பதனான் ஐந்துபால் கண்ணும் கொள்க. அவ்வாறு கொள்ளவே, மற்றை என்பது இடைச்சொல் ஆகி நின்று பிறபொருள் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

இனம் குறித்து என்றமையான், சுட்டப்பட்ட பொருட்கு இனம் ஆகிய பொருளையே குறிக்கும். ஆடை கொணர்ந்தவழி, மற்றையதோ எனின், கொணர்ந்தது ஒழியப் பிறிதும் ஓர் ஆடையைச் சுட்டியவாறு கண்டுகொள்க. ஒருவினைசெய்வார் இருவர் உள்வழி, ஒருவனைக் கண்டவன் மற்றையவனோ என்றவழி அதுவும் இனம் குறித்தது. பிறவும் அன்ன. (16)

262. மன்றஎன் கிளவி தேற்றம் செய்யும்.

இதுவும் அது.

(இ..ள்) மன்ற என்னும் சொல் தேற்றப் பொருண்மையை உணர்த்தும் (எ-று)

(உ..ம்) கடவுள் ஆயினும் ஆக, மடவை மன்ற வாழிய முருகே (நற்றி.34) என்றவழிக் கடவுள் ஆயினும் மடவை எனத் தேற்றப்பொருண்மை காட்டிற்று. (17)

263. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.

இதுவும் அது.

(இ..ள்) தஞ்சம் என்பது எளிமை என்னும் பொருண்மையை உடைத்து. (எ-று)

(உ..ம்) முரசுகெழு தாயத்து அரசோ தஞ்சம் (புறம்.73) என்பது எளிது என்பது குறித்து நின்றது. (18)

264. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவிஎன்று
ஆயிரண்டு ஆகும் இயற்கைத்து என்ப.

இதுவும் அது.

(இ..ள்) அந்தில் என்பது ஆங்கு என்னும் பொருண்மை பெற்றும், அசைநிலை ஆகியும் வரும். (எ-று)

(உ..ம்) வருமே சேயிழை அந்தில் கொழுநற் காணிய (குறுந்.293) என்பது ஆங்கு என்னும் பொருள் உணர்த்திற்று. அந்தில் கச்சினன் கழலினன் (அகம்.76) என்புழி அசைநிலை ஆயிற்று. (19)

265. கொல்லே ஐயம்.

இதுவும் அது.

(இ..ள்) கொல் என்பது ஐயம் குறித்து வரும் (எ-று)

(உ..ம்) அதுகொல் தோழி காமநோயே என்றவழி ஐயம் காட்டிற்று. (20)

266. எல்லே இலக்கம்.

இதுவும் அது.

(இ..ள்) எல் என்பது இலங்குதல் குறித்துவரும். (எ-று)

(உ..ம்) எல்வளை (புறம்.24) இலங்குவளை.

இது உரிச்சொல் அன்றோ எனின், அது குறைச்சொல் ஆகி நிற்கும். இது குறைஇன்றி நிற்றலின் இடைச்சொல் ஆயிற்று. (21)

267. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குஉரி எழுத்தின் வினையொடு முடிமே
அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்.

அசைநிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இயற்பெயர் முன்னர் வரும் ஆர் என்னும் இடைச்சொல் ஒருமைப் பொருள்மேல் வரினும், பலர்க்கு உரித்து ஆகிய எழுத்தினை உடைய வினையொடு முற்றுப் பெறும். அது அசைநிலைக்கிளவி ஆகும் இடன் அறிந்துகொள்க (எ-று)

வந்ததுகொண்டு வாராதது உணர்த்தல் என்பதனான் பிறபெயர்க்கண்ணும் ஏற்பன கொள்க.

பலர்க்கு உரி எழுத்தின் வினையொடு முடிமே என்ற உம்மை எச்சம் ஆகலான் ஒருமையான் வரவும் பெறும் என்றவாறு.

இதனானே, இடைச்சொல் பற்றிவரும் பால் வழுவும் திணைவழுவும் அமைத்தவாறு ஆயிற்று.

(உ..ம்) சாத்தனார், சாத்தியார், நம்பியார், நங்கையார், முடவனார், முடத்தியார், தாயார், தந்தையார், கிளியார், மயிலார் என்பன ஒருமை உணர நின்ற ஆயினும், வினையொடு வருங்கால் வந்தார்

எனவரும். நம்பியார் வந்தான், நங்கையார் வந்தாள் என இவ்வாறு வருதற்கு ஏற்பனவும் கொள்க. ஒருவரைக் கூறும் பன்மைத் கிளவியும் (சூ.27) என்பதனுள் அடங்காதோ எனின், ஆண்டு உரைத்த விடையே ஈண்டும் உரைக்க.

ஆர் என்பது இடைச்சொல் ஆயின், இப்பெயர் உடையார் பலர் வந்துழிக் கூறுமாறு என்னைஎனின், அதனானே அன்றே மார் என்பது வேறு எடுத்து ஓதல் வேண்டிற்று. எல்லா உயிரொடும் செல்லும் ஆர் முதலே (மொழிமரபு .28) என்புழி ஆர் அசைநிலை ஆயிற்று. (22)

268. ஏவும் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண்டு ஆகும் இயற்கைய என்ப.

அசைநிலையும், இசைநிறையும் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) ஏ என்னும் சொல்லும், குரை என்னும் சொல்லும் இசை நிறைத்தல் ஆகியும், அசை நிலை ஆகியும் வரும் அவ்இரண்டு நிலைமையும் உடைய. (எ-று)

ஈண்டு ஏ என்றமையான் ஓர் எழுத்து ஒருமொழி ஆகிய உயிர்எழுத்தே கொள்ளப்படும். முன் கூறப்பட்ட ஏகாரம் மொழிக்கு ஈறுஆகி வருதலின், உயிர்மெய் என்றுகொள்ளப்படும்.

இசைநிறை ஆவது இசைநிறைத்தல் பொருட்டு ஒரு சொல்லொடு ஒட்டி வரும். அசை நிலை ஆவது தனித்து வரும்.

ஏஎ இவள் ஒருத்தி பேடியோ என்றார் (சீவக.652) என்றவழி ஏ என்பது இசைநிறை ஆயிற்று. ஏ தெளிந்தேம்யாம் என்பது அசைநிலை ஆயிற்று. அளிதோ தானே அது பெறல் அரும் குரைத்தே (புறம்.5), சேர்ந்த சினை இளம் குரைய ஆயினும் என்பன இசைநிறை. நல்குரவு என்னும் இடும்பையுள் பல்குன்ரைத் துன்பங்கள் சென்று படும் (குறள்.1045). இது அசைநிலை. (23)

269. மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

அசைநிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மா என்னும் சொல் வியங்கோள்கண் அசைநிலை ஆகி வரும். (எ-று)

(உ..ம்) உப்பின்று புற்கை உண்கமா கொற்கையோனே, ஓர்கமா தோழிஅவர் தேர்மணிக் குரலே என வரும். *(24)*

270. மியாஇக மோமதி இகும்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்.

இதுவும் அது.

(இ..ள்) இவை ஆறு சொல்லும் முன்னிலை வினைச்சொல்கண் அசைநிலை ஆகி வரும். (எ-று)

(உ..ம்) கேள்மியா, தண்துறை ஊரயாம் கண்டுஇக. காமம் செப்பாது கண்டது மொழிமோ (குறுந்.2) செல்மதி பெரும. மெல்லம் புலம்ப கண்டுஇகும். காப்பும் பூண்டுஇசின் கடையும் போகல் (அகம்.7) எனவரும். இவை கேள், காண், மொழி, செல், காண், பூண் என்னும் பொருள்கண் ஆய் என்பது திரிந்து வந்தன. *(25)*

271. அவற்றுள்,
இகுமும் சின்னும் ஏனை இடத்தொடு
தகுநிலை உடைய என்மனார் புலவர்.

எய்தியதன்மேல் சிறப்புவிதி வகுத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல்சொல்லப்பட்டவற்றுள் இகுமும், சின்னும் தன்மையினும், படர்க்கையினும் வருதல் தகுநிலை உடைய என்றுசொல்லுவர். (எ-று)

(உ..ம்) கண்டுஇகும் அல்லமோ (ஐங்குறு.121) கண்ணும் படுமோ என்றுஇசின் யானே (நற்.61). இவை கண்டேம், என்றேன் என்னும் பொருள்கண் வந்தன. புகழ்ந்து இகும் அல்லரோ பெரிதே, பாடல் சான்ற விறல்வேந் தனும்மே, வெப்பு உடைய அரண்கடந்து துப்புஉறுவர் புறம்பெற்று இசினே. இவை புகழ்ந்தார், பெற்றான் என்னும் பொருள்கண் வந்தன. யார்அஃது அறிந்துஇசி னோரே (குறுந்.18) எனப் பால்காட்டும் எழுத்தோடு அடுத்து வருதலும் கொள்க. (26)

272. அம்மகேட் பிக்கும்.

இதுவும் அசைநிலைச்சொல் பொருள்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) அம்ம என்னும் சொல் அசைநிலை ஆகலே அன்றிக்கேள் என்னும் பொருளும்படும் (எ-று)

(உ..ம்) அம்ம வாழி தோழி (ஐங்.31) என்றவழிக் கேள் என்னும் பொருள் குறித்து நின்றது. உண்டால் அம்மஇவ் உலகம் (புறம்.182) என்பது அசைநிலை ஆகிவந்தது.

அசைநிலை என்பது எற்றால் பெறுதும் எனின், மேல் அம்ம என்னும் அசைச்சொல் நீட்டம் (சூ.149) என்பதனான் பெறுதும்.(27)

273. ஆங்க உரை அசை.

அசை நிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) ஆங்க என்னும் சொல் உரைஇடத்து அசைநிலையாம். (எ-று)

(உ..ம்) ஆங்கக் குயிலும் மயிலும் காட்டி என வரும். (28)

274. ஒப்புஇல் போலியும் அப்பொருட்டு ஆகும்.

இதுவும் அது.

(இ..ள்) ஒப்புக் குறியாத போல் என்னும் சொல்லும் உரைஅசயையாம் (எ-று)

(உ..ம்) அவர் வந்தார் போலும். இதனுள் வந்தார் எனத் துணிந்தவழி வருதலின் அசைநிலை ஆயிற்று. (29)

275. யாகா,
பிறபிறக்கு அரோபோ மாதுஎன வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி.

இதுவும் அது.

(இ..ள்) யாமுதலாகச் சொல்லப்பட்ட ஏழு சொல்லும் அசைநிலை கிளவியாம் (எ-று)

(உ..ம்) யா - தோழியா சுவாகதம் போதுக ஈங்குஎன (சீவக.1021)
கா - புறநிழல் பட்டாளோ இவள் இவண் காண்டிகா (கலி.99)
பிற - தான்பிற, வரிசை அறிதலின் தன்னும் தூக்கி (புறம்.140)
பிறக்கு - நசை பிறக்கு ஒழிய (புறம்.15)
அரோ - நோதக இரும்குயில் ஆலும்அரோ (கலி.33)
போ - பிரியின் வாழாது என்போ தெய்ய
மாது - விளிந்தன்று மாதுஅவர்த் தெளிந்தஎன் நெஞ்சே (நற்.178)
என வரும். (30)

276. ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவுஇல் அசைநிலை.

இதுவும் அது.

**(இ..ள்)** இவை மூன்று சொல்லும் பிரிவுஇன்றி இரட்டித்த இடத்து அசைநிலையாம் (எ-று)

**(உ..ம்)** ஆகஆக, ஆகல்ஆகல், என்பது என்பது என வரும். *(31)*

277. ஈர்அளபு இசைக்கும் இறுதிஇல் உயிரே
ஆயியல் நிலையும் காலத் தானும்
அளபெடை நிலையும் காலத் தானும்
அளபெடை இன்றித் தனிவரும் காலையும்
உளஎன மொழிப பொருள்வேறு படுதல்
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்.

ஒருசார் இடைச்சொல் பொருள் உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** இரண்டு மாத்திரை ஆகி ஒலிக்கும் உயிர்களுள் இறுதி ஆகிய ஔகாரம் அல்லாத உயிர்கள் மேற்கூறியவாறுபோல இரட்டித்து வரும் காலத்தி னும், அளபெடை பெற்றுவரும் காலத்தினும், தனி வரும் காலததினும் பொருள் வேறுபடுதல் உள என்று சொல்லுவர் ஆசிரியர். அவை ஒருபொருள் உணர்த்தும் வழி, ஓசையானும் குறிப்பானும் பொருள் உணர்த்தும். (எ-று)

**(உ..ம்)** *அவையாவன :* ஆ, ஈ, ஊ, ஏ, ஐ, ஓ என்பன. ஒருவன் தகுதி அல்லாத செய்தவழியும், அரியன செய்தவழியும் ஆஆ, ஆ என்ப. வியப்பு உளவழியும், துன்பம் உள வழியும் ஆஅ என்ப. தமக்கு இசைவு இல்லாதது ஒன்றை ஒருவன் சொன்னவழி, அதனை மறுப்பார் ஆ என்ப. ஈ என்ற வழி அவர் உவத்தலை உணர்த்தும் ஊஉ இசைவை உணர்த்தும், ஏஏ இஃது ஒத்தன் (கலி.62) என்றவழி, இகழ்ச்சியை உணர்த்தும், ஏஏ என இறஞ்சியோனே என்றவழி நாணம் குறித்து நின்றது. ஐஐ என்றவழி இசைவை உணர்த்தும். ஓஓ உவமன் உறழ்வு இன்றி ஒத்ததே (களவழி.36) என்றவழி மிகுதியை உணர்த்தும்.

ஓ என்றவழி இசைவையும் இரக்கத்தையும் உணர்த்தும். ஓஓ என்பது விலக்குதலை உணர்த்தும். பிறவும் இவ்வாறு

இரட்டித்தும். அளபெடுத்தும், தனிவந்தும் பொருள் வேறுபடுவன வந்தவழிக் கண்டுகொள்க.

அஃதேல் ஏவும் குரையும் (சூ.268) எனமேல் ஓதவேண்டியது என்னை? அதுவும் இதனுள் அடங்குமால் எனின், ஆண்டுப் பொருள் உணர்த்தா நிலையைக் கூறினார். ஈண்டுப் பொருள் உணர்த்தும் நிலைமை கூறினார் என்க. *(32)*

278. நன்றுஈற்று ஏவும் அன்றுஈற்று ஏவும்
அந்துஈற்று ஓவும் அன்ஈற்று ஓவும்
அன்ன பிறவும் குறிப்பொடு கொள்ளும்.

ஏகார ஓகாரங்கட்கு வருவதொரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* நன்று, அன்று என்பவற்றின்கண் வரும் ஏகாரமும், அந்து, அன் என்பவற்றின்கண் வரும் ஓகாரமும், அத்தன்மைய பிறவும் மேல்கூறியவாற்றான் அன்றிக் குறிப்புப் பொருளோடும் ஏற்கும். (எ-று) உம்மை இறந்தது தழீஇயிற்று.

(உ..ம்) சென்றே எறிப ஒருகால் சிறுவரை
நின்றே எறிப பறையினை - நன்றேகாண்
முக்காலைக் கொட்டினுள் மூடித்தீக் கொண்டுஎழுவர்
செத்தாரைச் சாவார் சுமந்து! (நாலடி.24)

இதனுள் நன்றேகாண் என்பது தீதே காண் என்னும் குறிப்பு உணர்த்திற்று. நின்னை அன்றே திருமுக்குடையாய் என்றவழி அன்றே என்பது அல்லாமையைக் குறியாது முக்குடையானையே சுட்டி நின்று அவன்கேட்பது பயனாக வந்தது.

பொன்னே கொடுத்தும் புணர்தற்கு அரியாரைக்
கொன்னே தலைக்கூடப் பெற்றிருந்தும் - அன்னோ
பயம்இல் பொழுதாக் கழிப்பரே நல்ல
நயமில் அறிவி னவர். (நாலடி.162)

என்பதனுள், அன்னோ என்பது அருள் குறித்து நின்றது. வெந்திறல் கூற்றம் பெரும்பேது உறுப்ப, அந்தோ அளியென் வந்தனென் என்ற (புறம்.238) என்றவழி, அந்தோ என்பது கேடு குறித்து நின்றது. அன்ன பிறவுமாவன வந்தவழிக் கண்டுகொள்க. *(33)*

279. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடன்நிலை இலவே.

உம்மைக்கு உரியதொரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* எச்ச உம்மையும், எதிர்மறை உம்மையும் தத்தமுள் மயங்கும் உடன்நிலை இல (எ-று)

*(உ..ம்)* சாத்தனும் வந்தான் என்றவழிக் கொற்றனும் வரும் என்றாதல், வந்தான் என்றாதல் கூறுதல் அன்றி, வாரான் என்னற்க. ஒரு தொழிலே கூறல் வேண்டும் என்றவாறு. *(34)*

280. எஞ்சுபொருள் கிளவி செஞ்சொல் ஆயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

எச்ச உம்மைக்கண் வழூஉக் காத்தலை உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* எஞ்சு பொருள் கிளவி, உம்மை இல் சொல் ஆயின், அவ்உம்மையை வருகின்ற சொல்லொடு கிளக்க (எ-று)

*(உ..ம்)* சாத்தனும் வந்தான், கொற்றனும் வரும் என்றல் பாலதன்கண் ஓர் உம்மைவரின், சாத்தன் வந்தான், கொற்றனும் வரும் என்க. சாத்தனும் வந்தான், கொற்றன் வரும் என்னற்க. *(35)*

281. முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும்.

இதுவும் உம்மைக்கண் வருவதுஒரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) முற்றுமைத் தொகைச்சொல் பொருண்மைக்கண் எச்சப் பொருண்மையும் உரித்து. (எ-று)

ஈண்டுத் தொகை என்றது எண்ணின் தொகை.

(உ..ம்) நின்கையில் காணம் பத்தும் கொடால் என்றவழிச் சில கொடுக்க என்றவாறாம். இது மறுத்த வாய்பாட்டான் அல்லது வாராது. (36)

282. ஈற்றுநின்று இசைக்கும் ஏஎன் இறுதி
கூற்றுவயின் ஓர்அளபு ஆகலும் உரித்தே.

ஏகாரத்திற்கு உரியது ஒரு மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) செய்யுள் இறுதிக்கண் நின்று ஒலிக்கும் ஏகாரம் சொல்லும் இடத்து ஒரு மாத்திரை ஆகி நிற்கவும் பெறும் (எ-று)

(உ..ம்) கடல்போல் தோன்றல காடுஇறந் தோரே (அகம்.1). இது ஒருமாத்திரை ஆகி நிற்கும். (37)

283. உம்மை எண்ணும் எனஎன் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே.

எண்ணின்கண் படுவது ஒரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) உம்மையான் எண்ணப்பட்ட எண்ணும், எனவான் எண்ணப்பட்ட எண்ணும் தம் இடத்துத் தொகைபெறுதல் நியமம் இல. (எ-று)

(உ..ம்) முத்தும், பவழமும் கொணர்ந்தான். நன்று எனத் தீது என நின்றது. முத்தும், பவழமும், பொன்னும் மூன்றும் கொணர்ந்தான். நன்று எனத் தீது என இரண்டும் ஆகி நின்றது - என இரு பாற்றானும் வரும். (38)

284. எண்ஏ காரம் இடையிட்டுக் கொளினும்
எண்ணுக்குறித்து இயலும் என்மனார் புலவர்.

இதுவும் அது; ஏகாரத்திற்குப் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** எண்ணுக்குறித்த ஏகாரம் சொல்தொறும் கொள்ளாது ஒருவழிக் கொளினும் எண்ணுக்குறித்து நடக்கும். (எ-று)

**(உ..ம்)** தோற்றம் இசையே நாற்றம் சுவையே, உறலோடு ஆங்குஐம் புலன்என மொழிப என்பழி, இடையிட்டு வந்தும் எண்ணுக் குறித்தது. *(39)*

285. உம்மை தொக்க எனாஎன் கிளவியும்
ஆஈறு ஆகிய என்றுஎன் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.

எண்ணின்கண் வருவன சில இடைச்சொல் உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** உம்மை தொக்க எனவின் திரிபு ஆகிய எனா என்னும் சொல்லும், ஆஈறு ஆகிய என்றுஎன்னும் சொல்லும் எண்ணின்கண் பட்டன. (எ-று)

**(உ..ம்)** வளிநடந் தன்ன வாச்செலல் இவுளியொடு, கொடிநுடங்கு மிசைய தேரினர் எனாஅக், கடல்கண் டன்ன ஒண்படைத் தானையொடு, மலைமாறு மலைக்கும் களிற்றினர் எனாஅ (புறம்.197) என்பதனுள் எனவும் என்பது எனா என்றுவந்து எண்ணுக் குறித்தவாறு கண்டுகொள்க. ஒப்பும் உருவும் வெறுப்பும் என்றா, கற்பும் ஏரும் எழிலும் என்றா (பொருள் இயல்.51) என்பதனுள் என்று என்பது ஆவொடு கூடி எண்ணுக்குறித்தவாறு கண்டுகொள்க. *(40)*

286. அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குஉரி மரபின் செவ்வெண் இறுதியும்

ஏயின் ஆகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகைஇன்று இயலா.

எண்ணுதற்கு உரியது ஒரு மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல் சொல்லப்பட்ட எனா, என்றா என்பனவற்றான் வரும் எண் இறுதியும், பெயர்க்கு உரி மரபினான் எண்ணப்படும் செவ்வெண் இறுதியும், ஏகாரத்தான் எண்ணப்பட்ட எண்ணின் முடிவும் யாதானும் ஒரு நெறியான்வரினும் தொகை இன்றி வழங்கா (எ-று)

(உ..ம்) மாத்திரை எழுத்துஇயல் அசைவகை எனாஅ
யாத்த சீரே அடியாப்பு எனாஅ
மரபே தூக்கே தொடைவகை எனாஅ
நோக்கே பாவே அளவுஇயல் எனாஅ
திணையே கைகோள் கூற்றுவகை எனாஅ
கேட்போர் களனே காலவகை எனாஅ
பயனே மெய்ப்பாடு எச்சவகை எனாஅ
முன்னம் பொருளே துறைவகை எனாஅ
மாட்டே வண்ணமொடு யாப்புஇயல் வகையின்
ஆறு தலைஇட்ட அந்நால் ஐந்தும் (செய்யுள். இயல்.1)

எனவும், அவைதாம், பெயர்ச்சொல் என்றா வினைச்சொல் என்றா, இரண்டன் பாலா இயங்குமன் பயின்றே எனவும், படைகுடி கூழ் அமைச்சு நட்பு அரண் ஆறும், உடையான் அரசருள் ஏறு (குறள்.381) எனவும், தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே, ஈற்றுஅசை இவ்ஐந்து ஏகாரம்மே (சூ.254) எனவும், எண் தொகை பெற்றவாறு கண்டுகொள்க.

கண்கால் புறம் அகம் (சூ.80) என்னும் சூத்திரத்துள் எனாவும், ஒப்பும் உருவும் (பொருள் இயல்.51) என்னும் சூத்திரத்துள் என்றாவும், நிலப்பெயர் குடிப்பெயர் (சூ.161) என்னும் சூத்திரத்துள் ஏகாரமும் தொகை பெற்றிலவால் எனின், அவை அன்னபிறவும் எனவும், கிளவி எல்லாம் எனவும், அனைத்தும் எனவும் தொகைப் பொருண்மை தோன்ற வந்தன.

செல்லல் இன்னல் இன்னாமையே (சூ.299) என்பதன்கண் தொகை பெற்றின்றால் எனின், யாவயின் வரினும் என்றமையான், தொகை இன்றிவரினும், அப்பொருள் உரைக்குங்கால் தொகை இன்றி இயலா எனக்கொள்க.

உடம்பொடு புணர்த்தல் என்பதனான் எண் ஏகாரம் இடையிட்டு வருதலே அன்றி, எனாவும் என்றாவும் இடையிட்டு வருதலும் கொள்க. *(41)*

287. உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்.

எண் உம்மைக்கு உரியது ஒரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* உம்மையான் எண்ணப்பட்ட பொருளின்கண் வரும் உருபு ஆகிய உம்மை ஒரோ இடத்துத் தொகுதலும் நீக்கார் (எ-று)

எனவே, சொல்தொறும் உம்மை கொடாக்காலும் எண் ஆகும் என்றவாறாம்.

*(உ..ம்)* இயங்குபடை அரவம் எரிபரந்து எடுத்தல், வயங்கல் எய்திய பெருமையானும், கொடுத்தல் எய்திய கொடைமை யானும் (புறத்திணை.*8*) என உம்மை ஒரோவழித் தொக்கு நின்றது. இவ்இலக்கணம் எண் உம்மைக்கே உரித்து. *(42)*

288. உம்உந்து ஆகும் இடனுமார் உண்டே.

இதுவும் அது.

*(இ..ள்)* உம் என்பது உந்து என விரிந்து நிற்குவும் பெறும் இடமும் உண்டு (எ-று)

*(உ..ம்)* நெல்அரியும் இரும்தொழுவர்
செஞ்ஞாயிற்று வெயில் முனையின்

தெண்கடல்திரை மிசைப்பாயுந்து
திண்திமில் வன்பரதவர்
வெப்புஉடைய மட்டுஉண்டு
தண்குரவைச் சீர்தூங்குந்து
தூவல் கலித்த தேம்பாய் புன்னை
மெல்இணர்க் கண்ணி மிலைந்த மைந்தர்
எல்வளை மகளிர் தலைக்கை தருஉந்து
வண்டுபட மலர்ந்த தண்நறும் கானல்
முண்டகக் கோதை ஒண்தொடி மகளிர்
இரும்பனையின் குரும்பைநீரும்
பூம்கரும்பின் தீம்சாறும்
ஓங்குமணல் குவவுத்தாழைத்
தீநீரோடு உடன்விராய்
முந்நீர் உண்டு முந்நீர்ப் பாயும்
தாங்கா உறையுள் நல்லூர் கெழீஇய (புறம்.24)

என்றவழி உம் உந்து ஆயிற்று.

எண் உம்மை அதிகாரப்பட்டு வருதலான், இவ்வாறு வருவது ஒரு பொருள்மேல் உம்மை அடுக்கியவழி என்றுகொள்க. ஈண்டு எண் உம்மை யாங்கது எனின், ஒரு பொருள்மேல் பல வினைச்சொல் வருதலின், அவை ஒருமுகத்தான் எண்ணப் பட்டனவாம். *(43)*

**289. வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றுஅவற்று இயல்பே.**

இதுவும் அது.

*(இ..ள்)* மேல் சொல்லப்பட்ட எண்ணின் வேறுபாடு எல்லாம் வினையொடு நிற்பினும் எண்ணுநிலை திரியா; ஆண்டு அவற்றது இயல்பு ஆராய்தல் வேண்டும் (எ-று)

எனவே ஒரு முடிபு உடைய அல்ல. தொகை பெற்றும் பெறாதும் வரும் என்றவாறாம்.

(உ..ம்) வளிநடந் தன்ன வாச்செலல் இவுளியொடு
கொடிநுடங்கு மிசைய தேரினர் எனாஅக்
கடல்கண் டன்ன ஒண்படைத் தானையொடு
மலைமாறு மலைக்கும் களிற்றினர் எனாஅ
உருமுரன் றன்ன உட்குவரு முரசமொடு
செருமேம் படூஉம் வென்றியர் எனாஅ
மண்கெழு தானை ஒண்பூண் வேந்தர்
வெண்குடைச் செல்வம் வியத்தலோ இலமே! (புறம்.197)

என்புழி, வினைக்குறிப்பு எண்ணிவந்து தொகைபெறாது நின்றது. நாணாமை நாடாமை நாரின்மை யாதுஒன்றும், பேணாமை பேதை தொழில் (குறள்.833). இதுவும் தொகை பெறாது வந்தது. தொகை பெற்றுவந்தன வந்தவழிக் கண்டுகொள்க. (44)

290. என்றும் எனவும் ஒடுவும் தோன்றி
ஒன்றுவழி உடைய எண்ணினுள் பிரிந்தே.

இதுவும் எண்ணின்கண் வருவதுஒரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) என்றும், எனவும், ஒடுவும் எண்ணினுள் பிரிந்து ஒருவழித் தோன்றி எல்லாப் பெயரோடும் ஒன்றும் நெறிஉடைய (எ-று)

இதனானே ஒடு என ஓர் இடைச்சொல் கூறியவாறும் ஆயிற்று.

(உ..ம்) இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று, அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே (சூ.393) எனவும், யாகா, பிறபிறக்கு அரோபோ மாதுஎன வரூஉம், ஆயேழ் சொல்லும் (சூ.275) எனவும், பொருள் கருவி காலம் வினை இடனோடு ஐந்தும், இருள்தீர எண்ணிச்செயல், (குறள்.675) எனவும் இவை ஒரோவழிப் பிரிந்து நின்று எல்லாப் பெயரோடும் ஒன்றி முடிந்தவாறு கண்டுகொள்க.

வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் என்பதனால்

என்னும் என்னும் சொல்லும் இவ்வாறு வரும் எனக் கொள்க. மியாஇக மோமதி இகும்சின் என்னும், ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல் (சூ.270) என்றவழி என்னும் என்பதும் வந்தது.

எண்ணினுள் பிரிந்து எனப் பொதுப்படக் கூறினமையான் எல்லா எண்ணொடும் வரப்பெறும் என்றுகொள்க. சொல்எனப் படுப பெயரே வினைஎன்று, ஆயிரண்டு என்ப அறிந்திசி னோரே. (சூ.154) என்றவழி ஏகாரம் எண்ணின்கண் வந்தது. பிறவும் பிறஎண்ணொடு வருமாறு வந்தவழிக் கண்டுகொள்க. (45)

291. அவ்அச் சொல்லிற்கு அவைஅவை பொருள்என
மெய்பெறக் கிளந்த இயல ஆயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்துவேறு படினும் தெரிந்தனர் கொளலே.

எடுத்து ஓதப்பட்ட இடைச்சொற்கு எல்லாம் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல்சொல்லப்பட்ட இடைச்சொற்கள் எல்லாம் தனித்தனியே இதற்கு இதுபொருள்என எடுத்து உணர்த்தப்பட்டன ஆயினும், வினையோடும் பெயரோடும் குறிக்கப் புலப்பட்டு மற்றொரு வேறுபாட்டது ஆகி வரினும், அவ்வேறுபாடு ஆராய்ந்து அதுவும் அதற்கு இலக்கணம் ஆகக் கொள்க (எ-று)

(உ..ம்) ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல், தத்தம் மரபின் தோன்றும்மன் பொருளே (சூ.385) என்றவழி மன் அசைநிலை ஆயிற்று.

உறக்கும் துணையதுஓர் ஆலம்வித்து ஈண்டி
இறப்ப நிழல்பயந் தாஅங்கு - அறப்பயனும்
தான்சிறிது ஆயினும் தக்கார்கைப் பட்டக்கால்
வான்சிறிதாப் போர்த்து விடும் (நாலடி.38)

என்பதனுள் உம்மை இசைநிறை ஆயிற்று. கான்கெழு நாடற் படர்ந்தோர்க்குக் கண்ணும் படுமோ என்றிசின் யானே என்றவழி உம்மை அசைநிலை ஆயிற்று. தேவரே தின்னினும் வேம்பு

(நாலடி.112) என்றவழி ஏகாரம் சிறப்புக்குறித்து நின்றது. மழைக்குறி கண்டு மழைபெய்யும் போலும் என்றவழிப் போலும் என்றது ஐயம் குறித்துநின்றது தேவாதி தேவன் அவன் சேவடி சேர்தும் அன்றே (சீவக.1) என்றவழி அன்றே என்பது முழுதும் அசைநிலை ஆயிற்று. சென்றீ பெருமநிற்றகைக்குநர் யாரே (அகம்.46) என்றவழி ஏகாரம் ஈற்றசை ஆயிற்று. குரைகழல் என்றவழிக் குரை என்பது ஒலிப்பொருண்மை உணர்த்திற்று. பிறவும் இவ்வாறு வருவன எல்லாம் இதுவே ஒத்துஆகக் கொள்க. (46)

292. கிளந்த அல்ல அன்ன பிறவும்
கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே.

இஃது இடைச்சொற்குப் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) எடுத்து ஓதப்பட்ட இடைச்சொல் அன்றி அத்தன்மைய பிறவும் ஆகி வருவனவும், இசைநிறை அசைநிலை ஆகி வருவனவும் பொருள்வேறுபடுமாறு அறிந்து கொள்க. (எ-று)

(உ..ம்) அவற்றுள் சில வருமாறு: குன்றுதொறு ஆடலும் நின்றதன் பண்பே (முருகாற்.217)என்றவழிக் குன்றுதொறுஎன்பது குன்றுபல என்னும் பொருண்மை உணரநின்றது. சிறிது தவிர்ந்து ஈக மாளநின் பரிசிலர் உய்ம்மார் என்றவழி மாள என்பது அசைநிலை ஆயிற்று பிரியின் வாழாது என்போதெய்ய என்றவழித் தெய்ய என்பது அசைநிலை ஆயிற்று. என ஆங்கு, ஒள்அழல் புரிந்த தாமரை, வெள்ளி நாரான் பூப்பெற் றிசினே (புறம்.11) என்றவழி எனவும் ஆங்கும் அசைநிலை ஆயின.

அஞ்சுவது ஒரும் அறனே ஒருவனை வஞ்சிப்பது ஒரும் அவா (குறள்.366) என்றவழி ஒரும் என்பன அசைநிலை ஆயின. செலியர் அத்தைநின் வெகுளி (புறம்.6) என்றவழி அத்தை அசைநிலை ஆயிற்று. அரும்பெறல் உலகம் நிறைய, விருந்து பெற்றனர் ஆல் பொலிக நின்புகழே (புறம்.62) என்றவழி ஆல் அசைநிலை ஆயிற்று. தடுமாறு தொழில்பெயர்க்கு இரண்டும் மூன்றும், கடிநிலை இலவே பொருள்வயின் ஆன (சூ.91) என்றவழி

ஆன அசைநிலை ஆயிற்று. செய்வினை மருங்கின் செலவு அயர்ந்து யாழநின், கைபுனை வல்வில் ஞாண்உளர் தீயே (கலி.7) என்றவழி யாழ அசைநிலை ஆயிற்று. பிறவும் அன்ன. (47)

## இடையியல் முற்றும்.

## தெய்வச் சிலையார் உரை
## 8. உரியியல்

293. உரிச்சொல் கிளவி விரிக்கும் காலை
இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றிப்
பெயரினும் வினையினும் மெய்தடு மாறி
ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும்
பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும்
பயிலாத வற்றைப் பயின்றவை சார்த்தித்
தத்தம் மரபின் சென்றுநிலை மருங்கின்
எச்சொல் ஆயினும் பொருள்வேறு கிளத்தல்.

இவ்ஓத்து என்ன பெயர்த்தோ எனின், உரிச்சொல் ஓத்து என்னும் பெயர்த்து; உரிச்சொல் உணர்த்தினமையான் பெற்றபெயர்.

உரிச்சொல் என்பது யாதோ எனின், ஒரு வாய்பாட்டான் சொல்லப்படும் பொருட்குத்தானும் உரித்துஆகி வருவது. அதனானே அன்றே ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும், பலசொல் ஒருபொருட்கு உரிமை தோன்றினும் என ஓதுவார் ஆயினர்.

எழுத்து அதிகாரத்துள் இதனைக் குறைச்சொல் கிளவி (சூ.482) என்று ஓதினமையான், வடநூல் ஆசிரியர் தாது என்று குறியிட்ட சொற்களே இவை என்று கொள்ளப்படும்; அவையும் குறைச்சொல் ஆதலான்.

அஃதேல், தொழில் பொருண்மை உணர்த்துவன எல்லாம் இதனுள் ஓதினாரோ எனின், வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா, வெளிப்பட வாரா உரிச்சொல் மேன (சூ.294) என்றார் ஆகலின், வழக்கின்கண் பயிற்சி இல்லாத சொற்கள் ஈண்டு எடுத்து ஓதப்படுகின்றன என்க.

தொழில்ாவது வினையும் வினைக்குறிப்பும் ஆதலின், அவ்இருவகைச் சொற்கும் அங்கம்ஆகி வெளிப்படாதன ஈண்டுக் கூறப்படுகின்றன. இதன் தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், உரிச்சொற்கு எல்லாம் உரியது ஒரு பொது இலக்கணமும், அவற்றிற்குப் பொருள் உணர்த்தும் திறனும் உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) உரிச்சொல் கிளவி விரிக்கும் காலை என்பது உரிச்சொல் ஆகிய சொல்லை விரித்து உரைக்கும் காலத்து. (எ-று)

இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி என்பது சொல்லானும் குறிப்பானும் பண்பானும் புலப்பட்டு. (எ-று)

சொல்லான் புலப்பட்டது உறு என்பது. இதனின் அஃது உறும் என்றவழி மிகும் என்னும் பொருள் புலப்பட்டது.

குறிப்பான் புலப்பட்டது கறுத்தான் என்பது. ஒருவன் மாட்டுக் கருமை ஆகிய நிறத்தைக் குறியாது, அவனது வெகுட்சியைக் குறித்தலின் குறிப்பு ஆயிற்று.

பண்பான் புலப்பட்டது வெகுட்சிக்குக் கண்சிவக்கும் என்பது. கண்ணின் சிவப்பு அது சிவத்தற்குக்காரணம் ஆகிய வெகுட்சிமேல் வந்தது.

இவையிற்றை வடநூல் ஆசிரியர் முக்கியம், இலக்கணை, கௌணம் என்ப. சொல் பொருள்படும்வழிச் சொல்லானும், குறிப்பானும், குணத்தானும் பொருள்படும் என்பதூஉம், ஈண்டுக் கூறப்படுகின்ற உரிச்சொல் இம்மூவகையானும் பொருள் வேறுபடும் என்பதூஉம் கூறியவாறாம்.

பெயரினும் வினையினும் மெய்தடுமாறி என்பது உரிச்சொல் ஆகிய உருபு பெயரின்கண்ணும், வினையின் கண்ணும் தடுமாறி. (எ-று)

அவை தடுமாறுங்கால் பெயர் வினைகளைச் சார்ந்தும், அவற்றிற்கு அங்கமாயும் வரும். உறுவளி என்பது பெயரைச் சார்ந்து வந்தது உறக்கொண்டான் என்பது வினையைச் சார்ந்துவந்தது. உறுவன் என்றவழிப் பெயர்க்கு அங்கம் ஆயிற்று. உற்றான் என்றவழி வினைக்கு அங்கம் ஆயிற்று.

ஒருசொல் பலபொருட்கு உரிமை தோன்றினும், பலசொல் ஒரு பொருட்கு உரிமை தோன்றினும் என்பது ஒருசொல் பலபொருட்கு உரித்து ஆகித் தோன்றினும், பலசொல் ஒருபொருட்கு உரிய ஆகித்தோன்றினும் (எ-று)

ஒருசொல் ஒருபொருட்கு உரித்து ஆகி வருதல் சொல்லாமல் முடிந்ததாம். பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தித் தத்தம் மரபின் சென்று நிலை மருங்கின் என்பது உரிச்சொற்கள் தத்தம் மரபினான் சென்று நிற்கும் இடத்து, வழக்கின்கண் பயின்று நடவாத சொற்களைப் பயின்ற சொற்களொடு சேர்த்தி (எ-று)

பயிலாத சொல் ஆவன : உறு, தவ, நனி. பயின்ற சொல் ஆவன உட்கு, உயர்வு என்பன. சார்த்துதல் ஆவது இச்சொற்கள் இச்சொல்லின் பொருள்படும் எனக் கூட்டுதல்.

எச்சொல் ஆயினும் பொருள் வேறுகிளத்தல் என்பது யாதானும் ஒரு சொல் ஆயினும் பொருள் வேறுபடுத்திக் காட்டுக (எ-று)

தோன்றித் தடுமாறி என்னும் செய்து என் எச்சம், உரிமை தோன்றினும் என்னும் செயின் எச்சத்தினோடு ஒன்றிக்கிளக்க என்னும் வியங்கோளொடு முடிந்தது.

உரிச்சொல் கிளவியை விரித்து உரைக்கும் காலத்துச் சொல்லானும், குறிப்பானும் பண்பானும் பொருள் புலப்பட்டுப் பெயர்க்கண்ணும் வினைக்கண்ணும் உருபு தடுமாறி, ஒருசொல் பலபொருட்கு உரிமை ஆகித் தோன்றினும், பலசொல் ஒருபொருட்கு உரிமை ஆகித் தோன்றினும், தத்தம் மரபின் சென்று

நிற்குமிடத்துப் பயிலாத சொற்களைப் பயின்ற சொற்களொடு சேர்த்தி, யாதானும் ஒரு சொல் ஆயினும் பொருள் வேறுபடுத்து உரைக்க அறிவோர் என்றவாறு. (1)

294. வெளிப்படு சொல்லே கிளத்தல் வேண்டா
வெளிப்பட வாரா உரிச்சொல் மேன.

ஈண்டு ஓதுகின்ற உரிச்சொல் இவை என்பதுஉணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* வழக்கின்கண் எல்லாராலும் அறியப்பட்ட சொல் ஈண்டு எடுத்து ஓதல் வேண்டா; அறியப்படாத உரிச்சொல் மேலன வருகின்ற சூத்திரங்கள். (எ-று)

*(உ..ம்)* வெளிப்படுசொல் ஆவன உண்டல் என்பதற்கு அயிறல், மிசைதல் எனவும், உறங்குதல் என்பதற்குத் துஞ்சல் எனவும், இணைவிழைச்சு என்பதற்குப் புணர்தல், கலத்தல், கூடல் எனவும், அச்சம் என்பதற்கு வெரூஉதல் எனவும் இவ்வாறு வருவன.

இனி வெளிப்பட வழங்காதன கூறப்படுகின்றன. (2)

295. உறுதவ நனிஎன வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப.

இஃது உரிச்சொற்களில் சிலசொல் பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

இக்கருத்து வருகின்ற சூத்திரங்கட்கும் ஒக்கும்.

*(இ..ள்)* உறு, தவ, நனி என்று சொல்லப்பட்ட மூன்று சொல்லும் மிகுதி என்னும் சொல்லான் அறியப்படும் பொருள்ள உணர்த்தும் (எ-று)

*(உ..ம்)* உறுபுனல் தந்துஉலகு ஊட்டி (நாலடி.185), ஈயாது வீயும்

உயிர்தவப் பலவே (புறம்.235), வந்துநனி வருந்தினை வாழிய நெஞ்சே (அகம்.19). இவை மிகுதி உணர்த்தியவாறு கண்டுகொள்க. (3)

296. உருஉட்கு ஆகும்.

(இ..ள்) உருஎன்னும் சொல் உட்கு என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) உருகெழுகடவுள் (பதிற்.21) உட்குமிக்க கடவுள் என்றவாறு. (4)

297. புரைஉயர்பு ஆகும்.

(இ..ள்) புரை என்பது உயர்வு என்னும் பொருள்படும். (எ.று)

(உ..ம்) புரைய மன்ற புரையோர் கேண்மை. (நற்.1) (5)

298. குருவும் கெழுவும் நிறன்ஆ கும்மே.

(இ..ள்) குரு என்பதூஉம், கெழு என்பதூஉம் நிறம் என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) குருமணித்தாலி, செங்கேழ் மென்கொடி (அகம்.80). கெழு என்பது கேழ் எனவும் வரும். (6)

299. செல்லல் இன்னல் இன்னா மையே.

(இ..ள்) செல்லல் என்னும் சொல்லும், இன்னல் என்னும் சொல்லும் இன்னாமைப் பொருளில் வரும். (எ-று)

(உ..ம்) மணம்கமழ் வியன்மார்பு அணங்கிய செல்லல் (அகம்.22), வெயில் புறம் தருஉம் இன்னல் இயக்கத்து (மலைபடு.374) (7)

300. மல்லல் வளனே.

*(இ..ள்)* மல்லல் என்னும் சொல் வளப்பம் என்னும் பொருள்தரும். *(எ-று)*

*(உ..ம்)* மல்லல் மால்வரை. *(அகம்.52)* *(8)*

301. ஏபெற்று ஆகும்.

*(இ..ள்)* ஏ என்னும் சொல் பெற்றுதல் என்னும் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* ஏகல் அடுக்கம் *(நற்.116)*. பெற்றுதல் என்பது இக்காலம் பற்றுதல் எனவரும். *(9)*

302. உகப்பே உயர்தல்.

*(இ..ள்)* உகப்பு என்னும் சொல் உயர்தல் என்னும் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* விசும்பு உகந்து ஆடாது *(10)*

303. உவப்பே உவகை.

*(இ..ள்)* உவப்பு என்னும் சொல் உவகை என்னும் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* உவந்து உவந்து ஆர்வ நெஞ்சமொடு *(அகம்.35)*. *(11)*

304. பயப்பே பயன்ஆம்.

*(இ..ள்)* பயப்பு என்னும் சொல் பயன் என்னும் பொருள்படும் *(எ-று)*

*(உ..ம்)* பயவாக், களர்அனையர் கல்லா தவர் *(குறள்.406)* *(12)*

305. பசப்பு நிறன்ஆகும்.

*(இ..ள்)* பசப்பு என்னும் சொல் நிறத்தை உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* மைஇல் வாள்முகம் பசப்புஊ ரும்மே. (கலி.7) *(13)*

306. இயைபே புணர்ச்சி.

*(இ..ள்)* இயைபு என்னும் சொல் புணர்தல் என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* இயைந்து ஒழுகும். *(14)*

307. இசைப்புஇசை ஆகும்.

*(இ..ள்)* இசைப்பு என்னும் சொல் இசைத்தல் என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* யாழ் இசையூப் புக்கு, இசைத்தலும் உரிய, (சொல்.58) வாயில் இசை என ஒலிப்பெ ருட்கண் வந்தன. *(15)*

308. அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி.

*(இ..ள்)* அலமரல் என்னும் சொல்லும், தெருமரல் என்னும் சொல்லும் சுழலல் என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* அலமரல் ஆயம் (ஐங்.64), தெருமரல் உள்ளமோடு அன்னை துஞ்சாள். *(16)*

309. மழவும் குழவும் இளமைப் பொருள.

*(இ..ள்)* மழ என்னும் சொல்லும் குழ என்னும் சொல்லும் இளமை என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* மழ களிறு (புறம்.38), குழக்கன்று (நாலடி.101). *(17)*

310. சீர்த்தி மிகுபுகழ்.

*(இ..ள்)* சீர்த்தி என்னும்சொல் மிகுபுகழ் என்பதன் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* வயக்கம்சால் சீர்த்தி. *(18)*

311. மாலை இயல்பே.

*(இ..ள்)* மாலை என்னும் சொல் இயல்பு என்னும் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* குறிப்புஏவல் செயல்மாலைக் கொளைநடை அந்தணீர். *(கலி.9)* *(19)*

312. கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும்.

*(இ..ள்)* கூர்ப்பு என்பதூஉம், கழிவு என்பதூஉம் முன்பு உள்ளதன்கண் மிகுதியை உணர்த்திவரும். *(எ-று)*

*(உ..ம்)* துனிகூர் எவ்வமொடு *(சிறுபாண்.39)*, கழிகண்ணோட்டம். *(பதிற்.22)* *(20)*

313. கதழ்வும் துனைவும் விரைவின் பொருள.

*(இ..ள்)* கதழ்வு என்னும் சொல்லும், துனைவு என்னும் சொல்லும் விரைவு என்பதன் பொருள்படும். *(எ-று)*

கதழ், துனை என்னும் சொற்களை இனிது விளக்குதற்குப் பெயர் ஆக்கி ஓதினார். மேல் சொல்லப்பட்டவற்றினும், இனி வருவனவற்றினும் குறைச்சொல் ஆகி இவ்வாறு வருவன அறிந்து கொள்க.

*(உ..ம்)* கதழ்பரி நெடும்தேர் *(நற்றி.203)*, துனைபரி துரக்கும் துஞ்சாச்செலவின். *(அகம்.9)* *(21)*

314. அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும்.

*(இ..ள்)* அதிர்வு என்பதூஉம், விதிர்வு என்பதூஉம் நடுக்கம் என்பதன் பொருள் உணர்த்தும் (எ-று)

*(உ..ம்)* எதிரதாக் காக்கும் அறிவினார்க்கு இல்லை, அதிர வருவதோர் நோய் (குறள்.429), விதிர்ப்புஉற அறியா ஏமக் காப்பினை (புறம்.20). *(22)*

315. வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்
நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள.

*(இ..ள்)* வார்தல் என்னும் சொல்லும், போகல் என்னும் சொல்லும், ஒழுகல் என்னும் சொல்லும் நேர்பு என்பதன் பொருண்மையும், நெடுமை என்பதன் பொருண்மையும் உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* வார்ந்து இலங்கு வை எயிற்று (குறுந்.14), போகுகொடி மருங்குல், ஒழுகுகொடி மருங்குல் - இவை நேர்மை. வார் கயிற்று ஒழுகை (அகம்.173), வெள்வேல் விடத்தரொடு காருடை போகி (பதிற்.13), மால்வரை ஒழுகிய வாழை (சிறுபாண்.21). இவை நெடுமை. *(23)*

316. தீர்தலும் தீர்த்தலும் விடல்பொருட்டு ஆகும்.

*(இ..ள்)* தீர்தல் என்னும் சொல்லும், தீர்த்தல் என்னும் சொல்லும் விடுதல் என்னும் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* துணையின் தீர்ந்த கடுங்கண் யானை (நற்றி.108) இது தன்வினை. நோய் தீர்த்தான் என்பது பிறவினை. விடுத்தான் எனப்படும். இவ்வேறுபாட்டான் இரண்டாக ஓதினார். *(24)*

317. கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு.

*(இ..ள்)* கெடவரல் என்னும் சொல்லும், பண்ணை என்னும் சொல்லும் விளையாட்டு என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* கெடவரல் ஆயம்; பண்ணைத் தோன்றிய எண்நான்கு பொருளும். (மெய்ப்பாட்டியல்.1) *(25)*

318. தடவும் கயவும் நளியும் பெருமை.

*(இ..ள்)* தடஎன்னும் சொல்லும், கய என்னும் சொல்லும், நளி என்னும் சொல்லும் பெருமை என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* தடக்கை *(புறம்.394)*, கயவாய் *(அகம்.118)*, நளிமலை. *(புறம்.150)* *(26)*

319. அவற்றுள்,
தடஎன் கிளவி கோட்டமும் செய்யும்
கயஎன் கிளவி மென்மையும் செய்யும்
நளிஎன் கிளவி செறிவும் ஆகும்.

*(இ..ள்)* மேல் சொன்னவற்றுள், தட என்னும் சொல் கோடுதல் என்பதன் பொருண்மையும், கய என்னும் சொல் மென்மை என்பதன் பொருண்மையும், நளி என்னும் சொல் செறிதல் என்பதன் பொருண்மையும் படும். (எ-று)

*(உ..ம்)* தடமருப்பு எருமை (நற்றி.120), கயம்தலைக் குழவி, நளி இருள். *(27)*

320. பழுது பயன்இன்றே.

*(இ..ள்)* பழுது என்னும் சொல் பய்ன்இன்மை உணர்த்தும். (எ-று)

*(உ..ம்)* பழுதுகழி வாழ்நாள். *(28)*

321. சாயல் மென்மை.

(இ..ள்) சாயல் என்னும் சொல் மென்மை என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) சாயல் மார்பு (பதிற்.16). (29)

322. முழுதுஎன் கிளவி எஞ்சாப் பொருட்டே.

(இ..ள்) முழுது என்னும் சொல் ஒழியாமையை உணர்த்தும் (எ-று)

(உ..ம்) உலகம் முழுது ஆண்ட (சிலப்.அந்தி.1). (30)

323. வம்புநிலை இன்மை.

(இ..ள்) வம்பு என்னும் சொல் நிலை இன்மையை உணர்த்தும் (எ-று)

(உ..ம்) வம்ப மாரி (குறுந்.66). (31)

324. மாதர் காதல்.

(இ..ள்) மாதர் என்னும் சொல் காதல் என்னும் பொருள்படும் (எ-று)

(உ..ம்) மாதர் நோக்கு. (32)

325. நம்பும் மேவும் நசைஆ கும்மே.

(இ..ள்) நம்பு என்னும் சொல்லும், மேவு என்னும் சொல்லும் நசை என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) நயந்துநாம் விட்ட நன்மொழி நம்பி (அகம்.198), பேர்இசை நவிரம் மேஎய் உறையும் (மலைபடு.82).

326. ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாஅய்
ஆவயின் நான்கும் உள்ளதன் நுணுக்கம்.

*(இ..ள்)* ஒய்தல் என்னும் சொல்லும், ஆய்தல் என்னும் சொல்லும், நிழத்தல் என்னும் சொல்லும், சாஅய் என்னும் சொல்லும் ஆகிய அந்நான்கு சொல்லும் ஒருபொருட்கு உள்ள அளவின் நுணுக்கத்தைக் காட்டும். (எ-று)

*(உ..ம்)* வேனில் உழந்த வறிது உயங்கு ஓய்களிறு (கலி.7), பாய்ந்து ஆய்ந்த தானைப் பரிந்துஆனா மைந்தினை (கலி.96), நிழத்த யானை மேய்புலம் படர (மதுரை.303), கயல்அறல் எதிரக் கடும்புனல் சாஅய் (நெடுநல்.18). *(34)*

327. புலம்பே தனிமை.

*(இ..ள்)* புலம்பு என்னும் சொல்; தனிமை என்னும் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* புலிப்பல் கோத்த புலம்புமணித் தாலி (அகம்.7). *(35)*

328. துவன்று நிறைவு ஆகும்.

*(இ..ள்)* துவன்று என்பது நிறைவு என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* ஆரியர் துவன்றிய பேர்இசை முள்ளூர் (நற்.170). *(36)*

329. முரஞ்சல் முதிர்வே.

*(இ..ள்)* முரஞ்சல் என்னும் சொல் முதிர்வு என்னும் பொருள்படும் *(எ-று)*

*(உ..ம்)* கோடுபல முரஞ்சிய கோளி ஆலம் (மலைபடு.268). *(37)*

330. வெம்மை வேண்டல்.

*(இ..ள்)* வெம்மை என்னும் சொல் வேண்டல் என்பதன் பொருள்படும். *(எ-று)*

(உ..ம்) நீவெய் யோளொடு (அகம்.6). (38)

331. பொற்பே பொலிவு.

(இ..ள்) பொற்பு என்னும் சொல் பொலிவு என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) பெருவரை அடுக்கம் பொற்ப. (நற்.34). (39)

332. வறிது சிறிதுஆகும்.

(இ..ள்) வறிது என்னும் சொல் சிறிது என்பதன் பொருள் ஆகும். (எ-று)

(உ..ம்) வறிது நெறி ஒரீஇ.

333. எற்றம் நினைவும் துணிவும் ஆகும்.

(இ..ள்) எற்றம் என்னும் சொல் நினைவு, துணிவு என்பவற்றின் பொருள்படும். (எ-று)

(உ..ம்) கானலம் சேர்ப்பன் கொடுமை எற்றி (குறுந்.145). இது நினைவு. எற்று என்று இரங்குவ செய்யற்க (குறள்.665). இது துணிவு. (41)

334. பிணையும் பேணும் பெட்பின் பொருள.

(இ..ள்) பிணை என்னும் சொல்லும், பேண் என்னும் சொல்லும் பெட்பு என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) அரும்பிணை அகற்றி வேட்ட ஞாட்பினும், அமரர்ப் பேணியும் ஆவுதி அருத்தியும் (புறம்.99). (42)

335. பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும்.

*(இ..ள்)* பணை என்னும் சொல் பிழைத்தல் என்பதன் பொருளும் பெருமை என்பதன் பொருளும்படும். *(எ-று)*

*(உ..ம்)* பணைத்துவீழ் பகழி - இது பிழைப்பு. பணைத்தோள் (அகம்.1). இது பெருமை. *(43)*

336. படரே உள்ளல் செலவும் ஆகும்.

*(இ..ள்)* படர் என்பது நினைத்தல் என்பதன் பொருளும், செலவு என்பதன் பொருளும் படும். *(எ-று)*

*(உ..ம்)* வள்ளியோர்ப் படர்ந்து புள்ளின் போகி (புறம்.47). இது நினைவு. கறவை கன்றுவயின் படர (குறுந்.108). இது செலவு. *(44)*

337. பையுளும் சிறுமையும் நோயின் பொருள.

*(இ..ள்)* பையுள் என்னும் சொல்லும், சிறுமை என்னும் சொல்லும் நோய் என்பதன் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* பையுள் மாலை (குறுந்.195), சிறுமை உறுபவோ செய்புஅறி யலரே (நற்.1). *(45)*

338. எய்யா மையே அறியா மையே.

*(இ..ள்)* எய்யாமை என்னும்சொல் அறியாமை என்னும் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* எய்யா மையலை நீயும் வருந்துதி (குறிஞ்சிப்.8). *(46)*

339. நன்று பெரிது ஆகும்.

*(இ..ள்)* நன்று என்பது பெரிது என்பதன் பொருள்படும் *(எ-று)*

*(உ..ம்)* நன்றும் அரிதுஉற் றனையால் பெரும (அகம்.10). *(47)*

340. தாவே வலியும் வருத்தமும் ஆகும்.

*(இ..ள்)* தாவு என்னும் சொல் வலிஎன்பதன் பொருண்மையும், வருத்தம் என்பதன் பொருண்மையும்படும் (எ-று)

*(உ..ம்)* தாவில் நன்பொன் தைஇய பாவை *(அகம்.212)*. இது வலி. கருங்கண் தாக்கலை பெரும்பிறிது உற்றென *(குறுந்.69)*. இது வருத்தம். *(48)*

341. தெவுக்கொளல் பொருட்டே.

*(இ..ள்)* தெவு என்னும் சொல் கொள்ளுதல் என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* நீர்த்தெவ்வும் நிரைத்தொழுவர் *(மதுரைக்.89)*. *(49)*

342. தெவ்வுப் பகைஆகும்.

*(இ..ள்)* தெவ்வு என்னும் சொல் பகை என்னும் பொருள்படும் (எ-று)

*(உ..ம்)* தெவ்வுப் புலம்.

343. விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே.

*(இ..ள்)* விறப்பு என்னும் சொல்லும், உறப்பு என்னும் சொல்லும், வெறுப்பு என்னும் சொல்லும் செறிவு என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* விறந்த காப்போடு உள்நின்று வலியுறுத்தும், உறந்த இஞ்சி, வெறுத்த கேள்வி விளங்குபுகழ்க் கபிலன் *(புறம்.53)*. *(51)*

344. அவற்றுள்,
விறப்பே வெரூஉப் பொருட்டும் ஆகும்.

*(இ..ள்)* அவற்றுள் விறப்பு என்னும் சொல் வெரூஉதல் என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) அவல்எறி உலக்கைப் பாடுவிறந்து அயல (பெரும்பாண்.226). (52)

345. கம்பலை சும்மை கலியே அழுங்கல்
என்றுஇவை நான்கும் அரவப் பொருள.

(இ..ள்) கம்பலை என்னும் சொல்லும், சும்மை என்னும் சொல்லும், கலி என்னும் சொல்லும், அழுங்கல் என்னும் சொல்லும் இவை நான்கு சொல்லும் அரவம் என்னும் பொருளை உடைய (எ-று)

(உ..ம்) கம்பலை மூதூர் (புறம்.54), ஒலிபெரும் சும்மையொடு, கலிகொள் ஆயம் (அகம்.11), உயவுப்புணர்ந் தன்றுஇவ் அழுங்கல் ஊரே (நற்.203). (53)

346. அவற்றுள்,
அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்.

(இ..ள்) மேல் சொல்லப்பட்டவற்றுள்,அழுங்கல் என்னும் சொல் இரக்கம் என்பதன் பொருண்மையும், கேடு என்பதன் பொருண்மையும்படும். (எ-று)

(உ..ம்) மகவீழ்ந்துஅழுங்கிய - இஃது இரக்கம். குணன் அழுங்கக், குற்றம் உழைநின்று கூறும் (நாலடி.353) இதுகேடு. (54)

347. கழும்என் கிளவி மயக்கம் செய்யும்.

(இ..ள்) கழும் என்பது மயக்கம் என்பதன் பொருள்படும். (எ.று)

(உ..ம்) கழுமிய ஞாட்பின். (களவழி.11) (55)

348. செழுமை வளனும் கொழுப்பும் ஆகும்.

*(இ..ள்)* செழுமை என்பது வளன் என்பதன் பொருளும், கொழுப்பு என்பதன் பொருளும் படும். *(எ-று)*

*(உ..ம்)* செழும்பல் குன்றம் - இதுவளம். செழுந்தடிதின்ற செந்நாய். இது கொழுப்பு. *(56)*

349. விழுமம்,

சீர்மையும் சிறப்பும் இடும்பையும் செய்யும்.

*(இ..ள்)* விழுமம் என்பது சீர்மை என்பதன் பொருளும், சிறப்பு என்பதன் பொருளும், இடும்பை என்பதன் பொருளும் படும். *(எ-று)*

*(உ..ம்)* விழுமியோர், காண்தொறும் செய்வர் சிறப்பு *(நாலடி.159)*. இது சீர்மை. வேற்றுமை இல்லா விழுத்திணை பிறந்து *(புறம்.27)*. இது சிறப்பு. நின்உறு விழுமம் களைந்தோள் *(அகம்.170)*. இஃது இடும்பை. *(57)*

350. கருவி தொகுதி.

*(இ..ள்)* கருவி என்னும் சொல் தொகுதி என்னும் பொருள்படும் *(எ-று)*

*(உ..ம்)* கருவி வானம் *(புறம்.159)* *(58)*

351. கமம்நிறைந்து இயலும்.

*(இ..ள்)* கமம் என்னும் சொல் நிறைந்து என்பதனோடு இயலும். *(எ-று)*

*(உ..ம்)* கமம்சூல் மாமழை (அகம்.43), (குறுந்.158), (முருகா.7). *(59)*

352. அரியே ஐம்மை.

*(இ..ள்)* அரி என்னும் சொல் ஐது என்னும் பொருள்படும் (எ-று)

*(உ..ம்)* அரிமயிர்த் திரள் முன்கை (புறம்.11). *(60)*

353. கவவுஅகத்து இடுமே.

*(இ..ள்)* கவவு என்னும் சொல் அகத்துஇடுதல் என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* கழூஉ விளங்கு ஆரம் கவைஇய மார்பே (புறம்.19). *(61)*

354. துவைத்தலும் சிலைத்தலும் இரங்கலும் இயம்பலும்
இசைப்பொருள் கிளவி என்மனார் புலவர்.

*(இ..ள்)* துவைத்தல் என்னும் சொல்லும், சிலைத்தல் என்னும் சொல்லும், இரங்கல் என்னும் சொல்லும், இயம்பல் என்னும் சொல்லும் ஓசைப் பொருண்மையை உடைய சொல். (எ-று)

*(உ..ம்)* வரிவளை துவைப்ப, ஆமா நல்லேறு சிலைப்ப (முருகு.315), ஏறுஇரங்கு இருளிடை (கலி.46), கடிமரம் தடியும் ஓசை தன்ஊர், நெடுமதில் வரைப்பின் கடிமனை இயம்ப (புறம்.36). *(62)*

355. அவற்றுள்,
இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்.

*(இ..ள்)* மேல் சொல்லப்பட்டவற்றுள்ள இரங்கல் என்பது கழிந்தது என்னும் பொருளையும் உடைத்து ஆகும். (எ-று)

*(உ..ம்)* செய்துஇரங் காவினை (புறம்.10). *(63)*

356. இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை.

(இ..ள்) இலம்பாடு என்னும் சொல்லும், ஒற்கம் என்னும் சொல்லும் வறுமை என்னும் சொல்லின் பொருள்படும். (எ-று)

(உ..ம்) இலம்படு புலவர் ஏற்றகைந் நிறைய (மலைபடு.576), ஒக்கல் ஒற்கம் சொலிய (புறம்.327). (64)

357. ஞெமிர்தலும் பாய்தலும் பரத்தல் பொருள.

(இ..ள்) ஞெமிர்தல் என்னும் சொல்லும், பாய்தல் என்னும் சொல்லும் பரத்தல் என்பதன் பொருள்படும் (எ-று)

(உ..ம்) தருமணல் ஞெமிரிய திருநகர் முற்றத்து (நெடுநல்.90), பாய்புனல். (65)

358. கவர்பு விருப்பு ஆகும்.

(இ..ள்) கவர்பு என்னும்சொல் விருப்பு என்பதன் பொருள்படும் (எ-று)

(உ..ம்) கவர்நடைப் புரவி (அகம்.130). (66)

359. சேரே திரட்சி.

(இ..ள்) சேர் என்னும் சொல் திரட்சி என்பதன் பொருள்படும் (எ-று)

(உ..ம்) சேர்ந்து செறி குறங்கு (நற்.170). (67)

360. வியல்என் கிளவி அகலப் பொருட்டே.

(இ..ள்) வியல் என்னும் சொல் அகலம் என்பதன் பொருள்படும் (எ-று)

(உ..ம்) வியல் உலகம். (68)

361. பேஎநாம் உரும்என வரூஉம் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள.

(இ..ள்) பேஎ என்னும் சொல்லும், நாம் என்னும் சொல்லும், உரும் என்னும் சொல்லும் ஆகிய அம்முறைமையை உடைய மூன்று சொல்லும் அச்சப் பொருண்மையை உடைய. (எ-று)

(உ..ம்) மன்ற மராஅத்த பேஎமுதிர் கடவுள் (குறுந்.87), நாம நல்அராக் கதுவியாங்கு, உரும்இல் சுற்றமோடு இருந்தோற் குறுகி (பெரும்.447). (69)

362. வயவலி ஆகும்.

(இ..ள்) வய என்னும் சொல் வலி என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) வயக்களிறு (மது.15). (70)

363. வாள்ஒளி ஆகும்.

(இ..ள்) வாள் என்னும் சொல் ஒளி என்பதன் பொருள்படும் (எ-று)

(உ..ம்) வாள்நுதல் (முருகு.6). (71)

364. துயவுஎன் கிளவி அறிவின் திரிபே.

(இ..ள்) துயவு என்னும் சொல் அறிவின் திரிபு ஆகிய பொருள்படும். (எ-று)

(உ..ம்) துயவுஉற்றேம் யாம்ஆக. (72)

365. உயாவே உயங்கல்.

(இ..ள்) உயா என்னும் சொல் உயங்கல் என்பதன் பொருள்படும் (எ-று) உயங்கல் என்பது ஓய்தல்.

*(உ..ம்)* பருந்துஇருந்து உயாவிளி பயிற்றும். *(அகம்.19)* *(73)*

**366. உசாவே சூழ்ச்சி.**

*(இ..ள்)* உசா என்பது சூழ்ச்சி என்பதன் பொருள்படும். *(எ-று)*

*(உ..ம்)* யான்ஒன்று உசாவுகோ ஐய சிறிது. *(கலி.7)* *(74)*

**367. வயாஎன் கிளவி வேட்கைப் பெருக்கம்.**

*(இ..ள்)* வயா என்னும் சொல் வேட்கைப் பெருக்கத்தினை உணர்த்தும். *(எ-று)*

*(உ..ம்)* தொடீஇய செல்வார்த் துமித்து எதிர் மண்டும், கடுவயா நாகுபோல் நோக்கி *(முல்லைக்கலி.16)*. வயா என்றது கன்றின்மேல் காதல் குறித்து நின்றது. *(75)*

**368. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள.**

*(இ..ள்)* கறுப்பு என்பதும், சிவப்பு என்பதும் வெகுளி என்பதன் பொருளை உடைய. *(எ-று)*

*(உ..ம்)* நிற்கறுத் தோர்அரும் கடிமுனை அரணம்போல். நீசிவந்து இறுத்த நீர்அழி பாக்கம் *(பதிற்.13)*. *(76)*

**369. நிறத்துஉரு உணர்த்தற்கும் உரிய என்ப.**

*(இ..ள்)* மேல்சொல்லப்பட்ட கறுப்பும், சிவப்பும் வெகுளிப் பொருட்கண் வருதல் அன்றி, நிறத்துஉரு உணர்த்தற்கும் உரிய. *(எ-று)*

*(உ..ம்)* கறுத்த காயா, சிவந்த காந்தள் *(பதிற்.15)*. *(77)*

**370. நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை.**

(இ..ள்) நொசிவு என்பதூஉம், நுழைவு என்பதூஉம், நுணங்கு என்பதூஉம் நுண்மை என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) நொசி மருங்குல் (குறிஞ்சிக்கலி.24), நுழை நூல் கலிங்கம் (மலைபடு.561) துணங்கிய கேள்வியர் (குறள்.419). (78)

371. புனிறுஎன் கிளவிஈன் றணிமைப் பொருட்டே.

(இ..ள்) புனிறு என்பது ஈன்றணித்து என்னும் பொருள்பட்டு நிற்கும். (எ-று)

(உ..ம்) புனிற்றுஆப் பாய்ந்தெனக் கலங்கி. (அகம்.56) (79)

372. நனவே களனும் அகலமும் செய்யும்.

(இ..ள்) நனவு என்பது களன் என்பதன் பொருண்மையும், அகலம் என்பதன் பொருண்மை உணர்த்தும். (எ-று)

(உ..ம்) நனவுப்புகு விறலியின் தோன்றும் நாடன் (அகம்.82) இது களம். நனந்தலை உலகம் (பதிற்.63) இது அகலம். (80)

373. மதவே மடனும் வலியும் ஆகும்.

(இ..ள்) மத என்னும் சொல் மடம் என்பதன் பொருண்மையும், வலி என்பதன் பொருண்மையும் உணர்த்தும். (எ-று)

(உ..ம்) பதவு மேய்ந்த மதவுநடை நல்ஆன் (அகம்.14). இது மடம். கயிறுஇடு கதச்சேப் போல மதமிக்கு (அகம்.36). இது வலி. (81)

374. மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே.

(இ..ள்) மேல்சொல்லப்பட்ட மத என்னும் சொல் மிகுதி என்பதன் பொருளும், வனப்பு என்பதன் பொருளும் படும். (எ-று)

(உ..ம்) பொருநாகு இளம்பாண்டில், தேர் ஊரச் செம்மாந்தது போல் மதைஇனள் (முல்லைக்கலி.9). இது மிகுதி. மாதர் வாள்முகம் மதைஇய நோக்கே (அகம்.30). இது வனப்பு. (82)

375. புதிதுபடல் பொருட்டே யாணர்க் கிளவி.

(இ..ள்) யாணர் என்னும் சொல் புதியதுபடுதல் என்னும் பொருண்மையை உடைத்து. (எ-று)

(உ..ம்) வித்தொடு சென்ற வட்டி பற்பல, மீனொடு பெயரும் யாணர் ஊர (நற்.210). நாள்தொறும் புதியது படுகின்ற ஊர். (83)

376. அமர்தல் மேவல்.

(இ..ள்) அமர்தல் என்பது மேவல் என்பதன் பொருள்படும் (எ-று)

(உ..ம்) அகன்அமர்ந்து செய்யாள் உறையும் (குறள்.84). (84)

377. யாணுக் கவின்ஆம்.

(இ..ள்) யாணு என்னும் சொல் கவின் என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) யாணு விசும்பின் அமரர் உளப்படப், பேணிப் பேணிப் பெரிது எனைப் பெட்டபின். அழகிய விசும்பு என்றவாறு. (85)

378. பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள.

(இ..ள்) பரவலும், பழிச்சலும் வாழ்த்தலின் பொருள்படும். (எ-று)

(உ..ம்) கடவுள் பரவிக் கைதொழூஉப் பழிச்சி (மலைபடு.538). (86)

379. கடிஎன் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே

அச்சம் முன்தேற்று ஆயீர் ஐந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டுஆ கும்மே.

(இ..ள்) கடி என்னும் சொல் வரைவு முதலாக முன்தேற்று ஈறாக ஓதப்பட்ட பத்துச் சொல்லினும் தெளியத் தோன்றும் பொருளை உடைத்து (எ-று)

(உ..ம்) கடிந்த கடிந்துஒரார் செய்தார்க்கு அவைதாம், முடிந்தாலும் பீழை தரும் (குறள்.658). இது வரைவு. கடுநுனைப் பகழி! இது கூர்மை. கடி என்னும் சொல்தானே கடு எனத் திரிந்துவந்தது. கடிஇல் புகூஉம் கள்வன் போல். இது காவல். கடி உண் கடவுட்கு இட்ட சிறுகுரல், அறியாது உண்ட மஞ்ஞை (குறுந்.105). இது புதிது உண் கடவுள். கடும்தேர் குழித்த ஞெள்ளல் ஆங்கண் (புறம்.15). இது விரைவு. கடும்பகல் (அகம்.148). இது விளக்கம். கடும்கால் ஒற்றலின் (பதிற்.25). இதுமிகுதி. கடிகாவில் பூச்சூடினன். இது சிறப்பு. கடும்பாம்பு வழங்கும் தெரு (குறுந்.354). இஃது அச்சம். கடும்சூள் தருகுவன் நினக்கே (அகம்.110). நீதெளியுமாறு சூளுறுகின்றேன். இது முன்தேற்று. (87)

380. ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே.

(இ..ள்) மேல் சொல்லப்பட்ட கடி என்னும் சொல் ஐயப்பொருண்மையும் கரித்தல் பொருண்மையும் ஆகலும் ஆம் (எ-று)

(உ..ம்) போற்றின் அரியவை போற்றல், கடுத்தபின், தேற்றுதல் யார்க்கும் அரிது (குறள்.693). இது ஐயம். கடி மிளகு தின்ற கல்லா மந்தி. இது கரிப்பு. (88)

381. ஐவியப்பு ஆகும்.

(இ..ள்) ஐ என்பது வியப்பு என்பதன் பொருள்படும். (எ-று)

(உ..ம்) ஐ என விம்மி அவற்குஅது கூறிய, பொய்யில் புகழோன் புகழ்அடி கைகூப்பி, வியப்பு என்றது விம்மி என்றவாறு. (89)

382. முனைவு முனிவு ஆகும்.

*(இ..ள்)* முனைவு என்பது முனிதல் என்பதன் பொருள்படும் (எ-று).

*(உ..ம்)* சேற்றுநிலம் முனைஇய செங்கண் காரான் (அகம்.46). (90)

383. வையே கூர்மை.

*(இ..ள்)* வை என்னும் சொல் கூர்மை என்பதன் பொருள்படும் (எ-று)

*(உ..ம்)* வைந்நுனைப் பகழி (முல்லை.73). (91)

384. எறுழ்வலி ஆகும்.

*(இ..ள்)* எறுழ் என்பது வலி என்பதன் பொருள்படும். (எ-று)

*(உ..ம்)* போர்எறுழ்த் திணிதோள். (பெரும்பாண்.63) (92)

385. மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
முன்னும் பின்னும் வருபவை நாடி
ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல்
தத்தம் மரபின் தோன்றும்மன் பொருளே.

எடுத்து ஓதப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றிற்கும் புறநடை உணர்த்துல் நுதலிற்று.

*(இ..ள்)* பொருள்பெறச் சொல்லப்பட்ட உரிச்சொல் எல்லாவற்றினையும் முன்னும் பின்னும் வரும் மொழிகளின் பொருண்மையை ஆராய்ந்து, அவற்றிற்கு இயைந்த மொழியான் புணர்ந்து உரைக்கவே தத்தம் மரபினான் பொருள் தோன்றும். (எ-று)

எனவே பலபொருள் ஒருசொல் வந்துழி, முன்னும் பின்னும் வந்த மொழி அறிந்து, அதற்கு ஒப்பப் பொருள் உரைக்க என்றவாறாம். உதாரணம் மேல் காட்டப்பட்டன. (93)

386. கூறிய கிளவிப் பொருள்நிலை அல்லது
வேறுபிற தோன்றினும் அவற்றொடும் கொளலே.

இதுவும் அது.

(இ..ள்) மேல் ஓதப்பட்ட உரிச்சொற்கு ஓதப்பட்ட பொருள்நிலை அல்லது, பிறபொருள் தோன்றினும், சொல்லப்பட்டனவற்றோடு ஒரு நிகரனவாகக் கொள்க. (எ-று)

(உ..ம்) பேஎ நாறும் தாழ்நீர்ப் பனிச்சுனை (இறைய. உரை.சூ.7.உரை) என்றவழிப் பேஎ என்பது மிகுதி குறித்து நின்றது. பொய்கை துவன்ற புனிறுதீர் பனுவல் என்றவழிப் புனிறு என்பது புதுமையின்கண் வந்தது. கடிமலர் என்றவழி மணத்தின்கண் வந்தது. மேல் முறைக் கண்ணே, கடி என்றார் கற்றறிந்தார் (நாலடி.56) என்றவழிக் கடிஎன்பது வதுவையின்கண் வந்தது. தூவல் கலித்த தேம்பாய் புன்னை (புறம்.24) என்றவழிக் கலித்தல் தழைப்பின்கண் வந்தது. அடர்பொன் அவிர்ஏய்க்கும் அவ்வரி வாட (பாலைக்கலி.22) என்றவழி அரி என்பது நிறத்தின்கண் வந்தது. பிறவும் இவ்வாறு வருவன அறிந்துகொள்க. (94)

387. பொருட்குப்பொருள் தெரியின் அதுவரம்பு இன்றே.

உரிச்சொற்கு உரியதுஒரு மரபு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) பொருட்குப் பொருள் தெரியின் எல்லை இன்று (எ-று)

அஃதாவது உறு என்பதற்குப் பொருள் மிகுதி என்றால், மிகுதி என்பதற்குப் பொருள் யாது எனின், அதற்கும் ஒருவாய்பாட்டான் பொருள் உரைப்பின், அதற்குப் பொருள் யாது எனப் பின்னும் வினாவும். அவ்வாறு வினாவ, அவ்ஆராய்ச்சி முற்றுப் பெறாதாம். அதனான், வினாவுவானும் அவ்வாறு வினாவற்க; செப்புவானும் அவ்வாறு செப்பற்க என்றவாறு.

வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் என்பதனான், இவ்ஆராய்ச்சி பெயர்ச்சொற்கும் ஒக்கும் என்று கொள்க. அஃதேல், அப்பொருண்மை உணராதான் அதனை உணருமாறு என்னை எனின், அது வருகின்ற சூத்திரத்தான் விளங்கும் என்க. (95)

388. பொருட்குத் திரிபுஇல்லை உணர்த்த வல்லின்.

இஃது ஆசிரியன்கண் கிடந்தது ஓர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) பொருட்குப் பொருள் வினவிய மாணாக்கன் அவ்வாறு வினவானாம்; அவன் கொள்ளுமாறு ஆசிரியன் அஃது உணர்த்த வல்லன் ஆயின். (எ-று)

என்றது, ஈண்டுப் பயின்றனவாக எடுத்து ஓதப்பட்ட சொற்களைப் பயிலாதாற்கு அவன் பயின்ற வாய்பாட்டான் உணர்த்துக. உணர்த்தவே பொருட்குப் பொருள் ஆராய்தல் இல்லை என்றவாறு.

அஃதேல், உறுதவ நனிஎன வருஉம் மூன்றும், மிகுதி செய்யும் பொருள் என்ப (சூ.295) என்பதனான் பயன்இன்றாம், அஃது அறியாதாற்குப்பிற வாய்பாட்டான் பொருள் உணர்த்த வேண்டுதலின் எனின், அதற்கு விடை வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். (96)

389. உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.

மாணாக்கர்க்கு உரியதுஓர் இயல்பு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) உணர்ச்சி என்பது உணர்வு. வாயில் என்பது புலன். அஃதாவது உணரப்படுவது. உணர்வோர் வலித்து என்பது உணர்வோரது வலிமை உடைத்து. (எ-று)

என்றது, பயிலாதவற்றைப் பயின்றவை சார்த்தி உணர்த்துகின்றவழி, பயின்றவாக ஓதப்பட்டன, யாதும் அறியாதாரை நோக்கி அல்ல; உணர்வினான் உணரப் படுவனவற்றை உணர்வாரை நோக்கிக் கூறப்பட்ட என்றவாறு. எனவே மேல்கூறிய கடா விடை பெற்றதாம். (97)

390. மொழிப் பொருள் காரணம் விழிப்பத் தோன்றா.

உரிச்சொற்கு உரியது ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் என்பதனான் பெயர்ச்சொற்கு உரிய இலக்கணமும் உணர்த்திற்று' என்று கொள்ளப்படும்.

(இ..ள்) இச்சொற்குப் பொருள் இதுஎன நியமித்தற்குக் காரணம் விளங்கத் தோன்றா. (எ-று)

எனவே, காரணம் உளது என்பதூஉம், அது புலன் ஆகாது என்பதூஉம் கூறியவாறாம். என்னைபுலன் ஆகாமை எனின், மிகுதல் என்பதற்குப் பொருளாவது முன்புநின்ற நிலையின் பெரிது ஆதல்; அப்பொருண்மையை அச்சொல் காட்டுதற்குக் காரணம் உரைப்பரிது ஆதலான். அஃதேல் காரணம் உளபோலக் கூறிய அதனான் பயன் என்னை எனின், பொருள்மேல் சொல்நிகழ்தல் தொன்றுதொட்டு வருகின்றது ஆதலின், உலகினுள் மிக்கார் எல்லாரும் காரணம் இன்றி வழங்குபவோ என்னும் ஐயம் குறித்துக் கூறினார்.

அஃதேல், இவ்எழுத்து இப்பொருள்படும் எனவும், இத்தன்மைத்து எனவும், இப்பயன்தரும் எனவும் மறை நூலகத்தும் பிறாண்டும் உரைக்கப்படும் ஆகலான், காரணம் உரைப்பரிது என்பது குற்றம் எனின், அதற்குவிடை வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். (98)

391. எழுத்துப்பிரிந்து இசைத்தல் இவண்இயல்பு இன்றே.

எல்லாச் சொற்கும் உரியதுஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* ஒரு சொற்கு அங்கம் ஆகிய எழுத்துப் பிரிந்துநின்று பொருள்பட ஒலித்தல் இத்தமிழகத்து இலக்கணம் இல்லை. (எ-று)

எனவே, மேல் எழுந்தகடா விடைபெற்றதாம். பொருட்குப் பொருள் தெரியின் (சூ.387) என்பது முதலாக இத்துணையும் கூறப்பட்டது உரிச்சொற்குப் பொருள் உணர்த்துமாறாம். *(99)*

392. அன்ன பிறவும் கிளந்த அல்ல
பலமுறை யானும் பரந்தன வரூஉம்
உரிச்சொல் எல்லாம் பொருள்குறை கூட்ட
இயன்ற மருங்கின் இனைத்துஎன அறியும்
வரம்புதமக்கு இன்மையின் வழிநனி கடைப்பிடித்து
ஓம்படை ஆணையின் கிளந்தவற்று இயலான்
பாங்குஉற உணர்தல் என்மனார் புலவர்.

இஃது உரிச்சொற்கு எல்லாம் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* அன்னபிறவும் கிளந்த அல்ல பல்முறையானும் பரந்தன வரூஉம் உரிச்சொல் எல்லாம் என்பது ஈண்டு எடுத்து ஓதப்பட்டன அல்லாத அத்தன்மைய பிறவும் ஆகிப் பல்லாற்றானும் பரந்துவரும் உரிச்சொல் எல்லாம். (எ-று)

பொருள்குறை கூட்ட, இயன்ற மருங்கின் இனைத்து என அறியும் வரம்புதமக்கு இன்மையின் என்பது பொருள் குறைபடாமல் கூட்ட வழக்குஇயன்ற மருங்கின் இத்துணை என வரையறுக்கும் நிலைமை தமக்கு இல்லை ஆகலான் (எ-று) இதனானே எடுத்துஓதல் அரிது ஆயிற்று.

வழிநனி கடைப்பிடித்து என்பது சான்றோர் செய்யுள்கண் வந்த நெறியை மிகவும் கடைப்பிடித்து (எ-று)

ஓம்படை ஆணையின் என்பது - ஓம்படை என்பது பாதுகாவல். ஆணை என்பது விதிபாதுகாத்தலாக எடுத்து ஓதப்பட்ட புறநடைச் சூத்திர விதியினான் (எ.று) அஃதாவது முன்னும் பின்னும் வருபவை நாடி, ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல் (சூ.385) என மேல் கூறப்பட்டது.

கிளந்தவற்று இயலான் என்பது பொருள் உணர்த்துதற்குக் கருவியாகக் கூறப்பட்ட சொல்லானும், குறிப்பானும், பண்பானும். (எ-று)

பாங்குஉற உணர்தல் என்மனார் புலவர் என்பது பாங்குபட அறிக என்று சொல்லுவர் புலவர். (எ-று)

இதன்பொழிப்பு : எடுத்து ஓதப்படாத உரிச்சொல் எல்லாம் ஈண்டு பொருள் குறைபடாமல் எடுத்து ஓதக்கருதின், அவை எல்லை இல ஆதலான், அவை செய்யுளகத்து வழங்கிய நெறியைக் கடைப்பிடித்து, நாம் அதிகாரப் புறநடையாகச் சொன்ன, முன்னும் பின்னும் வருபவை நாடி, ஒத்த மொழியான் புணர்த்தனர் உணர்த்தல் (சூ.385) என்னும் விதியினான் சொல்லானும், குறிப்பானும், பண்பானும் பொருள்படுமாறு அறிந்துகொள்க. (எ-று)

கழுது உருவின கஞல் இலையன கழிமடலின கைதை (சூளா. ) என்றவழிக் கஞல் என்பது நெருக்கம் குறித்து நின்றது. ஒல்லும் வகையான் அறவினை ஓவாதே (குறள்.33) என்றவழி ஒல் என்பது செய்யப்படும் என்பது குறித்து நின்றது. மன்னா உலகத்து மன்னுதல் குறித்தோர் (புறம்.165) என்றவழி மன் என்பது நிலைபெறுதல் குறித்து நின்றது. இரும்பிடித் தொழுதியொடு பெரும்கயம் படியா (புறம்.44) என்றவழி இருமை என்பது பெருமை குறித்து நின்றது. அம்செங்குவளைக் கண்போல் ஆய்இதழ் என்றவழி அம் என்பது அழகு குறித்து நின்றது. வானம்

ஊர்ந்த வயங்குஒளி மண்டிலம், நெருப்பு எனச் சிவந்த உருப்பு அவிர் அம்காட்டு (அகம்.11) என்றவழி, வயங்கு என்பதூஉம் அவிர் என்பதூஉம் விளக்கம் குறித்தன; அம் என்பது நுணுக்கம் குறித்தது; உருப்பு என்பது வெம்மை குறித்தது. ஊரவர் கவ்வை எருஆக (குறள்.1647) என்றவழிக் கவ்வை என்பது அலர் குறித்து நின்றது. பொருளான்ஆம் எல்லாம் என்று ஈயாது இவறும் (குறள்.1147) என்றவழி இவறு என்பது லோபம் குறித்தது. பின்ஒன்று பெயர்த்து ஆற்றும் பீடுடையாளர் போல் (கலி.34) என்றவழிப் பீடு என்றது பெருமை குறித்து நின்றது. நொறில் இயல் புரவி அதியர் கோமான் என்றவழி நொறில் என்பது நுடக்கத்தின்கண் வந்தது. நொறில் இயல் புரவிக் கழற்கால் இளையோன் என்றவழி நொறில் என்பது விரைவின்கண் வந்தது. கவரி மான்கணம் கல்அறை தெவிட்ட என்றவழித் தெவிட்ட என்பது அசையிட என்பது குறித்து நின்றது. களிறு வழங்குஅதர் கானத்து அல்கி (பொருந.49) என்றவழி, அல்குதல் தங்குதல்கண் வந்தது. நெடும்பெரும் குன்றத்து அமன்ற காந்தள் (அகம்.4) என்றவழி அமல்தல் நெருங்குதல்கண் வந்தது. மலைநாறிய வியன் ஞாலத்து (மதுரைக்.4) என்றவழி நாற்றம் என்பது தோற்றம் குறித்து நின்றது. நாற்ற நாட்டத்து அறுகால் பறவை (புறம்.70) என்றவழி நாடுதல் ஆராய்தல்கண் வந்தது. தணக்கும்கால் கலுழ்புஆனாக் கண் எனவும் உளஅன்றோ (கலி.25) என்றவழித் தணத்தல் நீக்கம் குறித்து நின்றது. குரல் ஓர்த்துத் தொகுத்த சுகிர்புரி நரம்பின் அரலை தீர உரீஇ (மலைபடு.23 24) என்றவழி அரலை குற்றம் குறித்தது. மாக்கடல் நிவந்து எழு செஞ்ஞாயிற்றுக் கவினை (புறம்.4) என்றவழி நிவப்பு என்பது ஓக்கம் குறித்தது. மாகம் திவள இவரும் நீள்கொடி மாடவீதி என்றவழித் என்றவழித் திவள்தல் என்பது தீண்டுதல் குறித்தது; இவர்தல் பரத்தல் குறித்தது. வாயாச் செத்து, ஒய்என ஆங்கே எடுத்தனன் (கலி.37) என்றவழிச் செத்து என்பது குறிப்பு உணர்த்திற்று. பிறவும் அன்ன. (100)

**உரியியல் முற்றும்.**

# தெய்வச்சிலையார் உரை

## 9. எச்சவியல்

393. இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.

என்பது சூத்திரம், இவ்ஓத்து என்ன பெயர்த்தோ எனின், எச்ச இயல் என்னும் பெயர்த்து. கிளவி ஆக்கம் முதலாக உரிச்சொல் ஒத்து ஈறாக்கிடந்த எட்டு ஒத்தினுள்ளும் உணர்த்தாத பொருளை ஈண்டு உணர்த்துதலான் பெற்ற பெயர்.

இதன் தலைச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், ஒரு வகையான் செய்யுட்கு உரிய சொல்லின் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இயற்சொல்லும், திரிசொல்லும், திசைச் சொல்லும், வடசொல்லும் என வரும் நால்வகைத்து, செய்யுள் ஆக்குதற்கு உரிய சொல். (எ-று)

அவை ஆமாறு தத்தம் சிறப்புச் சூத்திரத்தான் உணரப்படும். (1)

394. அவற்றுள்,
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமல் இசைக்கும் சொல்லே.

நிறுத்த முறையானே இயற்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இயற்சொல் ஆவனதாம், செந்தமிழ் நாட்டு வழக்கொடு பொருந்தித் தம்பொருள் வழாமல் இசைக்கும் சொற்கள். (எ-று)

செந்தமிழ் நாடாவது : வையையாற்றின் வடக்கும், மருதயாற்றின் தெற்கும், கருவூரின் கிழக்கும், மருவூரின் மேற்கும் என்ப. இவ்வாறு உரைத்தற்கு ஓர் இலக்கணம் காணாமையானும், வையை யாற்றின் தெற்காகிய கொற்கையும், கருவூரின் மேற்காகிய கொடுங்கோளூரும், மருதயாற்றின் வடக்காகிய காஞ்சியும் தமிழ்திரி நிலமாதல் வேண்டு மாதலானும் அஃது உரை அன்று என்பார் உரைக்குமாறு.

வடவேங்கடம் தென்குமரி
ஆயிடைத்
தமிழ்கூறும் நல்உலகத்து
வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின்
எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி
(தொல்.எழுத்து.பாயிரம்)

என்றமையானும், இதனுள் தமிழ்கூறும் நல்உலகம் என விசேடித்தமையானும், கிழக்கும் மேற்கும் எல்லை கூறாது தெற்குஎல்லை கூறிய அத ான், குமரியின் தெற்கு ஆகிய நாடுகளை ஒழித்து, வேங்கடமலையின் தெற்கும், குமரியின் வடக்கும், குணகடலின் மேற்கும், குடகடலின் கிழக்கும் ஆகிய நிலம் செந்தமிழ் நிலம் என்று உரைப்ப.

அந்நிலத்து வழக்கொடு சிவணித் தம்பொருள் வழாமல் இசைக்கும் சொல் ஆவன. சோறு, கூழ், மலை, மரம், உண்டான், தின்றான், ஓடினான, பாடினான் என்னும் தொடக்கத்தன.

இவை அந்நிலத்துப்பட்ட எல்லா நாட்டினும் ஒத்து இயறலின் இயற்சொல் ஆயின. இவற்றைச் செஞ்சொல் எனினும் அமையும். (2)

395. ஒருபொருள் குறித்த வேறுசொல் ஆகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
இருபாற்று என்ப திரிசொல் கிளவி.

திரிசொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) ஒருபொருள் குறித்த வேறுவேறுசொல் ஆகியும் வேறுவேறு பொருள் குறித்த ஒருசொல் ஆகியும் அவ்இருபகுதியது என்ப திரிசொல். (எ-று)

எனவே, இயற்சொல்லான் உணர்த்தப்படும் பொருள்மேல் வேறுபட்ட வாய்பாட்டான் வருவன திரிசொல் ஆகும் என்றவாறாம்.

அஃதேல், உரிச்சொல்லோடு இதனிடை வேறுபாடு என்னை எனின், உரிச்சொல் குறைச்சொல் ஆகி வரும்; திரிசொல் முழுச்சொல் ஆகிவரும் என்க.

இதனை இயற்சொல்லைச் சாரவைத்ததனான் செந்தமிழ் நாட்டு உட்பட்ட தேயம் தோறும் தாம் அறிகுறிஇட்டு ஆண்ட சொல் என்று கொள்க.

அவையாவன : மலை என்பதற்குக்குன்று, வரை எனவும், குளம் என்பதற்குப் பூழி, பாழி எனவும், வயல் என்பதற்குச் செய், செறு எனவும் வருவன. இவை ஒருபொருள் குறித்தன.

அரங்கம் என்பது யாற்றிடைக் குறையையும், ஆடும் இடத்தையும், இல்லின்கண் ஒரு பக்கத்தினையும் உணர்த்தும். துருத்தி என்பது யாற்றிடைக் குறையையும், தோல் கருவியையும் உணர்த்தும். ஆழி என்பது கடலையும், நேமியையும், வட்டத்தையும் உணர்த்தும். இவை வேறுவேறு பொருள் குறித்தன. இவ்வாறு திரிந்து வருதலின் திரிசொல் ஆயிற்று. (3)

396. செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம்குறிப் பினவே திசைச்சொல் கிளவி

திசைச்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) செந்தமிழ் நாட்டைச் சேர்ந்த பன்னிரு நிலத்தும் உள்ளார் தத்தம் குறிப்பினை உடையது திசைச்சொல் ஆகிய சொல். (எ-று)

பன்னிரு நிலம் ஆவன : வையை யாற்றின் தென்கிழக்கு ஆகிய பொதுங்கர் நாடு, ஒளி நாடு, தென்பாண்டி நாடு, கருங்குட்ட நாடு, குடநாடு, பன்றி நாடு, கற்கா நாடு, சீதை நாடு, மலாடு அருவாநாடு, அருவாவடதலை என்பன, இவை செந்தமிழ் நாட்டகத்த.

செந்தமிழ் சேர்ந்த நாடு என்றமையான், பிற நாடு ஆகல் வேண்டும் என்பார் உதாரணம் காட்டுமாறு. கன்னித் தென்கரைக் கடல்பழந் தீபம், கொல்லம் கூபகம் சிங்களம் என்னும், எல்லையின் புறத்தவும், கன்னடம் வடுகம் கலிங்கம் தெலிங்கம், கொங்கணம் துளுவம், குடகம் குன்றகம் என்பன குடபால் இருபுறச் சையத்து, உடன்உறைபு பழகும் தமிழ்திரி நிலங்களும், முடியுடை மூவரும் இரும்நில ஆட்சி அரசுமேம்பட்ட குறுநிலக் குடுமிகள் பதின்மரும் உடன்இருப்பு இருவரும் படைத்த, பன்னிரு திசையின் சொல்நயம் உடையவும் என்பது அகத்தியச் சூத்திரம். இதனுள் எல்லையின் புறத்தவும், தமிழ் திரி நிலங்களும் ஆகிய பன்னிரு அரசரும் படைத்த பன்னிரு தேயத்திலும் தமிழ்ச்சொல் ஆதற்கு விருப்பு உடையனவும் என்றமையானும், தமிழ் கூறும் நல்உலகத்து, வழக்கும் செய்யுளும் ஆயிரு முதலின், எழுத்தும் சொல்லும் பொருளும் நாடி என நிறுத்துப் பின்னும் செந்தமிழ் இயற்கை சிவணிய நிலத்தொடு, முந்துநூல் கண்டு என ஓதிய அதனான், சிவணிய நிலம் ஆவது எல்லை குறித்த நிலத்தைச் சார்ந்த நிலம் என வேண்டுதலானும், பன்னிரு நிலம் ஆவன: குமரியாற்றின் தென்கரைப்பட்ட பழந்தீபமும் கொல்லமும் கூபகமும் சிங்களமும், சையத்தின் மேற்குப்பட்ட கொங்கணமும் துளுவமும், குடகமும், குன்றகமும், கிழக்குப்பட்ட கருநடமும் வடுகும் தெலிங்கும் கலிங்கமும் என்று கொள்ளப்படும்.

இவற்றுள், கூபகமும் கொல்லமும் கடல் கொள்ளப் படுதலின், குமரியாற்றின் வடகரைக்கண் அப்பெயரானே கொல்லம் எனக் குடி ஏறினார் போலும். பஞ்சத்திராவிடம் எனவும் வடநாட்டார் உரைப்ப ஆகலான் அவை ஐந்தும் வேங்கடத்தின் தெற்கு ஆதலும் கூடாமை உணர்க.

அந்நிலத்து வழங்கும் சொல் ஆகிச் செஞ்சொல்லின் வேறுபட்டுச் சான்றோர் செய்யுளகத்து வருவன நீக்கப்படா என்றவாறு.

குடாஅடி உளியம் *(முருகாற்.313)* என்றவழிக் குடா என்பது குடகத்தார் பிள்ளைகட்கு இட்டபெயர். அந்தோ *(சீவக.312)* என்பது சிங்களவர் ஐயோ என்பதற்கு இட்ட பெயர். யான்தன், கரைய வந்து *(அகம்.16)* என்றவழிக் கரைதல் என்பது கருநாடர் விளிப்பொருள் உணரக் கூறுவது. செப்பு என்பது வடுகர் சொல்லுதற்குப் பெயராக வழங்குவது. பாண்டில் என்பது தெலிங்கர் பசுவிற்கும் எருத்திற்கும் பெயராக வழங்குவது. கொக்கு என்பது துளுவர் மாவுக்குப் பெயராக வழங்குவது. பிறவும் இவ்வாறு வருவன பலவற்றையும் வந்தவழிக்கண்டுகொள்க. *(4)*

397. வடசொல் கிளவி வடஎழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்ஆ கும்மே.

வடசொல் கிளவி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) வடசொல் ஆகிய சொல்லாவது வடமொழிக்கே உரிய எழுத்தை நீக்கித் தமிழ்மொழிக்கு உரிய எழுத்தொடு புணர்ந்த சொல் ஆகும். (எ-று)

எல்லா நாட்டிற்கும் பொதுஆயினும், வடநாட்டில் பயில வழங்குதலின் வடசொல் ஆயிற்று. வடசொல் என்றதனான், தேய வழக்கு ஆகிய பாகதச் சொல் ஆகிவந்தனவும் கொள்க.

வடமொழி ஆவன. வாரி, மணி, குங்குமம் என்னும் தொடக்கத்தன. வட்டம், நட்டம், பட்டினம் என்பன பாகதம். பிறவும் அன்ன. *(5)*

398. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.

மேலதற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) எழுத்தொடு பொருந்திய சொல்லே அன்றிச் சிதைந்த சொற்கள் வரினும் தமிழ் வழக்கிற்குப் பொருந்தினவை நீக்கப்படா (எ-று)

அவையாவன : கந்தம், தசநான்கு (நெடுநல்.115) சாகரம், சத்திரம், முத்து, பவளம் எனவரும் பாகதச் சிதைவுஆகி வருவனவும் கொள்க.

இவை நான்கு சொல்லினும் இயற்சொல் பெயர்ச் சொல்லும் வினைச்சொல்லும் இடைச்சொல்லும் உரிச்சொல்லும் ஆகிவரும். திரிசொல்லும், திசைச்சொல்லும் பெரும்பான்மை பெயரும் சிறுபான்மை வினையும் ஆகிவரும். வடசொல் பெயராய் அல்லது வாராது. (6)

399. அந்நால் சொல்லும் தொடுக்கும் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி ெ த்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர்.

மேல் சொல்லப்பட்ட நால்வகைச் சொல்லும் செய்யுளகத்து விகாரப்படுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) அந்நால் சொல்லும் ஆவன - இயற்சொல்லும், திரிசொல்லும், திசைச்சொல்லும், வடசொல்லும் (எ-று) தொடுக்கும் காலை என்பது ஒன்றோடு ஒன்று தொடர்புபடச் செய்யுள் ஆக்கும் காலத்து (எ-று) வலிக்கும்வழி வலித்தல் என்பது மெல்எழுத்தினை வல்எழுத்தாகத் தொடுக்கவேண்டியவழி வல்எழுத்தாகத் தொடுத்தல். மெலிக்கும்வழி மெலித்தல் என்பது வல்எழுத்தினை மெல்எழுத்தாகத் தொடுக்கவேண்டும்வழி மெல்எழுத்தாகத் தொடுத்தல். விரிக்கும் வழி விரித்தல் என்பது பொருள் உணர்த்தும் சொல்லின் மேல் ஒன்றும் இரண்டும் எழுத்து விரிக்கவேண்டும்வழி விரித்துத் தொடுத்தல். தொகுக்கும் வழித் தொகுத்தல் என்பது பொருள் உணர்த்தும் சொல்லின்கண் ஒன்றும்

இரண்டும் எழுத்துத் தொகுத்துத் தொடுக்கவேண்டும்வழித் தொகுத்துத் தொடுத்தல். நீட்டும்வழி நீட்டல் என்பது குற்றெழுத்து ஆகி நின்று பொருள்படும் சொல்லை நெட்டெழுத்தாகத் தொடுக்க வேண்டும்வழி நெட்டெழுத்தாகத் தொடுத்தல். குறுக்கும்வழிக் குறுக்கல் ஆவது நெட்டெழுத்து ஆகி நின்று பொருள்படும் சொற்களைக் குற்றெழுத்து ஆகத் தொடுக்க வேண்டும்வழிக் குற்றெழுத்தாகத் தொடுத்தல். நாட்டல் வலிய என்மனார் புலவர் என்பது இவ்வாறாகச் செய்யுள்கண் வைத்தல் வலி உடைய என்று சொல்லுவர் ஆசிரியர் (எ-று) குற்றம் இல (எ-று)

விகாரப்படாமல் தொடுத்தல் சொல்லாமல் முடிந்ததாம்.

(உ..ம்) தத்தம் கிளவி தம்அகப் பட்ட
முத்தை வருஉம் காலம் தோன்றின்
ஒத்தது என்ப ஏஎன் சாரியை (எழுத்.தொகை.22)

என்றவழி முந்தை என்பது முத்தை என வல்எழுத்து ஆயிற்று. தண்டை இனக்கிளி கடிவோள் என்பதனுள் தட்டை எனல்பாலது தண்டைஎன மெல்எழுத்து ஆயிற்று. தண்ணம் துறைவர் தகவு இலர் என்றவழித் தண் என்பது தண்ணம் என விரிந்து நின்றது. வேண்டார் வணக்கி விறல்மதில் தான்கோடல் என்றவழி வேண்டாதாரை என்பது வேண்டார் எனத் தொக்கு நின்றது. தொகுத்தல் என்பது சுருக்குதல். அஃதேல் அத் 'தா' என்பது இவ்இலக்கணத்தான் தொகுக. ஐ என்பது உருபு தொக வருதல் (சூ.101) என்புழி அடங்காதோ எனின், ஐகாரம் உயர்திணை மருங்கின் ஒழியாது வருதலும் (எழுத்.தொகை.15) என ஓதப்படுதலின், அஃது உயர்திணைக்கண் தொகாது நிற்கவேண்டும். ஆயினும் செய்யுள் இன்பம் வேண்டித் தொகப்பெறும் என்பது இவ்இலக்கணத்தான் கொள்ளப்படும். பாசிழை ஆகம் பசப்பித்தான்என்றவழி, பச்சிழை எனல்பாலது பாசிழை என நீண்டு நின்றது. திருத்தார் நன்று என்றேன் தியேன், இதனுள் தீயேன் என்பது தியேன் எனக் குறுகி நின்றது. அந்நால் சொல்லும் இவ்வாறு விகாரப்படும் என்றமையான், ஒருமொழிக் கண்ணே இவை வருவன உணர்க. (7)

400. நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
எனநான்கு என்ப பொருள்புணர் நிலையே.

செய்யுளகத்துப் பொருள் உணரச் சொல்தொடுக்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) நிரல்நிறையும், சுண்ணமும், அடிமறியும், மொழிமாற்றும் என நான்கு என்று சொல்லுப; பொருள்மேல் மொழி புணர்க்கும் இயல்பு (எ-று)

செய்யுளகத்துத் திரிந்து பொருள்படும் சொல் எடுத்து ஓதினார். வழக்கின்கண் இயல்பு ஆகிச்செய்யுள்கண்ணும் இயல்புஆகி நடக்கும் பொருள்கள் ஓதவேண்டாமையின், அவை ஆமாறு தத்தம் சிறப்புச் சூத்திரத்துள் காட்டுதும். (8)

401. அவற்றுள்,
நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

நிரல்நிறை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல் சொல்லப்பட்டவற்றுள் நிரல்நிறை ஆவது வினையானும், பெயரானும் ஆராயப் புலப்படும் சொற்களைச் சேர நிறுத்தி, அவற்றிற்கு முடிபுஆக வரும் சொற்களைச் சேர நிறுத்துதல். (எ-று)

அடல்வேல் அமர்நோக்கி நின்முகம் கண்டே
உடலும் இரிந்துஓடும் ஊழ்மலரும் பார்க்கும்
கடலும் கனைஇருளும் ஆம்பலும் பாம்பும்
தடமதியம் ஆம்என்று தாம்

என்பதனுள் உடலும், ஓடும், ஊழ் மலரும், பார்க்கும் என்னும் வினை கடல், இருள், ஆம்பல், பாம்பு என்பனவற்றொடு கடல் உடலும், இருள் ஓடும், ஆம்பல் மலரும், பாம்பு பார்க்கும் என அடைவே முடிந்தவாறு கண்டுகொள்க.

கொடிகுவளை கொட்டை நுசுப்பு உண்கண்மேனி என்றவழி, கொடி, குவளை, கொட்டை என்னும் பெயர் நுசுப்பு, உண்கண், மேனி என்னும் பெயரொடு கொடி நுசுப்பு, குவளைக்கண், கொட்டை மேனி என அடைவே முடிந்தவாறு காண்க.

வினையும் வினையும் ஆக வருவன உளவேல்வந்தவழிக் கண்டுகொள்க.

நினையத்தோன்றி என்றமையான் பொருள் விளங்க நில்லாது, நினைத்தால் தோன்றுமாறாக மயங்கி வருவனவும் கொள்க. களிறும் கந்தும் போல நளிகடல், கூம்பும் கலனும் தோன்றும் என்றவழிக் களிற்றிற்குக் கூம்பும், கந்திற்குக் கலனும் உவமை அன்மையின், களிறு போலும் கலன், கந்து போலும் கூம்பு என்பன மயங்கி வந்தவாறு கண்டுகொள்க. (9)

402. சுண்ணம் தானே
பட்டாங்கு அமைந்த ஈர்அடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்.

சுண்ணம் ஆகிய பொருள்கோள் உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) சுண்ணம் ஆவது தான் அளவடியான் அமைந்த ஈர்அடிக்கண் எண்சீரும் ஒரோஒரு சீராகத் துணித்துப் பொருந்தும்வழி அறிந்து கூட்டிப் பொருள் உரைக்க. (எ-று)

பட்டாங்கு என்பது இயல்பு. அது மிகுதலும் குறைதலும் இல்லாத அளவு என்று பொருள் ஆயிற்று.

சுரைஆழ அம்மி மிதப்ப வரைஅனைய
யானைக்கு நீத்து முயற்கு நிலைஎன்ப
கானக நாடன் சுனை

இதனுள் சுரைமிதப்ப, அம்மிஆழ, யானைக்கு நிலை, முயற்கு நீத்து எனத் துணித்து ஒட்டப் பொருள் விளங்கியவாறு கண்டுகொள்க. இது நால்சீர்க்கண்ணே துணித்து ஒட்டியது.

தெங்கம்காய் போலத் திரண்டுஉருண்ட பைங்கூந்தல்
வெண்கோழி முட்டை உடைத்தன்ன மாமேனி
அஞ்சனத்து அன்ன பசலை தணிவேமே
வங்கத்துச் சென்றார் வரின்.

*(இ..ள்)* அஞ்சனத்து அன்ன பைங்கூந்தல்! மாமை பொருந்தின மேனிமேல் தெங்கம்காய் போலத் திரண்டு உருண்ட கோழிமுட்டை உடைத்தால் ஒத்த பசலை, வங்கத்துச் சென்றார்வரின், தணிவேம் (எ-று) இதனுள் எண்சீருள் ஒட்டி வந்தது. எண்சீர் என வரையறுத்தமையான் அதன்மேல் சென்று ஒட்டாது என்க. *(10)*

403. அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

அடிமறி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* அடிமறி என்பதன் செய்தி சீர்நிலை திரியாது அடிநிலை திரிந்து தடுமாறும் (எ-று)

சூரல் பம்பிய சிறுகான் யாறே
சூர்அர மகளிர் ஆர்அணங் கினரே
வாரல் எனினே யான்அஞ் சுவலே
சாரல் நாட நீவரல் ஆறே

இது, சாரல் நாட! நீவருகின்றநெறி சூரல்பம்பிய சிறுகான்யாறு, சூர்அர மகளிர் வருத்தம் செய்வார், வாராது ஒழி என யான் அஞ்சாநின்றேன் என அடிமறிப் பொருள் உணர்த்தியவாறு கண்டுகொள்க.

அஃதேல், இதனை யாப்பு இலக்கணத்துள் ஆரரய்தல் வேண்டும், சொல்நிலை திரியாமையான் எனின், இது தொடர்மொழித் திரிபு ஆகலான் ஈண்டுக் கூறப்பட்டது என்க. *(11)*

404. பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரியும்
தோற்றமும் வரையார் அடிமறி யான

மேலதற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) பொருள் ஆராயும் வழி ஈற்றடிக்கண் வரும் இறுதிச்சீர் ஈற்றுஅயல் அடிக்கண் திரிந்து பொருள்படும் நிலைமையும் நீக்கார் (எ-று)

இவ்வாறு வருவதும் அடிமறி என்றவாறாம். உதாரணம் வந்தவழிக் கண்டுகொள்க. (12)

405. மொழிமாற்று இயற்கை
சொல்நிலை மாற்றிப் பொருள்எதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளால்.

மொழிமாற்று உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மொழிமாற்றினது இயல்பு சொல்நின்ற நிலையை மாற்றி முன்னும் பின்னும் பொருள்இயைய ஏற்கும்வழிக் கொளுதவுதல் (எ-று)

மேல், அடிமறி மொழிமாற்று எனஓதினமையானும், சுண்ணமொழிமாற்று ஈர்அடி எண்சீர் என ஓதுதலானும், ஈண்டுச்சொல்நிலைமாற்றி எனப் பொதுப்பட ஓதின்மையானும் ஓர்அடிக்கண் நின்றசொல்லை அவ்அடிக்கண்ணும் பிறஅடிக்கண்ணும் முன்புஆயினும் பின்புஆயினும் ஏற்கும்வழிக் கொள்ளப்பெறும் என்றவாறு.

பன்மையும் ஒருமையும் பால்அறி வந்த
அந்நால் ஐந்தும் மூன்றுதலை இட்ட
முன்னுறக் கிளந்த உயர்திணை யவ்வே (சூ.202)

என்றவழி, மூன்று தலைஇட்ட அந்நால் ஐந்து என ஓர் அடிக்கண் மொழிமாறி நின்றது. ஆலத்து மேல குவளை குளத்துஉள, வாலின்

நெடிய குரங்கு என்றவழி, குரங்கு ஆலத்து மேல எனப் பிறிது அடிக்கண் மொழிமாறி நின்றது. பிறவும் அன்ன.

அஃதேல் பூட்டுவில் பொருள்கோள், புனல்யாற்றுப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள், அளைமறி பாப்புப் பொருள்கோள், கொண்டு கூட்டுப்பொருள்கோள் எனவும் ஒருசார் ஆசிரியர் உரைப்பவால் எனின், அவற்றுள் யாற்று ஒழுக்கும், அளைமறிப் பாப்புப் பொருள்கோளும் திரிவு இன்றிப் பொருள்படுதலின் இயல்பாம். கொண்டு கூட்டு, சுண்ண மொழிமாற்றுள் அடங்கும். பூட்டுவில் பொருள்கோள் மொழிமாற்றுள் அடங்கும். தாப்பிசைப் பொருள்கோள்கண் முன்ஒருசொல் வருவிக்க வேண்டுதலின், இது பிரிநிலை வினையே *(சூ.423)* என்னும் சூத்திரத்துள் அடங்கும். *(13)*

406. தநநு எஎனும் அவைமுதல் ஆகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா.

ஒட்டுப்பெயர்க்கு உரியது ஒரு மரபு உணர்த்துதல் நுதலிற்று.

***(இ-ள்)*** த, ந, நு, எ என்னும் அவை முதல் ஆகியவும் கிளைமை நுதலிய பெயரும் பொருள் நிலையான் பிரிக்க நினைக்கின் பிரிந்து பொருள்படா ஒட்டிநின்றே பொருள்படும் (எ-று) ஆகியவும் என்னும் உம்மை தொக்கு நின்றது.

த, ந, நு, எ என்னும் அவை முதல் ஆகிய ஆவன : தான், தாம், நாம், யாம், யான், நீ, நீர், நீயிர் என்று இடத்துப் பெயர்களும் ஆறாம் வேற்றுமைக் கிழமைப்பொருள் குறித்து, முதல் நிலை குறுகியும் திரிந்தும்வந்து, கிழமைப் பொருள் உணர்த்தும் சொல்லின் ஈற்று எழுத்தோடு ஒட்டி நின்று தமன், தமள், தமர், தமது, தம எனப் படர்க்கையினும், நுமன், நுமள், நுமர், நுமது, நும என முன்னிலையினும், நமன், நமள்,நமர், நமது, நம, எமன், எமள், எமர், எமது, எம எனத் தன்மையினும் வரும். கிளைநுதல் பெயர் ஆவன: இம் மூன்று இடத்தும் ஒட்டுப்பட்ட பெயர்கள்,

ஆறாம்வேற்றுமை முறைமையைக்குறித்து மேல் சொல்லியவாற்றான் தந்தை, நுந்தை, எந்தை எனவும், தாய், ஞாய்,யாய் எனவும், தம்முன், நும்முன், எம்முன் எனவும், தம்பி, நும்பி, எம்பி எனவும் முதல்வனையும், ஈன்றாளையும், முன்பிறந்தானையும், பின் பிறந்தானையும் உணர்த்தும் பன்மைச் சொற்கள் எல்லாம் பொருள் முகத்தான் தம்மையும் பிறரையும் உணர்த்துவன இச்சொற்கள் எல்லாம் ஏனைய போலப் பிரிக்கப்படா, ஒட்டி நின்றே பொருள்படும் (எ-று) வந்தது கொண்டு வாராதது உணர்த்தல் என்பதனான், காரணப்பெயர் ஆகி வரும் தொழில் பெயரும், உடைமைப் பெயரும், பண்புப்பெயர் முதலாயினவும் பிரிப்பப் பிரியா என்று கொள்கப் பிறன், பிறள், பிறர் என்பவோ எனின், அவை ஒட்டுப்பெயர் அல்ல என்க. *(14)*

407. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகைஎன்று
அவ்ஆறு என்ப தொகைமொழி நிலையே.

தொகைச் சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) வேற்றுமைப்பொருள் குறித்த தொகையும், உவமப்பொருள் குறித்த தொகையும், தொழில் குறித்த தொகையும், பண்பு குறித்த தொகையும், உம்மைத் தொகை செய்யும் தொகையும், அல்பொருள் குறித்த தொகையும் என அறுவகைப்படும் தொகைச்சொல்லது நிலைமை. (எ-று)

தொகைச் சொல் ஆவது: பொருள் உணர்த்தும் சொல்ஆயினும், தொழில் உணர்த்தும் சொல் ஆயினும் இரண்டுசொல் விட்டிசைத்து நில்லாது ஒட்டி நிற்பது. இஃது ஒட்டுப்பெயர் என்னும் குறியும் பெறும். உதாரணம் வருகின்ற சூத்திரத்துள் காட்டுதும். *(15)*

408. அவற்றுள்,
வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல.

வேற்றுமைத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) வேற்றுமை இயல்பு உடையன வேற்றுமைத் தொகை. (எ-று)

வேற்றுமை இயல என்றதனான், வேற்றுமைகட்கு ஓதிய செயப்படுபொருள் முதலாக இடம் ஈறாக வரும் பொருண்மைக் கண் தொகும்சொல் வேற்றுமைத் தொகையாம் என்று கொள்க. முதல் வேற்றுமை பெயர்ப்பயனிலை கொள்வழியும் விட்டிசைத்தே நிற்றலானும், எட்டாவது விரிந்து நிற்றலானும் இவையிற்றை ஒழித்து ஏனைய தொகும் என்று கொள்க. ஏகாரம் தேற்றேகாரம்.

அவைதொகுமாறு : படையைப் பிடித்தகை, குழையை உடையகாது, குதிரையான் பூட்டப்பட்டதேர், தாயொடுகூடி மூவர், கடி சூத்திரத்திற்கு வைத்தபொன், வரையினின்றும் வீழா நின்ற அருவி, யானையது கோடு, குன்றத்துக்கண் வாழாநின்ற கூகை என்பன - படைக்கை, குழைக்காது, குதிரைத்தேர், தாய்மூவர், கடி சூத்திரப் பொன், வரை அருவி, யானைக் கோடு, குன்றக் கூகை எனத்தொகும். நிலத்தைக் கடந்தான், வாளான் வெட்டினான், கொலைக்கு உடம்பட்டான், வரையினின்றும் பாய்ந்தான், குன்றத்துக்கண் இருந்தான் என்றவழி, இறுதி நின்ற சொல் தொழில் உணர்த்தாது, அது செய்தார்க்குப் பெயர் ஆகி வந்துழி, நிலம் கடந்தான், வாள்வெட்டினான், கொலை உடம்பட்டான், வரைபாய்ந்தான், குன்றத்து இருந்தான் என இரண்டு பெயரும் ஒட்டி ஒருசொல் ஆகி வரும். கள்ளை உண்டல், வாளான்வெட்டடல், கொலைக்கு உடம்படுதல், வரையினின்றும் பாய்தல், மாடத்துக்கண் இருத்தல் என்பன கள் உண்டல், வாள்வெட்டடல், கொலை உடம்படுதல், வரைபாய்தல், மாடத்து இருத்தல் எனத்தொகும்.

அஃதேல் இவ்வாறு வருவன உருபுதொகை என அடங்காவோ எனின், ஆண்டு அவ்வேற்றுமைகட்கு ஓதிய வாய்பாட்டான், தொழிலோடும், பெயரோடும் முடிவுழி உருபுமாத்திரம் தொக்கு இரண்டு சொல் ஆகி நிற்கும்; ஈண்டு ஒரு சொல் ஆகி வரும். ஆறாவதன்கண் வரும் தொகை

உருபுதொகையும் பொருள் தொகையும் என வேறுபாடு இன்றால் எனின், ஆண்டும் வேறுபாடுஉளது. மரக்கோடு என்றவழி ஒட்டுப்பட்டுப் பொருள் தொகை ஆகி நின்றது. மரத்தின் கோடு என்றவழி, உருபுதொகை ஆகி இரண்டுசொல் ஆகி நின்றது. இவைசொல் நோக்கான் உணர்க. வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல என்றதனான் அவ்வேற்றுமை மொழிமாறி நிற்கும் ஆகலின், அத்தொகைச்சொல் மொழிமாறி நின்று ஒட்டுப்படுதலும் கொள்க. மலையது இடை, மலையது அகம் என்பன இடைமலை, அகமலை எனவும் வரும். பிறவும் அன்ன

அஃது அற்றுஆக, உலகம் உவப்ப வலன்ஏர்பு திரிதரு, பலர்புகழ் ஞாயிறு கடல்கண் டாஅங்கு ஓவுஅற இமைக்கும் சேண்விளங்கு அவிர்ஒளி, உறுநர்த் தாங்கிய மதன் உடை நோன்தாள், செறுநர்த் தேய்த்த செல்உறழ் தடக்கை, மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன் (முருகு.1-6) என்பது பலசொல் ஆகி வந்து கணவன் என்பதனொடு முடிந்து கிடத்தலான், இரண்டுசொல் ஒரு தொகைஆம் என்றல் பொருந்தாதால் எனின், எவ்வாறுவரினும் இரண்டுசொல் ஆகி வந்து அல்லது ஒட்டுப்படாது என்று கொள்க. அஃது ஆயவாறு என்னை எனின், பூத்தொடை போலக் கொள்க. அஃது இரண்டு ஆயவாறு என்னை எனின், முற்பட இரண்டு பூவை எடுத்து ஒன்றுஆகக் கட்டும். அதன்பின் அவ்இரண்டும் ஒன்று ஆகிநின்ற தொடையோடே கூடப் பின்னும் ஒருபூவை எடுத்துக்கட்டும். அதன்பின் அம்மூன்று பூவும் ஒன்றாகக் கட்டப்பட்ட தொடையோடே பின்னும் ஒருபூவை எடுத்துக்கட்டும். அவ்வாறு கட்டப்பட்ட தொடைகளைப் பின்னும் இரண்டு பின்ஆகச் சேர்த்து அது ஒன்றாக்கும். இவ்வாறே எல்லாப் பூவும் இரண்டு ஒன்றாக இணைத்தது ஆம். சொல்தொடையும் ஒட்டுப்படும்கால் அவ்வாறு வரும் என்று கொள்க.

உலகம் உவப்ப ........ வாள்நுதல் கணவன் என்பது இரண்டு ஒன்று ஆக ஒட்டியவாறு என்னை எனின், உலகம் என்பது உலகத்து உள்ளார்க்குப் பெயர் ஆகி உவப்ப என்னும் செயஎன் எச்சத்தொடு முடிந்தது. வலன்ஆக என்னும் எச்சத்துக்கண் ஆக

என்பது செய்யுள் விகாரத்தான் தொக்கு நின்றது. தொக்கு நின்ற காலத்தும் அதற்கு இயல்பு முற்பட்ட நிலைமை என்று கொள்க. என்போல எனின், வாலும் செவியும் இழந்த ஞமலியைப் பின்னும் ஞமலி என்றே வழங்கினால் போல. உவப்ப, வலன்ஆக என்னும் செயஎன் எச்சமும், ஏர்பு என நிகழ்காலம் குறித்த செய்பு என் எச்சமும் திரிதரு என்னும் பெயர் எச்சத்தொடு முடிந்தன. பலரான் என்னும் மூன்றாம் வேற்றுமை ஏற்ற பெயர் உருபு தொக வருதல் என்னும் இலக்கணத்தான்தொக்குப் பலர் என நினற்து. அது புகழப்பட்ட என்பதற்கு அடை ஆகி நின்றது. அடை எனினும் விசேடணம் எனினும் ஒக்கும். புகழப்பட்ட என்னும் பெயர் எச்சம், உண்சோறு என்றால் போலப் பொருள் மேல்வந்து வினைத் தொகை ஆகிப் புகழ்ஞாயிறு என ஒட்டி ஒருசொல் ஆகி நின்றது. அது திரிதரு என்னும் பெயர் எச்சத்திற்கு முடிபு ஆயிற்று. ஞாயிறு என்பதற்கு முன் உள்ள சொல் எல்லாம் தொகுத்துநோக்க ஞாயிற்றிற்கு அடைஆகி நிற்ன. ஞாயிற்றை என்னும் உருபு தொக்கு நின்றது. கடலின்கண் என்னும் உருபு தொக்கு நின்றது. கண்டாங்கு என்பது கண்டால்போலும் என்னும் உவமப்பொருள் உணரநின்றது. இத்துணையும் உணர்த்தப்பட்டது உதயஞாயிறு போல என்னும் பொருண்மை. ஓவற என்பது ஓவுஒழிவு; அற என்பது இல்லை ஆக என்னும் செய என் எச்ச வாய்பாடு. அதற்கு ஓவு என்பது அடைஆகி நின்றது. அற என்பது இமைக்கும் என்னும் பெயர் எச்சத்தொடு முடிந்தது. சேணின்கண் என்பது சேண் என உருபு தொக்கு நின்றது. அது விளங்கும் என்பதற்கு அடை ஆகி நின்றது. அவிர் என்பது விளக்கத்தின் மிகுதியைக் குறித்து வந்து ஒளி என்னும் பெயரொடு வினைத்தொகை ஆகி, அவிர்ஒளி என ஒருசொல் ஆயிற்று.அது விளங்கு என்பதனோடு ஒட்டி வினைத்தொகை ஆகி, விளங்கு அவிர்ஒளி என ஒருசொல் நீர்மைப்பட்டது. அஃது இமைக்கும் என்னும் பெயர் எச்சத்திற்கு முடிபு ஆயிற்று. உலகம் என்பது முதலாக இத்துணையும் கூறப்பட்டது ஞாயிறு போல் விளங்கும் ஒளி என ஒளிக்கு அடை கூறுதலான், அவ்ஒளியோடே எல்லாச்சொல்லும் முற்றி நின்றன. உறுநரை என்பது உறுநர் என உருபு தொக்கு நின்றது. தாங்கியஎன்பது பெயர்எச்சம். அதற்கு உறுநர் என்பது அடைஆகி நின்றது. மதன் என்பது வலி. அது மத என்னும் உரிச்சொல் ஈறு

திரிந்து நின்றது. மதனை என்னும் ஐகாரம் தொக்கு நின்றது. உடைய என்பது உடை எனச் செய்யுள் விகாரத்தான் தொக்கு நின்றது. நோன்மை - பொறை. திருஅடி அடைவார் பலர் ஆதலின், அவர் எல்லாரையும் பொறுக்கவல்ல தாள் என்னும் பொருண்மைத்து ஆகி, நோன்தாள் என வேற்றுமைத் தொகை ஆகி ஒருசொல் நீர்மைப்பட்டது. அது மதன் உடை நோன்தாள் என அடை அடுத்து உறுநர்த் தாங்கிய என்னும் பெயர் எச்சத்திற்கு முடிபு ஆயிற்று. செறு நரை என்பது செறுநர் என உருபு தொக்கு நின்றது. தேய்த்த என்பது பெயர் எச்சம். அதற்குச் செறுநர் என்பது அடைஆகி நின்றது. செல் என்பது மழை. உறழ்தல் என்பது ஒத்தல் அது தடக்கை என்பதற்கு உவம நிலையின் அடைஆகி நின்று, செல்உறழ் தடக்கை என்று ஒருசொல் நீர்மைப்பட்டு நின்றது. அது தேய்த்த என்னும் பெயர் எச்சத்திற்கு முடிபு ஆயிற்று. மறு என்பது குற்றம். இல் என்பது இல்லாமை. குற்றம் இல் கற்பு எனக் கற்பிற்கு அடை ஆயிற்று. வாள் என்பது ஒளி. அது ஒளிநுதல் என அடை அடுத்து நின்று சினையின் கூறும் முதல்அறி கிளவி ஆகி அதனை உடையாட்குப் பெயர்ஆகி நின்றது. அது மறுஇல் கற்பின் வாள்நுதல் எனப் பண்புத்தொகை ஆகி ஒருசொல் நடை ஆயிற்று. அது கணவன் என்னும் பெயரொடு கிழமைப் பொருட்டு ஆகிய ஆறாம் வேற்றுமைத்தொகை ஆகி, மறுஇல் கற்பின் வாள்நுதல் கணவன் என இரண்டாம் வேற்றுமைத் தொகை ஆகிய ஒரு பெயர் ஆயிற்று. அது செல் உறழ்தடக்கைக் கணவன் என இரண்டாம் வேற்றுமைத் தொகை ஆகி ஒருசொல் நீர்மைப்பட்டது. அது மதன்உடை நோன்தாள் என்பதனோடும் அவ்வாறே ஒட்டி நோன்தாள் தடக்கைக் கணவன் என ஒருசொல் நடை ஆயிற்று. அது சேண்விளங்கு அவிர்ஒளி என்பதனோடும் அவ்வாறே ஒட்டிச் சேண்விளங்கு அவிர் ஒளி நோன்தாள் தடக்கைக் கணவன் என ஒருசொல் நடை ஆயிற்று. இவ்வாறே சொல்நிலை உணர இரண்டு சொல்லே தொகை ஆகியவாறு கண்டுகொள்க. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய (சூ.415) என்று ஓதினமையானும் ஆசிரியன் கருத்து இது என்று கொள்க. (16)

409. உவமத் தொகையே உவம இயல.



உவமத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) உவம இயல்பு உடையன உவமத்தொகையாம் (எ-று)

உவமையாவது தொழிலான் ஆதல், பயனான் ஆதல், வடிவினான் ஆதல், வண்ணத்தினான் ஆதல் இதுபோலும் இது என ஒன்றோடு ஒன்று உவமை கூற வருவது. அவ்உவமையும் உவமிக்கப்படும் பொருளும் விட்டிசைத்து நில்லாது செறிய நிற்பது உவமைத் தொகையாம் என்றவாறு.

புலியன்ன பாய்த்துள், மழை அன்ன வண்கை,துடி அன்ன இடை, பொன் அன்ன மேனி என்பன புலிப்பாய்த்துள், மழை வண்கை, துடி இடை, பொன்மேனி எனவரும். பிறவும் அன்ன.

இவை விரியுங்கால்த்துப்புலியை ஒக்கும் பாய்த்துள், மழையை ஒக்கும் வண்கை எனவும் விரிதலானும், காப்பின்ஒப்பின் (சூ.70) என இரண்டாவதன்கண் ஒப்பு ஓதலானும் உவமைத்தொகை என்பது ஒன்று இல்லை; இவையும் வேற்றுமைத் தொகையாம் எனின், ஒக்கும். மழை அன்ன வண்கை என்றவழி, இரண்டாம் உருபு விரியாமலும் தான்நின்று உவமிக்கப்படும் பொருளைக் காட்டுதலின். இவ்வாறு வரும் சொற்களை நோக்கி உவமைத்தொகை என்றார். அதனானே அன்றே உவமஇயல்பு உடையன உவமத்தொகை என ஓதுவார் ஆயினார்.

இன்னும், உவம இயல உவமத்தொகை என்றதனான் உவமையும், உவமிக்கப்படும் பொருளும் மாறிநிற்றலும் கொள்க. முகத்தாமரை, கைம்மாரி என வரும். இவை உருவகம் அன்றோ எனின், உருவத்தொகை என்று ஓதாமையானும், பண்புத் தொகையுள் அடங்காமையானும் உவமையுள் அடங்கும். இத்தொகையை வேற்றுமைத் தொகையொடு சேர ஓதிய அதனான் அதனோடு இதற்கு ஒற்றுமை உண்டு என்று கொள்க. (17)

410. வினையின் தொகுதி காலத்து இயலும்.



வினைத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* வினையின் தொகுதி காலச்சொல்லோடே நடக்கும் (எ.று)

வினைச் சொல்லாவது தொழிலும், காலமும், பாலும் உணர்த்தலின், பால் உணர்த்தும் சொல் முற்றுச்சொல் ஆகி நின்று தொகைநிலை ஆகாமையானும், பால் காட்டாத வினை எச்சம், பெயர் எச்சம் என்னும் இரண்டினுள்ளும் வினைஎச்சம் முற்றுவினைச் சொல்லோடு அல்லது முடியாமையானும் ஈண்டுத் தொகுவதும் விரிவதும் பெயர் எச்சம் என்றுகொள்க. அது தொகும் காலத்துக் காலப்பொருளை உணர்த்தும் சொல்லே தொகுவதும் விரிவதும் என்றுகொள்க. தொழிலும் பொருளும் விட்டிசைத்து நில்லாது ஒற்றுமைப்பட்டதனை வினைத்தொகை என்றார்.

*(உ..ம்)* கொல்லும் யானை, கொன்ற யானை, உண்ணும் நீர், உண்டநீர், அரியும் வாள், அரிந்தவாள், செல்லும் இடம், சென்ற இடம், உண்ணும் பொழுது, உண்ட பொழுது, கொல்லும் கொலை, கொன்ற கொலை என்பன கொல்யானை, உண்நீர், அரிவாள், செல்இடம், உண்பொழுது, கொல்கொலை எனத்தொகும். பிறவும் அன்ன. *(18)*

411. வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின்
அன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்னது இதுஎன வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே.

பண்புத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* வண்ணம், வடிவு, அளவு, சுவை என்பனவற்றினும், அத்தன்மைய பிறவினும் ஆகி, ஒரு பொருளினது குணத்தைக் கருதி இன்னது இது என ஒன்றை ஒன்று விசேடித்து வரும் இயல்பினை உடைய எல்லாச் சொல்லும் பண்புத் தொகையாம் (எ-று)

கரியது குதிரை, வட்டம் பலகை, நெடியது கோல், திவ்விது

கரும்பு என்பன கருங்குதிரை, வட்டப் பலகை, நெடுங்கோல், தீங்கரும்பு எனத் தொகும்.

அன்னபிறவும் என்றதனான், தண்ணீர், வெந்நீர் என்பன முதலாயின கொள்க.

அஃதேல் இவை கரிய குதிரை, நெடிய கோல் எனப் பெயர் எச்ச வாய்பாட்டானும், பண்பு பற்றி வரும் சொல் வினைக்குறிப்பு ஆகி முடிதலானும் வினைத்தொகையுள் அடங்கும் எனின், பண்புத்தொகை ஒரு வாய்பாட்டான் விரிக்கப்படாது என்பது எழுத்து அதிகாரத்துள் கூறுதலின் பெயர் எச்சவாய்பாடும் வரும் வினைக்குறிப்பு ஆதலானே அன்றே வினைத்தொகையொடு சேர ஓதுவார் ஆயிற்று என உணர்க.

கருமையை உடைய குதிரை என வேற்றுமைத் தொகையாயும் அடங்குமால் எனின், இன்னது இது என ஒன்றை ஒன்று விசேடித்துவருதல் வேண்டும். அவ்வாறு வருங்கால் வேற்றுமைத்தொகை ஆகாது என்க. வேற்றுமைத்தொகை, உவமைத்தொகை, வினைத்தொகை, பண்புத்தொகை என்பன தம்முள் ஒருபுடை ஒப்புமை உடைய ஆதலின் பாணினியார் தற்புருட சமாசம் என்று குறிப்பிட்டார்.

இனி, இன்னது இதுஎன வரூஉம் இயற்கை என்ன கிளவியும் என்றதனான், பண்புபற்றி வருதலே அன்றிப் பெயரினான் ஒன்றைஒன்று விசேடித்துவந்து ஒட்டுப்படினும் பண்புத் தொகையாம் என்று கொள்க. வாணிகச்சாத்தன், சாரைப்பாம்பு என வரும். ஆயன் சாத்தன், ஆசிரியன் நல்லந்துவன் என எழுவாயும் பயனிலையும் ஆகி வருதல் இன்றி, ஒட்டுப்படாத நிலைமைய ஆயினும், முதல்பெயர் விசேடணம் ஆகிவரின், அதுவும் பண்புத்தொகையாம் என்று கொள்க. (19)

412. இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண்இயற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே.

உம்மைத்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இருபெயர் முதலாகச் சொல்லப்பட்ட அறுவகையும் உம்மைத்தொகை (எ.று)

(உ..ம்) இருபெயர் ஆவன பொருள்பெயரும், தொழில்பெயரும். அவையாவன: கபிலன், பரணன், ஆடல், பாடல்.

பலபெயராவது பன்மை குறித்த பெயர். அவை பார்ப்பார், சான்றோர் என்பன. மேல் சொல்லப்பட்டன ஒருமை குறித்தலின் இது வேறு ஓதப்பட்டது.

அளவின் பெயராவது அளக்கப்பட்ட பொருளைக் குறியாது அளவு தன்னைக் குறித்து நிற்பது. அவை உழக்கு, நாழி, குறுணி, பதக்கு, தூணி, கலம் என்பன. கூப்பிடு, காதம் என்பனவும் அதுவே.

எண் இயற்பெயராவது எண்ணினான் பொருள் குறித்து இயலும் பெயர். அவையாவன பதின்மர், ஐவர் என்பன.

நிறைப்பெயர்க் கிளவி என்பது நிறுக்கப்பட்ட பொருளைக் குறியாது நிறையின் பெயராகி வருவது. அவை குன்றி, மஞ்சாடி, கால், அரை, கழஞ்சு என்பன.

எண்ணின் பெயராவது எண்ணப்பட்ட பொருளைக் குறியாது எண் தன்னைக் குறித்து நிற்பது. அவை ஒன்று, இரண்டு, பத்து, நூறு என்பன.

அவ்அறுகிளவியும் கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே என்பது அறுவகைப்பட்ட பெயரையும் குறித்த நிலைமைத்து உம்மைத்தொகை என்றவாறு.

வரையறுத்து ஓதாமையான் இரண்டும் பலவும் வரப்பெறும் என்று கொள்க. கபிலனும் பரணனும் வந்தார்

எனல்பாலது கபிலபரணர் வந்தார் என வரும். ஆடலும் பாடலும் தவிர்ந்தார் என்பது ஆடல்பாடல் தவிர்ந்தார் எனவரும். பார்ப்பாரும் சான்றாரும் வந்தார் எனல்பாலது பார்ப்பார் சான்றார் வந்தார் என வரும். தூணியும் பதக்கும் குறையும் எனல்பாலது தூணிப்பதக்குக் குறையும் எனவரும். பதின்மரும் ஐவரும் போயினார் எனல்பாலது பதினைவர் போயினார் எனவரும். கழஞ்சும் அரையும் குறையும் எனல்பாலது கழஞ்சுஅரை குறையும் என வரும். பத்தும் இரண்டும் குறையும் எனல்பாலது பன்னிரண்டு குறையும் எனவரும்.

இனி, புலிவில் கெண்டை, அந்தணர் அரசர் வணிகர், தூணிப்பதக்கு முந்நாழி, நூற்று இருபத்து ஐவர், மாகாணி அரைக்காணி, நூற்றுமுப்பத்து மூன்று எனவரும். பிறவும் அன்ன.

ஏற்புழிக்கோடல் என்பதனான் எண் உம்மையே ஈண்டுத் தொகுவது என்று கொள்க.

இடைச்சொல் ஒத்தினுள் உம்மைதொகும் என்றாரால் எனின், ஆண்டு விரிந்து நின்ற சொல்லின்கண் உம்மை தொகவும் பெறும் என்றார். ஈண்டு ஒட்டி நிற்கும் சொல்லினது இலக்கணம் கூறினார் என்க. *(20)*

413. பண்பு தொக வரூஉம் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின்று இயலும் அன்மொழித் தொகையே.

அன்மொழித்தொகை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** பண்புதொக வரும் பெயர்க்கண்ணும், உம்மைத் தொக்க பெயர்க்கண்ணும், வேற்றுமை தொக்க பெயர்க்கண்ணும் இறுதிக்கண் நின்று இயலும் அன்மொழித்தொகை. (எ-று)

அல்லாதமொழி தொகுதலின் அன்மொழித்தொகை ஆயிற்று. இம்மூவகைத் தொகையினும் ஈற்று நின்று இயலும் என்றதனான் முன்னும் பின்னும் நின்ற இரண்டு சொல்லானும் உணரப்படும் பொருண்மை உடைத்து அன்மொழித் தொகை என்று கொள்க.

(உ..ம்) கல்லார்ப் பிணிக்கும் கடுங்கோல் அது அல்லது, இல்லை நிலக்குப் பொறை (குறள்.570) என்றவழிக் கடுங்கோல் என்பது அஃது உடைய அரசர்க்குப் பெயராகி வருதலின், அன்மொழித் தொகை ஆயிற்று. கோலிற்கு அடையாகி நின்ற கடுமையும் அரசன் மேல் ஏறியவாறு கண்டுகொள்க. இது பண்புபற்றி வந்தது.

தகர ஞாழல் என்பது உம்மைத்தொகை. இவையிற்றை உறுப்பாக அமைக்கப்பட்ட சாந்தினையும் தகரஞாழல் என்ப ஆகலின், அன்மொழித்தொகை ஆயிற்று. தூணிப்பதக்கு என்றவழி அளவிற்குப் பெயராதல் அன்றி அளக்கப்படும் பொருளுக்கும் பெயர் ஆகியவழி அன்மொழித் தொகையாம். இவை இரண்டு சொல்லும் அன்மொழித் தொகைமேல் ஏறியவாறு கண்டுகொள்க. இஃது உம்மை பற்றி வந்தது. பொற்றொடி என்பது வேற்றுமைத் தொகை. அதனை உடையாட்டுப் பெயராகியவழி அன்மொழித் தொகையாம். ஈண்டுத்தொடிக்கு அடையாகி நின்ற பொன், தொடியை உடையாளது செல்வத்தைக் காட்டுதலின், இவ்இரண்டு சொல்லும் அதனை உடையாளைக் குறித்தவாறும் அறிந்துகொள்க.

துடிஇடை எனவும் தாழ்குழல் எனவும் உவமைத் தொகைப் புறத்தும், வினைத்தொகைப் புறத்தும் அன்மொழித்தொகை வருமால் எனின், துடி என்பதூஉம், தாழ் என்பதூஉம், இடை, குழல் என்பவற்றிற்கு அடையாகிவருதல் அல்லது, அவற்றை உடையாட்குப் பெயர் ஆகுங்கால், இறுதிநின்ற பெயர்ப் பொருண்மைவந்து ஏனைய வாராமையின், ஆகுபெயர் எனின் அல்லது அன்மொழித்தொகை ஆகாது எனக்கொள்க. அதனானே அன்றே இருபெயர் ஒட்டும் (சூ.111) என ஆகுபெயர்க்கண் எடுத்து ஓதுவார் ஆயிற்று என உணர்க. (21)

414. அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குஉடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
எனநான்கு என்ப பொருள்நிலை மரபே.

மேல் சொல்லப்பட்ட தொகைக்கண் பொருள் நிற்குமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல்சொல்லப்பட்ட தொகைச்சொற்கள் தாம் முன்மொழிக்கண் பொருள் நிற்றலும், பின்மொழிக்கண் பொருள் நிற்றலும், இருமொழி மேலும் பொருள் நிற்றலும், அத்தொகைமேல் பொருள் நில்லாது பிறமொழிக்கண் பொருள் நிற்றலும் என நால்வகைப்படும் என்ப, பொருள் நிற்கும் மரபு (எ-று)

அவைதாம் என எல்லாத் தொகையும் சுட்டுதலான், அவற்றுள் இவ்இலக்கணம் அவ்அத்தொகைக்கு ஏற்றவழிக் கொள்ளப்படும்.

(உ..ம்) மாம்பழம் தின்றான் என்றவழித் தின்னப்பட்டது பழம் ஆதலின், அத்தொகைச் சொல் முன்மொழிக்கண் பொருள் நின்றது.

இடைமுலைக் கிடந்தும் நடுங்கல் ஆனீர் என்றவழிக் கிடக்கப்பட்டது முலைஇடை ஆதலின், பின்மொழிக்கண் பொருள் நின்றது. குதிரைத்தேர் ஓடிற்று என்றவழிக் குதிரைஓடத் தேரும் ஓடுதலின் இருமொழிமேலும் பொருள் நின்றது. பொற்றொடி வந்தாள் என்றவழிப் பொற்றொடியை அணிந்தாள் மேல் பொருள் நிற்றலின், அம்மொழி அல்லாத மொழிமேல் பொருள் நின்றது. இவை நான்கும் வேற்றுமைத் தொகை. ஏனைத் தொகைக்கண்ணும் பொருள் நிற்குமாறு ஏற்பனவற்றுள் கண்டுகொள்க. *(22)*

415. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய.

தொகைச் சொற்கு எல்லாம் உரியதுஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* அறுவகைத் தொகைச் சொல்லும் ஒருசொல் நடைய.(எ-று)

என்பது என்சொன்னவாறோ எனின், இரண்டு சொல்ஆகி ஒட்டுப்பட்ட பெயர் பிரிந்து நில்லாது ஒருபெயர் மாத்திரம் ஆகி நிற்கும் என்றவாறு.

*(உ..ம்)* யானைக்கோடு கிடந்தது, துடிஇடை நன்று, கொல் யானை ஓடிற்று, கருங்குதிரை வந்தது, கழஞ்சுஅரை குறைந்தது, பொற்றொடி வந்தாள் என எழுவாயும் பயனிலையும் ஆகியும், யானைக் கோட்டை, துடி இடையை, கொல் யானையை, கருங்குதிரையை, உவாப்பதினான்கை, கழஞ்சு அரையை, பொற்றொடியை என உருபு ஏற்றும் ஒருசொல் நடைய ஆகி வந்தவாறு கண்டுகொள்க. *(23)*

416. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்துஎன மொழிமனார் புலவர்.

எய்தியது ஒருமருங்கு விலக்குதலை உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* உம்மைத்தொகையுள், உயர்திணைப் பொருள்மேல் வரும் உம்மைத் தொகை பலர்சொல் நடைத்து ஆகித் தொடரவும் பெறும் (எ-று)

*(உ..ம்)* கபிலபரணர் வந்தார்.

அஃதேல், ஒட்டுப்பெயர் ஒருசொல் நடைத்து என்றல் அமையாது, பலசொல் நடைத்து ஆகியும் சிலசொல் வருதலின் எனின், ஆண்டும் ஒருசொல் நடைத்து என்பதே கருத்து: ஒருவர் என்பது பன்மை வினைகொண்டு முடிந்தால் போல், உயர்திணை

ஒட்டுப்பெயர் பன்மை வினை கொண்டு முடியும் எனச் சொல்முடிவு நோக்கிக் கூறினார் என்க. *(24)*

417. வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றுஅவற்று இயல்பான்
இன்ன என்னும் குறிப்பு உரை ஆகும்.

ஒரு சார் சொற்களுக்கு குறியிடுதல் உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) வாரா மரபினவற்றை வருவன ஆகக் கூறுதலும், என்னா மரபினவற்றை என்றனவாகக் கூறுதலும், அத்தன்மைய பிறவும் எல்லாம் அவற்று அவற்று இயல்பினான், இத்தன்மைய என்னும் குறிப்பு உரை ஆகும். (எ-று)

வாரா மரபின என்றதனான் செலவு வரவு என்பன கொள்ளப்படும். என்னா மரபின என்றதனான் நினைத்தலும், சொல்லுதலும், செய்தலும் கொள்ளப்படும். அன்னவை எல்லாம் என்றதனான் காணா மரபின, கேளாமரபின என்பன கொள்ளப்படும். இவ்வாறு சொல்லுதல் குற்றம் ஆயினும், சொல்லுவான் குறிப்பு வேறு ஆதலின் குறிப்புமொழி ஆயிற்று. இதனானே சில சொற்களுக்குக் குறிப்பு மொழி எனவும் குறி இட்டாராம்.

(உ..ம்) அம்மலை வந்து இதனொடு பொருந்திற்று. மலை வருதல் இன்மையின் அதுவும் இதுவும் ஒன்றிக் கிடந்தன என்னும் பொருண்மை குறித்து இவ்வாறு சொல்லப்பட்டது. சென்றது கொல் போந்ததுகொல் செவ்வி பெறும்துணையும், நின்றதுகொல் நேர்மருங்கில் கைஊன்றி - முன்றில், முழங்கும் கடாயானை மொய்ம் மலர்த்தார் மாறற்கு, உழந்துபின் சென்றஎன் நெஞ்சு. இதனுள் வந்தன எல்லாம் குறிப்புமொழி என்று கொள்க.

அன்னச்சேவல் அன்னச்சேவல் (புறம்.67) என்னும்

புறப்பாட்டினுள் இரும்பிசிர் ஆந்தை அடியுறை எனின் என்பது அன்னச் சேவலைக் குறித்துக் கூறுதலின் சொல்லா மரபின சொல்லும் ஆக வந்த குறிப்பு மொழி. நீலம் உண்டதுகில் - நீலம் பற்றின துகில் என்னும் பொருண்மை குறித்து உண்டதாகக் கூறப்பட்டது. பிறவும் அன்ன. *(25)*

418. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று
அவைமூன்று என்ப ஒருசொல் அடுக்கே.

ஒரு பொருள்மேல் ஒருசொல் அடுக்கி வருவழி வரும் வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* ஒருசொல் மேல் அடுக்கி வரும்சொல் இசைநிறை ஆகி அடுக்குதல், அசைநிலை ஆகி அடுக்குதல், பொருளொடு புணர்ந்து வருதல் என மூவகை என்ப ஆசிரியர். (எ-று)

ஒருசொல் அடுக்கு எனப் பொதுவாக ஓதினமையான் பெயர் முதலாகிய நான்கு சொல்லும் அடுக்குப்பெறும் என்று கொள்க.

(உ..ம்) துறக்குவன் அல்லன் துறக்குவன் அல்லன்
தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன்
தொடர்புள் இனையவை தோன்றின் விசும்பின்
சுடருள் இருள்தோன்றி யற்று. (கலி.41)

இதனுள் முந்துற்றசொல் பொருள் உணர்த்திற்று. ஏனைய இசைநிறைக்கண் வந்தன.

இசைநிறையாவது பாட்டுக்குறித்து வரும். அசைநிலை செய்யுள் இன்பம் குறித்து வரும். குறங்குஎன, மால்வரை ஒழுகிய வாழை வாழைப், பூ என பொலிந்த ஓதி (சிறுபாண்.20) என்றவழி, வாழை என்னும் சொல் இரண்டனுள் ஒன்று அசைநிலை ஆயிற்று. நின்றன நின்றன நில்லா என உணர்ந்து, ஒன்றின ஒன்றின வல்லே செயின்செய்க (நாலடி.4) என்றவழி, நின்றன பல ஆதலின் அடுக்கிவந்த சொல்லும் பொருள் குறித்து நின்றது. பிறவும் அன்ன. (26)

419. இசைப்படு பொருளே நான்குவரம்பு ஆகும்.

இசைநிறை அடுக்கிநிற்கும் வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இசைப்பொருள்கண் அடுக்கிவரும் சொல்லிற்கு எல்லை நான்கு. (எ-று)

(உ..ம்) ஒக்குமே ஒக்குமே ஒக்குமே ஒக்கும், விளக்கினில் சீறெரி ஒக்குமே ஒக்கும், குளக்கொட்டிப் பூவின் நிறம். இதனுள் ஒக்கும் என்னும் சொல் இசைநிறைக்கண் நான்கு வரம்புஆகி வந்தவாறு கண்டுகொள்க. (27)

420. விரைசொல் அடுக்கே மூன்றுவரம்பு ஆகும்.

குறிப்புப் பொருள் உணர்த்தும் ஒருசொல் அடுக்கிற்கு வரையறை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) விரைவுப் பொருண்மை குறித்த ஒருசொல் அடுக்கிற்கு எல்லை மூன்று ஆகும். (எ-று)

(உ..ம்) பாம்பு பாம்பு பாம்பு, தீதீதீ. இவற்றுள் முந்துற்றன பொருள் உணர்த்தின. ஏனைய பொருள்இல ஆயினும், விரைதல் என்பது குறித்தலின், பொருளொடு புணர்ந்த அடுக்கு ஆயின.

இசைநிறைக்கும் பொருளொடு புணர்தற்கும் எல்லைகூறி, அசைநிலை அடுக்கிற்கு எல்லை கூறாமையின், அஃது இரண்டு அல்லது வரப்பெறாது என்று கொள்க. (28)

421. கண்டீர் என்றா கேட்டீர் என்றா
சென்றது என்றா போயிற்று என்றா
அன்றி அனைத்தும் வினாவொடு சிவணி
நின்றவழி இசைக்கும் கிளவி என்ப.

இதுவும் ஒருசார் அசைநிலை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) கண்டீர் என்பது முதலாக ஓதப்பட்ட சொற்கள் வினாப்பொருள் உணர்த்தும் சொல்லொடு கூடிநின்றவழி, அப்பொருளினை இசைக்கும் சொல்லாம். (எ-று)

எனவே அச்சொல்லொடு கூடாதவழி அசைநிலையாம் என்றவாறாம்.

(உ..ம்) வினாவொடு கூடுதலாவது : கண்டீரோ கண்டீரோ என....கண்டீர் என்ப.....

இனி அவை அசைநிலை ஆகி வருமாறு. படைவிடுவான் மன்கண்டீர் காமன் மடைஅடும், பாலொடு கோட்டம் புகின் (முல்லைக்கலி.9) என்பதனுள் கண்டீர் என்பது அசைநிலை ஆயிற்று. ஏனையவற்றிற்கு உதாரணம் வந்துழிக் கண்டுகொள்க. (29)

422. கேட்டை என்றா நின்றை என்றா
காத்தை என்றா கண்டை என்றா
அன்றி அனைத்தும் முன்னிலை அல்வழி
முன்னுறக் கிளந்த இயல்புஆ கும்மே.

இதுவும் அது.

(இ..ள்) இந்நான்கு சொல்லும் முன்னிலை வினைச்சொல் அல்வழி, அசைநிலை ஆகும். (எ-று)

(உ..ம்) மோரொடு வந்தாள் தகைகண்டை யாரொடும், சொல்லியாள் அன்றே வனப்பு (கலி.108) என்றவழிக் கண்டை என்பது அசைநிலை ஆயிற்று. ஏனையவும் வந்தவழிக் கண்கொளக். (30)

423. பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே

குறிப்பே இசையே ஆயீர் ஐந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருள் கிளவி.

எச்சக்கிளவி ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருள் உணர்த்தும் கிளவி - பிரிநிலை முதலாக இசை ஈறாக ஓதப்பட்ட பத்தும். (எ-று)

எஞ்சு பொருள் கிளவியாவது சொல்லாது ஒழிந்த பொருளை இனிது விளக்கும் சொல். நெறிப்படத் தோன்றுதலாவது வாக்கியம் ஆகிய தொடர்மொழிக்கண் முன்னும் பின்னும் நின்ற சொல்லை நெறிப்படுத்தற்கு ஆண்டுத்தோன்றுதல். அது புலப்பட நில்லாமையின் எச்சம் ஆயிற்று.

பிரிநிலை எச்சமாவது பலபொருளில் ஒன்று பிரிந்தவழிப் பிரிக்கப்பட்ட பொருண்மையும் தோன்ற நிற்பது.

வினைஎச்சமாவது ஒரு வினைச்சொல் எஞ்சி நிற்பது.
பெயர் எச்சமாவது ஒரு பெயர்ச்சொல் எஞ்சி நிற்பது.

அஃதேல், வினை எச்சம், பெயர் எச்சம் என்பன வினை இயலுள் ஓதப்பட்டன அலவோ எனின், ஆண்டு ஓதப்பட்டன வினையையும் பெயரையும் ஒட்டி நின்று இயலும். ஈண்டையன அன்ன அல்ல ஆமாறு உதாரணத்தான் விளங்கும்.

ஒழியிசை - எச்சமாவது சொல்லப்பட்ட பொருளை ஒழியச் சொல்லாது ஒழிந்துநின்ற பொருளும் தோன்ற நிற்பது.

எதிர்மறை எச்சமாவது ஒருபொருளைக் கூறியவழி, அதனின் மாறுபட்ட பொருண்மையும் அதனானே உணர நிற்பது.

உம்மை எச்சமாவது உம்மை கொடுக்கவேண்டும்வழி அஃது எஞ்சி நிற்றல். என என் எச்சமாவது என என்று சொல்ல வேண்டும் அச்சொல் எஞ்சி நிற்பது.

சொல் எச்சமாவது ஒரு சொல்லினான் ஒருபொருளை விதந்து ஓதியவழி, அவ்விதப்பினானே பிறிதும் ஒரு பொருளைக் கொள்ளுமாறு நிற்பது.

குறிப்பு எச்சமாவது சொற்படுபொருள் அன்றிச் சொல்லுவான் குறித்தபொருள் எஞ்சி நிற்பது.

இசை எச்சமாவது ஒரு சொல் தனக்குஉரிய பொருள் அன்றிப் பிறிதும் ஒரு பொருளை இசைக்குமாறு வருவது.

இவை எல்லாம் வழக்கினும் செய்யுளினும் வந்து பொருளை விளக்குதலின் எடுத்து ஓதினார்.

உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரத்துள் காட்டுதும். *(31)*

424. அவற்றுள்,

பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.

பிரிநிலை எச்சம் முற்றுப் பெறுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* மேல் சொல்லப்பட்டவற்றுள் பிரிநிலை ஆகிய எச்சம் அதன்கண் நின்றும் பிரிக்கப்பட்ட பொருளொடு தொடர்ந்து முடிவு பெறும். *(எ-று)*

*(உ..ம்)* இவன் கல்வி உடையன் என்றவழிச் சொல்லுவான் இவ்அவையத்தாருள் எனக் கருதினான் ஆயின், இவ்அவையத்தாருள் என்பது எஞ்சி நின்று பிரிநிலை எச்சம் ஆயிற்று. இவட்குக் கண் அழகிது என்றவழி மற்றுள்ள உறுப்புக்களின் என்பது எஞ்சி நின்றது. இவை பிரிக்கப்பட்ட பொருளொடு தொடர்புபட்டு முற்றுப் பெற்றவாறு கண்டுகொள்க. *(32)*

425. வினைஎஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றும் முடிபுஆ கும்மே
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே.

வினைஎச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* வினைஎச்சமாக உடைய சொல்லிற்கு வினையும் வினைக் குறிப்பும் நினையத் தோன்றிய முடிபுஆகும். ஆண்டு வினைக் குறிப்பு ஆக்கச்சொல்லோடு அடுத்துவரும். *(எ-று)*

நினையத்தோன்றும் என்றதனான், ஆராயத்தோன்றும் என்று கொள்க. எனவே, வினை இயலுள் கூறிய வினைஎச்சம் ஆராய்தல் வேண்டாமையின், அஃது அன்று என்று கொள்ளப்படும்.

*(உ..ம்)* அழுக்காறு உடையார்க்கு அதுசாலும் ஒன்னார், வழுக்கியும் கேடு ஈன்பது *(குறள்.165)* என்பதனுள் கேடுபயத்தற்கு அழுக்காறுதானே அமையும், பகைவர் கேடுதருதல் தப்பியும் வரும் எனப் பொருள் உரைக்க வேண்டுதலின் வரும் என்பது எஞ்சி நின்றது. அற்றார் அழிபசி தீர்தல் அஃது ஒருவன், பெற்றான் பொருள்வைப்புழி *(குறள்.226)* என்பதற்குப் பொருள் அற்றாருடைய குணங்களை அழிக்கும் பசியைப்போக்குவது செய்ய ஒருவன் தான்தேடின பொருள் வைத்தற்கு இடம் பெற்றான் ஆம் என உரைக்க வேண்டுதலின் ஆம் என்னும் வினைக்குறிப்பு எஞ்சிநின்றது. *(33)*

426. பெயர்எஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

பெயர் எச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* பெயர் எச்சமாக உடையசொல் பெயரொடு முடிவு பெறும். *(எ-று)*

*(உ..ம்)* துறக்குவன் அல்லன் துறக்குவன் அல்லன், தொடர்வரை வெற்பன் துறக்குவன் அல்லன், தொடர்புள் இனையவை தோன்றின் *(கலி.41)* என்றவழி அவன்தொடர்பு என வேண்டுதலின் அவன் என்னும் பெயர் எஞ்சி நின்றது. உயர்திணை என்மனார் மக்கள் சுட்டே *(சூ.1)* என்பதனுள், என்மனார் ஆசிரியர் என

வேண்டுதலின் ஆசிரியர் என்னும் பெயர் எஞ்சி நின்றது. மருந்து எனின் மருந்தே வைப்பு எனின் வைப்பே, அரும்பிய சுணங்கின் அம்பகட்டு இளமுலைப், பெருந்தோள் நுணுகிய நுசுப்பின், கல்கெழு கானவர் நல்குறு மகளே! (குறுந்.71). இதனுள் எனக்கு என வேண்டுதலின் வேற்றுமை ஏற்றபெயர் எஞ்சி நின்றது. *(34)*

427. ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின.

ஒழியிசை எச்சத்திற்கு முடிபு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* ஒழிந்த சொல்லை எச்சமாக உடையது அவ்ஒழிந்த சொல்லினான் பொருள் முடிவுபெறும். (எ-று)

*(உ..ம்)* இவர் கல்வியான் குறைவுஇலர் என்றவழி, ஒழுக்கத்தான் குறைஉடையர் என்றுஆதல், பொருள்ஆன் குறை உடையர் என்றுஆதல் ஒழிந்தபொருள் குறித்தவழி, அப்பொருள் பட்டவாறும், அதனானே அச்சொல் முற்றுப்பெற்றவாறும் கண்டுகொள்க. *(35)*

428. எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின.

எதிர்மறை எச்சம் முடியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* எதிர்மறைப் பொருண்மையை எச்சமாக உடையது அவ் எதிர்மறையான் பொருள் முடிவுபெறும். (எ-று)

*(உ..ம்)* இம்மைப் பிறப்பின் பிரியலம் என்றேனாக், கண்நிறை நீர்கொண்டனள். (குறள்.1315) என்பதனுள், மறுபிறப்புப் பிரிவேம் என நினைத்துச் கண்நிறை நீர்கொண்டனள் எனப் பொருள் உரைக்க வேண்டுதலின், எதிர்மறை, எஞ்சி நின்று அதன் எதிர்மறைப் பொருளொடு முடிந்தவாறு காண்க. *(36)*

429. உம்மை எச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபுஆ கும்மே.

உம்மை எச்சம் முடியுமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) உம்மை ஆகிய எச்சம் இரண்டுவேறு பாட்டின்கண்ணும் தன் வினையொடு பொருந்திய முடிபு ஆகும். (எ-று)

இரு வீறு ஆவன : முன்நின்ற சொல்லும், பின்நின்ற சொல்லும். தன்வினை ஆவன. இரண்டு சொல்லின்கண்ணும் உடன்பாடு ஆகியும் மறை ஆகியும் வரும் தொழிலும் காலமும் ஒத்த வினைச்சொல். அது உம்மைக்கு ஏற்ற வினை ஆதலின் தன்வினை என்றார். ஒன்றிய முடிபுஆவது அவ்வினையொடு பொருந்திய முடிபு ஆகும் என்றவாறு. ஏனை எச்சம் போலத் தான்வந்து முடிதலே அன்றித் தான் வந்தாலும் சார்ந்த வினையொடு கூடி அல்லது பொருட்கு முடிபு ஆகாது என்றவாறு.

(உ..ம்) சாத்தனும் வந்தான், கொற்றனும் வந்தான் எனல்பாலன. சாத்தன் வந்தான், கொற்றன்வந்தான் எனவரின் ஆண்டு உம்மை எஞ்சி நின்றது என்க.

இருவீற்றானும் என்ற உம்மையான் தனிவரினும் என்று கொள்க. வதுவை அயர்ந்த வன்பறழ்க் குமரி, இருதோள் தோழர் பற்ற என்றவழி, இருதோளும் என்ற உம்மை எஞ்சி நின்றது.

இடைச்சொல் ஓத்தினுள், உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார் (சூ.287) எனவும், இவ்ஓத்தினுள் உம்மைத்தொகை (சூ.407,412) எனவும், ஈண்டு உம்மை எச்சம் எனவும் கூறினார் ஆதலின், அவற்றின் வேறுபாடு புலப்பட்டின்றால் எனின், பலபொருளை எண்ணி ஒரு வினையான் முடிக்கும் வழிச் சொல்தொறும் உம்மைகொடுத்து, இடைநின்ற ஒன்றானும் இரண்டானும் சொல்லின்கண் உம்மை கொடாதவழி, உம்மை எண் ஆகுமோ ஆகாதோ என நின்ற ஐயம் கொளற்கு உரித்து. ஆண்டு உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார் என்று ஓதுதலின், உம்மை ஆண்டுத் தொக்கது என்க. இரண்டானும் பலவானும் பெயரை அடுக்கி, ஒருசொல்போல ஒருவினையான் முடிக்கும்வழி உம்மைத்தொகை என்க. தனித்தனி வினைகொண்டு

உம்மை பிரிந்து நின்றே பொருள்படும் சொற்கள் செய்யுளகத்து எஞ்சி நின்றதனை எஞ்சிற்று என்க.

*அஃது அற்றுஆகக் காலமும் வினையும் ஒத்தல் வேண்டும் என்றது என்னை? சாத்தன் வந்தான், கொற்றன் வரும் எனவும், சாத்தன் வந்தான், கொற்றன் போம் எனவும் காலமும் வினையும் ஒவ்வாமையும் வருமால் எனின், அவை உம்மை எஞ்சிய சொல் அன்மை வருகின்ற சூத்திரத்தான் விளங்கும்.* *(37)*

430. தன்மேல் செஞ்சொல் வரூஉம் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

மேல்சொல்லப்பட்ட உம்மைப் பொருள்கண் வரும் வேறுபாடு உணர்த்தல் நுதலிற்று.

*(இ..ள்)* உம்மைப் பொருள்கண் உம்மைகொடாது செஞ்சொல் ஆகிவரின், அவற்றுள் நிகழ்காலத்தோடு எதிர்காலமும், இறந்தகாலத்தோடு எதிர்காலமும் மயங்குதல் நீக்கார், முறை பிறழாமல் நிற்கும் வழி. (எ-று)

**(உ..ம்)** சாத்தன் வாராநின்றான், கொற்றன் வருவன், போம்; சாத்தன் வந்தான், கொற்றன் வருவன், போம் என இவை உம்மைகொடாமல் பொருள் பட்டவாறும், காலமும் தொழிலும் மயங்கியவாறும் கண்டுகொள்க.

அஃதேல், சாத்தனும் வாராநின்றான், கொற்றனும் வருவன் என உம்மை கொடுத்தும் வழக்கு நிகழுமால் எனின், உம்மை கொடுக்கின்றது பொருள் வேற்றுமை உணர்தற்கு அன்றே. அது கொடாக்காலும் பொருள் இனிது விளங்குமாயின், கொடுத்ததனான் பயன் இன்று என்க. இவ்வாறு செய்யுளகத்துவரின், இசை நிறைத்தல் பொருட்டு வந்தது என்க.

*(38)*

431. எனஎன் எச்சம் வினையொடு முடிமே.

எனஎன் எச்சமுடிபு உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** என என்று சொல்லப்பட்ட எச்சம் வினையொடு முடியும் (எ-று). உம்மையான் பெயரொடும் முடியும் என்று கொள்க. முடிதலாவது அவற்றைச் சார்ந்து நின்று பொருளை உணர்த்துதல். முடிதல் எனினும் தொடர்தல் எனினும் ஒக்கும்.

**(உ..ம்)** வீடு உணர்ந் தோர்க்கும் வியப்புஆமால் இந்நின்ற, வாடல் முதியோள் வயிற்று இடம் - கூடார், பெரும்படை வெள்ளம் நெரிதரவும் பேரா, இரும்புலி சேர்ந்த இடம். (புற.வெண்பா. வஞ்சிப்.19) என்பதனுள் இரும்புலி சேர்ந்த இடம் என வியப்பு ஆமால் எனப் பொருள் உரைக்க வேண்டுதலின், என என்பது எஞ்சிநின்று வியப்புஆம் என்பதனொடு தொடர்ந்தது. இது வினை. பிரிநிலை வினையே (சூ.423) என்னும் சூத்திரத்துள் குறிப்பே இசையே ஆயீர் ஐந்தும் என்றவழிக் குறிப்பே இசையே என அவ் ஈர் ஐந்தும் எனப் பொருள் உரைக்க வேண்டுதலின், என என்பது எஞ்சி நின்று ஈர் ஐந்தும் என்னும் பெயரொடு முடிந்தது. *(39)*

432. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருள் கிளவி இலஎன மொழிப.

சொல் எச்சத்திற்கும், குறிப்பு எச்சத்திற்கும், இசை எச்சற்கும் உரியது ஒரு மரபு உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** மேல் அதிகரிக்கப்பட்ட பத்தினுள்ளும் முடிவுசொல்லாது ஒழிந்த மூன்று சொல்லும் வந்து முடிக்கும் சொற்களை எஞ்சிநிற்றல் இல. (எ-று)

எனவே, முந்துஉற்ற ஏழு சொல்லும் வந்து முடிக்கும் சொற்களை உடைய என்பதூஉம், இவை நின்றவாற்றான் பொருள் வேறுபடூஉம் என்பதூஉம் கூறியவாறாம் என்றவாறு. அஃது ஆமாறு வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். *(40)*

433. அவைதாம்,
தத்தம் குறிப்பின் எச்சம் செப்பும்.

இதுவும் அது.

(இ..ள்) மேல் சொல்லப்பட்ட மூன்று சொல்லும் வந்து முடிக்கும் சொல்லை உடைய அல்ல ஆயினும், தத்தம் குறிப்பினான் எஞ்சிய பொருண்மையை உணர்த்தும். (எ-று)

உதாரணம் தத்தம் சிறப்புச் சூத்திரத்துள் காட்டுதும். (41)

434. சொல்என் எச்சம் முன்னும் பின்னும்
சொல்அளவு அல்லது எஞ்சுதல் இன்றே.

சொல் எச்சம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) சொல் என்னும் எச்சம் அச்சொல் அளவு அல்லது முன்னும் பின்னும் மற்றொரு சொல் எஞ்சி நிற்றல் இலது. (எ-று)

எனவே, அச்சொல்லினானே உய்த்து உணர்ந்து கொள்ளப் பிறிது ஒரு பொருள் வரும் என்றவாறாம்.

(உ..ம்) நெடும்புனலுள் வெல்லும் முதலை அடும்புனலின், நீங்கின் அதனைப் பிற (குறள்.495), காலாழ் களரின் நரிஅடும் கண் அஞ்சா, வேல்ஆள் முகத்த களிறு (குறள்.500) என்றவழித் தமது நிலத்தில் எளியாரும் வலியர் ஆவர், பிறர் நிலத்தில் வலியாரும் எளியர் ஆவர் என்னும் பொருண்மை இச்சொல்தானே உணர்த்தலின் சொல் எச்சம் ஆயிற்று. (42)

435. அவைஅல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

இனிக் குறிப்பு எச்சம் உணர்த்தல்பாலது. அது தெரிபுவேறு நிலையலும் குறிப்பின் தோன்றலும், இருபாற்று என்ப பொருண்மை நிலையே (சூ.153) எனப் பெயர் இயலுள் ஓதுதலான்,

அதன்கண் சிலசொற்களை மரபு வழு அமைக்க வேண்டுதலின், அவை ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* அவைக்களத்து வழக்கம் அல்லாத சொல்லை மறைத்துப் பிற வாய்பாட்டான் மொழிக. (எ-று)

*(உ..ம்)* மறைத்துச் சொல்லுதல் இருவகைப்படும், மங்கல மரபினான் கூறுதலும், இடக்கர் அடக்கிக் கூறுதலும் என. மங்கலமரபினான் கூறுவது செத்தாரைத் துஞ்சினார் என்றும், ஓலையைத் திருமுகம் என்றும் கூறுதல். இவை அவைக்களத்துப் பட்டாங்குக் கூறின் குற்றம் பயக்கும் ஆதலின், அவைஅல் கிளவி ஆயின. இடக்கர் அடக்கிக் கூறுதல் கண்கழீஇ வருதும், கால்மேல் நீர்பெய்தும் எனப் பிற வாய்பாட்டான் வரும் பொருண்மையை மறைத்துச் சொல்லுதல். இவை வேறு ஒன்றைக் குறித்துக் கூறுதலின் குறிப்பு எச்சம் ஆயின. *(43)*

436. மறைக்கும் காலை மரீஇயது ஒராஅல்.

மேலதற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* அவைக்களத்து அல்லாத சொற்களை மறைத்துச் சொல்லுங்கால் அவைக்களத்து மருவிப் போந்த சொல்வை மறையாது ஒழிக. (எ-று)

*(உ..ம்)* மருவிப் போந்தன - ஆப்பி, கோமூத்திரம் என்றால் போல்வன. *(44)*

437. ஈதா கொடுஎனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகுஇடன் உடைய
அவற்றுள்,
ஈஎன் கிளவி இழிந்தோன் கூற்றே
தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே
கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே.

இதுவும் ஒருசார் குறிப்பு எச்சம் உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* ஈ, தா, கொடு என்னும் சொற்கள் ஒரு பறவையின் பெயரும், தொழில் பொருண்மையும், கொடுமையும் ஆதல் அன்றி, இரப்போன் கூற்று ஆதலும் உரிய. அவற்றுள் ஈ என்பது இழிந்தோன் கூற்று என்பதூஉம், தா என்பது ஒப்போன் கூற்று என்பதூஉம், கொடு என்பது உயர்ந்தோன் கூற்று என்பதூஉம் உணர்த்தும். (எ-று)

இச்சொற்கள் தம்மானே இழிந்தான், ஒப்பான், மிக்கான் என்னும் பொருண்மை எஞ்சி நிற்றலின் குறிப்பு எச்சம் ஆயிற்று.*(45)*

438. கொடுஎன் கிளவி படர்க்கை ஆயினும்
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்
தன்இடத்து இயலும் என்மனார் புலவர்.

மேலதற்கு வழுவமைதி உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* மேல்சொல்லப்பட்டவற்றுள், கொடு என்னும் சொல் படர்க்கை ஆயினும், தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பினான் தன்இடத்து இயலும் என்று சொல்லுவர் புலவர். (எ-று)

தன்னைப் பிறன்போல் கூறுதலின் குறிப்பு எச்சம் ஆயிற்று. இச்சூத்திரத்தானும் குறிப்பு எச்சம் அதிகாரப் பட்டவாறு கண்டுகொள்க. *(46)*

439. பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅ குநவும்
தொல்நெறி மொழிவயின் ஆஅ குநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅ குநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅ குநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே.

அதிகார முறையான் இசைஎச்சம் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) பெயர்நிலைக் கிளவிகளான் ஆகும் சொல்லும், திசைநிலைக் கிளவிகளின் ஆகும் சொல்லும், பழமைத்து ஆகி நெறிப்பட வரும் சொல்லின் ஆகும் சொல்லும், பொருள்நிலை மயக்கின் ஆகும் சொல்லும், மந்திரப் பொருள் வயின் ஆகும் சொல்லும், அவ்அனைத்தும் இச்சொற்குப் பொருள்இது என்னும் நியமம் இல. (எ-று)

எனவே, தன் பொருள் ஒழியப் பிறிது பொருள்படும் என்றவாறாம். ஒரு சொல் இரண்டு பொருள்பட நின்றவழி, ஒருபொருளை உணர்த்தும் இசை எஞ்சி நிற்கும் அன்றே. அஃது இசை எச்சம் ஆவது என்று கொள்க. ஆகும் சொல் என்றமையான் ஏற்பன கொள்ளப்படும்.

இசை எச்சம் ஐந்து வகை என்பது போந்தது. அவற்றுள் பெயர்நிலைக் கிளவியின் ஆகுவன. வேங்கை என்பது ஒரு மரத்திற்குப் பெயர் ஆயினும், புலிக்கும் பெயர் ஆயிற்று. அதுவும் அன்றிக் கைவேம் என்னும் பொருளும் பட்டது. இவ்வாறு ஒரு சொல்லினானே பிறிதுபொருள் உணரின், அதை உணர்த்தும் ஓசை எஞ்சி நின்றது எனக் கொள்க.

இது பலபொருள் ஒருசொல் அன்றோ எனின், ஆம், பல பொருள்கண் ஒருசொல் வருதற்கு இலக்கணம் ஈண்டு உணர்த்துகின்றது. என்னை உணர்த்தியவாறு எனின், வேங்கை என்னும் சொல் புலிப்பொருண்மை உணர்த்திற்று ஆயின், மரப் பொருண்மை உணர்த்தும் சொல் யாது என ஒரு கடா வரும். அக்கடா வேங்கை என்னும் சொல்லின் கண்ணே மரப்பொருண்மையை உணர்த்துவதோர் ஓசை எஞ்சி நின்றது எனின் அல்லது விடைபெறாதாம். அதனானே இலக்கணம் உணர்த்தியவாறு அறிந்துகொள்க.

திசை நிலைக் கிளவியின் ஆகுநவும் என்பது செந்தமிழ் நாட்டு வழங்கும் சொல் திசைச்சொல் ஆகியவழிப் பொருள் வேறுபடுதல். கரை என்பது வரம்பிற்குப் பெயர் ஆயினும், கருநாடர் விளித்தற்கண் வழங்குப.

தொல்நெறிமொழி என்றதனான் முந்துற்ற வழக்கு ஆகித் தொடர்வுபட்டுச் செய்யுளகத்தினும், பரவை வழக்கினும் வரும் தொடர்மொழி என்று கொள்ளப்படும். குன்றேறாமா என்றவழி, குன்று, ஏறு, ஆ, மா எனவும்படும். குன்றின்கண் ஏறாநின்ற ஆமா எனவும் படும்; குன்றின்கண் ஏறா மா எனவும் படும். இவ்வாறு வரும் பொருட்கு எல்லாம் இத்தொடர்மொழிதானே சொல் ஆகி இதன்கண் இசைவேறுபட்டுப் பொருள் வேறு உணர்த்தலின், அப்பொருண்மைகளை உணர்த்தும் இசை எஞ்சி நின்றது. காதல் கொழுநனைப் பிரிந்து அலர் எய்தா; மாதர்க் கொடுங்குழை மாதவி தன்னொடும் (சிலப். 5-189,190) என்றவழி, இச்சொல் எல்லாம் குருக்கத்திக்கும் அடைஆகி, மாதவி என்னும் ஒரு பெண்பாற்கும் அடைஆகில் பொருள் வேறுபடுதலின் இசைஎச்சம் ஆயிற்று. இது தனிமொழி ஆகிய பெயர்நிலைக் கிளவியின் அடங்காமையின், தொடர் மொழி என்று வேறு ஓதினார்.

மெய்ந்நிலை மயக்கம் ஆவது பொருள்நிலைமை மயக்கம் கூறுதல். குருகுகரு உயிர்ப்ப ஒரு தனி ஓங்கிய திருமணிக் காஞ்சி (மணிமே.காதை.18.55.56) என்றவழிக் குருகு என்பது மாதவி என்னும் கொடிக்கும் பெயர் ஆதலின், அப்பெயர் உடையாளைக் குருகு என்றார். காஞ்சி என்பது மேகலைக்குப் பெயர், ஆதலின், அது மணிக்காஞ்சி என்று ஒட்டி மணிமேகலை என்பாள்மேல் வந்தது. இவ்வாறு பொருள்நிலை மயங்க வருவனவும், இசை எச்சமாம் என்றவாறு. மந்திரம் என்பது பிறர் அறியாமல் தம்முள்ளார் அறிய மறைத்துக் கூறும் சொல். அதன்கண் ஆகுவன, உலகினுள் வழங்குகின்ற பொருட்குத். தாம் அறிகுறி இட்டு ஆண்டுவரும் குழுவின் வந்த குறிநிலை வழக்கு. அது வெளிப்பட்ட சொல்லால் உணரும் பொருட்கு மறைத்துப் பெயர் இடுதலும், எழுத்திற்குப் பிறபெயர் இட்டு வழங்குதலும் என இருவகைப்படும். இவையும் பொருள் வேறுபடுத்தி வழங்குதலின் இசைஎச்சம் ஆயின. அவற்றுள் பொருட்கு வேறுபெயர் இட்டன: வண்ணக்கர் காணத்தை நீலம் என்றலும், யானைப்பாகர் ஆடையைக் காரை என்றலும் முதலாயின. எழுத்திற்கு வேறுபெயர் இட்டு வழங்குமாறு. மண்ணைச் சுமந்தவன் தானும் வரதராசன் மகன்தானும், எண்ணிய வரகாலி மூன்றும் இரண்டு மரமும்

ஓர்யானும், திண்ணம் அறிய வல்லார்க்குச் சிவக தியும் பெறலாமே. இதனுள் மன்னைச் சுமந்தவன் ந, வரதராசன்மகன் - ம, வரகாலி மூன்று - சி, இரண்டுமரம் - வா, ஓர்யாறு - ய எனக்கூற, நமச்சிவாய எனப்பொருள் ஆயிற்று. பிறவும் அன்ன. (47)

440. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகுஇடன் உடைத்தே.

இது வினைச்சொற்கு உரியதொரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* செய்யாய் என்னும் ஆய் ஈற்று முன்னிலை வினைச்சொல் செய் என்னும் ஏவல் குறித்த வினைச்சொல்லும் ஆகி வரும் (எ-று)

*(உ..ம்)* நீ எம் இல்லத்து உண்ணாய் என்றவழி உண்ணாமையைக் குறித்தலே அன்றி உண்க என்பது குறித்தவாறு கண்டுகொள்க. இவ்வாறு வருவதும் இசை எச்சம்.

இன்னும் இச்சூத்திரத்திற்குப் பொருள், செய்யாய் என்னும் வினைச்சொல் செய் எனக் குறைந்து நிற்கவும் பெறும் என்றவாறு. உண்ணாய் என்பது உண் என வரும். *(48)*

441. முன்னிலை முன்னர் ஈயும் மேயும்
முன்னிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே.

இதுவும் முன்னிலை வினைச்சொல்கண் வருவதொரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* முன்னிலை வினைச்சொல்கண் ஈகாரமும், மகரம் ஊர்ந்த ஏகாரமும் முன்னிலை மரபினை உடைய மெய்யை ஊர்ந்துவரும். *(எ-று)*

முன்னிலை மரபின் மெய் ஆவன உண்தின் என்னும் சொல்கண் ஈறறெழுத்தொடு பால்காட்டும் எழுத்தினைப் புணர்க்க இடையே வரும் மெய்எழுத்து.

(உ..ம்) சென்றீ பெருமநின் தமைக்குநர் யாரோ (அகம்.46), அட்டில் ஓலை தொட்டனை நின்மே (நற்றி.300), இன்னாது உறைவி அரும்படர்களைமே (புறம்.145) எனவரும். மேல் ஓதப்பட்ட இ,ஐ,ஆய் அன்றி இவையும் சிறுபான்மை வரும் எனக் கொள்க. (49)

442. கடிசொல் இல்லைக் காலத்துப் படினே.

இது வினைச்சொல்கண் வருவதொரு வழுஅமைதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல்சொல்லப்பட்ட இலக்கணத்தான் வந்தில எனக் கடியப்படா; அவ் வினைச்சொற்கள் காலத்தொடு பொருந்தின் (எ-று)

காலமாவது இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலம். காலப்பொருண்மை மயங்காமல்வரின், ஈறு திரியினும் அமைக என்றவாறு.

(உ..ம்) மறம்பாடிய பாடினியும்மே, ஏர் உடைய விழுக்கழஞ்சின், சீர் உடைய இழை பெற்றிசினே, இழைபெற்ற பாடினிக்குக், குரல் புணர்சீர்க் கொளைவல்பாண் மகனும்மே, என ஆங்கு, ஒள்அழல் புரிந்த தாமரை, வெள்ளி நாரான் பூப்பெற் றிசினே (புறம்.11) என்பதனுள் படர்க்கை வினைச்சொல் ஈறுதிரிந்து நின்றது காலப்பொருள் வழுவாமையின் குற்றம் இன்று ஆயிற்று.

ஆர்அமர் அலறத் தாக்கித் தேரோடு, அவர்ப்புறம் காணேன் ஆயின் சிறந்த, பேரமர் உண்கண் இவளினும் பிரிக (புறம்.71) எனவும் முறைதிரிந்து, மெலிகோல் செய்தேன் ஆகுக (புறம்.71) எனவும் தன்மைக்கண் எதிர்காலம் குறித்த வஞ்சினம் வியங்கோள் வாய்பாட்டான் வந்தன.

பகலே பலரும் காண நாண்விட்டு, அகல்வயல் படப்பை அவர்ஊர் வினவிச், சென்மோ வாழி தோழி பல்நாள், கருவி வானம் பெய்யாது ஆயினும், அருவி ஆர்க்கும் கழைபயில் நனந்தலை,

வான்தோய் மாமலைக் கிழவனைச், சான்றோய் அல்லை என்றனம் வரற்கே (நற்றி.165) என்றவழிச் செல்வேமோ எனல்பாலது சென்மோ என வந்தது. பிறவும் அன்ன.

இச்சூத்திரத்திற்குப் பிறவாற்றான் பொருள் உரைப்பவால் எனின், வினைச் சொல்திரிபு அதிகாரப்பட்டு வருதலானும், காலத்துப்படினே என்றமையானும் பிறவாற்றான் உரைப்பது பொருள் அன்று என்க. *(50)*

443. குறைச்சொல் கிளவி குறைக்கும்வழி அறிதல்.

குறைச்சொல் ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* யாதானும் ஒருசொல்லைக் குறைக்க வேண்டுவழிக் குறைக்க வேண்டும்இடம் அறிந்து குறைக்க *(எ-று)*

அது தலைக் குறைத்தலும், இடைக் குறைத்தலும், கடைக்குறைத்தலும் என மூவகைப்படும்.

*(உ..ம்)* மரைஇதழ் புரையும் அம்செஞ் சீறடி என்றவழித் தாமரை என்பது தலைக் குறைந்து நின்றது. அகல்இரு விசும்பின் ஆஅல் *(மலைபடு.100)* என்றவழி ஆரல் என்பது இடைக்குறைந்து நின்றது. நீல் உண் துகிலிகை என்றவழி நீலம் என்பது கடைக்குறைந்து நின்றது.

தொகுக்கும் வழித் தொகுத்தல் என்பதனோடு இதனிடை வேறுபாடு என்னை எனின், ஆண்டு விரிந்து நின்ற சொல் தொகுக்க வேண்டுவழித் தொகுமாறு கூறினார். ஈண்டு இயற்கையின் குறைதலின் குறைச்சொல் என்றார். *(51)*

444. குறைந்தன ஆயினும் நிறைப்பெயர் இயல்.

மேலதற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) குறைச்சொல் கிளவி குறைந்து நின்றன ஆயினும், பொருள் வேறுபடா, நிறைந்த பெயர் இயல. (எ-று)

உதாரணம் மேல் காட்டப்பட்டன.

இவ்விதி மேல் விகாரப்பட்ட சொற்கும் ஒக்கும் என்று கொள்க. (52)

445. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

இடைச்சொல்கண் எஞ்சிநின்றதொரு பொருள்நிகழ்ச்சி உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இடைச்சொற்கள் எல்லாம் வேற்றுமைச் சொல்லாம் (எ-று)

என்பது என் சொன்னவாறோ எனின், பெயரும் வினையும் போலப் பொருளையும் தொழிலையும் நேர்காட்டாது, ஐ,ஒடு,கு, இன்,அது,கண் என்னும் வேற்றுமை உருபு போல, வேறுபட்ட பொருளைக் குறித்து நிற்றலின், இடைச்சொல் பொருள் வேறுபடுக்கும் சொல் எனப்படும், பொருள் உணர்த்தும் சொல் எனப்படா. மன் என்பது கழிவினும், ஆக்கத்தினும், ஒழியிசையினும் வந்தவழித் தான்இடைப்பெற்று நிலைமொழியின் வேறுபட்ட பொருளைக் குறித்து நின்றது அல்லது, அப்பொருட்கு வாசகம் அன்றி நின்றமை கண்டுகொள்க. பிறவும் அன்ன. (53)

446. உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.

உரிச்சொல் மருங்கினும் இடைநின்று பொருள் உணர்த்தும் சொல் உள என்பது உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) உரிச்சொல் இடத்தும் வேற்றுமை உருபுபோல அப்பொருள் வேறுபடுத்தற்கு உரியவை உரியவாம். (எ-று)

அது நனி என்பது உறுவும் தவவும் போல மிகுதி

குறித்துவரினும், உறுவன, தவவன எனப் பொருள் உணர வாராது, இடைச்சொல் போலக் குறிப்பினான் மிகுதி உணர்த்தலின், இதுவும் பொருள் வேறுபடுக்கும் சொல்ஆயின் அல்லது, பொருள் உணர வாராமை கண்டுகொள்க. பிறவும் அன்ன. *(54)*

447. வினை எஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.

வினைஎச்சத்திற்கு உரியது ஒரு வேறுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) வினைஎச்சச் சொல்லும் வேறுவேறு ஆகிய பல இலக்கணத்தை உடைய. (எ-று)

வேறுகுறிய என்னாது பல்குறிய என்றது சொல்லானும் பொருளானும் வேறுபடும் என்பது அறிவித்தற்கு எனக்கொள்க. சொல்லான் வேறுபடுதலாவது பொதுவகையான் எடுத்துஓதிய செய்து, செய்யூ என்புன உகர ஊகார ஈறு ஆகி வருதலே அன்றிப் பிற ஈற்றானும் வருதலும், எச்சச் சொல் ஆகி வரல்பாலது முற்றுச்சொல் ஆகி வருதலும். பொருளான் வேறுபடுதலாவது ஒருவாய்பாட்டான் உணரும் பொருளை மற்றொரு வாய்பாட்டான் கூறுதலும், எல்லா வினை எச்சமும் பிரித்து நோக்குவார்க்குப் பெரும்பான்மையும் வேற்றுமைப் பொருள் ஆகித் தோற்றுதலும்.

அவை ஆமாறு : செய்து என் எச்சத்துக்கண் ஓடி, போய் எனவும், செய்யூ என்பதன்கண் செய்யா எனவும் வருவன ஈறுவேறுபட்டு வந்தன.

மோயினள் உயிர்த்த காலை (அகம்.5) எனவும், ஒலிசினை வேங்கை கொய்குவம் சென்றுழி எனவும், கண்ணியன்வில்லன் வரும் எனவும் வரும். இவை வினைஎச்சம் முற்றுஆகி வந்தன. இவற்றுள் மோந்து என்பது மோயினள் எனவும், கொய்ய என்பது கொய்குவம் எனவும், கண்ணி அணிந்து வில்லை ஏந்தி என்பன கண்ணியன் வில்லன் எனவும் முற்றுவாய்பாட்டான் வரினும் எச்சப் பொருண்மைய ஆகலின் வினைஎச்சம் எனப்பட்டன.

அஃதேல், முற்று என்பது ஒன்று இல்லையால், முற்றும் எச்சப் பொருளாக வருதலின் எனின், அஃது ஆம் இடனும் ஆகாத இடனும் அறிதல் வேண்டும் என்பது வருகின்ற சூத்திரத்தான் விளங்கும். உரல்கால் யானை ஒடித்து உண்டு எஞ்சிய, யாஅ வரிநிழல் துஞ்சும் (குறுந்.232) என்றவழி உண்டு என்பது வினைமுதல் வினையொடு முடியாமையின் உண்ண எனத்திரித்தல் வேண்டிற்று. இந்நிகரன ஈறு திரிந்தன. மருந்து உண்டு நோய் தீர்ந்தான், மழை பெய்ய மரம் குழைத்தது என்பனவற்றைப் பிரித்துநோக்க, மருந்து உண்டலான், மழை பெய்தலான் என வேற்றுமைப் பொருள்பட்டன.

அஃதேல், இவை வேற்றுமை மயங்கு இயலுள் கூறப்பட்டன அன்றோ எனின், ஆண்டு வேற்றுமைப்பொருள் வினைச்சொல்லானும் விளங்கும் என அதன் இலக்கணம் கூறினார். ஈண்டு வினைஎச்சம் வேற்றுமைப் பொருள்படும் என்று இதன் இலக்கணம் கூறினார் என்க. வினைஎஞ்சு கிளவியும் என்னும் உம்மை இறந்தது தழீஇயிற்று. (55)

448. உரைஇடத்து இயலும் உடனிலை அறிதல்.

மேலதற்கு ஒரு புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** உரை என்பது தொடர்மொழி. முற்றுச்சொல் எச்சம் ஆகிவருதலும், வினைஎச்சம் ஈறுதிரிதலும், தொடர்மொழிக்கண் முடிக்கும் சொல்லொடு கூடிநின்ற நிலைமையை அறிந்து கொள்க. (எ-று)

மோயினள் உயிர்த்த காலை (அகம்.5) என்றவழி, உயிர்த்தல் என்னும் வினையொடு நிற்றலின் மோயினள் என்பது எச்சம் ஆயிற்று, அல்லாத வழி முற்றாயே நிற்கும். ஞாயிறுபட்டு வந்தான் என்றவழி, வந்தான் என்பதற்குப்பட்டு என்பது இயையாமையின் படஎனத் திரித்தல் வேண்டிற்று. பிறவும் அன்ன. (56)

449. முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான.

மனக்கருத்தினான் பொருள் உணரும் இடம் உணர்த்துதல் நுதலிற்று.

**(இ..ள்)** சொல்லினான் அன்றி இத்தன்மைய என்னும் சொல்லினது தொடர்ச்சிக்கண் மனக்குறிப்பினான் பொருள் உணரப்படும் சொல்லும் உள. (எ-று)

உம்மை இறந்தது தழீஇய எச்சஉம்மை. தொடிநோக்கி மென்தோளும் நோக்கி அடிநோக்கி, அஃது ஆண்டு அவள் செய்தது (குறள்.1279) என்றவழி, இருப்போம் ஆயின், வளைகழன்று தோள்மெலியும் எனக்கருதி, நடக்க வல்லீர் ஆகல் வேண்டும் என அடியை நோக்கினாள் ஆதலின், உடன்போதற்குக் கருதினாள் என இப்பொருள் எல்லாம் அவள் குறிப்பினான் உணர நின்றவாறு கண்டுகொள்க.

இது சொல்லினான் உணராமையான் எடுத்துஓதல் வேண்டிற்று. பிறவும் இந்நிகரன அறிந்துகொள்க. (57)

**450. ஒருபொருள் இருசொல் பிரிவுஇல வரையார்.**

செப்புவழு அமைத்தலை நுதலிற்று.

**(இ..ள்)** ஒருபொருள்மேல் இரண்டுசொல் பிரிவு இன்றிவரின் நீக்கப்படா. (எ-று)

உயர்ந்து ஓங்கு பெருமலை (மணிமே.22.11), உச்சி மீமிசை, நிலத்து வழி மருங்கின் தோன்றலான (சூ.190) என்பன, பிரிவில என்றதனான் ஒட்டி நிற்றல் வேண்டும். (58)

**451. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி**
**பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே.**

ஒருமைப்பெயர் பன்மைப்பொருள் உணர்த்துமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) ஒருமை குறித்த பெயர்ச்சொல் பன்மைக்கு ஆகும் இடனும் உண்டு. (எ-று)

புலையன் எறிந்த பூசல் தண்ணுமை, ஏவல் இளையர் தாய்வயிறு கரிப்ப என்றவழித் தாயர் எனல் வேண்டுமாயினும், தாய் என்பது பன்மை குறித்து நின்றது. (59)

452. முன்னிலை சுட்டிய ஒருமைக் கிளவி
பன்மையொடு முடியினும் வரைநிலை இன்றே
ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும்.

இஃது ஒருமை பன்மை மயக்கம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) முன்னிலையைக் குறித்த ஒருமைச்சொல் பன்மையொடு முடியினும் நீக்கப்படாது. அதனை ஆற்றுப்படுக்கும் வழி பாதுகாத்துக் கூறுக. (எ-று)

ஆற்றுப்படை மருங்கின் போற்றல் வேண்டும் எனவே, அஃது அல்லாத வழிப் போற்றாமையும் கூறப்படும் ஆயிற்று. ஆற்றுப்படை மருங்கின் போற்றலாவது : பெரும்பாண் ஆற்றுள், புல் என் யாக்கைப் புலவுவாய்ப் பாண (22) என அண்மைவிளி ஏற்று முன்னிலை குறித்து நின்ற ஒருமைப்பெயர் நீயிரும் பல்வேல் திரையற் படர்குவிர் ஆயின் (37) எனப் பன்மையொடு முடிந்தது.

கூத்தர் ஆற்றுப்படையுள், கலம்பெறு கண்ணுளர் ஒக்கல் தலைவ (மலைபடு.50) என அண்மை விளி ஏற்று முன்னிலை குறித்து நின்ற ஒருமைப் பெயர், நீயிரும் நன்னற் படர்ந்த கொள்கையொடு, உள்ளினர் சேறீர் ஆயின் (மலைபடு.65) எனப் பன்மையொடு முடிந்தது. இவ்வாறு வரும்கால் கூத்தரும், பாணரும், விறலியரும் ஆகி ஆண்டுச் செல்வார் பலராயுழியே வரப்பெறுவது என்றும் தனி ஒருவன் ஆயின் மயங்கப்பெறாது என்றும் கொள்க.

இனி, ஆற்றுப்படை அல்லாதவழிப் பலர் இல்வழியும் மயங்கப்பெறும்.

குறிப்பு ஏவல் செயல்மாலைக் கொளைநடை அந்தணீர்
வெவ்இடைச் செலல்மாலை ஒழுக்கத்தீர் இவ்இடை
என்மகள் ஒருத்தியும் பிறள் மகன் ஒருவனும்
தம்முளே புணர்ந்த தாம்அறி புணர்ச்சியர்
அன்னார் இருவரைக் காணிரோ? பெரும! (கலி.9)

எனவும்,

மறப்புஅரும் காதல் இவள்ஈண்டு ஒழிய
இறப்பத் துணிந்தனிர் கேள்மின் மற்றுஐய (கலி.2)

எனவும்,

என்நீர் அறியாதீர் போல இவைகூறல்
நின்நீர அல்ல நெடும்தகாய்! (கலி.6) எனவும் வரும்.

பிறவும் அன்ன. (60)

453. செய்யுள் மருங்கினும் வழக்குஇயல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்.

இவ் அதிகாரத்துள் ஓதப்பட்ட எல்லாச் சொற்கும் புறநடை உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) செய்யுள் இடத்தும் வழக்கு இடத்தும் பொருள் உணரச் சொல்லப்பட்ட சொற்கள் எல்லாம் ஈண்டு ஓதிய இலக்கணத்தான் முற்றுப்பெற்றில ஆயினும், பலவகைப்பட்ட ஆசிரியமத விகற்பத்தான் வரும் இலக்கணத்தின் பிழையாமல் யாதானும் ஒருசொல் ஆயினும் பாகுபடுத்து உணருமாறு வகுத்துக்காட்டி உணர்த்துக நூல் உணர்ந்தோர். (எ-று)

பிறநூல் முடிபினான் முடியினும் இலக்கணப் பிழை இன்றாம் என்றவாறு. கொடுங்கோல் கோவலர் பின்நின்று உய்த்தர, இன்னே வருகுவர் தாயர் (முல்லைப்பாட்டு.15,16) என்றவழி ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவி (சூ.27)யின் அடங்காமையின் இதற்கு இலக்கணம் வேறு வேண்டிற்று.

வளிஇடை வழங்கா வானம் சூடிய, மண்திணிக் கிடக்கை (புறநா.35) என்றவழியும், நெடிய வலிய வாள் என்றவழியும் பெயர் எச்சம் அடுக்கிவந்தது. நெல்அரியும் இருந்தொழுவர் (புறநா.24) என்னும் புறப்பாட்டு முற்றுப்பெற்று அடுக்கிவந்தது.ஒன்னாதார்க் கடந்து அடூஉம் உரவுநீர் மாகொன்ற, வென்வேலான் குன்றின்மேல் (கலி.27) என்றவழியும் அடுக்கி வந்தது.

வினைத்தொகைப் புறத்தும், உவமத்தொகைப் புறத்தும் பொருள் ஒற்றுமைப்படாது அன்மொழித் தொகை ஆகிச் சான்றோர் செய்யுளகத்துவரின் இச்சூத்திரம் இடம் ஆக அமைத்துக்கொள்க.

நின்ன கண்ணியும் ஆர்மிடைந் தன்றே (புறநா.45) என்பது நின்னுடைய என்னும் பொருண்மைக்கண் ஒட்டி, அவ்வாய்பாடு குறித்து நின்றது. பிறவும் எடுத்து ஓதிய இலக்கணத்து மாறுபட்டு வருவன உளவேல் இச்சூத்திரத்தான் அமைத்துக் கொள்க. (61)

**எச்சவியல் முற்றும்.**
**தெய்வச்சிலையார் உரை முற்றும்.**

## கல்லாடனார் விருத்தி உரை

## 7. இடையியல்

251. இடைஎனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற்று இயலும் தமக்குஇயல்பு இலவே

இவ்ஒத்து என்ன பெயர்த்தோ எனின், இடைச்சொல் இலக்கணம் உணர்த்துதலான் இடைச்சொல் ஓத்து என்னும் பெயர்த்து.

இடைச்சொல் என்னும் பொருண்மை என்னை எனின் பெயர் வினைகள் உணர்த்தும் பொருட்குத் தான் இடமாக நிற்றலான் இடைச்சொல் ஆயிற்று.

இச்சூத்திரம் என் நுதலிற்றோ எனின், இடைச்சொற்கு எல்லாம் பொதுவாயது ஓர் இலக்கணம் உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) இடைச்சொல் என்று சொல்லப்படுவன பெயர்ச் சொல்லொடும் வினைச்சொல்லொடும் வழக்குப்பெற்று நடக்கும், அவ்வாறு அவற்றொடு நடத்தல் அல்லது தாமாக நடக்கும் இயல்பு இல. (எ-று)

(எ..டு)அதுமன், வருகதில் அம்ம என வரும்.

தமக்கு இயல்புஇல என்றதனான் பெயரொடும் வினையொடும் அவ்இடைச்சொற்கள் வருவழிச் சொல்புறத்துவழி வருதலும், அச்சொல்வழி வருதலும் என இருவகைத்து என்பது பெறப்பட்டது.

(எ..டு) வருகதில், உண்டான் எனவரும். இவை வினை. அதுமன், மற்றையது என வரும். இவை பெயர்.

மற்று இச்சூத்திரத்தின் பொருண்மையும் இலேசின் பொருண்மையும் இடைச்சொல் கிளவியும், உரிச்சொல் கிளவியும் (சூ.162) என்ற சூத்திரத்துள்ளும், அதன் இலேசினுள்ளும் அடங்குமால் எனின், அது நிரல்நிறை வாய்பாட்டது ஆகலான், பெயரொடுபட்டு இடைவரும் என்றும், வினையோடு உரிவரும் என்றும் கொள்ளக்கிடந்தமையின் இடை இரண்டொடும் வரும் என்றற்குக் கூறினார் என்பது.

இனி அவ்இலேசு நிரல்நிறைச் சூத்திரத்தது ஆகலான் புறத்துவழி வருதல் இடைச்சொற்காகவும், உள்வழி வருதல் உரிச்சொற்காகவும் கொள்ளக்கிடக்கும் என்பது கருதி, ஈண்டும் இருவகையானும் இடை வரும் என்பதற்கு இலேசு கூறினார் போலும். (1)

252. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்கு உதநவும்
வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்
வேற்றுமைப் பொருள்வயின் உருபுஆ குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பின் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியால் பொருள்செய் குநவும் என்று
அப்பண் பினவே நுவலும் காலை.

என் - எனின், அவ் இடைச்சொற்களின் பாடுபாடு ஆமாறு உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல் இடைச்சொல் என்று சொல்லப்பட்டவை தாம் இருமொழி தம்மின் புணர்தல் இயன்ற நிலைமைக்கண் அவற்றின் பொருள்நிலைமைக்கு உதவி செய்து வருவனவும், வினைச் சொற்களை முடிக்கும் இடத்துக் காலம் காட்டும் இடைச் சொற்களொடு கூடித்ததாம் பால்காட்டும் சொற்களாய் வருவனவும், வேறுபாடு செய்த பொருண்மை இடத்து வேற்றுமை உருபாய் வருவனவும், வழக்கின்கண் தமக்கு ஒரு பொருள்

இன்றித்தாம் அடைந்த பெயர் வினைகளை அசையப்பண்ணி நிற்கும் நிலைமையவாய் வருவனவும், பெயர்ப் பொருள் இடத்துப் பொருள் இன்றி ஓர்ஓர் அசையை நிறைத்தல் பொருண்மையவாய் வருவனவும், பெயர் வினைகள் போல விளங்கப் பொருள் உணர்த்தாத சொற்கள் தத்தம் குறிப்பானே ஒரு பொருளை உணர்த்தி வருவனவும், ஒத்த என்னும் வாய்பாடு தம்கண் நில்லாத கூற்றானே நின்ற ஒப்புமைப் பொருண்மையை உணர்த்தி வருவனவும் என்று சொல்லப்பட்ட அவ்இலக்கணங்களை உடையனவாம், அவற்றைச் சொல்லும் காலத்து. (எ-று)

புணர்ச்சிக்கண் வருவன எழுத்து ஓத்தினுள் இன்னேவற்றே (எழுத்.119) என்னும் சூத்திரத்தான் ஓதப்பட்டன.

இனித் தன்னினம் முடித்தல் என்பதனான் காரம், கரம், கான் என்னும் எழுத்துச் சாரியையும் கொள்ளப்படும்.

வினைச்சொற்கள் பால்காட்டி வருவன வினைஇயலுள் அம்ஆம் (சூ.205) முதலாக ஈறுபற்றி ஓதின எல்லாம் கொள்க.

இனி அவ்வினைச் சொற்கள் காலமொடு வருநவும் என்றதனான், காலம் காட்டி வருவன, உண்டான் என்புழி இடைக்கண் டகரமும், உண்ணாநின்றான் என்புழி ஆநின்றும், உண்பான் என்புழிப் பகரமும் அத்தன்மைய பிறவும் எனக்கொள்க. காலம் உணர்த்தி வருதலான் அவை காலம் எனப்பட்டன. உண்டான் என்புழிக் காலம் காட்டும் டகரத்துடனே பால்காட்டும் ஆன் வந்தவாறு அறிக.

இவ்வாறு பாலும் காலமும் காட்டுவன வினைக்கு என்று ஓதினும், அதனைப் பெரும்பான்மை ஆக்கி உண்டவன் என்றால் போலப் பெயர்க்கும் கொள்க.

இனி ஒன்றென முடித்தல் என்பதனான் வினைச்சொற்கண் பால் உணர்த்துவனவே அன்றிப் பெயர்க்கே உரிய வாய்பாட்டான் உணர்த்துவனவும் கொள்ளப்படும். அவை நம்பி, நங்கை என்னும் இகர ஐகார ஈறுபோல்வன எனக்கொள்க.

வேற்றுமை உருபாய் வருவன வேற்றுமை ஓத்தினுள் அவைதாம், பெயர்ஐ ஒடுகு (சூ.65) என்னும் சூத்திரத்துப் பெயர் ஒழிந்த ஏழும் எனக் கொள்க. இவற்றை ஓத்து அடைவு பற்றி முன் கூறாதது வினைக்கண் வருவன பெரும்பான்மை ஆகல் பற்றிப் போலும்.

மற்றை அசைநிலையும், இசைநிறையும், குறிப்பின் பொருள் செய்குநவும் இவ்ஓத்தினுள் தத்தம் சிறப்புச் சூத்திரத்துள்ளே உதாரணம் காட்டப்படும்.

ஒப்பில் வழியான் பொருள் செய்குநவற்றிற்கு உதாரணம் இதன் பின்அதிகாரத்து உவமஇயலுள் காணப்படும்.

இச்சூத்திரத்து முன்னைய மூன்றும் முன்னர் ஓதிப் போந்தன ஆகலான் முன்வைக்கப்பட்டன. பின்னையது பின் அதிகாரத்துக் கூறலான் பின்வைக்கப்பட்டது. இடையன இவ்ஓத்தினுள் கூறப்படுதலான் இடைநின்றன. ஆயின் இடைக்கண் நின்ற மூன்றனுள்ளும் பொருள்செய்வதனை முன்சொல்லாது அசைநிலை, இசைநிறைகளை முன்சொல்லியது என்னை எனின், இவை இரண்டும் ஒழிய ஈற்றின் முன்னும் பின்னும் நின்று அவை எல்லாம் பெரும்பான்மையினவாய் நிற்றலானும், அவைதாம் இவையாய் நிற்றலானும், இவைதாம் அவையாய் நிற்றல் சிறுபான்மை ஆகலானும் என்பது. (2)

253. அவைதாம்,
முன்னும் பின்னும் மொழிஅடுத்து வருதலும்
தம்ஈறு திரிதலும் பிறிதுஅவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப.

என் - எனின், இன்னும் அவற்றிற்கு ஆவது ஒரு விதி உணர்த்துதல் நுதலிற்று.

(இ..ள்) மேல் வகுக்கப்பட்டவைதாம் முன் இடத்தும் பின் இடத்தும் பெயர் வினை ஆகிய மொழிகளை அடைந்து வருதலும்,

அச்சொற்கள் தம் ஈறு ஒருவழி எழுத்து வேறுபட்டு வருதலும், மற்றோர் இடைச்சொல் தான் நிற்கும் இடத்தே நிற்றலும் ஆகிய அத்தன்மையை உடைய இலக்கணம் எல்லாவற்றிற்கும் இலக்கணம் ஆதற்கு உரிய. (எ-று)

*(எ..டு)* முன் அடுத்தது; அதுமன், கேண்மியா என்பன. பின் அடுத்தது கொன்னூர், ஓஒ தந்தார் என்பன. ஈறு திரிந்தது; மன்னைக் காஞ்சி, இஃதொத்தன் என்பன. பிறிது அவண் நிலையல்; மகவினை, மடவை மற்றம்ம என்பன.

மன்னைச்சொல், தில்லைச்சொல் என்பனவோ எனின், அவை பொருள் உணர்த்தாது சொல்தம்மை உணர நின்ற ஆகலான் ஈண்டைக்கு ஆகா என்பது. மற்று என்னை திரிபு பெறுமாறு எனின், உடம்பொடு புணர்த்தல் என்பதனான் அவற்றை இவ்வாறு ஓதிய சூத்திரங்களான் பெறுதும் என்பது. *(3)*

254. கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவிஎன்று
அம்மூன்று என்ப மன்னைச் சொல்லே.

என் - எனின், இது தத்தம் குறிப்பின் பொருள் செய்குநவற்றுள் ஒன்றன் பாகுபாடு உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* கழிவுப் பொருண்மைக்கண் வரும் மன்னும், ஆக்கப் பொருண்மைக்கண் வரும் மன்னும், ஒழியிசைப் பொருண்மைக் கண் வரும் மன்னும் என மூன்று கூற்றதாம் என்ப மன் என்னும் சொல்லது பொருள்பாகுபாட்டு வேற்றுமை. (எ-று)

இவ்வாறு பொருள் உணர்த்தலும் அவ்இடைச் சொற்கு ஆவது ஓர் இலக்கணம் என்பது. அவ்உதாரணம் உரையின் கொள்ளப்படும்.

*(எ..டு)* சிறியகள் பெறினே எமக்கு ஈயும் மன்னே (புறம்.*235)* இது கழிவு. பண்டு காடுமன் : இஃது ஆக்கம், பண்டு காடு என்பது அன்றோ இன்று நாடு என்று ஆக்கம் உணர்த்துகின்றது எனின், அதன் பொருளை இதுவும் கூடி நின்று உணர்த்திற்று என உணர்க.

பண்டு கூரியது ஒரு வாள்மன் : இஃது ஒழியிசை. இன்று ஒரு குறைபாடு உடைத்தாயிற்று என்னும் சொல் ஒழிந்தமை தோற்றுவித்து நின்றமை காண்க. *(4)*

255. விழைவே காலம் ஒழியிசைக் கிளவிஎன்று
அம்மூன்று என்ப தில்லைச் சொல்லே.

என் - எனின், இதுவும் அது நுதலிற்று.

*(இ..ள்)* விழைவின் கண்ணதும், காலத்தின் கண்ணதும், ஒழியிசைக் கண்ணதும் என மூன்று கூற்றதாம் என்ப, தில் என்னும் இடைச்சொல். *(எ-று)*

*(எ..டு)* வார்ந்து இலங்கு வை எயிற்றுச் சின்மொழி, அரிவையைப் பெறுகதில் அம்ம யானே *(குறுந்.14)*. இது விழைவு. பெற்றாங்கு அறிகதில் அம்மஇவ் ஊரே என்பது காலம். வருகதில் அம்மஎம் சேரி சேர என்பது ஒழியிசை. *(5)*

256. அச்சம் பயம்இலி காலம் பெருமைஎன்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே

என் - எனின், இதுவும் அது நுதலிற்று.

*(இ..ள்)* அச்சத்தின்கண்ணும், பயன் இன்மைக்கண்ணும், காலத்தின்கண்ணும், பெருமைக்கண்ணும் என அக்கூறுநான்காம் கொன்னைச் சொல். *(எ-று)*

*(எ..டு)* கொன்முனை இரவுஊர் *(குறுந்.91)* என்பது அச்சம். கொன்னே வந்தான் என்பது பயன் இன்மை. கொன்வரல் வாடை நினதெனக் கொண்டேனே என்பது காலம். கொன் ஊர் துஞ்சினும் *(குறுந்.138)* என்பது பெருமை. *(6)*

257. எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம் என்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே

என் - எனின், இதுவும் அது நுதலிற்று.

(இ..ள்) எச்சத்தின்கண்ணதும், சிறப்பின்கண்ணதும், ஐயத்தின்கண்ணதும், எதிர்மறைக்கண்ணதும், முற்றின்கண்ணதும், எண்ணின்கண்ணதும், தெரிநிலைக்கண்ணதும், ஆக்கத்தின் கண்ணதும் என அக்கூறு எட்டாம் உம் என்னும் சொல். (எ-று)

எச்சம் இறந்தது தழீஇயதும், எதிரது தழீஇயதும் என இருவகைத்து. அவையாவன: சாத்தனும் வந்தான் என்னும் உம்மை, கொற்றனும் வந்தான் என எதிரது தழீஇயிற்று. பின்வந்த கொற்றனும் வந்தான் என்பதூஉம், முன்நின்ற சாத்தனும் வந்தான் என்பதனைத் தழுவுதலின் இறந்தது தழீஇயிற்று இனி, இவ்இரண்டினையும் இறந்தகாலம் தழீஇயின ஆக்கி, இன்று சாத்தனும் வரும்; நாளைக் கொற்றனும் வரும் என்பன எதிரது தழீஇயின என்றுமாம். இன்னும் அவ்எச்சந்தான் யான் கருவூர்க்குச் செல்வல் என்றாற்கு யானும் அவ்வூர்க்குப் போதுவல் (என முழுவதூஉம் தழுவுவதும்) அவ்வாறு கூறினாற்கு, யானும் உறையூர்க்குப் போதுவல் (என ஒருபுடை தழுவுவதும்) என இருவகைத்தாம்.

இனிச் சிறப்பு - உயர்வுச் சிறப்பும், இழிவுச் சிறப்பும் என இருவகைத்து.

உயர்வு - தேவர்க்கும் வேம்பு கைக்கும் என்பது. ஊர்க்கும் அணித்தே பொய்கை (குறுந்.113) என்பதும் அது.

இழிபு - அவ்ஊர்ப் பூசையும் புலால் தின்னாது எனவரும்.

ஐயம் - பத்தும் எட்டும் உள என்பது.

எதிர்மறை - கொற்றன் வருதற்கும் உரியன் என்பது. இவ் எதிர்மறை அஃறிணை விரவுப்பெயர் இயல்புமார் உளவே (தொல்.எழுத்.தொகை.13) எனப் பண்புபற்றியும் வரும்.

எச்சத்தோடு இதனிடை வேற்றுமை என்னை எனின், அது பிறிது ஒரு பொருளினைத் தழுவும். இஃது அன்னது அன்றி வினையை மறுத்து நின்றது ஆயினும், எதிர்மறை எச்சம் (சொல்.435) என்றமையான் எச்சத்தின் ஒரு கூற்றைத் தழுவும் என்பது.

இனி முற்று - தமிழ் நாட்டு மூவேந்தரும் வந்தார் என்பது. யாதும் ஊரே (புறம்.192), நாளும் அன்னான் புகழும் அன்னை என்பனவும் முற்று உம்மை.

இனி எண் - நிலனும் நீரும் தீயும் வளியும் ஆகாயமும் எனப் பூதம் ஐந்து என்பது.

இனித் தெரிநிலை - நன்றும் அன்று, தீதும் அன்று என்பது இடைநிகர்த்தது என்று ஒரு பொருண்மை தெரிவித்து நிற்றலால் தெரிநிலை என்றாயிற்று.

இனி ஆக்கம் - நெடியனும் வலியனும் ஆயினான் என்பது. இஃது எண் அன்றோ எனின், ஒரு பொருள் தன்னையே சொல்லுதலின் அன்று ஆயிற்றுப் போலும். (7)

258. பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன்று என்ப ஓகா ரம்மே.

என் - எனின், இதுவும் அது நுதலிற்று.

(இ..ள்) பிரிநிலைப் பொருண்மை, வினாப்பொருண்மை, எதிர்மறைப் பொருண்மை, ஒழியிசைப் பொருண்மை, தெரிநிலைப் பொருண்மை என இவற்றைச் சிறப்புப் பொருண்மையோடு தொகுத்து ஆறு என்று சொல்லுப ஆசிரியர் ஓகாரத்துப் பொருண்மை. (எ-று)

(எ..டு) பிரிநிலை - இவருள் அவனோ கொண்டான் என்பது. இஃது இப்போது வினாவாய் நடக்கின்றது என உணர்க.

இனி வினா - அவனோ அல்லனோ என்பது.
இனி எதிர்மறை - யானோ கொள்வேன் என்பது.
இனி ஒழியிசை - கொளலோ கொண்டான் என்பது.
இனித் தெரிநிலை - நன்றோ அன்று தீதோ அன்று என்பது.
இனிச் சிறப்பு - ஓஒ பெரிது என்பது. *(8)*

**259. தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே**
**ஈற்றசை இவ்ஐந்து ஏகா ரம்மே.**

என் - எனின், இது பெரும்பான்மை பொருள்படுமாறும் சிறுபான்மை அசைநிலை உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* தேற்றப் பொருண்மை, வினாப் பொருண்மை, பிரிநிலைப் பொருண்மை, எண்ணுப் பொருண்மை, ஈற்றசை ஆதல் என இவ் ஐந்து வகைப்படும் ஏகாரம். (எ-று)

*(எ..டு)* தேற்றம் - அவனேஎ கொண்டான்.
இனி வினா - நீயே கொண்டாய்.
இனிப் பிரிநிலை - அவனே கொண்டான்.
இனி எண் - நிலனே நீரே தீயே வளியே.

இனி ஈற்றசை - கடல் போல் தோன்றல காடு இறந்தோரே (அகம்.1). ஈற்றசை என்றமையான் மொழி முதற்கண் அசைஆகாது என்பது. *(9)*

**260. வினையே குறிப்பே இசையே பண்பே**
**எண்ணே பெயரோடு அவ்அறு கிளவியும்**
**கண்ணிய நிலைத்தே எனஎன் கிளவி.**

என் - எனின், இது பொருள்படுவது ஒன்று உணர்த்துதல் நுதலிற்று.

*(இ..ள்)* முன்நின்ற வினைச் சொல்லைப் பின்வரும் வினைச்சொல்லோடு இயைவித்தல் என்னும் பொருண்மையும்,

குறிப்புப் பொருண்மைக்கண் வரும் உரிச்சொல்லினை பின்வரும் சொல்லோடு இயைவித்தல் என்னும் பொருண்மையும், இசைப்பொருட்கண் வரும் உரிச்சொல்லினைப் பின்வரும் சொல்லோடு இயைவித்தல் என்னும் பொருண்மையும், பண்புப் பொருட்கண் வரும் உரிச்சொல்லினைப் பின்வரும் சொல்லோடு இயைவித்தல் என்னும் பொருண்மையும் ........

இவ்அளவிற்கு மேல் கல்லாடனார் விருத்திஉரை கிடைக்கப் பெற்றிலது. இவ்அளவில் தொல்காப்பியம் சொல்அதிகாரம் கல்லாடனார் விருத்தி உரை.

**முற்றும்.**

## சுப்பிரமணிய சாத்திரியார் உரைக்குறிப்புக்கள்
## 7. இடையியல்

249. இடையெனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற்று இயலும் தமக்கு இயல்பு இலவே.

இடைச்சொற்கள் யாவும் பெரும்பான்மையும் மொழிக்கு இடையில் வாரா. அங்ஙனமாயின், இடைச்சொல் என்பதன் பொருள் என்னையெனின், இடைச்சொல் என்பதேயாம். அஃதாவது பெயரினிடத்தும் வினையினிடத்தும் அகத்தேனும் புறத்தேனும் தோன்றுவது என்பது. பெயர், வினை என்ற குறியானே அவற்றிற்கு இலக்கணம் கூறியது போலவே, இடைச்சொல் என்ற குறியானே இதற்கும் இலக்கணம் கூறினார் என்பதே ஏற்புடைத்து.

இடைச்சொற் கிளவியும் (சொல்.159) என்ற சூத்திரம் இடைச்சொல் என்பது வெளிப்படையாயும் குறிப்பாயும் பெயரொடும் வினையொடு. சார்ந்து வரும் என்பதை உணர்த்த, இச்சூத்திரம், மரம் காளை நட போ வேறு முதலிய பெயர் வினைகளைப் போல், இடைச்சொல் தனித்து நின்று பொருள் விளக்காது என்று உணர்த்துகின்றது என்னலாம். ஈண்டுப் பெயரொடும் வினையொடும் நடைபெற்றியலும் என்பது அனுவதிக்கப்பட்டது என்க.

இடைச்சொல்லும் உரிச்சொல்லும் பெயர்வினைகளைச் சார்ந்து வரும் என்பது கூறப்பட்டமையின், இவற்றுள் ஒன்றற்கொன்று வேற்றுமை யாதெனின், இடைச்சொல் பெயர் வினைகளிடத்துச் சார்ந்த சொல்லாய் அப்பிரதானமாயிருக்கும் என்றும், உரிச்சொல் அவற்றின் பகுதியாய்ப் பிரதானமாயிருக்கும் என்றும் அறிக.

250. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்கு உதநவும்
............ .................... .....................
அப்பண் பினவே நுவலுங் காலை.

உரையாசிரியர் மதப்படி, அன் ஆன் அள் ஆள் - முதலிய வினைவிகுதிகளே இடைச்சொல் ஆகும். சேனாவரையர் கொள்கையும் அவ்வாறே என்பது 202, 216 ஆம் சூத்திரவுரையால் விளங்குகிறது. இவ்விருவரது கொள்கையை ஊன்றி நோக்கின். அன் ஆன் முதலிய வினை விகுதிகள் காலவெழுத்தை முன்னர்ப் பெற்று வருமேயன்றித் தனியே வாரா என்பதும் இவர்கள் காலத்தில் காலவெழுத்துக்கள் இடைச்சொல்லாகக் கருதப்படவில்லை என்பதும், அன் ஆன் முதலியனவே இடைச்சொல்லாகக் கருதப்பட்டன என்பதும் பெறப்படும்.

நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையார் கொள்கையை நோக்கின், காலமொடு வருநவும் என்பதற்கு, காலம் காட்டும் இடைச்சொற்களோடே பாலும் இடமும் காட்டும் இடைச் சொற்களாய் வருவனவும் என்று பொருள் கொள்ள வேண்டியிருக்கும்.

நச்சினார்க்கினியர் மாறு என்னும் இடைச்சொல் வினையை அடுத்துக் காரணப்பொருள் உணர்த்தி நிற்றலின் மூன்றாம் வேற்றுமைப் பொருள் உணர்த்தி நின்றதல்லாமை உணர்க என்று சேனாவரையரை மறுத்தார். ஆகல் என்ற தொழிற் பெயரையடுத்து காரணப் பொருளைக் கொண்டே மாறுவந்திருத்தலான் நச்சினார்க்கினியர் மறுப்புப் பொருந்துமா?

சிறந்தோன் பெயரன் பிறந்த மாறே (நற்.40) முதலாகப் பெரும்பான்மையும் வினைச்சொல்லின்வழி மாறு தோன்றுதலானும் வினைப் பகுதியோடு தொடர்புடைய தொழிற் பெயர் வழியன்றிப் பிறபொருட்பெயர்வழி அது தோன்றாமையானும் பெயர்வழித் தோன்றும் மூன்றனுருபின் ஏதுப்பொருட்டாய், மாறு வாராது என நச்சினார்க்கினியர் கருதினார்.

260. விழைவின் தில்லை தன்னிடத்து இயலும்.

சேனாவரையர் இடம் வரையறுத்து ஓதாமையின் விழைவின் தில்லை தன்மைக்கண் வருதலும் மேலே

பெறப்பட்டதனைப் பின்னும் கூறினார். ஏனையிடத்து வாரா தென்று நியமித்தற்கு என்றார். சேனாவரையர் கூறும் பொருள் வடமொழி நூல்முறைக்குப் பொருந்தியது.

270. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குரி எழுத்தின் வினையொடு முடிமே

ஒருமைப்பெயர் முன்னர் ஒருமை சிதையாமல் ஆரைக்கிளவி வந்து பலரறிசொல்லான் முடிதலின், ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவியின் வேறாதல் அறிக என்று சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் கூறுகின்றனர். அவ்வாறாயின் ஆரைக்கிளவி எதனைக் காட்டுகிறது? ஒருவரைக்கூறும் பன்மைக் கிளவி யாம் நீயிர் இவர் இவையே; அரசனார் முதலிய அல்ல என்று கொள்வதற்கு யாது பிரமாணம்? ஒருவரைக் கூறும் பன்மைக் கிளவியும் (சொல்.27) என்னும் சூத்திரவுரையில் தாம் வந்தார் தொண்டனார் எனப் பன்மைக் கிளவி இழித்தற்கண் வந்ததால் என்னின் என்று சேனாவரையர் வினா எழீஇ விடை இறுக்கிறார். ஆங்குத் தொண்டனார் என்பது பன்மைக் கிளவியா? ஒருமைக் கிளவியா?

உரையாசிரியர் கூறிய பொருள் பொருத்தமாயிருப்பினும், சூத்திரத்தில் முற்றுப்போலத் தோன்றும் முடிமே என்ற சொல்லைப் பெயரெச்சமாகவும், இயற்பெயர் என்பதற்குப் பொருளுக்கு இயலும் பெயர் என்பது பொருளாகவும் கொள்ளவேண்டியுள்ளது.

281. ஈரளபு இசைக்கும் இறுதிஇல் உயிரே
..................................................
குறிப்பின் இசையான் நெறிப்படத் தோன்றும்.

நச்சினார்க்கினியர் கூறும் கௌவும் வெளவும் இடைச்சொல் ஆமோ? கௌ இடைச்சொல்லாயின், ஔகார இறுதிப் பெயர்நிலை முன்னர் (எழுத்.உயிர்.93) என்னும் சூத்திரவுரையில் அதனைப் பெயராகக் கொண்டு கௌவுக்கடிது முதலிய உதாரணங்கள் கொடுத்தது எவ்வாறு பொருந்தும்?

283. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்
தத்தமுள் மயங்கும் உடனிலை இலவே.

நச்சினார்க்கினியர் கூறும் பொருள் இரண்டு எச்சவும்மையும் ஓர் எதிர்மறையும்மையும் ஒரே தொடரில் வந்தாற்றான் பொருந்தும். சூத்திரப்போக்கை நோக்குமிடத்து அவ்வாறு கொள்ளவேண்டுவது அவசியம் இன்று. இக்காலத்தில் உலக வழக்கும் சாத்தனும் வந்தான், இனிக் கொற்றன் வரினும் வரும் என்றே உளது.

எச்சவும்மையை வெளிப்படக் காட்டவேண்டும்; உம்மை அடாது செஞ்சொலாயிருப்பின் அதனைப் பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல் என்று சூத்திரம் தொடர்தலின் இவ்வாறு உதாரணம் எடுத்தோதினார் என்று கொள்ள வேண்டும்.

## சுப்பிரமணிய சாத்திரியார் உரைக்குறிப்புக்கள்

## 8. உரியியல்

இச்சூத்திரம் உரிச்சொல்லின் இலக்கணம் கூறியதாயின் உரிச்சொல் கிளவி இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றும் என்றே ஆசிரியர் கூறியிருப்பர். ஏனையவற்றைச் சேர்த்திருத்தலால், இச்சூத்திரம் உரிச்சொல்லின் இலக்கணத்தைக் கூறாது அதன் தன்மையைக் கூறிற்று என்றலே பொருந்தும். அவ்வாறாயின், அதன் இலக்கணம் எதனால் பெறாது மெனின், பெயர்ச்சொல் வினைச்சொல் இடைச்சொல் இவற்றின் இலக்கணம் அவ்வக்குறியால் பெறப்பட்டன என்றது போலவே, உரிச்சொல் என்ற தொல்லோர் குறியானே அது பெறப்பட்டதெனல் வேண்டும். உரிச்சொல் என்பதற்குப் பெயரினும் வினையினும் இன்றியமையாது உரிய பகுதியை உணர்த்தும் கிளவி என்பது பொருளாகும். அப்பகுதியைத் தெய்வச்சிலையார் தாது என்பர். அவரது கொள்கையில் வடமொழியிலக்கண ஆசிரியரான சாகடாயனரைப் போல் எல்லாப் பெயரும் தாதுவிலிருந்து வந்தன என்று கொள்ளல்வேண்டும். செயலைக்குறிக்கும் பகுதிகளுக்கே தாது எனப்பெயராதலானும், மழவு குழவு முதலிய சில பெயர்கள் தாது வினின்று பெறப்பட்டன என்று கொள்வது எளிதன்று ஆகலானும், எல்லாப்பெயர்களும் தாதுவினின்று பிறந்தன எனக் கொள்ளாது பெரும்பான்மையன தாதுவினின்றும் சிறுபான்மையன அவ்வாறன்றியும் பிறந்தன என்று வடமொழியிலக்கண ஆசிரியரான கார்க்கியரைப் போலக் கொள்வது பொருத்தமாகும். அவ்வாறாயின், சில பெயர்களின் பகுதியும் உரிச்சொல் என்னலாம். இஃது என் கருத்து. ஆதலின், உரிச்சொல் என்பது பெயர் - வினை - இவற்றின் பகுதி என்னலாம்.

360. இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை.

இதற்கு உதாரணமாக இலம்படு புலவர் என்பதை நால்வரும் காட்டினர். இலம்படு புலவர் என்பதற்கு, இலமென் கிளவிக்குப் படுவருகாலை, நிலையலும் உரித்தே செய்யுளான

(எழுத்.புள்ளி.21) என்னும் சூத்திரவுரையில் இலத்தாற் பற்றப்படும் புலவர் என்று பொருள் கொண்டார் உரையாசிரியர். அக்கொள்கையை அச்சூத்திரவுரையிலும் இச்சூத்திரவுரையிலும் மறுத்து இல்லாமை உண்டாகின்ற புலவர் என்று பொருள் கொடுத்தார் நச்சினார்க்கினியர்.

395. எழுத்துப்பிரிந்து இசைத்தல் இவண்இயல்பு இன்றே.

சேனாவரையர் கருத்துயாதெனில், பெயர் வினை இவற்றிற்குப் பகுதியாகிய உரிச்சொல்லை எழுத்தெழுத்தாகப் பிரித்துப் பொருள்கொள்ள இயலாது என்பது. இதுவே பொருத்தமுடைத்து.

இவ்வியலில் உரிச்சொற்களில் பலவற்றை ஆசிரியர் தொழில் பண்பு முதலிய விதிகளோடு சேர்த்துக் கூறியிருப்பினும், அவற்றின் பகுதியே கொள்ளல்வேண்டும்.

# சுப்பிரமணிய சாத்திரியார் உரைக்குறிப்புக்கள்

## ௯. எச்சவியல்

398. அவற்றுள்,
இயற்சொல் தாமே.......
தம்பொருள் வழாஅமை இசைக்கும் சொல்லே.

சேனாவரையர் இங்கு நீர் என்பது ஆரியச்சிதைவாயினும் அப்பொருட்கு அதுவே இயற்சொல்லாய்ச் செந்தமிழ் நிலத்தும் கொடுந்தமிழ் நிலத்தும் வழங்கப்படுதலான் இயற்சொல்லாயிற்று என்று கூறினார். ஆனால் நீர் என்பது தமிழ்மொழியினின்றும் வந்த சொல் என்பது மொழிநூல் வல்லோரின் துணிபு.

399. ஒருபொருள் குறித்த வேறுசொல் ஆகியும்
வேறு பொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
இருபாற்று என்ப திரிசொல் கிளவி.

திரிசொல் என்பது இவ்விரண்டனுள் ஒன்றாயிருக்கலாம் என்பதே கருத்து. இச்சூத்திரவுரையில் தெய்வச்சிலையார் அஃதேல் உரிச்சொல்லோடு இதனிடை வேறுபாடு என்னையெனின், உரிச்சொல் குறைச்சொல்லாகி வரும், திரிசொல் முழுச்சொல்லாகி வரும் என்று கூறியது கவனித்தற்குரியது.

401. வடசொற் கிளவி வடஎழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்ஆ கும்மே.

ஆரியச்சொல் போலும் சொல் என்னாது, ஆரியத்தோடு அபின்னமான சொல் என்று உரையாசிரியர் கூறியிருத்தல் வேண்டும் என்பது சேனாவரையர் கருத்து.

நச்சினார்க்கினியத்தில், வடவெழுத்தொரீஇ என்பதற்கு உரப்பியும் எடுத்தும் கனைத்தும் கூறும் வடவெழுத்துக்களின் நீக்கி

என்று பொருள் கொடுக்கப்பட்டுள்ளது. அவ்வெழுத்துக்கள் கவர்க்கம் முதல் பவர்க்கம் முடிய ஐவர்க்கங்களிலும் முறையே இரண்டாவதும் மூன்றாவதும் நான்காவதுமாக வரும் எழுத்து, ஷஸஹ இவற்றை நச்சினார்க்கினியர் மறந்துவிட்டார் போலும். ıю

இச்சூத்திரத்தில் வடசொல் என்பதனால் இலக்கண இலக்கியங்களில் வழங்கும் ஸம்ஸ்கிருதச் சொல்லை மாத்திரம் குறித்தாரா, அவற்றோடு வடநாட்டில் பேச்சில் வழங்கும் பாகத்சொல்லையும் குறித்தாரா ஆசிரியர் என்பது ஆராயத்தக்கது.

405. அவற்றுள்,
நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

உரைகாரர்கள் நால்வரும் கூறுவதை நோக்குமிடத்து இச்சூத்திரத்தின் கருத்து, ஒரு செய்யுளில்,

1. பலவினைகள் ஒருங்கு வந்து அவற்றைத் தழுவும் பெயர்களும் ஒருங்குவரினும்.
2. பலபெயர்கள் ஒருங்குவந்து, அவற்றைத் தழுவும் பல பெயர்கள் ஒருங்குவரினும்.
3. பலபெயரும் வினையும் ஒருங்கு வந்து அவை தழுவும் பெயர் வினைகள் ஒருங்குவரினும், அவற்றை அம்முறையே ஒன்றோடொன்று பெற்று இயைய அந்நுவயித்தல் வேண்டும் என்பதே.

இவற்றுள் மூன்றாவதற்கு, மாசு போகவும் காய்பசி நீங்கவும் கடிபுனல் மூழ்கி அடிசில்கை தொட்டு என்பது உதாரணமாகும். இதனைச் சேனாவரையரும் நச்சினார்க்கினியரும் வினை நிரல்நிறை என்று கொண்டனர்.

408. பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரிபும்
தோற்றமும் வரையார் அடிமறி யான.

நச்சினார்க்கினியர் கூறாய் தோழியான் வாழு மாறே என்னுமிடத்து, மாறு என்னும் இடைச்சொல் தனக்கோர் பொருளின்றி வாழும்படியை என எருத்துச்சீரின் பொருளையே உணர்த்தும் என்றார். மாறு என்பது அனையை ஆகன் மாறே, நீ துஞ்சாய்மாறே, நீ அருளன்மாறே (புறநா.20,22,92) முதலிய இடங்களில் ஏதுப்பொருளில் வருதலின், அதற்குப் பொருளில்லை என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

410. தநநு எஎனும் அவைமுதல் ஆகிய
கிளைநுதல் பெயரும் பிரிப்பப் பிரியா.

தமன் நமன் நுமன் எமன் - என்புழி, முதனிலையாம் தம் முதலியன பன்மைப் பொருளையன்றி தன் முதலிய ஒருமைப் பொருளைச் சுட்டுவன அல்ல - என்று நச்சினார்க்கினியர் சேனாவரையர் உரைத்ததை மறுத்தார். ஆயின், பிரயோகவிவேக ஆசிரியர் தம் உரையில், சிவன்தமர் - மணிவண்ணனன் தமர் - கல்லா மா அன்னார் தமர்(மை) (குறள்.814) - என உதாரணம் காட்டித் தமன் தமள் தமர் முதலிய சொற்களில் பகுதி ஒருமை பன்மை இருபாற்கும் பொதுவாய் நிற்கும் தன்மையைப் புலப்படுத்திச் சேனாவரையர் உரையை நிறுவுவார்.

நச்சினார்க்கினியத்தில் ஈண்டு இவை, வெற்பன் பொருப்பன் போலத் தம் நம் நும் எம் - என்பன பிரிந்து நின்று பொருளுணர்த்திப் பின்வருகின்ற அன் அள் அர் - என்பன பொருளுணர்த்தாது இடைச் சொல்லாயே நிற்றலின் பிரிப்பப் பிரியா என்றார். வெற்பன் பொருப்பன் என்பனவற்றில் அன் இடைச்சொல் என்பதில் ஐயமில்லாமையின் இச்சொற்றொடரின் கருத்து விளங்கவில்லை.

விகுதியிடைச் சொற்குரிய பால்இடம் உணர்த்துதலன்றி, பகுதி போலப் பொருள் விளக்கம் தருவன அல்ல ஆகலின், பகுதியாகிய பெயர்வினையை இடமாகக் கொண்டு அடுத்து வருதலையுடைய அவ்விகுதிகளைப் பொருளுணர்த்து வனஅல்லவாகக் குறிப்பிட்டார் - எனக் கொள்ளலாம்.

கிளைப்பொருள் தோன்ற (தமன் - தமக்கு உறவாதலையுடையன்) விரிக்கப்படுவன பிற சொல்லேயன்றி, அவை விகுதியின் பொருளாக வருவன அல்ல. இவ்வாறு நச்சினார்க்கினியர் உரைத்ததற்கு அமைதிகொள்ளலாம்.

இச்சூத்திரத்திற்குச் சேனாவரையர் தமன் நமன் - முதலியவற்றை உதாரணமாகக் கூறாது, தம்பி - தங்கை - முதலியவற்றை உதாரணமாகக் கூறுதல் மிகவும் ஏற்புடைத்தாகும். பி,கை - இவை எவற்றைக் குறிப்பன என்பதைக் கூறுவது ஆசிரியர் காலத்தே இல்லாத தாயிற்று எனலாம்.

உயர்திணை முப்பாற்கும் உரிய ன்,ள்,ர் - விகுதிகளைத் த ந நு எ - என்னும் கிளை நுதற் பெயர் பெற்று வரவேண்டும் என்று ஆசிரியர் கருதியமை விளிமரபு இறுதிச் சூத்திரத்தான் போந்தது ஆதலின் தம்பி, தங்கை இவை காட்டலாகாமை உணரப்படும்.

411. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று
அவைமூன்று என்ப ஒருசொல் அடுக்கே.

தெய்வச்சிலையார் உரைகொண்ட சொல்லதிகாரப் பதிப்பில் இச்சூத்திரம் இசைபடு பொருளே நான்குவரம்பு ஆகும் (சொல்.423) என்ற சூத்திரத்துக்கு முன் காணப்படுகிறது. சொல்.423, 424, 425, 426-ஆம் எண்ணுடைய நான்கு சூத்திரங்களும் அடுக்கைப் பற்றி உணர்த்தலின், தெய்வச்சிலையார் கொண்ட முறை தக்கதாகும்.

415. வினையின் தொகுதி காலத்து இயலும்

காலத்தியலும் என்றதற்குக் காலச் சொல்லோடே நடக்கும் என்று தெய்வச்சிலையார் கூறும் பொருள் தெளிவாயுள்ளது.

வேற்றுமைத் தொகையே - உவமத்தொகையே என்ற சொற்கள் போல இங்கும் காலத்தொகையே என்று சொல்லாது வினையின் தொகுதி என்று சொன்னதற்குக் காரணம் யாதெனின், கால எழுத்தோடு பெயரெச்சவிகுதியும் தொகுதலால் என்க.

தொல்யானை முதலியவற்றைச் சேனாவரையர் நித்திய சமாசனாகக் கொண்டார் போலும். அன்றியும் இச்சூத்திரத்தில் வினை என்பது தாது என்றும், அது தொழில் மாத்திரம் உணர்த்துகின்றது என்றும், அது தொழிற்பெயர் என்பது ஆசிரியர் கருத்து என்றும் அவர் கூறுவது பொருந்துமா? நட, கொல் - முதலிய தாதுக்களைப் பெயர் என்று கொள்வதற்குச் சேனாவரையர் கூறும் காரணமாவது; முதலின் கூறும் சினையறி கிளவியும்...... இருபெயரொட்டும் (சொல்.114) என்ற சூத்திரத்தில் இருபெயரொட்டு அன்மொழித்தொகையே குறித்தவாறும், அவ்வன்மொழித்தொகைக்குள் வினைத்தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை ஒன்றாதலானும் என்பதாம். வினைத் தொகைப் புறத்துப் பிறந்த அன்மொழித்தொகையை ஆசிரியர் கூறாமையானும், இருபெயரொட்டு அன்மொழித் தொகையைக் குறிக்கவில்லை என்ற தெய்வச்சிலையார் கொள்கை வலியுறுதலானும், சேனாவரையர் கூறியவாறு கொள்ளவேண்டா.

இச்சூத்திரவுரையில் தெய்வச்சிலையார் மிகத்தெளிவாய்க் கூறியிருப்பதைக் காண்க; .......பால் உணர்த்தும் சொல் முற்றுச் சொல்லாகி நின்று தொகைநிலை ஆகாமையானும், பால்காட்டாத வினையெச்சம் பெயரெச்சம் என்னும் இரண்டனுள்ளும் வினையெச்சம் முற்றுவினைச் சொல்லோடல்லது முடியாமையானும், ஈண்டுத் தொகுவதும் விரிவதும் பெயரெச்சம் என்று கொள்க. அது தொகுங்காலத்துக் காலப்பொருளை உணர்த்தும் சொல்லே தொகுவதும் விரிவதும் என்று கொள்க. தொழிலும் பொருளும் விட்டிசைத்து நில்லாது ஒற்றுமைப் பட்டதனை வினைத்தொகை என்றார்.

**416. வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று**
**..................... ........................................**
**..................... ........................................**
**என்ன கிளவியும் பண்பின் தொகையே.**

உரையாசியர், நச்சினார்க்கினியர், தெய்வச்சிலையார் - இவர்கள் மதத்தில் கருங்குதிரை என்பதற்குத் தொகைவிரி கரியது

குதிரை என்பதே. சேனாவரையர் பண்புத் தொகையும் வினைத்தொகை போலப் பிரிக்கப்படாதாம். என்று கூறுகின்றார். இவ்வாறு கூறுவது இன்னது இது என்று சூத்திரித்த ஆசிரியர்க்குச் சம்மதம் இன்று என நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுக்கின்றார். மேலும், .......உயர்திணை அஃறிணை ஆயிரு மருங்கின், ஐம்பால் அறியும் பண்புதொகு மொழியும் (எழுத்.குற்.77) என்னுமிடத்து, ஐம்பாலறியும் என்ற சொல் பண்பு என்ற சொல்லை விசேடித்தலின், சேனாவரையர் மதம் எவ்வாறு பொருந்தும்?

இச்சூத்திரவுரையில் தெய்வச்சிலையார் வேற்றுமைத் தொகை உவமத்தொகை வினைத்தொகை பண்புத்தொகை என்பன தம்முள் ஒப்புமையுடைய ஆதலின், பாணினியார் தற்புருடசமாகம் என்று குறியிட்டார் என்று கூறியிருத்தலைக் காண்க.

418. பண்புதொக வரூஉம் கிளவி யானும்
.................. ......................................
.................. ......................................
ஈற்றுநின்று இயலும் அன்மொழித் தொகையே.

தெய்வச்சிலையார் இச்சூத்திரவுரையில் துடியிடை எனவும் தாழ்குழல் எனவும் உவமத்தொகைப் புறத்தும் வினைத்தொகைப் புறத்தும் அன்மொழித்தொகை வருமாலெனின், துடி என்பதூஉம் தாழ் என்பதூஉம் இடை குழல் என்பவற்றிற்கு அடையாகி வரினல்லது, அவற்றையுடையாட்குப் பெயராகுங்கால், இறுதி நின்ற பெயர்ப் பொருண்மை வந்து ஏனைய வாராமையின், ஆகுபெயர் எனினல்லது அன்மொழித்தொகை ஆகாதெனக் கொள்க. அதனானேயன்றே இருபெயரொட்டும் (சொல்.114) என ஆகுபெயர்க்கண் எடுத்தோது வாராயினர் என உணர்க......... என்று கூறினர்.

தாழ்குழல் என்பது இருபெயரால் ஆகிய தொகையல்லாமையின் அதனை இருபெயரொட்டு என்று கூறுதல்

பொருந்துமோ எனின், இருபெயரொட்டு என்ற குறி பிரதானமாய்த் துடியிடை போன்ற சொற்களுக்கு என்றும், தாழ்குழல் முதலியவற்றிற்கு அப்பிரதானமாய் வந்தது என்றும் கூறல் வேண்டும்.

ஆசிரியர் இச்சூத்திரத்தில் உவமை தொக்க பெயர்வயினானும், வினையே தொக்க பெயர்வலி னானும் என்று கூறாமையின் தெய்வச்சிலையார் கூறுவதே ஆசிரியர் மதம் என்பது நன்கு பெறப்படும்.

420. எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய

உரையாசிரியரும் தெய்வச்சிலையாரும் கொண்டவாறே கொள்தல் நலம்,

இச்சூத்திரவுரையில் நச்சினார்க்கினியர் சேனாவரையர் மதத்தைப் பின்பற்றி, நிலங்கடந்தான் - குன்றத்திருந்தான் - என்பனவற்றைத் தொகையாகக் கொண்டார். பெயரும் தொழிலும்.....(எழுத்.132) சூத்திரத்தின் பொருளைக் கூறுமிடத்துப் பெயரும் தொழிலும் பிரிந்திசைத்தவழியும் தொகையாதல் ஆசிரியர்க்குக் கருத்தாயிற்று என்றார். அந்நுவயத்தில் உரையாசிரியர் மதத்தையும், தொகுதி என்ற சொல்லின் பொருளில் சேனாவரையர் மதத்தையும் பின்பற்றிப் பிரிந்திசைத்த வழியும் தொகையாகும் என்று கூறுவது எவ்வாறு பொருந்தும்?

(பெயரும் தொழிலும் என்ற சூத்திரத்தே நச்சினார்க்கினியர் உரையாசிரியர் வழி நின்று உரை வகுத்தார். சேனாவரையர் தொகை பற்றிக் கொண்ட கருத்தே தமிழ் மரபிற்கு ஏற்றது.)

423,424. இசைபடு பொருளே நான்குவரம்பு ஆகும்
விரைசொல் அடுக்கே மூன்றுவரம்பு ஆகும்.

சேனாவரையர், முன்னர்க் கூறப்படும் அசைநிலை அடுக்கிவரும் என்பது அதிகாரத்தான் கோடற்பொருட்டு,

இசைநிறை அசைநிலை என்னும் சூத்திரத்தின் பின்வையாது இச்சூத்திரம் இரண்டனையும் ஈண்டுவைத்தார் என்று கூறுவது பொருத்தமாகத் தோன்றவில்லை. தெய்சிலையார் இவ்விரண்டு சூத்திரங்களுக்கு முன் இசைநிறை அசைநிலை என்ற சூத்திரத்தை வைத்தது மிகப்பொருத்தமாயுள்ளது.

425. கண்டீர் என்றா கொண்டீர் என்றா

..................................................

..................................................

நின்றவழி அசைக்கும் கிளவி என்ப.

தெய்வச்சிலையார் இசைக்கும் என்று பாடம் கொண்டார். மற்றை மூவரும் கூறும் பொருள் ஒன்றே. தெய்வச்சிலையார் பாடவேறுபாடு கொண்டோரேனும், கேட்டை யென்றா (சொல்.426) என்ற மேற் சூத்திரத்தில் முன்னுறக் கிளந்த இயல்பாகும்மே என்பதற்கு அசைநிலையாகும் என்று பொருள் கூறுதலின், உரையாசிரியர் முதலியோர் கொள்கையே தக்கது.

427. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்

..................................................

மெய்ம்மை யானும் இவ்விரண்டு ஆகும்

அவ்வாறு என்ப முற்றியல் மொழியே.

இச்சூத்திரத்தில் மெய்ம்மை என்பது வினையையும் வினைக்குறிப்பையும் குறிக்கின்றது என்று உரையாசிரியரும், உயர்திணை அஃறிணை விரவுத்திணை - இம்மூன்றனையும் குறிக்கின்றது என்று சேனாவரையரும் நச்சினார்கினியரும், ஒருமை - பன்மை இவற்றைக் குறிக்கின்றது என்று தெய்வச்சிலையாரும் கூறினர்.

ஈரிரண்டாகும் அவ்வாறு என்பதற்கு இருபத்து நான்கு என்று தெய்வச்சிலையார் கொள்ளும் பொருள் பொருத்த முடைத்து. எஞ்சு பொருட்கிளவி பத்துவகைப்படும் (சொல்.430) என்று தொகுத்துக் கூறியவாறு, இச்சூத்திரம் முற்றுவினை இருபத்து நான்கு வகைப்படும் என்று தொகுத்துக் கூறிற்று என்னலாம்.

சேனாவரையர் வினைச்சொல்லுள் இருவகை எச்சம் ஒழித்து ஒழிந்த சொல் முற்றிநிற்கும் எனவும், அவை இனைத்துப் பாகுபாடும் என்றும் உணர்த்தல் இச்சூத்திரத்திற்குக் கருத்தாகக் கொள்க என்றாரேனும், பின்னர், முற்றி நிற்றல் முற்றுச்சொற்கு இலக்கணமாதல் முற்றியல் மொழியே என்பதனாற் பெற்றாம் என்று கூறினமையான், அவை இனைத்துப் பாகுபடும் என்று, உணர்த்தல் இச்சூத்திரத்தில் விதேயம் ஆகும் என்பதே அவர் கருத்தாம்.

நச்சினார்க்கினியர் காலமும் குறியீடும் ஈண்டு ஓதியது இலக்கணமாயிற்று என்று கூறி, ஒரோவோர் காலம் பெற்றுவருவனவும் முக்காலமும் பெற்று வருவனவுமாய் நிற்கும் முற்று என ஐயம் அகற்றினார் இச்சூத்திரத்தான் என்று கூறுவது முன்னுக்குப் பின் முரணுகிறது.

(காலமொடு வருஉம் வினைச்சொல் எல்லாம் (சொல்.201) என்ற சூத்திர அடியான் வினைமுற்று முக்காலமும் ஒருங்கே காட்டும் என்று எய்தியதனை ஒரோவொரு காலம் பெற்று வருவனவும் முக்காலமும் பெற்று வருவனவாய் முற்று நிகழும் என இச்சூத்திரத்தான் ஐயம் நீக்கினார். தெரிநிலை முற்று குறிப்பிட்ட காலவெழுத்துப் பெற்று ஒருகாலமே காட்டவல்லது; குறிப்பு முற்று முக்காலத்திற்கும் பொதுவாய் நிற்பது என இச்சூத்திரத்தால் பெறப்பட்டவாறு. முற்றியல் மொழி என்ற காரணக்குறியீடும் உணர்த்தப்பட்டது. முன்னுக்குப்பின் முரணுதல் யாண்டையது? இனைத்துப் பாகுபடும் முற்று என்றற்கு தொகை காலம் - இடம் - அகப்படுத்துக் கூறாமல் மூவகைத்திணை தோறும் தெரிநிலையும் குறிப்புமாக நிகழும் அவ்ஆறு மாத்திரம் சுட்டின், தொகை அகப்படக் கூறியதாமோ?

இச்சூத்திரத்தையும் இதற்கடுத்த இரண்டு சூத்திரங்களையும் தெய்வச்சிலையார் வினையியலின் இறுதியில் கூறினார். எச்சவியலிற் கூறுவதே பொருந்தும் (தெய்வச்சிலையார் வைப்பு முறை பொருந்தும். வினையியலுள் இறுதிக்கண்வையாது, செய்தென் எச்சத்து.... (வினை.42) என்பதனை அடுத்து இவை

இடம் பெறின் மேலும் சிறக்கும். பால சுந்தரனார் கருத்தும் அது. சாத்திரியார் மறுப்பு ஏலாததொன்று.)

428. எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்.

சேனாவரையர் தெய்வச்சிலையார் - இவ்விருவரது உரையும் ஒன்றே. அஃதே பொருத்தமுடைத்து.

வினையெனப்படுவது (வினை.1) எஞ்சிய கிளவி (வினை.26) என்ற சூத்திரங்களால் கூறப்பட்ட எல்லா வினைகளுக்கும் உரிமை இறப்பின் நிகழ்வின் (சொல்.427) என்ற சூத்திரத்தான் விலக்கப்பட்டது என்று உரையாசிரியர் கூறுகின்றார். அச்சூத்திரம் (427) முற்றுச்சொல் என்ற குறியிடுவதற்கு வந்தது என்றே அவரே கூறுதலின், அது பொருந்தாது.

இருவகை எச்சத்திற்கும், காலமொடு வருஉம் வினைச்சொல் எல்லாம் (சொல்.201) என்ற பொதுவிதியான், முக்காலமும் ஒன்றற்கு வருமோ என்றும் ஐயம் நிகழ்ந்ததனை இச்சூத்திரத்தான் அகற்றினார் என்ற நச்சினார்க்கினியர் கொள்கையும் பொருத்தமாகத் தோன்றவில்லை.

429. அவைதாம்,
தத்தம் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர்முடி பினவே.

(அவைதாம் என்று ஆசிரியர் மேலைச் சூத்திரங்களுட் கூறிய முற்று வினைகளையே சுட்டினார். சுட்டவே, மேலைச் சூத்திரங்களுள் எச்சவினை இடம் பெறாது முற்று வினையே விதிக்கப்பட்டவாறாம்)

இச்சூத்திரம் எற்றுக்கெளின், முற்றுவினை அடுக்கிவரின் ஒன்றனை ஒன்று தழுவாது பின்வரும் பெயரையே ஒவ்வொன்றும் தழுவும் என்று அறிவித்தற்காம்.

431. அவற்றுள்,
பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.

உரையாசிரியர் முதலியமூவரும் அவனே கொண்டான் அவனோ கொண்டான் தானே கொண்டான் தானோ கொண்டான் என்ற உதாரணங்களைக் காட்டினர். ஆயினும் உரையாசிரியர் பிரிநிலை ஏகார ஓகாரங்கள் அவன் என்பதைக் கொண்டு முடிவதென்றும், சேனாவரையர் பிறர் கொண்டிலர் என்பதைக் கொண்டு முடிவதென்றும், நச்சினார்க்கினியர் கொண்டான் என்பதைக்கொண்டு முடிவதென்றும் கூறினர். சேனாவரையரை நச்சினார்க்கினியர் மறுத்தமை பொருத்தமுடைத்து. ஆயினும் பிரிநிலை முடிபின என்பதற்குப் பொருள் ஏற்புடையதாகக் கூற இயலவில்லை. தெய்வச்சிலையார் உரை சிறந்து காட்டுகின்றது.

(பிறர் கொண்டிலர் எனப் பிரிக்கப்பட்ட பொருள் மேல் வரும் சொல்லையே தமக்கு முடிபாகப் பிரிநிலை ஏகார ஓகாரங்கள் உடையுன என்பதே பிரிநிலை முடிபின என்பதற்குப் பொருள். இப்புலப்பாடு தோன்றவேண்டுமாயின் அவை கொண்டான் என்று அடுத்துவரும் முற்றுவினையைக் கொண்டு முடிய வேண்டும் என்று நச்சினார்க்கினியர் கருதியுரைத்தாகவே கொள்ளற்பாலம்)

பத்துவகை எச்சத்திற்கும் தெய்வச்சிலையார் கூறிய பொருள் அவிநய நூற்கு உரைசெய்த இராசபவித்திர பல்லவதரையன் மதத்தைப் பெரும்பாலும் ஒத்தவை என்பது நன்னூல் 359-ஆம் சூத்திரத்தில் மயிலை நாதர் எழுதிய உரையால் அறியப்படுகிறது.

432. வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றிய முடிபுஆ கும்மே
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே.

தெய்வச்சிலையார் உரையினும் உரையாசிரியர் முதலியோர் உரையே சிறந்தது. (வினையெஞ்சு கிளவி என்னும் ஒரு

குறியீட்டை ஆசிரியர் இரண்டுபொருளில் வழங்குவதாகத் தெய்வச்சிலையார் உரை நிகழ்கிறது. இது நூன் முறைக்குத் தவறன்றோ?)

சூத்திரத்தில் ஆகும் - வரும் - என்ற இருவினை இருத்தலின், அஃது இருதொடர்ப்படாதோ எனின், சூத்திரத்திற்கு, வினையெச்சசம் தெரிநிலை வின்யையும் ஆக்கமொடு கூடிய குறிப்பு வினையயும் முடிபாக உடைத்து என்று கருத்துக் கொள்ளின் அவ்வாறாகாது என்க.

434. ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிபின.

தெய்வச்சிலையார், இவர் கல்வியாற் குறைவிலர் என்றவழி, ஒழுக்கத்தாற் குறையுடையர் என்றாதல், பொருளாற் குறையுடையர் என்றாதல் ஒழிந்தபொருண்மை குறித்தவழி அப்பொருள் பட்டவாறும், அதனானே அச்சொல் முற்றுப் பெற்றவாறும் கண்டுகொள்க என்றார்.

மன்முதலிய இடைச்சொற்கள் ஒழியிசைப் பொருளைக் குறிக்கும் என்று இடையியலிற் கூறப்பட்டமையான், அவை ஒழியிசை முடிபின என்று கூறுவது எற்றுக்கு? தெய்வச்சிலையாரோ இவர் கல்வியாற் குறைவிலர் முதலிய சொற்றொடரையே ஒழியிசை யெச்சமாகக் கொள்கின்றார். அஃதே ஏற்புடைத்து.

435. எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின.

இச்சூத்திரத்தும் உரையாசிரியர் முதலிய மூவரின் மதம் ஒன்று; தெயவச்சிலையார் மதம் வேறு. ஒழியிசை எச்சம் என்ற மேலைச் சூத்திரத்திற்குக் கூறிய காரணமே இங்கும் தெய்வச்சிலையார் உரை சிறக்கும் என்பதற்குக் காரணமாம்.

436. உம்மை எச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபுஆ கும்மே.

உம்மையெச்சம் என்பதற்கு உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் எச்சவும்மை என்றும், சேனாவரையர் உம்மையோடு கூடிய எஞ்சுபொருட்கிளவி என்றும், தெய்வச்சிலையார் உம்மையாகிய எச்சம் என்றும் பொருள் கொண்டனர்.

சூத்திரத்தின் கருத்து உரையாசிரியர் சேனாவரையர் நச்சினார்கினியர் இம்மூவருக்கும் ஒன்றேயாயினும், உரையாசிரியரது அந்நுவயம் சூத்திரப்போக்கை ஒட்டியிருத்தலானும். இச்சூத்திரத்தில் உம்மையெச்சம் உத்தேசியமாக இருத்தல் வேண்டும் ஆதலானும், அவரது உரையே சிறந்தது என்பது என் கருத்து.

தன்வினை என்பதற்குத் தொழிலில் மாத்திரம் தன்னோடு ஒத்தவினை என்று கருதுகின்றனர் உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும், தொழிலினும் காலத்தினும் ஒத்த வினை எனக் கொண்டனர் ஏனையோர்.

437. தன்மேல் செஞ்சொல் வரூஉங் காலை
..........................................................
..........................................................
மயங்குதல் வரையார் முறைகிலை யான.

முறைநிலையான என்றதனான், இறந்ததனொடு நிகழா நின்றதூஉம் மயங்கும், எதிர்வதனோடு இறந்ததுவும் மயங்கும் என்று உரையாசிரியரும் இறந்த காலத்தொடு நிகழ்காலமும், நிகழ்காலத்தோடு இறந்த காலமும் வந்து மயங்குதல் வரையப்படும் என்றவாறாயிற்று என்று சேனாவரையரும், முறைநிலை என்றதனான் சிறுபான்மை நிகழ்வோடு இறப்பும் மயங்குதல் கொள்க என்று நச்சினார்க்கினியரும் கூறுவது காண்க.

438. எனவென் எச்சம் வினையொடு முடிமே.

உரையாசிரியர் முதலியோர் மதப்படி எனவென் எச்சம் என்பதற்கு என என்ற எச்சச்சொல் என்றும், தெய்வச்சிலையார்

மதப்படி என என்ற சொல் தொக்கு நிற்றலையுடைய சொற்றொடர் என்னும் பொருள் என்பது அவரவர் காட்டும் உதாரணங்களால் விளங்கும்.

உரையாசிரியர் முதலிய மூவரும் வினையொடு முடிமே என்பதை உம்மை அடாது பிரித்தனர். தெய்வச்சிலையார் வினையொடும் முடிமே என்று பிரித்து, அவ்வும்மையால் பெயரொடும் முடியும் என்று கொண்டு, குறிப்பே இசையே ஆயிரைந்தும் (சொல்.*430*) என்பதை உதாரணமாக்கி, ஆங்குக் குறிப்பே இசையே என ஈரைந்தும் என்று பொருளுரைக்க வேண்டும் என்றனர்.

439. எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலஎன மொழிப.

இச்சூத்திரத்தான் பெறப்படும் கருத்து உரையாசிரியர் கொள்கையில் வேறு; சேனாவரையர் நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையார். இம் மூவர் கொள்கையில் வேறு. சூத்திரத்தில் எஞ்சிய மூன்றும் மேல் வந்து முடிக்கும் எஞ்சுபொருட் கிளவி இல என்றிருப்பினும், இரண்டு அவ்வாறு இல என்றும், சொல்லெச்சம் எஞ்சு பொருட்கிளவி உடைத்து என்றும் உரையாசிரியர் கருதினார். இவ்வாறு இவர் கொண்ட கருத்து சூத்திரப்போக்கிற்குத் தக்கதெனத் தோன்றவில்லை.

440. அவைதாம்,
தத்தம் குறிப்பின் எச்சம் செப்பும்.

உரையாசிரியர் நச்சினார்க்கினியர் இருவரும் இச்சூத்திரம் குறிப்பெச்சம் இசையெச்சம் இவ்விரண்டனையும் உணர்த்திற்று என்று கொண்டனர். சேனாவரையர் சொல்லெச்சம் குறிப்பெச்சம் இசையெச்சம் இம்மூன்றனையும் உணர்த்திற்று என்றும், அவற்றுள் சொல்லெச்சத்திற்கும் ஏனையிரண்டெச்சத்திற்கும் வேற்றுமை சொல்லென் எச்சம் (சொல்.*441*) என்று வரும் சூத்திரத்திற் கூறப்பட்டது என்றும் உரைத்தார். தெய்வச்சிலையார் கூறும்

பொருளை நோக்கின், இச்சூத்திரம் சொல்லெச்சம் முதலிய மூன்றன் பொருளை உணர்த்தவில்லை என்பதும் எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும், எஞ்சுபொருட் கிளவி இலவென மொழிப (439) என்ற முற்சூத்திரத்தின் பொருளை விதிமுகமாக உணர்த்திற்று என்பதும் விளங்கும்.

தெய்வச்சிலையார் கூறியபொருள் சூத்திரப் போக்குக்குப் பொருத்தமானது. பத்துவகை எச்சம் கூறிய சூத்திரங்களில் குறிப்பெச்சத்திற்கு முன்னர்ச் சொல்லெச்சம் காணப்படுதலின், ஈண்டும் குறிப்பெச்சம் உணர்த்தும் சூத்திரத்துக்கு முன்னரே சொல்லெச்சத்தை உணர்த்தும் சூத்திரம் உள்ளது. மேலும் சொல்லெச்சம் குறிப்பெச்சம் இசையெச்சம் - இம்மூன்றிலும் மேல்வந்து முடிக்கும் எஞ்சுபொருட் கிளவி இல. இவரது கூற்றில் சொல்லெச்சத்திற்கும் குறிப்பெச்சத்திற்கும் இடையே வேறுபாடு என்னையெனின், சொல்லெச்சத்தில் வாக்கியத்தில் ஆற்றலால் உள்ள பொருளொடு வியஞ்சனா விருத்தியால் ஏற்படும் பொருளும் சிறந்தது என்றும், குறிப்பெச்சத்தில் ஆற்றலால் உள்ள பொருள் சிறப்புடைத்தன்று என்றும் கூறல் பொருந்தும். இசையெச்சத்தில் ஆற்றலாற் கொள்ளப்பட்ட பொருளாற் குறிக்கப்படும் மந்திரம் - பிதிர் - முதலியவை சிறந்தன எனலாம்.

**442. அவைஅல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.**

தகுதிக்கிளவி அவைக்குரிய கிளவி - இரண்டற்கும் நச்சினார்க்கினியர் கூறும் வேற்றுமை பொருத்தமாகத் தெரியவில்லை.

(இழிந்தோர் கூறும் இழிசொற்களை மறைந்த வாய்பாட்டாற் கூறுவனவே அவைக்குரிய கிளவி என்பது அவர் உரையில் தெளிவாம். அமங்கலம் தோன்றாதவாறு தக்க சொல்லால் மொழிதல் தகுதிக் கிளவி - என்பதும் அவரது உரையுள் குறிப்பாற் புலனாம்.)

அவைஅல் கிளவியைக் கிளத்தல் வேண்டா என்பது

தகுதிக்கிளவியையே கிளத்தல் வேண்டும் என்பதனாற் பெறப்படுதலின், சேனாவரையர் நச்சினார்க்கினியர். இவ்விருவரது கூற்றிலும் இச்சூத்திரம் இன்றியமையாதது அன்று. அன்றியும் சொல்லென் எச்சம்...... என்ற சூத்திரத்திற்குப் பின்னர் இச்சூத்திரத்தைக் கூறுவதற்கு இயைபுமின்று.

(எச்சங்களை விளக்கிய பின்னர் மரபு வழுக்காத்தல் பற்றித் தொடங்குகின்றார் ஆசிரியர் என்பது இவ்வுரையாசிரியன்மார் கருத்தாதலின், சூத்திரவைப்பு முறை பிறழுமாறு இல்லை)

தகுதியும் வழக்கும்...(கிளவி.17) என்ற சூத்திரத்தால் உரையாசிரியர் முதலிய மூவரும் கொண்ட பொருளை இச்சூத்திரப் பொருளாகக் கொண்ட தெய்வச்சிலையார் கூற்றே சிறக்கும்.

448. கொடுஎன் கிளவி படர்க்கை ஆயினும்
தன்னைப் பிறன்போல் கூறும் குறிப்பின்
தன்னிடத்து இயலும் என்மனார் புலவர்.

தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பிற்றாய் வழுவமைதியும் ஏற்று நிற்பது இவற்குக் கொடு என்ற சொற்றொடரே - என நச்சினார்க்கினியர் சேனாவரையரை மறுக்கும் உரை பொருந்தும் என்றே தோன்றுகிறது.

450. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகுஇடன் உடைத்தே.

நச்சினார்க்கினியர் கொள்கையைக் கொள்ளின் உண் என்பது முன்னிலை வினைச்சொல்லாய் வரும் என்பதை ஆசிரியர் எங்கும் கூறிற்றிலர் ஆவர். உண்டான் - உண்டேன் - என்பன உண் என்னும் முதனிலையினின்று பெறப்பட்டனவேயன்றி, உண்ணாய் என்பதன் மாறுபாட்டுருவமான உண் என்பதிலிருந்து பெறப்படவில்லை. இச்சூத்திரம் செய்யாய் என்பது செய் ஆகமாறலாம் என்பதைக் கூறிற்று என்று கொண்டாலன்றி,

முன்னிலை முன்னர்.....என்ற வரும் சூத்திரத்திற்கும் இச்சூத்திரத்திற்கும் இயைபின்றாம்.

(ஆசிரியர் பிறாண்டு கூறிற்றிலரேனும், ஈண்டே உண்ணாய் என்னும் விகுதிபெற்ற முன்னிலையொருமை உடன்பாட்டு வினைமுற்று விகுதிகுன்றி உண் என்று முதனிலையளவாய் நின்று அவ்வுடன்பாட்டு ஏவற்பொருண்மை கருதி வரும் என்று கூறினார். வினையியலுள் கூறப்படும் ஒழிபு ஈண்டே இடம் பெற்றது. யாண்டுக் கூறினும், முதனிலையளவாய் நிற்குமது முன்னிலை யொருமை உடன்பாட்டு வினைமுற்று விகுதிகெட்டு நின்றதாயிற்று என்னும் நுண்மை புலப்படுத்தினார். புலப்படுத்தவே, முன்னிலை யொருமைக்குரித்தாய அம்முதனிலையடியாக, தன்மை படர்க்கை வினைமுற்றுக்கள் விரிந்தன என்றல் பொருந்துமோ என்பதே நச்சினார்க்கினியர் எழூஉம் வினா. ஆய் விகுதிகுன்றி ஒருமை ஏவல் மாத்திரையாய் நிற்கும் முதனிலை முன்னர் - என்று வரும் சூத்திரம் பொருள் செய்யப்படதற்கண் என்னும் இடர்ப்பாடில்லை.

உரையாசிரியரும் நச்சினார்க்கினியரும் கொண்ட சூத்திரப் பொருளைச் சேனாவரையர் உரை கொண்டு மறுத்தல் வலுவுடைத்தன்று.)

453,454. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்
குறைந்தன ஆயினும் நிறைப்பெயர் இயல.

இவ்விரண்டு சூத்திரங்களையும் ஒன்றாக்கினார் உரையாசிரியர். வாக்கியபேதம் என்னும் குற்றம் வருதலின் அது பொருந்தாது.

தெய்வச்சிலையார் உரையினும், சேனாவரையர், குறைத்தலுக்கும் தொகுத்தலுக்கும் இடையே வேறுபாடு கூறி உரைத்ததே சிறக்கும்.

455. இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

இச்சூத்திரத்திற்கு உரையாசிரியர் சேனாவரையர் இவ்விருவரும் கொண்ட பொருள் ஒன்று; நச்சினார்க்கினியர் கூறும் பொருள் வேறு; தெய்வச்சிலையார் கூறும் பொருள் வேறு.

நச்சினார்க்கினியர்கொள்கையில் வேற்றுமைச்சொல் என்பது உத்தேசியம், இடைச்சொல் என்பது விதேயம் ஆகும். இவ்வாறு கொள்வது நேரிதன்று, அன்றியும் அவர் இச்சூத்திரத்திற்குக் கூறிய பொருள் நேரிதன்று என்பது அவரே உரிச்சொல் மருங்கினும் என்ற அடுத்த சூத்திரத்தின் இறுதியில் முன்னிற் சூத்திரத்தாற் கூறிய விசேடித்தல் உரிச்சொற்கும் இடைச்சொற்கும் ஏற்றலின் அவற்றையும் ஈண்டுக் கூறினார் எனக் கூறினமையால் நன்கு விளங்கும்.

(உத்தேசிய விதேய பாவங்கள் சூத்திரக் கருத்தாக உரையாசிரியன்மார் கொண்டதற்கு ஏற்பமாறும். தத்தம் எச்சமொடு.......என்னும் வினையியற் சூத்திரத்து ஒழிபாக, இடைப்பிறவரலாக வந்து, முடிக்கும் சொல்லை விசேடித்து நிற்பனவற்றை இச்சூத்திரம் கருதிற்றாக நச்சினார்க்கினியர் கொண்டார். எண்ணிறந்த உதாரணங்கள் உரையில் இடம் பெற்றுன)

கொன்னூர் துஞ்சினும், கொன்னே கழிந்தன்று இளமையும் என்றாற்போல்வன சில இடைச்சொற்கள் விசேடித்தலன்றி எல்லா இடைச்சொற்களும் விசேடித்து நில்லாமை ஆண்டு அவர்காட்டிய உதாரணங்களை நோக்கி உணர்க என்று சேனாவரையரை நச்சினார்க்கினியர் மறுத்தற்கு காரணம் விசேடிப்பதெல்லாம் விசேடிக்கப்படுவதற்கு முன்னரே கூறப்படுதல் வேண்டும் என்ற எண்ணமேயாகும். இதனால் விசேடித்தல் என்பதன் பொருளை அவர் நன்கறிந்தவர் என்று சொல்லக்கூடவில்லை.

(இடைச்சொல் பெயரையும் வினையையும் விசேடித்து வந்தவற்றுக்கு உரையிற் சில சுட்டிப் பிறசிலவற்றுள் அவை விசேடியாது நின்றன என்றார். விசேடியாது நின்றவற்றுக்கு உதாரணம் சுட்டிற்றிலரேனும் அவை வெளிப்படை

எனக்கருதினார் போலும். அவைதாம், உரையகையும் - ஒப்பில்போலியும் அசைநிலைக் கிளவியாகி வருநவும் எனக் கொள்க. தாமே கட்டுரைச் சுவைக்காக அசைத்துநிற்பன பெயர்வினைகளை விசேடித்தல் யாண்டையது? விசேடிக்கும் சொற்கள் பெரும்பான்மையும் விசேடிக்கப்படுவனவற்றுக்கு அடையாக முன்னர் நிற்பன; வினைகள் விசேடிக்கப் படுவனவற்றுக்கு பின்னரும் நிற்றலாம். இலக்கியப் பேருரை வித்தகர்க்கு விசேடித்தல் இலக்கணம் முழுமையாகத் தெரிந்திலது என்ற இவர் கூற்றுச் சற்றும் ஏலாதது) .

456. உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.

இச்சூத்திரம் எற்றுக்கெனின், பெரும்பான்மையும் உரிச்சொல் பெயர்ப் பகுதியாயும் வினைப்பகுதியாயும் வரினும், அவற்றுள் சில, பெயர் வினை இவற்றிற்கு விசேடணமாகவே வருதலன்றிப் பெயர் வினை. பகுதியாதல் இல்லை என்பதை உணர்த்தற்கு என்க.

457. வினையெஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.

நச்சினார்க்கினியர், உம்மையான் பெயரெச்சமாகிய சொற்களும் முற்றுச்சொற்களும் பெறப்படும் என்றுகூறி, அவர் தம்முளான் தருமதத்தன் என்பான் முதலிய இடங்களில் பெயரெச்சப் படர்க்கை வினைக்குறிப்பு முற்று காணப்படுகின்றன என்றார். என்பான் முதலியன பெயரெச்சப் படர்க்கை வினைக்குறிப்பு என்பது பொருந்துமா என்பது ஆராய்தற்குரியது.

(முற்றெச்சம் என்னாது எச்சமுற்று என்றலே பொருந்தும் என்பது நச்சினார்க்கினியர் கொள்கை. பெயரெச்சப் படர்க்கை வினைக் குறிப்பு முற்று சாத்திரியார் சுட்டிய என்பான் அன்று; தம்முளான் என்பதே. அவர்தம்முளான் ஆகிய தருமதத்தன் என்க.

458. உரையிடத்து இயலும் உடனிலை அறிதல்.

இச்சூத்திரத்துக்கு உரையாசிரியரும் சேனாவரையரும் கூறும் பொருள் ஒன்று; நச்சினார்க்கினியரும் தெய்வச்சிலையாரும் கூறும் பொருள் ஒன்று, வினையெஞ்சு கிளவியும் என்ற சூத்திரத்தின் பின் இச்சூத்திரம் இருத்தலால், நச்சினார்க்கினியர் தெய்வச்சிலையார் இவ்விருவர் கூறிய பொருள் சிறக்கும்.

459. முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான.

இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் பொருள், ஏனை மூவர் கூறும் பொருளின் வேறுபட்டது. உரையாசிரியர் கூறும் பொருள் குறிப்பின் தோன்றலினது வேறுபாடாதலின், அஃது இச்சூத்திரப் பொருளன்று என்றார் நச்சினார்க்கினியர். ஊன்றி நோக்குமிடத்து, இச்சூத்திரம் வியஞ்சனா விருத்தியாற் பெறும் பொருளைக் கூறுகிறது எனத் தோன்றுகின்றமையால், உரையாசிரியர் முதலிய மூவர் கொள்கை சிறக்கும்.

(குறிப்பு வினைகட்குத் தொடரும் ஆக்கத்தை விரித்துத் தெரிநிலை வினைப் பொருள் தோன்ற உரைகூற வேண்டும் தெளிவு கருதி, இவ்வாறு இச்சூத்திரத்திற்கு உரை கூறினார் நச்சினார்க்கினியர். சங்க இலக்கியங்கட்கு உரைகாணும் வாய்ப்புப் பெற்ற இவர்க்கு இத்தெளிவு தோன்றுதல் இயல்வே.)

460. ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்.

நச்சினார்க்கினியர் பிறருரையினின்றும் வேறாகப் பொருள் கூறினார்; சேனாவரையர் உரையைச் சூத்திரப்பொருளாக ஏற்பினும், தாம் ஒருசொல் இருபொருள் என மாற்றி உரைகண்டமை சூத்திரப்போக்கிற்குமாறுபட்டது.

(நேரிய பொருளை முன்னர்க்கூறி, உய்த்துக் கொண்டுணர்தல் உத்தி வகையால் ஒருசொல் இருபொருள் என்ற உரையைப் பிற்கூறியிருப்பின் சிறக்கும்)

461. ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே.

அருத்தாபத்தியான், பன்மை சுட்டிய பெயர்ச்சொல் ஒருமைக்குப் பொருந்தி நிற்கும் இடமுமுண்டு என்று நச்சினார்க்கினியர் பொருள் கொண்டார். சூத்திரத்துள்ள உம்மையால் ஒருமைப்பெயர் பெரும்பான்மையும் ஒருமைப் பொருளையே குறிக்கும் என்று கொள்ளுவதே நேர்மையாம். இச்சூத்திரம் சாதியொருமை வழக்கை உணர்த்திற்று என்று கொள்வது சாலும்.

(அருத்தாபத்தி வகையால் தலைதடுமாற்றமாக இவ்வாறு பொருள் கொண்ட நச்சினார்க்கினியர் வழுப்போலத் தோன்றும் பல பன்மைப் பெயர்க்கு ஒருமைப் பெயர் அமைதிகண்டு இலக்கண விதியுள் அகப்பட உரைகண்டார் என்றமைதல் காலும்)

## பாலசுந்தரனார் உரைக்குறிப்புக்கள்
## 7. இடையியல்

இடைச்சொல்லாவது, பெயர்ப்பொருளையும் வினைப் பொருளையும் வேறுபடுத்தும் இயல்பினதாய் அவற்றின் வழிமருங்குதோன்றி அவற்றோடு ஒருங்கு நடை பெற்றியல்வதாகும். அவற்றுள் ஒருசாரன பெயரும் வினையும் ஆகிய சொற்களின்று திரிந்து சிதைந்து சுருங்கியும் இலக்கணக் குறியீடாக அமைந்து இடுங்கிய சொற்களாக வருதலானும், ஒருசாரன பெயருமாகாமல் வினையுமாகாமல் அவற்றிற்கு இடைப்பட்டனவாக வருதலானும், ஒருசாரன திணைபால் இடம் காலம் முதலியவற்றைக் காட்டுதற்குரிய உறுப்பாக இடப் படுதலானும், இடைச்சொல் என்னும் காரணக் குறியீடு பெற்றன. ஆதலின் இடை என்னும் சொல் இடுங்குதல் - இடை நிகர்த்தாதல் - இடப்படுதல் என்பனவற்றிற்குப் பொதுவாக நின்றது.

251. அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்கு உதநவும்....

வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும் - இதனை வினைசெயல் மருங்கின் வருநவும், காலமொடு வருநவும் - எனப் பிரித்துக் கூட்டுக.

ஒப்பில் வழியாற் பொருள் செய்குநவும் தத்தம் குறிப்பின் பொருள் செய்குந ஆதலின் அவற்றை அடுத்துவைத்தார்.

265. மற்றையது என்னும் கிளவி தானே.....

இச்சொல் பெரும்பான்மையும் யாதானும் ஒருபால் பற்றிய சுட்டுப்பெயரோடு இணைந்து வரும் என்பது அறிவித்தற்கு மற்றையது என ஓதினார். என என்பது செயவென் எச்சப்போலியாய் நிற்குமாறு போல, மற்றை என்பது பெயரெச்சப்

போலியாய் நிற்குமோர் இடைச்சொல் ஆதலின், இது மற்று என்பதன் விகாரமன்று.

267. தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.

அடைக்கலம் என்னும் பொருள்தரும் தஞ்சம் என்னும் பெயர்ச்சொல் வேறு; இவ்விடைச்சொல் வேறு.

தஞ்சு என்பது இதன் முதனிலை. தஞ்சு ஆவூர் தஞ்சாவூர் என்பது. வளம் காரணமாக எண்மையான ஊர் என்பது கருத்து.

268. அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவியென்று..........

ஆங்கு என்பது பாவோசை கருதி ஆங்க என விகாரமாய் நின்றது.

270. எல்லே இலக்கம்

எல் என்னும் இடைச்சொல் அசைந்திலங்குதல் பொருட்டாகும். எல்வளை மகளிர் (புறம்.24) அசைதலையுடைய வளையணிந்த மகளிர்.

இலக்கம் என்பது இலங்குதல் விளங்குதல் துளங்குதல் - என்னும் பண்பு குறியாது, தொழிற் குறிப்புணர்த்தி நிற்றலின் இடைச்சொல் ஆயிற்று. எல் என்பது ஞாயிற்றினைக் குறிக்குங்கால் பெயராயும். எல்லிற்றுப் போது என ஒளிர்தலைக் குறிக்குங்கால் வினையாயும், எல்லொளி மதியம் எனப் பண்பினைக் குறிக்குங்கால் உரிச்சொல்லாயும் நிற்கும். அசைதல் குறிப்புணர்த்தும் வழி இடைச்சொல்லாம்.

271. இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி....

தன்னின முடித்தல் என்னும் உத்தியான், தந்தையார் வந்தார் மகனார் வந்தார் என முறைப்பெயர்க்கண் வருதலும் கொள்க.

அஃறிணை இயற்பெயர் பலர்க்குரி எழுத்தான் முடியாமையின், இயற்பெயர் என்றது உயர்திணை விரவுப்பெயர் என்பது பெறப்படும்.

(ஒருவரைக் கூறும் பன்மைக்கிளவியும், ஒன்றனைக் கூறும் பன்மைக் கிளவியும் ஆர் ஈறு பெற்றே அமைதல் வேண்டும் என்பது இந்நூற்பாவாலேயே பெறப்படுகிறது. இயற்பெயர் என்பது இடுபெயர்களுக்கும் அஃறிணைப் பெயர்களுக்கும் பொதுவானசொல் ஆதலின், அஃறிணை இயற்பெயரும் இடுபெயர்களும் பன்மைக் கிளவி ஆதற்கண் ஆர் என்னும் இடைச்சொல் பெறும் என்பது இந்நூற்பாவின் பயனாம். ஒருமையீறு கெடாமல் அதன்மேல் உயர்வுப் பொருட்டாக ஆர் விகுதி பெற்று வருவன இவை.)

272. அசைநிலைக் கிளவி ஆகும்வழி அறிதல்.

ஆகும் என்னாது வழி அறிதல் என்றதனான், அசைநிலை ஆதல் இயற்பெயர் முன்னரன்றி ஏனைச் சொற்களின் முன்னர் வருமிடத்தேயாம்.




281. ஆக ஆகல் என்பது என்னும்.....

இவற்றை அடுக்கெனக் கொள்ளலாம் எனின், அடுக்கி வரும் சொற்கள் பொருளுணர்த்துவதல்லது அசைநிலையாக வாரா என்க.

(423 ஆம் சூத்திரம் இசைநிறைபோல அசை நிலையும் அடுக்கிவரும் என்கின்றது. இசைநிறையை அடுத்து அசைநிலை வைத்தற்குக் காரணம் கூறும் இவ்வுரைகாரர், இசைநிறை என்பது செய்யுள் வழக்காகிச் செய்யுட்கண் சீர் முதலிய நிரம்புதற்கு வரும். இசைநிறை போலப் பொருளுணர்த்தலின், அதனைச் சாரவைத்து ஈண்டு ஓதினார் என்றார். பொருளுணர்த்தலை இவர் ஈண்டு அசைநிலை அடுக்கு இசை நிறை போலக் கட்டுரைச் சுவைபட நின்று) உடன்படுவாராயிற்று.

282. ஈரளபு இசைக்கும் இறுதியில் உயிரே.....

கௌ வெள என்னும் உயிர்மெய்களை நீக்க இறுதியில் உயிரே என்றும் எகர ஒகரங்களை நீக்க ஈரளபு இசைக்கும் என்றும் கூறினார்.

இவ்ஔகாரமே இக்காலத்து ஒகாரமாக வழங்குகின்றது போலும்.

284. எச்ச உம்மையும் எதிர்மறை உம்மையும்....

ஒரு தொடரின்கண் எச்சவும்மையும் எதிர்மறையும்மையும் தத்தமக்குள் ஒருங்கு மயங்குதலின்று. என்றது, பாணன் பாடுதற்கும் உரியன் என்புழி, எச்சப்பொருள் கருதியவழி வாயிலாதற்கும் உரியன் எனவும், எதிர்மறைப் பொருள் கருதியவழி பாடாமைக்கும் உரியன் எனவும் வருமன்றே? ஆண்டு யாதேனும் ஒருபொருள் பற்றியல்லது இரண்டு பொருளும் ஒருங்கு வாரா என்றவாறாம்.



287. ஈற்றுநின்று இசைக்கும் ஏஎன் இறுதி........

வருமாறு முன்னின்றாரை நோக்கி ஒருவன் உரையாடுங்கால், கண்டேனே பார்த்தேனே உண்டேனே என்ற வழி, கண்டேனெ என பார்த்தேனெ என உண்டேனெ என இறுதிகுன்றி இசைத்தலை வழக்காற்றான் அறிக. இஃது உரைநடை வழக்கிற்கே.

291. அவற்றின் வரூஉம் எண்ணின் இறுதியும்....

கண்கால் புறம் அகம் (வேற்.20) என்னும் சூத்திரத்துள் எனா என்பதும், ஒப்பும் உருவும் (பொருளி.53) என்னும் சூத்திரத்துள் என்றா என்பதும், நிலப்பெயர் குடிப்பெயர் (பெய.11) என்னும் சூத்திரத்துள் ஏகாரமும் தொகை பெற்றிலவால் எனின், அவை முறையே அன்ன பிறவும் எனவும், எல்லாம் எனவும், அனைத்தும் எனவும் தொகைப் பொருண்மையவாகிய

சொற்களைக் கொண்டு முடிந்தமையான் தொகை பெற்றனவேயாம்.

**292. உம்மை எண்ணின் உருபுதொகல் வரையார்.**

செவ்வெண்ணின்கண் உருபுதொக்கு வருதல் பிறிது பிறிது ஏற்றலும் உருபுதொக வருதலும் (வேற்.மய.21) என்பதனாற் பெறப்பட்டமையின், குன்றி கோபம் கொடிவிடு பவளம் என்றாற் போல்வனவற்றை ஈண்டு உதாரணமாகக் காட்டுதல் பொருந்தாது என்க.

**295. என்றும் எனவும் ஒடுவும் தோன்றி.....**

ஒடு என்பதோர் எண்ணிடைச்சொல் உண்டு என்பது ஆசிரியர் உடம்பொடு புணர்த்துக் கூறலான் கொள்க.

## பாலசுந்தரனார் உரைக்குறிப்புக்கள்

## 8. உரியியல்

பெயராதற்கும் வினையாதற்கும் உரியதாகலின் உரிச்சொல் எனப்பெற்றது. ஒருசொல் இருதிணைப்பொருளுள் ஒன்றை இடமாகக்கொண்டு தோன்றுங்கால், அப்பொருள் பற்றி உள்ளத்தின்கண் நிகழும் குறிப்பும் புலன்களினிடமாக நிகழும் இசையும் - பண்பும் ஆகியவற்றின் அடிப்படையில், வடிவு நிரம்பாமல் உயிரீறாகவோ புள்ளியீறாகவோ முகிழ்த்து ஒரு நெறிப்படவாராமல் குறையாக நிற்கும் நிலையே உரிச்சொல்லின் அடிப்படை நிலையாகும்.

குறைச்சொற் கிளவிகள் உருப்பெற்று எழுவாயாகி வேற்றுமையுருபுகளை ஏற்கும் நிலைமைக்கண் வினைப் பெயர்களாம்; வேற்றுமை கோடற்கும் காலம் காட்டற்கும் இயலாமல் திரிபுற்றுப் பெயர்ப் போலியாயும் வினைப் போலியாயும் நிற்கும் நிலைமைக்கண் அவை உரிச்சொற்கள் எனப்படும்.

(எ..டு) உற் என்னும் குறைச்சொல், உறு - உற என நிற்றல் நிரம்பிய நிலையாம். உறவு - உறவை - உறவொடு - உறவுக்கு - எனவரின் பெயராம். உற்ற, உற்று - உறல், உறுதல் - எனவரின் வினையாம். உறுபொருள், உறுகால் - என அடையாகவரின், உரிச்சொல்லாம்.

302. குருவும் கேழும் நிறன்ஆ கும்மே.

குருவும் கெழுவும் என்பது உரையாசிரியன்மார் கொண்ட பாடம். கெழு என்பது கெழுதகை - கெழுமிய - கெழுமும் - கல்கெழு நாடன் - என்றாற்போல வினைமுதனிலையாக அன்றி நிறம் என்னும் பொருட்டாய் வாராமையின், இப்பாடம் பிழையாதல் தெளியலாம். உரையாசிரியன்மார் கெழு என்பது கேழ் என நீண்டு வரும் என அமைதி கூறினர். நிறப்பொருளில் நீளாது வருமிடம் ஒன்றேனும் இன்மையின் அது பொருந்தாது.

343. எய்யா மையே அறியா மையே.

இவ்வுரிச்சொல் எய் என்பது முதனிலையாகப் பிறந்ததே எனினும், அறிதல் என்னும் பொருளில் எய்வு, எய்தல் - என்றாற் போல் உடன்பாட்டின்கண் வாராமையின் எய்யாமை என்னும் என்னும் சொல்லை மட்டும் விதந்தோதினார் ஆசிரியர்.

(எய்த்து நீர்ச்சிலம்பின் குரல் மேகலை என்ற இடத்து எய்த்தல் அறிதல் பொருட்டாய் வந்துள்ளதாக நச்சினார்க்கினியர் குறிப்பிட்டுள்ளதை ஏலாமையின் காரணம் இவ்வுரைகாரர் குறிப்பிட்டிருத்தல் வேண்டும்.)

373, 374. கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள
நிறத்துரு உணர்த்தற்கும் உரிய என்ப.

கறுப்பு சிவப்பு என்னும் இரண்டு குறிப்புரிச் சொற்களும் வெகுளுதற் பொருளினவாய்வரும். அவை பண்படியாகத் தோன்றின், நிறமாகிய உருவுணர்த்துதற்கும் உரியவாம்.

இவை வெளிப்படு சொல்லாயினும், தெரிநிலை வினைக்கு முதனிலையாதற்கண் குறிப்புச் சொல்லாயும், குறிப்புவினைக்கு முதனிலையாதற்கண் பண்புரிச் சொல்லாயும் தோற்றம் வேறுபடுதலின், இவ்வாறு வருவனவுமுள என்பது அறிவித்தற்கு இவற்றை எடுத்தோதினார் என்க. நிற்கறுத்தோர் - நீ சிவந்து இறுத்த; கறுத்த காயா - சிவந்த காந்தள் - என முறையே காண்க.

381. அமர்தல் மேவல்.

இருத்தல் என்னும் வெளிப்படு சொல்லாகிய அமர் என்னும் தொழிற்பெயர் வேறு; மேவுதல் என்னும் பொருட்டாகிய அமர் என்னும் இக்குறிப்பு உரிச்சொல் வேறு.

## பாலசுந்தரனார் உரைக்குறிப்புக்கள்

## 9. எச்சவியல்

அவற்றுள்,

இயற்சொல் தாமே.......

சொல்லின் பொருள்வரவிற்கேற்ப, இயற்சொல் திரிசொல் - என்பவை தம்முள் மயங்கும் என அறிக. (எ.டு) மாலை என்பது பொழுதையும் அலங்கலையும் குறிக்குங்கால் இயற்சொல்லாம், மயக்கம், இயல்பு - முதலியவற்றைக் குறித்து வருங்கால் திரிசொல்லாம்.

403. சிதைந்தன வரினும் இயைந்தன வரையார்.

நேரே தமிழெழுத்தொடு புணராமல் யாதானுமொரு தமிழெழுத்தொலியோடு இயைதற்கு ஒத்தனவாய்ச் சிதைந்துவரினும் அவற்றை நீக்காமல் வடசொற் கிளவியாகத் தழுவிக்கொள்வர் புலவர்.

(சிதைதல் வேறு; திரிதல் வேறு, வடமொழிச் சிறப்பொலிகள் தமிழொலிக்கு ஏற்பத் திரிந்து வருதலே மரபு; கிதைந்து வருதல் மரபன்று, விபீஷணன் வீடணன் எனவும், லக்ஷ்மணன் இலக்குவன் எனவும் வருவன திரிபே ஒழியச் சிதைவு அல்ல. ஆதலின் சமற்கிருதச் சொற்கள் தமிழில் அவற்றின் ஒலிக்கேற்பத் திரிந்து வருதலை வடசொற் கிளவி என்ற நூற்பாவும், திரியாது வருவனவற்றைச் சிதைந்தன என்ற நூற்பாவும் குறிப்பிடுகின்றன என்று கொள்வதே பொருத்தம்)

404. அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை.......

யாது என்பது யாவது என விரிதலும், யாவர் யார் எனத் தொகுதலும், பெயர் பேர் என நீளலும், மிஞிறு ஞிமிறு என எழுத்து இடமாறுதலும், கண்மீ என்பது மீகண் எனச் சொல் நிலை

மாறுதலும் மரூஉ முடிபுகளாம். இவற்றைச் செய்யுள் விகாரம் எனக் கூறுதல் பொருந்தாதென்க.

407. சுண்ணம் தானே
பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர்.....

(எ..டு) சேவடி படரும் செம்மல் உள்ளமொடு
நலம்புரி கொள்கைப் புலம்பிரிந்து உறையும் (முருகு.62,63)

என்பதனைப்

புலம்பிரிந்து உறையும் சேவடி படரும்
நலம்புரி கொள்கைச் செம்மல் உள்ளமொடு

எனவும்,

மாவிதழ் ஏந்திய மலிந்துவீழ் அரிப்பனி
செவ்விரல் கடைக்கண் சேர்த்திச் சிலதெறியா
(நெடுநல்.164,165)

என்பதனை,

மாஇதழ் வீழ்கண் கடைமலிந்து ஏந்திய
அரிப்பனி சில செவ்விரல் சேர்த்தித் தெறியா எனவும்

துணித்துக் கூட்டிப் பொருள்கொள வந்தமை கண்டுகொள்க. (நச்சினார்க்கினியர் கொண்டு கூட்டியாங்குச் சீர்கள் துணித்துக் கூட்டிப் பொருள் செய்வது இவ்வுரைகாரர் கருத்து)

409. பொருள்தெரி மருங்கின் ஈற்றடி இருசீர்........

சூரல் பம்பிய என்னும் செய்யுளுள், யானஞ்சுவலே என்னும் தொடர் நீவரல் ஆறு என்பதனோடு இயைப் பொருள் தருவதே பொருட் சிறப்புடையதாகும். வெற்பவாரல் என்பது வியன்மலை ஆறே என்பதனோடு இணைதலே சிறப்பு, முதல் இரண்டு பாடல்களிலும் முதலிரண்டு அடிகள் வரும் வழிக்கு அடைமொழியாக அமைதல் காண்க. (சென்ற சூத்திரவுரையுள் காட்டப்பெற்றவை)

410. மொழிமாற்று இயற்கை
சொல்நிலை மாற்றிப் பொருள்எதிர் இயைய.....

பூட்டுவிற் பொருள்கோள், அளைமறி பாப்புப் பொருள்கோள், தாப்பிசைப் பொருள்கோள் முதலியன மொழிபுணர் இயல்பாய்ச் சொல்லிலக்கணத்துள் அடங்காமல் அணியின்பாற்பட்டு நிற்றலை ஓர்ந்து கொள்க. (இவற்றை அணியிலக்கணத்துள் அடக்கியார்க்கு, நிரனிறைப் பொருள்கோள் அடங்காமை யாங்கனம்?)

411. தநநு எஎன அவைமுதல் ஆகிய.......

கிளைப்பெயர்களுள் உடன்பிறந்த மகளிருள் மூத்தாரைக் குறித்து வரும் பெயர்கள் தவ்வை நுவ்வை எவ்வை - என வருதலின், அவற்றையும் தழுவுதற்குத் தம் நம் நும் எம் - என்னாது தநநுஎ என முதலெழுத்துக்களைச் சுட்டி ஓதினார்.

அங்ஙனம் வரும் கிளைநுதற் பெயர்களாவன :
தமன் தமள் தமர் தம்மான் தம்மான் தம்மார்
நமன் நமள் நமர் நம்மான் நம்மான் நம்மார்
நுமன் நுமள் நுமர் நும்மான் நும்மான் நும்மார்
ஏமன் எமள் எமர் எம்மான் எம்மான் எம்மார்
எனவரும்.
இவற்றுள் நெடில்ஈறுகள் பயின்று வாரா
இனி, கிளைப் பெயர்களாவன :
தந்தை நுந்தை எந்தை தந்தாய் நுந்தாய் எந்தாய்
தம்முன் நும்முன் எம்முன் தம்பின் நும்பின் எம்பின்
தங்கை நுங்கை எங்கை தவ்வை நுவ்வை எவ்வை
எனவரும்.

412. வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே....

தொகைமொழி என்னும் தலைப்பில் வருமாறு : அவ்அறுவகைத் தொகை மொழிகளும் பெயர்ச் சொற்களாகவே தொகையுற்று நிற்குமென அறிக. நிலங்கடந்தான் என்பது தொகை மொழி ஆயவிடத்துக் கடந்தான் என்பது வினையாலணையும் பெயராக நிற்கும். இன்றேல் அவை எழுவாய்த் தொடராகும்.

(திருமால் நிலம் கடந்தான் - என வினைமுதல் வேற்றுமை வந்துழியன்றி எழுவாய்த் தொடராகாது என்க)

(சேனாவரையர் மதம் பற்றி வினைத்தொகையது முன்மொழியைப் பெயராகக் கொண்டார். அறுவகைத் தொகைகளும் எழுவாயாய் நிற்றற்குரியன என்பது இளம்பூரணர் கருத்து. இவ்விரு கொள்கையும் இவ்வுரைகாரர் தழுவினார்.)

413. அவற்றுள், வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல

உருபு தொகையாக வரும் தொடர்மொழிகள் வருமாறு : நிலங்கடந்தான் - வேலெறிந்தான் - கடி சூத்திரப் பொன் - நோய் நீங்கினான் - மலையேறினான் - என வரும். இங்ஙனம் உருபு தொக்கு வருபவை வேற்றுமைப் பொருள் புணர்ச்சியான் அமைந்த தொடர்களாம். இனி, நிலங்கடந்தான் முதலியவை எழுவாயும் பயனிலையுமாக நில்லாது நிலம்கடந்தவன் என்னும் பொருளில் ஒரு பொருளைச் சுட்டிவரின், ஆண்டு அவை தொகை மொழியாகும் என்க.

(மேலை எடுத்துக் காட்டுக்களுள், (பின்மொழி வினைச் சொல் அன்மையின்) கடி சூத்திரப்பொன் என்னும் தொடர் தாலிப்பொன் போல நான்கன் உருபு தொக்குவந்தமையால் தொகைமொழித் தொடராவதன்றித் தொகா நிலை அன்மை தெளியப்படும்.)

414. உவமத் தொகையே உவம இயல

புலிப்பாய்த்துள், மழை வண்கை - என்றாற் போல்வன ஒட்டி ஒருசொல் நீர்மைப் படாமையின் அவையெல்லாம் உவம இடைச்சொல் தொக்க தொடர் மொழிகளாம் என்றறிக. தொகை மொழியெல்லாம் ஒருசொல் நீர்மைப்பட்டு எழுவாயாகவும், பெயர்ப்பயனிலையாகவும் நிற்பதற்கேற்ப வரும் என்பதே நூலோர் கருத்தென்க.

•

(புலிப்பாய்த்துள் அஞ்சத்தக்கது, அவன் செலவு புலிப்பாய்த்துள், மாரிவண்கை புகழ்தரும், பாரியின் பண்பு மாரி வண்கை - என இவை ஒருசொல் நீர்மைப்பட்டு முறையே எழுவாயாகவும் பயனிலையாகவும் நிகழ்தலின், தொகை மொழிகளாகக் கொள்வதன்கண் தவறு என்னை?)

415. வினையின் தொகுதி காலத்து இயலும்.

ஆடரங்கு என்னும் வினைத்தொகை மாதவி ஆடரங்கினின்று வந்தாள் என்புழி இறந்த காலமும், மாதவியை ஆடரங்கிற் காண்க என்புழி நிகழ்காலமும், மாதவி ஆடரங்கிற்குச் செல்வாள் என்புழி எதிர்காலமும் உணர்த்தி நிற்குமாறு கண்டுகொள்க.

இனி, நெருநல் அடுகளிறு, இன்று அடுகளிறு, நாளை அடுகளிறு எனக்காட்டி, அடுகளிறு என்பது மூன்று காலத்தையும் உணர்த்தி நின்றது என்பர். ஆண்டு, நெருநல் இன்று - நாளை - என்னும் சொற்கள் காலத்தை விளக்கி நிற்றலின் இவ்வாறு காட்டுதல முறையன்றெங்க.

(இவர் எடுத்துக்காட்டியவற்றுள் ஆடரங்கு என்ற வினைத்தொகையில் காலத்தை வெளிப்படுத்துவன வந்தாள் - காண்க - செல்வாள் - என்னும் வினை முற்றுக்களே. நெருநல் அடுகளிறு - போன்றவற்றில் இவரால் காணப்படும் குறை இவர் எடுத்துக்காட்டியவற்றுள்ளும் காணப்படுதல் அறிக.)

காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை என்பார் பவணந்தியார். பெயரெச்சமாயின் அது முதனிலைத் தொழிற் பெயர் என்றற்கு ஏலாமை அறிக.

(வினைத்தொகை நிலைமொழியைத் தொழிற்பெயராகக் கோடல் சேனாவரையர் போன்றோரது மதம். வினைப் பகுதியாகிய தாதுவினை அவர் பெயராகக் கொண்டமையால், வினைத்தொகையன் மொழியை இருபெயரொட்டாரு பெயராக

ஏற்க முடிந்தது. இவ்வுரைகாரரும் அன்ன கொள்கையரே ஆயின், தருபொருள் வருபொருள் என்னும் வினைத்தொகைக்கண் முன்மொழி முதனிலைத் தொழிற் பெயராதல் யாங்களம்?)

416. வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின் என்று.....

பண்புத்தொகைகளை விரிக்குமிடத்து வரும் ஆகிய என்னும் சொல் ஆக்கம் கருதிய வினைச்சொல் அன்று, பண்புத் தொகைகளை விரித்தற்குத் துணையாவதோர் இடைச்சொல் என அறிக. இதனைப் பண்புருபு என்பாருமுளர்.

இனி, உரையாசிரியன்மார் இன்னது இது என வரூஉம் என்பதற்கு வடநூல் முறைமை பற்றிய விசேட இலக்கணத்தைக் காட்டி ஒன்றை ஒன்று பொதுமை நீக்க வரும் என்பர். அவ்விலக்கணம் கடைபோகாமை அவர்தம் உரையானே விளங்கும். மற்று, பண்புத்தொகை எவ்வாறு அமைந்து நிற்கும் என்பதன்றி, அஃது எங்ஙனம் விரிந்து பொருள் பயக்கும் என்பது ஈண்டு ஆராய்ச்சியின்று என்க.

(தொகைகள் விரிந்து பொருளுணர்த்துமாற்றை அறியாமல், அவற்றுள் பொருள் சிறக்குமிடத்தை அறிதல் யாங்கனம் இயலும்?

கருங்குதிரை என்னும் பண்புத்தொகையுள் முன்மொழி பின்மொழியை விசேடித்தல் வெளிப்படை, பின்மொழியாம் குதிரையும் பிறவற்றின்கண் தோன்றும் கருமையன்று, குதிரைக்கண் தோன்றும் நிறமே என முன்மொழியை விசேடித்தவாறு. இருபெயரொட்டுப் பண்புத் தொகையுள் முன்மொழியாம் சிறப்புப் பெயரே பின்மொழியாம் பொதுப்பெயரை விசேடிக்கும் என்க. பின்மொழி முன்மொழியை விசேடிக்கும் என்று கூறுதல் ஏலாமையை இவ்வுரைகாரரும் அவ்விலக்கணம் கடைபோகாமை அவர்தம் உரையானே விளங்கும் என்று சுட்டினார். இனம் சுட்டி விசேடித்தல் தமிழ்மொழிக்கேயன்றி எம்மொழிக்கும் உரியதே.)

417. இருபெயர் பலபெயர் அளவின் பெயரே.....

உம்மை எனப் பொதுப்பட ஓதினாரேனும், ஏனைய பொருள் பற்றி வரும் உம்மை இடைச்சொல் தொக்கு வாராமையானும், உம்மை இடைச்சொல் தொகையொடு முடிதலானும், ஈண்டு உம்மை என்றது, எண்ணும்மையே என்பது பெறப்படும்.

(உம்மை இடைச்சொல் தொகையொடு முடிதலானும் என்பது ஒரு காரணம் ஆகாது. எண்ணும்மை தொகையொடு முடிதல் வேண்டும் என்ற வரையறையின்மை 288-ஆம் சூத்திரத்தான் உணரப்படும். (எ.டு) இசையினும் குறிப்பினும் பண்பினும் தோன்றி (298))

(உம்மைத்தொகை விரியுங்கால், உவாப்பதினான்கு - உவாவும் பதினான்கும் ஆகிய இருமதி நிலைகள், ஆடல்பாடல் - ஆடலும் பாடலுமாகிய இரண்டு, தூற்றுப்பதின்மூவர் - நூற்றுவரும் பதின்மரும் மூவருமாகிய குழுவினர்......... இவை முதலாக உம்மையோடு ஈற்று அவாய் நிலையையும் உடன் கூட்டி விரித்தல் என்றார் இவ்வுரைகாரர். ஈற்று நின்று இயலும் அன்மொழித் தொகை போல அவ்வவாய்நிலை விரிவு காட்டாதோ? இவ்வாறு விரியாவழிப் படுவதொரு பொருளிழுக்குத்தான் என்னை?)

421. உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே.....

அஃறிணை மருங்கின் உம்மைத் தொகை நின்றாங்கே நின்று பன்மைச்சொல்லொடு முடிதல் வழுவன்மையின் உயர்திணை மருங்கின் உம்மைத்தொகையே என இதனையே விதந்து கூறினார்.

தெய்வச்சிலையார் பலசொல் நடைத்து எனப்பாடம் கொள்வார்; அது கூறியது கூறல் என்னும் குற்றமாகும் என்க.

423. இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல் என்று....

இசைநிறை என்பது செய்யுள் வழக்காகிச் செய்யுட்கண் சீர்முதலிய நிரப்புதற்கு வரும். அசைநிலையும் செய்யுட்குரியதாயினும் அஃது அசைநிலைப் பொருளாக நில்லாமல் இசைநிறை போலப் பொருளுணர்த்தலின் அதனைச் சார வைத்து ஈண்டு ஓதினார். (அசைநிலைக்கு ஒருவகையான் பொருளுண்மையை இவர் உடன்பட்டார்.)

428-430. 1. இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றா...
2. எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்
3. அவைதாம், தத்தம் கிளவி அடுக்குந வரினும்...

இம்மூன்று சூத்திரங்களும் வினையியலுள் செய்தென் எச்சத்து (42) என்னும் சூத்திரத்தின்பின் இருத்தல் வேண்டும். (உரிய காரணம் விரிவாகப் புலப்படுத்தி நிறுவுகிறார் இவ்வுரைகாரர். இவ்வைப்பு முறையே சாலவும் பொருந்தும்.)

429. எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்.

யார், எவன், இல்லை, வேறு - என்றாற் போல்வன அம்மூவிடத்தான் என்ற விதிக்கு உட்படாமல் இடப்பொதுவாக நின்று, முடிக்கப்படும் சொல்லான் பாலும் இடமும் காட்டி நிற்றலின், அவை எச்சத்தின்பாற் படுங்கொல் என எழும் ஐயத்தைக்களைந்து, அவை எச்சமாய் நில்லாமையான் அவையும் அவ்வாறு வருவன பிறவும் வினைமுற்றுக்களே என்றவாறாம்.

எச்சவினை என்பது இயற்கையன்று; அது முற்றுவினையின் விகாரமாய்க் குறைந்து நிற்கும் (குறைந்தது வினையன்று, பால் என்றறிக) இயல்பினதே.

432. அவற்றுள், பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.

நச்சினார்க்கினியர் இடையியலுள் பொருள் முடிபு கூறினார்; ஈண்டுச் சொல்முடிபு கூறினார் ஆசிரியர் என்று விளக்கம் தருவார். எதிர்மறை எச்சம் பற்றி அவர் கூறும் விளக்கம் அவர் கருத்திற்கே முரணாக அமைதலைத் தெரிக.

(பிரிநிலையெச்சத்திற்குச் சொல் முடிபு கூறியவாறே, எதிர்மறையெச்சம் (ஏகார ஓகார உம்மையிடைச் சொற்கள்) அடுத்து வரும் முற்றுவினையைச் சொல் முடிபாகக்கொண்டு, அடுத்து எதிர்மறையாகிய தம்பொருள் முடிபைக் கொண்டு முடியுமாறு காண்க நச்சினார்க்கினியர் விளங்கப் புலப்படுத்திய குறிப்பினை இவ்வுரைகாரர் உணராமற்போந்தது என்னையோ?)

433. வினையெஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்......

வினையெச்சம் வினைகொண்டு முடியும் என்னும் வரையறையும், குறிப்புவினை ஆக்கம் பெற்று முடியும் என்னும் இயல்பும், வினைப்பெயரானும் தொழிற் பெயரானும் முடிவுழி அவை வினையோடு ஒக்கும் என்னும் மரபும்தோன்ற ஈண்டு வினையெச்சங்கட்கு முடிபுவிதி கூறினார் என்க.

(எ-டு) உழுது வந்தான் - கற்றுவல்லானாயினான் - உழுது வந்தவன் அருந்தி மகிழ்தல்.

436. தன்மேல் செஞ்சொல் வருஉங் காலை......

இடைக்கால உரையாசிரியன்மார் எதிரது தழீஇய எச்சவும்மை என ஒன்றைத்தாமே பகுத்துக்கொண்டு, சாத்தனும் வந்தான் என்னும் உம்மை இனிக் கொற்றனும் வருவான் என்பதை (என எதிரதை)த் தழுவிநின்றது என்பர். கொற்றனும் வருவான் - என்னுமிடத்து, முன்னிற்கும் தொடர் சாத்தன்வந்தான் என உம்மை பெறாது செஞ்சொல்லாய் நிற்றற்கும் ஏற்குமாதலின், கொற்றனும் என்னும் உம்மையே இறந்தது தழுவும் என்க.

(இவர் உரைநுட்பம் வியத்தக்கதேயாயினும், எச்சவும்மை வகைகளை ஆசிரியர் கூறிற்றிலர் என்பதே கொண்டு, உரையாசிரியன்மார் இறந்ததூஉம் எதிரதூஉம் தழுவிவரும் எச்சவும்மைகளைத் தழுவிக் கோடலால் வரும் எச்சத்தின் நுண்மை மேலும் பொருள் சிறக்குமன்றே? செஞ்சொல்லின் உம்மை கொடுத்து விரிப்பின், அவ்வும்மை எதிரதது தழீஇயிற்றாக அன்னோர் கொண்டனர் என்க.)

439. எனஎன் எச்சம் வினையொடு முடிமே.

(எடுத்துக் காட்டிய வெள்ளென விளர்த்தது முதலாகிய) இத்தொடர்களில், என என்னும் இவ்விடைச்சொல் என்பதாக என்னும் பொருள்பட நிற்கும். கொள்ளெனக் கொடுத்தான் - என்னுமிடத்துக் கொள்ளெனச் சொல்லிக் கொடுத்தான் எனப் பொருள்தரின், ஆண்டு என என்னும் இடைச்சொல் சொல்லெச்சத்தின்பாற்படும் (ஈண்டு, இவ்வுரைகாரர், நச்சினார்க்கினியர் இளம்பூரணர் - இவர்களுடைய கொள்கையர்.) கண்ணெனக் காத்தான் என்னுமிடத்துக் கண்ணைக் காப்பது போலக் காத்தான் எனப் பொருள்தரின், ஆண்டு என என்பது என்ன என்னும் உவமவுருபிடைச்சொல் இடைக்குறையாக நின்றதாம்.

442. சொல்என் எச்சம் முன்னும் பின்னும்....

என்றது, பிற எச்சங்கள் முன்னோ பின்னோ வரும் பிற சொற்பொருளான் முடிவனவும், பிறசொற்பொருளைத் தோற்றுவிப்பனவுமாகி நிற்குமன்றே? இஃது அங்ஙனமாகாது அச்சொல்லே எச்சப்பொருள் பயந்து நிற்கும் என்றவாறு.

இச்சொல்லெச்சம் என் என்பதையே அடியாகக் கொண்டு நிற்றலான் என் சொல் எச்சம் என நச்சினார்க்கினியர் பதம் பிரித்து உரை கூறினார்.

உயர்திணை என்மனார் என்புழி ஆசிரியர் என்னும் சொல்லும், மருந்தெனின் மருந்தே வைப்பெனின் வைப்பே என்புழி எமக்கு என்னும் சொல்லும் முன்னும் பின்னும் எஞ்சி நின்றன என்று கூறி, இவ்வாறு வருவனவே சொல்லெச்சம் என்பர் ஒருகாரார். இவை இன்றியமையாத முடிக்கும் சொற்களாதலின், தொக்கு நின்றன என்பதல்லது சொல்லெச்சம் எனற்கு ஏலா என்க.

449. கொடுஎன் கிளவி படர்க்கை ஆயினும்...

நச்சினார்க்கினியர் நூல்நெறிக்கு ஒவ்வா உரைகூறி

இவற்குக்கொடு என உதாரணம் காட்டுவர். அங்ஙனம் கூறுதல் கட்டளை யாதலன்றி இரவின் கிள்வி ஆகாமை அறிக.

உயர்ந்தோன் கூறுமீது கட்டளையாகாமை படுத்துச் சொல்லும், பணிமொழியால் புலனாம். தன்னையே இவன் எனச் சுட்டுதல் வெள்ளிடை. நூனெறி பிழைத்தல் யாண்டையது? பூணற்குப் பொன்னாடை கொடு என இவர் சுட்டும் எடுத்துக்காட்டுள், பூணற்கு என்பது தன்னைப் பிறன்போற் கூறும் குறிப்பின், தன்னிடத்து இயலு மாற்றை எவ்வாறு என விளக்கிற்றிலர்.)

450. பெயர்நிலைக் கிளவியின் ஆஅ குநவும்.....

(இவ்வுரைகாரர் மங்கலவழக்கினையும் குழூஉக் குறியினையும் முறையே பெயர் நிலைக் கிளவியின் ஆஅ குநவும், திசை நிலைக் கிளவியின் ஆஅ குநவும், ஆம் என்று கொண்டார்.)

மந்திரப் பொருள்வயின் ஆகுந என்றது; மந்திரப் பொருளைக் குறித்துக் குறிப்பாக வரும் சொற்கள் என்றவாறு. அச்சொற்களும் இயற்பொருள் உணர்த்தாமல் குறிப்பாக நிற்கும் என்பார்; மந்திர மொழிவயின் என்னாது மந்திரப் பொருள்வயின் என்றார். அவை வருமாறு :

பட்டி மண்டபம் ஏற்றினை ஏற்றினை
எட்டினோடு இரண்டும் அறியே னையே
(திருவா.திருச்சதகம்.49)

இதனுள் எட்டு இரண்டு என்பவை எண்ணை உணர்த்தாமல் அவற்றின் வடிவ அடையாளத்தை (அ,உ) எனச் சுட்டி, அவற்றின் வாயிலாகச் சிவசத்தியாகிய அக்கரப் பொருளைக் குறித்து நின்றன. எட்டு - அ (சி), சிவம்; இரண்டு - உ (வ) - சக்தி. சிவ என்பது ஈண்டு மந்திரப் பொருள்

அந்தம் நடுவிரல் ஆதி சிறுவிரல்
வந்த வழிதுறை மாறி உரைசெயும்

செந்தமிழ் ஆதி தெரிந்து வழிபடும்
நந்தி இதனை நவம் உரைத் தானே..

(திருமக். வயிரவி மந்திரம்.9)

என்பதும் அது.

451. செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்....

செய்யாய் என்பது மறைவினைக்கு உரியதாகச் சான்றோர் வழங்கும் வழக்கினைக் கருதி, அது விதிப் பொருளை ஏற்று வரும் இடமும் உண்டு என்பாராயச் செய்யென் கிளவி ஆகிடன் உடைத்தே என்றார். இவ்வுடன்பாட்டுப் பொருளை இடம் நோக்கிப் பெறவேண்டுதலின் இதனைக் குறிப்பிற்றோன்றும் கிளவிகளைப் பற்றிய அதிகாரத்தே வைத்தார்.

இது குறிப்பான் பொருள் கொள்ள நிற்றலின், வினையியலுட் கூறாது ஈண்டுக் குறிப்பு மொழி பற்றிக் கூறும்வழி ஓதினாரென்க.

454,455. 1. குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்.
2. குறைந்தன ஆயினும் நிறைப்பெயர் இயல.

எம்பின், தம்பின், கரும்புல் - என்பவை எம்பி தம்பி கரும்பு என ஈறு குறைந்துவந்தன. நீலம் நீல் என வருவதும் அது.

(தாமரை - மரை என்ற இருவழக்கும், ஓந்தி - ஓதி என்ற இருவழக்கும் நீலம் நீல் என்ற இருவழக்கும் உள்ளன. எம்பின் - எம்பி, தம்பின் தம்பி, கரும்புல் கரும்பு என்ற ஒருவழக்கே உள்ளது. இவ்வொரு வழக்கேயுடையவற்றை இருவழக்கு முடையவற்றொடு சேரக் கூறுதல் பொருந்துமோ?)

இதனான் அங்ஙனம் குறைக்கப்படுவன பெயர்ச் சொற்களே என்பதும், இவை செய்யுள் விகாரம் அல்ல என்பதும் புலப்படும்.

460. முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே....

இதற்கு நச்சினார்க்கினியர் கூறும் விளக்கம் உத்தியுள் அடங்குமாகலின், அவர் கருத்து ஒவ்வாமை அறிக.

(வினையெச்ச வினைக்குறிப்பு முற்றுக்கள் ஆக்கம் பெற்றுப் பொருளுணர்த்துமிடத்து, செய்தென் எச்சப்பொருளை உணர்த்தி நின்றவாற்றை நச்சினார்க்கினியர் எடுத்துக்காட்டி நுட்பமாக விளக்கினார். சொல்லிலக்கணத்துள் பிறாண்டு பெறமுடியாத இவ்வரிய கருத்து எவ்வுத்திகொடு இவ்வுரைகாரர் புலப்படுத்தக் கூடும்? அவ்வுத்தியைச் சுட்டிச் செல்லாமை யாது பற்றி? உய்த்துக் கொண்டுணர்தல் ஒரு தொடர் இருபொருள்படுமாற்றையே உணர்த்தும் என்க.)

464. செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்.....

இச்சூத்திரத்துள், மெய்பெறக் கிளந்த என்றது, ஒருமொழி தொகைமொழி தொடர்மொழிகளாக வகுத்துக் கூறியவற்றை; கிளவியெல்லாம் என்றது, பெயர்வினை முதலிய குறியீடுகளானும், இயற்சொல் திரிச்சொல் முதலிய குறியீடுகளானும் கிளந்தவற்றை; நூல் நெறி என்றது, மொழி நிலையும் அவை புணர்நிலையும் பற்றி ஓதப்பட்ட எழுத்திலக்கண முறைமைகளை.

## 7. இடையியல்
## ஒத்த நூற்பாக்கள்

**தொல்.சொல்.251**

இடைஎனப் படுப பெயரொடும் வினையொடும்
நடைபெற்று இயலும் தமக்குஇயல்பு இலவே.

**நன்னூல். 420**

தனித்து இயல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஒரிடத்து
ஒன்றும் பலவும்வந்து ஒன்றுவது இடைச்சொல்.

**இல.விளக்கம்.251**

தனித்து இயல் இன்றிப்
பெயரினும் வினையினும் பின்முன் ஒரிடத்து
ஒன்றும் பலவும்வந்து ஒன்றுவது இடைச்சொல்.

**தொன்.விளக்கம்.130**

இடைச்சொல் தனிநிலை இன்றி முன்பின்
வினைபெயர் சேர்ந்து (வருஉம்) என்ப.

**மு.வீரியம்.ஒழிபு.1**

பெயர்வினை இடத்துப் பிறப்பது இடைச்சொல்.

**சாமிநாதம்.54**

அப்பெயரின் வினையின்
கடைஇடைமுன் ஒன்றுபல வருதல் இடைச்சொல்லாம்.

**தொல்.சொல்.252**

அவைதாம்,
புணரியல் நிலையிடைப் பொருள்நிலைக்கு உதநவும்
வினைசெயல் மருங்கின் காலமொடு வருநவும்

வேற்றுமைப் பொருள்வயின் உருபுஆ குநவும்
அசைநிலைக் கிளவி ஆகி வருநவும்
இசைநிறைக் கிளவி ஆகி வருநவும்
தத்தம் குறிப்பின் பொருள்செய் குநவும்
ஒப்பில் வழியான் பொருள்செய் குநவும்
அப்பண் பினவே நுவலுங் காலை.

**நேமி.சொல்.51**

சாரியையாய் ஒன்றல், உருபு ஆதல், தம்குறிப்பில்
நேரும் பொருளாதல், நின்று அசையாய்ப் போதல்
வினைச்சொற்கு ஈறுஆதல் இசைநிறைத்து மேவல்
இனைத்தே இடைச்சொல் அளவு.

**நன்னூல்.420**

வேற்றுமை வினைசா ரியைஒப்பு உருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
குறிப்புஎன் எண்பகுதியில்.... ஒன்றுவது இடைச்சொல்.

**இல.விளக்கம்.251**

வேற்றுமை வினைசாரியை ஒப்பு உருபுகள்
தத்தம் பொருள இசைநிறை அசைநிலை
இத்திறம் ஏழில்..... ஒன்றுவது இடைச்சொல்.

**தொன்.விளக்கம்.130**

இடைச்சொல் தாமே வேற்றுமை சாரியை
வினைஒப்பு உருபுகளும் விளங்குதம் பொருளவும்
இசைநிறைப் பனவும் அசைநிறைப் பனவும்
குறிப்பும் எனஎண் கூற்றவை என்ப.

**மு.வீரியம்.ஒழிபு. 2**

வேற்றுமை வினைசாரியை ஒப்புஉருபுகள்
இசைநிறை அசைநிலை இருமூன்று திறத்தன.

**சாமிநாதம்.54**

உருபு சாரியை விகுதி இடைநிலையே இசைகொள்
ஒப்பு அசை தம் பொருள்கோள் எழுத்துஅளவல்
ஒன்பான் கருதியு.இடைச்சொல்லாம்.

**தொல்.சொல்.253**

அவைதாம்,
முன்னும் பின்னும் மொழிஅடுத்து வருதலும்
தம்ஈறு திரிதலும் பிறிது அவண் நிலையலும்
அன்னவை எல்லாம் உரிய என்ப.

**நேமி.சொல்.65**

இடைச்சொல், நிற்றலும்உண் டீறு திரிந்து.

**தொல்.சொல்.254**

கழிவே ஆக்கம் ஒழியிசைக் கிளவிஎன்று
அம்மூன்று என்ப மன்னைச் சொல்லே.

**நேமி.சொல்.53**

காண்டருமன் ஆக்கம் கழிவே ஒழியிசை.

**நன்னூல்.432**

மன்னே அசைநிலை ஒழியிசை ஆக்கம்
கழிவு மிகுதி நிலைபேறு ஆகும்.

**இல.விளக்கம்.263**

கழிவே ஆக்கம் ஒழியிசை அசைநிலை
எனநான்கு என்ப மன்னைச் சொல்லே.

**மு.வீரியம்.ஒழிபு.3**

ஆக்கம் ஒழியிசை கழிவையும் தரும் மன்.

**சாமிநாதம்.55**

ஆக்கம் ஒழிவு அசை கழிவு நான்கும் மன்னே ஆகும்.

**தொல்.சொல். 255**

விழைவே காலம் ஒழியிசைக் கிளவி என்று
அம்மூன்று என்ப தில்லைச் சொல்லே.

**நேமி.சொல். 53**

............தில்லை பருவம் விழைவு
நயனில் ஒழியிசையும் நாட்டு.

**நன்னூல். 431**

விழைவே காலம் ஒழியிசை தில்லே.

**இல.விளக்கம். 264**

விழைவே காலம் ஒழியிசை தில்லே.

**மு.வீரியம்.ஒழிபு. 4**

விழைவே காலம் ஒழியிசை தில்லே.

**சாமிநாதம்.55**

ஒழிவு காலம் விழைவது மூன்றும் தில்லாம்.

**தொல்.சொல்.256**

அச்சம் பயமிலி காலம் பெருமைஎன்று
அப்பால் நான்கே கொன்னைச் சொல்லே.

**நேமி.சொல்.53**

கொன், ஆண்டறி காலம் பெருமை அச்சமே - நீண்ட, பயனின்மை.

**இல.விளக்கம்.265**

தொல்.256-ஆம் நூற்பாவே.

**மு.வீரியம்.ஒழிபு. 5**

தொல்.256-ஆம் நூற்பாவே.

**சாமிநாதம். 55**

பயமில்லை காலம் பெருமை பயம் நான்கும் கொள்ளும்.

**தொல்.சொல்.257**

எச்சம் சிறப்பே ஐயம் எதிர்மறை
முற்றே எண்ணே தெரிநிலை ஆக்கம்என்று
அப்பால் எட்டே உம்மைச் சொல்லே.

**நேமி.சொல்.52**

தெரிநிலை ஆக்கம் சிறப்புஎச்சம் முற்றுஎண்
அரிதாம் எதிர்மறையே ஐயம் - தரும் உம்மை.

**நன்னூல்.425**

எதிர்மறை சிறப்புஐயம் எச்சம் முற்றுஅளவை
தெரிநிலை ஆக்கமோடு உம்மை எட்டே.

**இல.விளக்கம்.256**

எதிர்மறை சிறப்புஎண் எச்சம் முற்று ஐயம்
தெரிநிலை ஆக்கம் எனஎட்டு உம்மே.

**தொன்.விளக்கம்.134**

உம்மையே எதிர்மறை எச்சம் முற்றுஅளவை
சிறப்பு ஐயம் ஆக்கம் தெளிவு என எட்டே.

**மு.வீரியம்.ஒழிபு.6**

எதிர்மறை எச்சம்முற்று எண்ணே தெரிநிலை
ஐயம் சிறப்பு ஆக்கமும் அளிக்கும் உம்மை.

**சாமிநாதம்.54**

தெரிவு மறை ஆக்கம் எச்சம் ஐயம்முற்று எண்ணுடனே
சிறப்பொடு உம்மை எட்டாம்.

**தொல்.சொல்.258**

பிரிநிலை வினாவே எதிர்மறை ஒழியிசை

தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன்று என்ப ஓகாரம்மே.

**நேமி.சொல்.55**

சிறப்பும் வினாவும் தெரிநிலையும் எண்ணும்
உறப்பின் எதிர்மறையினோடும் - வெறுத்த
ஒழியிசையும் ஈற்றசையும் ஓகாரம்.

**நன்னூல்.423**

ஒழியிசை வினாச்சிறப்பு எதிர்மறை தெரிநிலை
கழிவு அசைநிலை பிரிப்பு என எட்டுஓவே.

**இல.விளக்கம்.253**

ஒழியிசை வினாச்சிறப்பு எதிர்மறை தெரிநிலை
கழிவு பிரிப்பு அசைநிலை எனஎட்டு ஓவே.

**தொன்.விளக்கம்.132**

ஓபிரிப்பு அசைநிலை ஒழிவு எதிர்மறை வினாத்
தெளிவு கழிவு சிறப்பு என எட்டே.

**மு.வீரியம்.ஒழிபு.7**

தெரிநிலை எதிர்மறை சிறப்புப் பிரிநிலை
ஒழியிசை வினாஆறு ஓகாரம்மே.

**சாமிநாதம்.55**

நீக்கம் மறை அசை தெரிவு பிரிவு வினா ஒழிவு
நிகழ்சிறப்பு எட்டு ஓ ஆகும்.

**தொல்.சொல்.259**

தேற்றம் வினாவே பிரிநிலை எண்ணே
ஈற்றசை இவ்வைந்து ஏகா ரம்மே.

**நேமி.சொல்.52**

தேற்றம் வினாஎண் எதிர்மறையும் தேமொழியாய்!
ஈற்றசையும் ஏகார எண்.

**நன்னூல்.422**

பிரிநிலை வினா எண் ஈற்றசை தேற்றம்
இசைநிறை எனஆறு ஏகா ரம்மே.

**இல.விளக்கம்.252**

தேற்றம் வினா எண் பிரிநிலை எதிர்மறை
ஈற்றசை எனஆறு ஏகா ரம்மே.

**தொன்.விளக்கம்.131**

ஏஎன் இடைச்சொல் ஈற்றசை தேற்றம்எண்
வினாப் பிரிநிலை இசைநிறை எனஆறே.

**மு.வீரியம்.ஒழிபு.8**

எண்ணே பிரிநிலை ஈற்றசை தேற்றம்
வினாஓர் ஐந்தும் விளக்கும் ஏகாரம்.

**சாமிநாதம். 54**

மறைதேற்றம் பிரிவுஎண் வினா ஈற்றசை ஆறு ஏயாம்.

**தொல்.சொல்.260**

வினையே குறிப்பே இசையே பண்பே
எண்ணே பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே எனஎன்கிளவி.

**நேமி.சொல்.54**

வினைபெயரும் எண்ணும் இசைகுறிப்பும் பண்பும்
என(என்று) இரண்டும் இயலும்.

**நன்னூல்.424**

வினைபெயர் குறிப்பு இசைஎண் பண்பு ஆறினும்
எனஎன் மொழி வரும்.

**இல.விளக்கம். 255**

வினைபெயர் குறிப்பு இசைஎண் பண்பு ஆறினும்
எனஎன் மொழி வரும்.

**தொன். விளக்கம்.133**

என என்பது உவமை எண்குணம் வினைபெயர்
இசை குறிப்பு இயலும்.

**மு.வீரியம். ஒழிபு.9**

எண்ணே குறிப்பே இசையே பண்பே
வினையே பெயரே எனஒர் ஆறினும்
எனஎனும் மொழிவரும்.

**சாமிநாதம்.55**

என் - குறிப்பு எண் பண்பு இசை பேர்வினை
ஆறு உளவாம்.

**தொல்.சொல்.261**

என்றுஎன் கிளவியும் அதனோ ரற்றே.

**நேமி.சொல்.54**

வினைபெயரும் எண்ணும் இசைகுறிப்பும் பண்பும்
என என்று இரண்டும் இயலும்.

**நன்னூல்.424**

என்றும் அற்றே.

**இல.விளக்கம்.255**

என்றும் அற்றே.

**தொன்.விளக்கம்.133**

என்றும் அனைத்தே.

**மு.வீரியம். ஒழிபு.9**

என்றும் அற்றே.

**சாமிநாதம்.55**

என்று, எனக் குறிப்பு எண் பண்பு இசை பேர் வினை ஆறு உளவாம்.

**தொல்.சொல்,263**

தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப.

**இல.விளக்கம்.254**

தெளிவின் ஏயும் சிறப்பின் ஓவும்
அளபின் எடுத்த இசைய என்ப.

**தொல்.சொல்.264**

மற்றுஎன் கிளவி வினைமாற்று அசைநிலை
அப்பால் இரண்டுஎன மொழிமனார் புலவர்.

**நன்னூல்.433**

வினைமாற்று அசைநிலை பிறிதுஎனும் மற்றே.

**இல.விளக்கம்.266**

மற்றுஎன் கிளவி வினைமாற்று அசைநிலை.

**மு.வீரியம்.ஒழிபு.11**

மற்றுஎன் கிளவி வினைமாற்று அசைநிலை.

**சாமிநாதம். 54**

வேறு அசைநிலை மற்று ஆமே.

**தொல்.சொல்.265**

எற்று என் கிளவி இறந்த பொருட்டே.

**இல.விளக்கம். 267**

எற்று என் கிளவி இறந்த பொருட்டே.

**மு.வீரியம்.ஒழிபு.12**

எற்று என் கிளவி இறந்த பொருட்டே.

**சாமிநாதம்.55**

போகல் ஒன்று எற்று ஆகும்.

**தொல்.சொல்.266**

மற்றையது என்னும் கிளவி தானே
சுட்டுநிலை ஒழிய இனங்குறித் தற்றே.

**நன்னூல்.434**

மற்றையது என்பது சுட்டியதற்கு இனம்.

**இல.விளக்கம்.268**

மற்றையது என்பது சுட்டியதற்கு இனம்.

**மு.வீரியம்.ஒழிபு.10**

மற்றையது என்பது சுட்டியதற்கு இனம்.

**தொல்.சொல்.267**

மன்ற என்கிளவி தேற்றம் செய்யும்.

**நேமி. சொல். 54**

மன்ற என்னும் சொல்தேற்றம் ஆம்.

**இல.விளக்கம்.270**

மன்ற என்னும் சொல்தேற்றம் ஆம்.

**மு.வீரியம்.ஒழிபு.13**

மன்றக் கிளவி தெளிவை விளக்கும்.

**சாமிநாதம்.55**

தேற்றம் ஒன்றே மன்றவதாம்.

**தொல்.சொல்.268**

தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.

**நேமி.சொல்.54**

தஞ்சம் எண்மையாம்.

**இல.விளக்கம்.271**

தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.

**மு.வீரியம்.ஒழிபு.14**

தஞ்சக் கிளவி எண்மைப் பொருட்டே.

**சாமிநாதம்.55**

எளிமை தஞ்சம்.

**தொல்.சொல்.269**

அந்தில் ஆங்க அசைநிலைக் கிளவி என்று
ஆயிரண்டு ஆகும் இயற்கைத்து என்ப.

**நன்னூல்.437**

அந்தில் ஆங்கு அசைநிலை இடப்பொருளவ்வே.

**இல.விளக்கம்.273**

அந்தில் ஆங்க அசைநிலை; அவற்றுள்
அந்தில் இடப்பொருட்டு ஆகலும் உரித்தே.

**மு.வீரியம்.ஒழிபு.15**

தொல்.சொல்.269-ஆம் நூற்பாவே.

**சாமிநாதம்.55**

அந்தில் ஆங்கு இடமும் ஆகும்.

**தொல்.சொல்.270**

கொல்லே ஐயம்.

**நன்னூல்.435**

கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.

**இல.விளக்கம்.269**

கொல்லே ஐயம் அசைநிலைக் கூற்றே.

**மு.வீரியம்.ஒழிபு.16**

கொல்லே ஐயம்.

**சாமிநாதம்.55**

ஐயம் அசை இரண்டு கொல்லாம்.

**தொல்.சொல்.271**

எல்லே இலக்கம்.

**மு.வீரியம்.ஒழிபு.16**

எல்லே இலக்கம்.

**தொல். சொல்.272**

இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குஉரி எழுத்தின் வினையொடு முடிமே.

**மு.வீரியம்.ஒழிபு.17**

இயற்பெயர் முன்னர் ஆரைக் கிளவி
பலர்க்குஉரி எழுத்தின் வினையொடு முடிமே.

**தொல்.சொல்.273**

அசைநிலைக் கிளவி ஆகுவழி அறிதல்.

**மு.வீரியம்.ஒழிபு.17**

அசைநிலைப் பொருண்மை ஆகுவழி அறிதல்.

**தொல்.சொல்.274**

ஏயும் குரையும் இசைநிறை அசைநிலை
ஆயிரண்டு ஆகும் இயற்கைத்து என்ப.

**மு.வீரியம்.ஒழிபு.19**

ஏவும் குரையும் இசைநிறை அசைநிலை.

**தொல்.சொல்.275**

மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

**நன்னூல்.439**

மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

**இல.விளக்கம்.275**

மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

**மு.வீரியம்.ஒழிபு.20**

மாஎன் கிளவி வியங்கோள் அசைச்சொல்.

**சாமிநாதம்.55**

அசை வியங்கோள் மாவாம்.

**தொல்.சொல்.276**

மியாஇக மோ மதி இகும்சின் என்னும்
ஆவயின் ஆறும் முன்னிலை அசைச்சொல்.

**நன்னூல்.440**

மியாஇக மோமதி அத்தை இத்தை
வாழிய மாளஈ யாழ முன்னிலை அசை.

**இல.விளக்கம்.276**

மியாஇக மோமதி அத்தை இத்தை
வாழிய மாளஈ யாழ முன்னிலை அசை.

**தொன்.விளக்கம்.137**

இத்தை அத்தை யாழஇக மதிமாள ஆர்
மோமியா [illegible]ிய முன்னிலை அசை பத்தே.

**மு.வீரியம்.ஒழிபு.21**

இகும்மியா இகமதி மோசின் முன்னிலை
அசைச்சொல் என்மனார் அறிந்திசி னோரே.

**தொல்.சொல்.277**

இகுமும் சின்னும் ஏனை இடத்தொடும்
தகுநிலை உடைய என்மனார் புலவர்.

**மு.வீரியம். ஒழிபு.23**

இகுமும் சின்னும் ஏனை இடத்தொடும் சிவணும்.

**தொல்.சொல்.278**

அம்ம கேட்பிக்கும்.

**நன்னூல்.438**

அம்ம உரையசை, கேண்மின் என்றாகும்.

**இல.விளக்கம்.274**

அம்ம கேட்பித்தலும் அசைநிலையும் என்றாகும்.

**மு.வீரியம்.ஒழிபு.22**

அம்ம கேட்பிக்கும்.

**சாமிநாதம்.56**

கேள்வி அசை அம்ம.

**தொல்.சொல்.279**

ஆங்க உரையசை.

**நன்னூல்.437**

அந்தில் ஆங்கு உரையசை இடப்பொரு ளவ்வே.

**இல.விளக்கம்.273**

ஆங்க அசைநிலை.

**மு.வீரியம்.ஒழிபு.22**

ஆங்க உரையசை.

**சாமிநாதம்.56**

ஆங்கு அசை நிலை.

**தொல்.சொல்.280**

ஒப்பில் போலியும் அப்பொருட்டு ஆகும்.

**மு.வீரியம்.ஒழிபு. 24**

ஒப்பில் போலியும் உரையசை ஆகும்.

**தொல்.சொல்.281**

யாகா,
பிறபிறக்கு அரோபோ மாது என வரூஉம்
ஆயேழ் சொல்லும் அசைநிலைக் கிளவி.

**நன்னூல்.441**

யாகா பிறபிறக்கு அரோபோ மாதுஇகும்
சின்குரை ஒரும் போலும் இருந்து இட்டு
அன்று ஆம் தாம்தான் கின்றுநின்று அசைமொழி.

**இல. விளக்கம்.277**

யாகா பிறபிறக்கு அரேபோ மாதுஇகும்
சின்குரை ஒரும்போலும் இருந்து இட்டு
அன்றுஆம் தான்தாம் எனஆம் என்ப
அன்ன பிறவும் அசைநிலை மொழியே.

**தொன். விளக்கம்.137**

அத்து அந்தில் அன்றுஅம்ம ஆங்கு ஆரோ ஆம்ஆல்
இட்டு இகும் குரைகா இருந்து இன்று ஓரும்
சின்தாம் தான்நின்று தில்பிற பிறக்கு
மன்மா மன்னோ மாதுயா மாதோ
போலும் போம்எனப் பொது அசை முப்பதே.

**மு.வீரியம்.ஒழிபு.25**

யாகா பிறபிறக்கு அரோபோ மாதென
வரும் ஓர்ஏழும் அசைநிலை மொழியே.

**சாமிநாதம்.56**

மாளமியா மதிஇகமோ அத்தை இத்தை யாழ
வாழிய ஈ உம் சின் பிறபிறக்கு அரோ போ
கோள் இருந்து இட்டு அன்றுஆம் தாம்தான் என் ஆல் என்ப
குரை ஓர்போல் யாகா மாது இகும் சின்முதலியவே
ஆகும் அசைகள்.

**தொல்.சொல்.282**

ஆக ஆகல் என்பது என்னும்
ஆவயின் மூன்றும் பிரிவில் அசைநிலை.

**மு.வீரியம்.ஒழிபு.26**

ஆக ஆகல் பிரிவில் அசைநிலை.

**தொல்.சொல்.286**

எஞ்சுபொருட் கிளவி செஞ்சொல் லாயின்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்.

**நன்னூல்.427**

செவ்வெண் ஈற்றதாம் எச்சஉம்மை.

**இல.விளக்கம்.258**

தொல்.சொல்.286 ஆம் நூற்பாவே.

**தொன்.விளக்கம்.135**

செவ்வெண் ஈற்றில் வேண்டும் எச்சஉம்மையே.

**தொல்.சொல். 287**

முற்றிய உம்மைத் தொகைச்சொல் மருங்கின்
எச்சக் கிளவி உரித்தும் ஆகும்.

**நேமி.சொல்.65**

முற்றுமை எச்சப் படுதலும் உண்டாம்.

**நன்னூல்.426**

முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்.

**இல.விளக்கம்.257**

முற்றும்மை ஒரோவழி எச்சமும் ஆகும்.

**தொல்.சொல்.289**

உம்மை எண்ணும் எனஎன் எண்ணும்
தம்வயின் தொகுதி கடப்பாடு இலவே.

**நன்னூல்.428**

உம்மை என்று எனஓடு
இந்நான்கு எண்ணும் தொகை இன்றியும் இயலும்.

**இல.விளக்கம்.260**

உம்மை என்று எனஓடு
இந்நான்கு எண்ணும் தொகை இன்றியும் இயலும்.

**தொல்.சொல்.291**

உம்மை தொக்க எனாஎன் கிளவியும்
ஆஈ றாகிய என்றுஎன் கிளவியும்
ஆயிரு கிளவியும் எண்ணுவழிப் பட்டன.

**நேமி.சொல்.54**

என்றா எனா இரண்டும் எண்.

**நன்னூல்.428**

என்றா எனாஎண் தொகை பெறும்.

**இல.விளக்கம்.259**

என்றா எனா ஒடு எண்ணுக் குறித்து இயலும்.

**தொல்.சொல். 292**

அவற்றின் வருஉம் எண்ணின் இறுதியும்
பெயர்க்குறி மரபின் செவ்வெண் இறுதியும்
ஏயின் ஆகிய எண்ணின் இறுதியும்
யாவயின் வரினும் தொகை இன்று இயலா.

**நன்னூல். 428**

பெயர்ச்செவ்வெண் ஏ என்றா எனா எண்
நான்கும் தொகைபெறும்.

**இல.விளக்கம்.250**

பெயர்ச்செவ்வெண் ஏ என்றா எனா எண்
நான்கும் தொகைபெறும்.

**தொன்.விளக்கம்.136**

எண்வகை எட்டனுள் ஏ செவ்வெண் என்றா
எனா நான்கும் தொகை பெறும்.

**தொல்.சொல். 294**

உம்உந்து ஆகும் இடனுமார் உண்டே.

**நன்னூல்.341**

செய்யுளுள் உம்உந்து ஆகலும்....உண்டே.

**இல.விளக்கம்.244**

செய்யுளுள் உம்உந்து ஆகலும்....உண்டே.

**மு.வீரியம்.வினை.39**

செய்யுளுள் உம்உந்து ஆகலும்....உண்டே.

**தொன்.விளக்கம். 118**

உம்உந்து ஆதலும் ஒக்கும் என்ப.

**தொல்.சொல்.295**

வினையொடு நிலையினும் எண்ணுநிலை திரியா
நினையல் வேண்டும் அவற்றவற்று இயல்பே.

**நன்னூல்.430**

வினையொடு வரினும் எண் இனைய ஏற்பன.

**இல.விளக்கம்.262**

வினையொடு வரினும் எண் இனைய ஏற்பன.

**தொல்.சொல்.296**

என்னும் எனவும் ஒடுவும் தோன்றி
ஒன்றுவழி உடைய எண்ணினுள் பிரிந்தே.

**நன்னூல்.429**

என்னும் எனவும் ஒடுவும் ஒரோவழி
நின்றும் பிரிந்தும் எண் பொருள் தொறும் நேரும்.

**இல.விளக்கம்.261**

தொல்.சொல்.296ஆம் நூற்பாவே.

**நேமி.சொல்.49**

எண்தொகையும் எய்தும் கடப்பாட்டின.

**தொன்.விளக்கம்.136**

என்று எனஒடு மூன்றும் எஞ்சு இடத்தனவும் ஆம்.

**தொல்.சொல்.297**

அவ்வச் சொல்லிற்கு அவைஅவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல ஆயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்து வேறு படினும் தெரிந்தனர் கொளலே.

**இல.விளக்கம்.278**

அவ்வச் சொல்லிற்கு அவைஅவை பொருளென
மெய்பெறக் கிளந்த இயல ஆயினும்
வினையொடும் பெயரொடும் நினையத் தோன்றித்
திரிந்து வேறு படினும் தெரிந்தனர் கொளலே.

**தொல்.சொல்.298**

கிளந்த அல்ல வேறுபிற தோன்றினும்
கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே.

**இல.விளக்கம்.279**

கிளந்த அல்ல அன்னபிறவும்
கிளந்தவற்று இயலான் உணர்ந்தனர் கொளலே.

## 8. உரியியல்
## ஒத்த நூற்பாக்கள்

**தொல்காப்பியம்**

*உரிச்சொற் கிளவி விரிக்குங் காலை*
*.........................................*
*.........................................*
*எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல். (உரி.1)*

**நேமிநாதம்**

*ஒண்பேர் வினையோடும் தோன்றிஉரிச் சொல்இசை*
*பண்பு குறிப்பால் பரந்தியலும் - எண்சேர்*
*பலசொல் ஒருபொருட்கு ஏற்றும்ஒரு சொல்தான்*
*பலபொருட்கு ஏற்கவும் பட்டு. (56)*

**நன்னூல்**

*பலவகைப் பண்பும் பகர்பெய ராகி*
*ஒருகுணம் பலகுணம் தழுவிப் பெயர்வினை*
*ஒருவா செய்யுட்கு உரியன உரிச்சொல். (441)*

**பிரயோக விவேகம்**

*மண்டலத் துப்பதி னெண்தே சிகச்சொல் வடசொல்எனப்*
*பண்டை வழக்கொடு பாராட்டு உரிச்சொல் பலபொருட்கே*
*ஒண்தொடி யாய்!பின் ஒருமொழி யாய்மற்று*
*ஒருபொருட்கே*
*கொண்டுஇயல் பன்மொழி யாய்ச்சத்தி ஆற்றலும்*
*கொண்டெழுமே (பி.வி.18)*

**இலக்கண விளக்கம்**

*குறிப்பும் பண்பும் இசையும் தோன்றிப்*
*பெயரும் வினையும் என்றவை இரண்டற்கும்*
*அடியும் ஆகி அவற்றுஏற் புழிநின்று*
*ஒருபொருட்கு உரிமையும் பலபொருட்கு உரிமையும்*

உடைய ஆகி உணராத வற்றை
உணர்ந்தவை சார்த்தி உரைப்பன உரிச்சொல். *(280)*

**தொன்னூல் விளக்கம்**

உரிச்சொல் என்ப உரியபல் குணச்சொல்
ஆகிப் பெயர்வினை அணைந்து வருமே. *(138)*

**முத்துவீரியம்.**

உரிச்சொல் கிளவி விரிக்குங் காலை
.........................................
.........................................
எச்சொல் லாயினும் பொருள்வேறு கிளத்தல். (முற்றும் எடுத்து மொழிதல்) *(669)*

**சாமிநாதம்**

பண்பான வடிவு அளவு நிறம் காட்சி கருத்தாய்,
பகர் உரித்தாய்ப் பெயர் வினை போன்று, அவைக்கு அடியாய், முன்பின், எண்பாலினின்று உணரா உணர்த்தி உணர்த்தலின் சார்ந்து, ஒருசொல் பலபொருள், பலசொல் ஒரு பொருளாம் உரிச்சொல். *(57)*

**தொல்காப்பியம்**

உறுதவ நனிஎன வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள என்ப. (உரி.3)

சால உறுதவ நனிகூர் கழி மிகல். (நன்.455)

உறுதவ நனி என வரூஉம் மூன்றும்
மிகுதி செய்யும் பொருள ஆகலும். (இ.வி.281)

உறுதவ நனிமிகு திப்பொருள் உணர்த்தும். (மு.வீ.670)

**தொல்காப்பியம்**

உருஉட்கு ஆகும் புரைஉயர்பு ஆகும். (உரி.4)

*புரைஉயர்பு ஆகும். (நேமி.60)*
*புரைஉயர்பு ஆகும் உருஉட்கு ஆகும். (மு.வீ.671)*

**தொல்காப்பியம்**

*குருவும் கெழுவும் நிறன்ஆ கும்மே. (உரி.5)*
*குருவும் கெழுவும் நிறன்ஆ குதலும். (இ.வி.283)*

**தொல்காப்பியம்**

*செல்லல் இன்னல் இன்னா மையே. (உரி.6)*
*செல்லல் இன்னல் இன்னாமை செப்பலும். (இ.வி.281)*
*செல்லலும் இன்னலும் இன்னா மையே. (மு.வீ.672)*

**தொல்காப்பியம்**

*மல்லல் வளனே ஏபெற்று ஆகும். (உரி.7)*
*ஏ ஏற்றம் மல்லல் வளமை (நேமி.59)*
*தொல். முற்றும். (மு.வீ.673)*

**தொல்காப்பியம்**

*உகப்பே உயர்தல் உவப்பே உவகை. (உரி.8)*
*முற்றும். (மு.வீ.674)*

**தொல்காப்பியம்**

*பயப்பே பயன்ஆம், பசப்புநிறன் ஆகும். (உரி.9,10)*
*பொன்மை நிறம்பசலை என்ப. (நேமி.87)*
*பசப்பே நிறம், பயப் பேபயன் ஆகும். (மு.வீ.675)*

**தொல்காப்பியம்**

*இயையே புணர்ச்சி, இசைப்புஇசை ஆகும். (உரி.11,12)*
*இசைப்புஇசை, இயையே புணர்ச்சிஆ கும்மே. (மு.வீ.676)*

**தொல்காப்பியம்**

*அலமரல் தெருமரல் ஆயிரண்டும் சுழற்சி. (உரி.13)*
*அலமரல் தெருமரல் சுழற்சி சாற்றலும். (இ.வி.281)*
*அலமரல் தெருமரல் ஆகும் சுழற்சி. (மு.வீ.677)*

**தொல்காப்பியம்**

*மழவும் குழவும் இளமைப் பொருள. (உரி.14)*
*மழவும் குழவும் இளமைக்கு ஏற்றலும். (இ.வி.281)*
*தொல்.முற்றும். (மு.வீ.678)*

**தொல்காப்பியம்**

*சீர்த்தி மிகுபுகழ், மாலை இயல்பே. (உரி.15)*
*முற்றும்.(மு.வீ.679)*

**தொல்காப்பியம்**

*கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறக்கும். (உரி.16)*
*கூர்ப்பும் கழிவும் உள்ளது சிறத்தலும். (இ.வி.281)*
*தொல்.முற்றும். (மு.வீ.680)*

**தொல்காப்பியம்**

*கதழ்வும் துனைவும் விரைவின் பொருள. (உரி.17)*
*விரைவாம் கதழ்வும் துனைவும். (நேமி.60)*
*கதழ்வும் துனைவும் விரைவு காட்டலும். (இ.வி.281)*

**தொல்காப்பியம்**

*அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்யும். (உரி.18)*
*அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கம் செய்தலும். (இ.வி.281)*
*அதிர்வும் விதிர்ப்பும் நடுக்கப் பொருள. (மு.வீ.681)*

**தொல்காப்பியம்**

*வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்*
*நேர்பும் நெடுமையும் செய்யும் பொருள. (உரி.19)*

*வார்தல் போகல் ஒழுகல் மூன்றும்*
*நேர்வும் நெடுமையும் நிலவக் காண்டலும். (இ.வி.284)*

**தொல்காப்பியம்**

*தீர்தலும் தீர்த்தலும் விடல்பொருட்டு ஆகும். (உரி.20)*
*தீர்தல் தீர்த்தல் விடற்பெயர்க் கிளவி. (மு.வீ.682)*

**தொல்காப்பியம்**

கெடவரல் பண்ணை ஆயிரண்டும் விளையாட்டு. (உரி.21)
கெடவரல் பண்ணை விளையாட்டு உணர்த்தலும்.
(இ.வி.281)

**தொல்காப்பியம்**

தடவும் கயவும் நளியும் பெருமை. (உரி.22)
தடவொடு கயநனி பெருமைப் பொருள. (மு.வீ.683)

**தொல்காப்பியம்**

தடவென் கிளவி கோட்டமும் செய்யும்,
கயவென் கிளவி மென்மையும் செய்யும்.
நளியென் கிளவி செறிவும் ஆகும். (உரி.23,24,25)
நளி செறிவாம். (நேமி.83)

தடவே பெருமையும் கோட்டமும் சாற்றலும்
கயவே பெருமையும் மென்மையும் கருதலும்
நளியே பெருமையும் செறிவும் நவிற்றலும்
இயல்பென மொழிப இயல்புணர்ந் தோரே. (இ.வி.284)

**தொல்காப்பியம்**

நம்பும் மேவும் நசைஆ கும்மே. (உரி.31)
நம்பொடு மேவு நசைஆகும். (நேமி.81)
நம்பும் மேவும் நசையின் ஆகலும். (இ.வி.281)

**தொல்காப்பியம்**

ஓய்தல்.........நுணுக்கம். (உரி.32)

ஓய்தல் ஆய்தல் நிழத்தல் சாய்தல்
உள்ளதன் நுணுக்கம் உணரக் காட்டலும். (இ.வி.281)

**தொல்காப்பியம்**

துவன்றுநிறைவு ஆகும். கமநிறைந்து இயலும். (உரி.34,57)
சொல்லும் கமமும் துவன்றும் நிறைவுஆகும். (நேமி.84)

**தொல்காப்பியம்**

*வெம்மை வேண்டல். (உரி.36)*
*வெம்மை விருப்பாம். (நேமி.83)*

**தொல்காப்பியம்**

*ஏற்றம் நினைவும் துணிவும் ஆகும். (உரி.39)*
*ஏற்றம் நினைவும் துணிவும் இயல்பலும். (இ.வி.282)*

**தொல்காப்பியம்**

*பிணையும் பேணும்பெட்பின் பொருள. (உரி.40)*
*பிணையும் பேணும் பெட்பின ஆகலும். (இ.வி.281)*
*பிணையும் பேணும் பெட்புஆ கும்மே. (மு.வீ.684)*

**தொல்காப்பியம்**

*பணையே பிழைத்தல் பெருப்பும் ஆகும். (உரி.4)*
*பணையே பிழைத்தலும் பெருத்தலும் இசைத்தலும்.*
*(இ.வி.282)*

**தொல்காப்பியம்**

*பையுளும் சிறுமையும் நோயின் பொருள. (உரி.43)*
*பையுளும் சிறுமையும் நோய்கூ றுதலும். (இ.வி.281)*

**தொல்காப்பியம்**

*எய்யா மையே அறியா மையே. (உரி.44)*
*(இம்மை)எய் யாமை அறியாமை. (நேமி.83)*

**தொல்காப்பியம்**

*தாவே வலியும் வருத்தமும் ஆகும். (உரி.46)*
*தாவே வலியும் வருத்தமும் தழுவலும். (இ.வி.282)*
*தாவே வலியும் வருத்த மும்தரும். (மு.வீ.685)*

**தொல்காரப்பியம்**

*விறப்பும் உறப்பும் வெறுப்பும் செறிவே. (உரி.49)*
*வெறுப்பும் உறப்பும் செறிவினை விளம்பலும். (இ.வி.281)*

**தொல்காப்பியம்**

*கம்பலை சும்மை கலியே அழுங்கல்*
*என்றிவை நான்கும் அரவப் பொருள. (உரி.51)*

*கம்பலை சும்மை கலிஅழுங்கல் ஆர்ப்பு அரவம். (நேமி.81)*
*கம்பலை சும்மை அரவம் கண்ணலும். (இ.வி.285)*
*தொல். முற்றும். (மு.வீ.686)*

**தொல்காப்பியம்**

*செழுமை வளனும் கொழுப்பும் ஆகும். (உரி.54)*
*செழுமை வளனும் கொழுப்பும் செப்பலும். (இ.வி.282)*

**தொல்காப்பியம்**

*விழுமம் சீர்மையும் சிறப்பும் இடும்பையும். (உரி.55)*
*முற்றும். (இ.வி.282)*

*அரியே ஐம்மை. (உரி.58)*
*(வியல் அகலம் ஆகும்) அரி ஐம்மை. (நேமி.83)*

**தொல்காப்பியம்**

துவைத்தலும் சிலைத்தலும் இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர். (உரி.60)

துவைத்தல் சிலைத்தல் இயம்பல்இசை சுட்டலும்
உரிய என்மனார் உணர்ந்திசி னோரே. (இ.வி.285)

முழக்கு இரட்டு ஒலிகலி இசைதுவை பிளிறுஇரை
இரங்கு அழுங்கு இயம்பல் இமிழ்குளிறு அதிர்குரை
கனைசிலை சும்மை கவ்வை கம்பலை
அரவம் ஆர்ப்போடு இன்னன ஓசை. (நன்.458)

**தொல்காப்பியம்**

*கம்பலை சும்மை கலியே அழுங்கல்*
*என்றிவை நான்கும் அரவப் பொருள.*

அவற்றுள், அழுங்கல் இரக்கமும் கேடும் ஆகும்.
(உரி.51,52)

கலியே அரவமும் செருக்கும் காட்டலும்
அழுங்கல் அரவமும் இரக்கமும் கேடும். (இ.வி.286)

**தொல்காப்பியம்**

துவைத்தலும்...இயம்பலும் இரங்கலும்
இசைப்பொருட் கிளவி என்மனார் புலவர்.

அவற்றுள், இரங்கல் கழிந்த பொருட்டும் ஆகும்.
(உரி.60,61)

இரங்கல் இசையும் கழிந்தபொருட்டு ஆகலும்
சிவணும் என்மனார் தெளிந்திசி னோரே. (இ.வி.286)

**தொல்காப்பியம்**

இலம்பாடு ஒற்கம் ஆயிரண்டும் வறுமை. (உரி.62)
இலம்பாடு ஒற்கம் வறுமை செப்பலும். (இ.வி.281)

**தொல்காப்பியம்**

நெமிர்தலும் பாய்தலும் பரத்தல் பொருள. (உரி.63)
நெமிர்தலும் பாய்தலும் பரத்தலை உணர்த்தலும். (இ.வி.281)

**தொல்காப்பியம்**

வியல்என் கிளவி அகலப் பொருட்டே. (உரி.66)
(வெம்மை விருப்பாம்) வியல் அகலம் ஆகும். (நேமி.83)

**தொல்காப்பியம்**

பேம்நாம் உரும்என வரூஉம் கிளவி
ஆமுறை மூன்றும் அச்சப் பொருள. (உரி.67)

பேம் நாம்.....உரும்
ஆமுறை மூன்றும் அச்சம் கூறலும். (இ.வி.281)

**தொல்காப்பியம்**

*வாள்ஒளி ஆகும். (உரி.69)*

*(விலை நொடை) வாள் ஒளியாம் வேறு. (நேமி.81)*

**தொல்காப்பியம்**

*கறுப்பும் சிவப்பும் வெகுளிப் பொருள. (உரி.74)*

*கறுப்பும் சிவப்பும் வெகுளி சுட்டலும். (இ.வி.281)*

*தொல். முற்றும். (மு.வீ.687)*

**தொல்காப்பியம்**

*வம்பு நிலையின்மை. (உரி.29)*

*முற்றும். (நேமி.57)*

**தொல்காப்பியம்**

*நொசிவும் நுழைவும் நுணங்கும் நுண்மை. (உரி.76)*

*முற்றும் (இ.வி.283)*

**தொல்காப்பியம்**

*புனிறுஎன் கிளவி ஈன்று அணிமைப் பொருட்டே. (உரி.77)*

*(புரை உயர்பு ஆகும்) புனிறு ஈன்று அணிமை. (நேமி.84)*

**தொல்காப்பியம்**

*பரவும் பழிச்சும் வழுத்தின் பொருள. (உரி.84)*

*பரவும் பழிச்சும் வழுத்தின் குறிப்பு உணர்த்தலும். (இ.வி.281)*

*பரவும் பழிச்சும் வழுத்தல் மேன. (மு.வீ.688)*

**தொல்காப்பியம்**

*வயவலி ஆகும். (உரி.68)*

*வயம்வலிஆம் வந்து. (நேமி.83)*

**தொல்காப்பியம்**

*நனவே களனும் அகலமும் செய்யும்.*

*மதவே மடனும் வலியும் ஆகும்.*

மிகுதியும் வனப்பும் ஆகலும் உரித்தே. (உரி.78,79,80)

நனவே களனும் அகலமும் செய்தலும்
மதவே மடனும் வலியும் அன்றி
மிகுதியும் வனப்பும் ஒருவழி விளக்கலும். (இ.வி.282)

**தொல்காப்பியம்**

கடிஎன் கிளவி
வரைவே கூர்மை காப்பே புதுமை
விரைவே விளக்கம் மிகுதி சிறப்பே
அச்சம் முன்தேற்று ஆயீர் ஐந்தும்
மெய்ப்படத் தோன்றும் பொருட்டா கும்மே
ஐயமும் கரிப்பும் ஆகலும் உரித்தே. (உரி.85,86)

விரைவு விளக்கம் மிகுதி சிறப்பு
வரைவு புதுமையுடன் கூர்மை - புரைதீர்
கரிப்புஐயம் காப்புஅச்சம் தேற்றம்ஈ ராறும்
தெரிக்கின் கடிச்சொல் திறம். (நேமி.82)

கடிஎன் கிளவி காப்பே கூர்மை
விரையே விளக்கம் அச்சம் சிறப்பே
விரைவே மிகுதி புதுமை ஆர்த்தல்
வரைவே மன்றல் கரிப்பின் ஆகும். (நன்.456)

கடிஎன் கிளவி வரைவே கூர்மை
காப்பே புதுமை விரைவே விளக்கம்
மிகுதி சிறப்பே அச்சம் முன்தேற்றோடு
ஐயமும் கரிப்பும் மணமும் அறைதலும்
முறைஎன மொழிப முறைஉணர்ந் தோரே. (இ.வி.282)

**தொல்காப்பியம்**

எல்லே இலக்கம். (இடை.21)
எல்லும் விளக்கம் எனல். (நேமி.84)

**தொல்காப்பியம்**

மெய்பெறக் கிளந்த உரிச்சொல் எல்லாம்
..........................................
..........................................
தத்தம் மரபின் தோன்றுமன் பொருளே.

கூறிய கிளவி....... அவற்றொடு கொளலே.
பொருட்குப் பொருள்தெரியின் அதுவரம்பு இன்றே.
பொருட்குத் திரிபுஇல்லை உணர்த்த வல்லின்.
உணர்ச்சி வாயில் உணர்வோர் வலித்தே.
மொழிப்பொருட் காரணம் விழிப்பத் தோன்றா.

எழுத்துப்பிரிந்து இசைத்தல் இவண்இயல்பு இன்றே
அன்ன பிறவும் கிளந்த அல்ல
..........................................
..........................................
பாங்குற உணர்தல் என்மனார் புலவர். (உரி.91-98)
முற்றும். (இ.வி.287,288,291,292,293,294,289,290)

**சுருக்கெழுத்து விளக்கம்**

| | |
|---|---|
| இ.வி. | இலக்கண விளக்கம் |
| இடை. | இடைச் சொல் இயல் |
| உரி. | உரிச்சொல் இயல் |
| நன். | நன்னூல்; |
| நேமி. | நேமிநாதம் |
| பி.வி. | பிரயோக விவேகம். |
| மு.வீ. | முத்துவீரியம் |

## ௯. எச்சவியல்
## ஒத்த நூற்பாக்கள்

**தொல்.சொல்.397**

இயற்சொல் திரிசொல் திசைச்சொல் வடசொல் என்று
அனைத்தே செய்யுள் ஈட்டச் சொல்லே.

**நேமி.சொல்.30**

இயற்சொல் முதல் நான்கும் எய்தும்.

**நன்னூல்.270**

அதுவே,
இயற்சொல் திரிசொல் ....... திசை வடசொல்.

**இல.விளக்கம்.171**

அதுவே,
இயற்சொல் திரிசொல் ....... திசை வடசொல்.

**மு.வீரியம்.ஒழிபு.49**

தொல்.சொல்.397-ஆம் நூற்பாவே.

**தொல்.சொல்.398**

அவற்றுள்,
இயற்சொல் தாமே
செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் வழாமை இசைக்கும் சொல்லே.

**நன்னூல்.271**

செந்தமிழ் ஆகித் திரியாது யார்க்கும்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.

**இல.விளக்கம்.172**

செந்தமிழ் ஆகித் திரியாது யார்க்கும்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.

**தொன்.விளக்கம்.43**

இயற்சொல் என்பது இயல்பின் திரிபுஇலாத்
தான்எளிது எவர்க்கும் தன்பொருள் விளக்கலே.

**மு.வீரியம்.ஒழிபு.50**

செந்தமிழ் நிலத்து வழக்கொடு சிவணித்
தம்பொருள் விளக்கும் தன்மைய இயற்சொல்.

**தொல்.சொல். 399**

ஒருபொருள் குறித்த வேறுசொல் ஆகியும்
வேறுபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
இருபாற்று என்ப திரிசொல் கிளவி.

**நன்னூல்.272**

ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
அரிதுஉணர் பொருளன திரிசொல் ஆகும்.

**இல.விளக்கம்.173**

தொல்.சொல்.399-ஆம் நூற்பாவே.

**தொன்.விளக்கம்.44**

திரிசொல் ஒருபொருள் தெரிபல சொல்லும்
பலபொருட்கு ஒருசொல்லும் பயன்படற்கு உரியன.

**மு.வீரியம்.ஒழிபு.51**

ஒருபொருள் குறித்த பலசொல் ஆகியும்
பலபொருள் குறித்த ஒருசொல் ஆகியும்
எனஇரு பாற்றே திரிசொல் கிளவி.

**தொல்.சொல்.400**

செந்தமிழ் சேர்ந்த பன்னிரு நிலத்தும்
தம்குறிப் பினவே திசைச்சொற் கிளவி.

**நன்னூல். 273**

செந்தமிழ் நிலம்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற்று இரட்டினில் தமிழ்ஒழி நிலத்தினும்
தம்குறிப் பினவே திசைச்சொல் என்ப.

**இல.விளக்கம்.174**

செந்தமிழ் நிலம்சேர் பன்னிரு நிலத்தினும்
ஒன்பதிற்று இரட்டினில் தமிழ்ஒழி நிலத்தினும்
தம்குறிப் பினவே திசைச்சொல் என்ப.

**மு.வீரியம்.ஒழிபு.**

செந்தமிழ் நிலனைச் சேர்ந்த ஈராறு
நிலத்தினும் தம்குறிப் பினதிசைக் கிளவி.

**தொல்.சொல்.401**

வடசொற் கிளவி வடஎழுத்து ஒரீஇ
எழுத்தொடு புணர்ந்த சொல்லா கும்மே.

**நன்னூல். 274**

பொதுஎழுத் தானும் சிறப்புஎழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்.

**இல.விளக்கம்.175**

பொதுஎழுத் தானும் சிறப்புஎழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்.

**மு.வீரியம்.ஒழிபு.52**

பொதுஎழுத் தானும் சிறப்புஎழுத் தானும்
ஈரெழுத் தானும் இயைவன வடசொல்.

**தொல்.சொல்.403**

அந்நாற் சொல்லும் தொடுக்குங் காலை
வலிக்கும்வழி வலித்தலும் மெலிக்கும்வழி மெலித்தலும்
விரிக்கும்வழி விரித்தலும் தொகுக்கும்வழித் தொகுத்தலும்
நீட்டும்வழி நீட்டலும் குறுக்கும்வழிக் குறுக்கலும்
நாட்டல் வலிய என்மனார் புலவர்.

**நேமி.சொல்.67**

மெலித்தல் குறுக்கல் விரித்தல் தொகுத்தல்
வலித்தலே நீட்டல் வரினும்............
தெரிதலாம் கற்றோர் செயல்.

**நன்னூல். 155**

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வரும்செய்யுள் வேண்டுழி.

**இல.விளக்கம்.57**

வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வரும்செய்யுள் வேண்டுழி.

**மு.வீரியம்.ஒழிபு.54**

அந்நாற் சொல்லும் தொகுக்குங் காலை
வலித்தல் மெலித்தல் நீட்டல் குறுக்கல்
விரித்தல் தொகுத்தலும் வரும்செயுள் வேண்டுழி.

**தொல்.சொல்.404**

நிரல்நிறை சுண்ணம் அடிமறி மொழிமாற்று
அவைநான்கு என்ப மொழிபுணர் இயல்பே.

**நேமி.சொல்.68**

அடிமொழி சுண்ணம் நிரல்நிறை விற்பூட்டு
அடிமறி யாற்றுவரவும் - துடியிடையாய்!
தாப்பிசை தாஇல் மொழிமாற்று அளைமறி
பாப்புப் பொருளோடு ஒன்பான்.

**நன்னூல்.411**

யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு
அடிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே.

**இல.விளக்கம்.361**

யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு
அடிமறி மாற்றெனப் பொருள்கோள் எட்டே.

**தொன்.விளக்கம்.305**

யாற்றுநீர் மொழிமாற்று நிரல்நிறை விற்பூண்
தாப்பிசை அளைமறி பாப்புக் கொண்டுகூட்டு
அடிமறி மாற்றென ஆகும் எட்டு என்ப.

**தொல்.சொல்.405**

நிரல்நிறை தானே
வினையினும் பெயரினும் நினையத் தோன்றிச்
சொல்வேறு நிலைஇப் பொருள்வேறு நிலையல்.

**நன்னூல்.414**

பெயரும் வினையுமாம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல்நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரல்நிறை நெறியே.

**இல.விளக்கம்.364**

பெயரும் வினையுமாம் சொல்லையும் பொருளையும்
வேறு நிரல்நிறீஇ முறையினும் எதிரினும்
நேரும் பொருள்கோள் நிரல்நிறை நெறியே.

**தொன்.விளக்கம்.308**

நிரல்நிறை யாம்நிரை நிறீஇய பெயர்வினை
இரண்டும் வேறுஅடுக்கி எதிரினும் வைத்த
நிரையினும் பொருளே நேர்தல் என்ப.

**தொல்.சொல்.406**

சுண்ணம் தானே
பட்டாங்கு அமைந்த ஈரடி எண்சீர்
ஒட்டுவழி அறிந்து துணித்தனர் இயற்றல்.

**நன்னூல்.413**

ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை
மாற்றிஓர் அடியில் வழங்கல் மொழி மாற்றே.

**இல.விளக்கம்.636**

ஏற்ற பொருளுக்கு இயையும் மொழிகளை
மாற்றிஓர் அடியில் வழங்கல் மொழி மாற்றே.

**தொன்.விளக்கம்.300**

மொழிமாற்று என்ப மொழிகள்தம் பயன்படும்
வழிபெயர்த்து ஓரடி வரியுள் கொளலே.

**தொல்.சொல்.407**

அடிமறிச் செய்தி அடிநிலை திரிந்து
சீர்நிலை திரியாது தடுமா றும்மே.

**நன்னூல்.419**

ஏற்புழி எடுத்துடன் கூட்டுறும் அடியவும்
யாப்புஈறு இடைமுதல் ஆக்கினும் பொருள்இசை
மாட்சியும் மாறா அடியவும் அடிமறி.

**இல.விளக்கம்.369**

தொ.சொல்.407-ஆம் நூற்பாவே.

**தொன்.விளக்கம்.313**

அடிமறி மாற்றே அடிபெயர் பொருளவும்
அடிஇடம் மாறினும் அழியாப் பொருளவும்.

**தொல்.சொல்.408**

பொருள்தெரி மருங்கின்
ஈற்றடி இறுசீர் எருத்துவயின் திரிபும்
தோற்றமும் வரையார் அடிமறி யான.

**தொல்.சொல்.409**

மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப் பொருள் எதிர் இயைய
முன்னும் பின்னும் கொள்வழிக் கொளாஅல்.

**நன்னூல்.418**

யாப்புஅடி பலவினும் கோப்புஉடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே.

**இல.விளக்கம்.368**

யாப்புஅடி பலவினும் கோப்புஉடை மொழிகளை
ஏற்புழி இசைப்பது கொண்டு கூட்டே.

**தொன்.விளக்கம்.312**

கொண்டுகூட்டு என்ப சொற்பொருட்கு ஏற்ப
விண்டுஅறப் பலவினும் வினைகொள் மொழியே.

**தொல்.சொல்.411**

இசைநிறை அசைநிலை பொருளொடு புணர்தல்என்று
அவைமூன்று என்ப ஒருசொல் அடுக்கே.

**நேமி.சொல்.50**

இசைநிறை நான்கு வரம்பாம் விரைசொல்
வசையிலா மூன்று வரம்பாம் - அசைநிலை
ஆய்ந்த ஒருசொல் அடுக்கு இரண்டாம்.

**நன்னூல்.395**

அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கு ஒருசொல்
இரண்டு மூன்றுநான்கு எல்லைமுறை அடுக்கும்.

**இல.விளக்கம்.346**

அசைநிலை பொருள்நிலை இசைநிறைக்கு ஒருசொல்
இரண்டு மூன்றுநான்கு எல்லைமுறை அடுக்கும்.

**மு.வீரியம்.94**

அசைநிலை இசைநிறை அடுக்குஇரு திறத்தன.

**சாமிநாதம்.69**

அடுக்கு அசைநிலை, பொருள்நிலை இசைநிறைமேல் ஆகும்.

**தொல்.சொல்.412**

வேற்றுமைத் தொகையே உவமத் தொகையே
வினையின் தொகையே பண்பின் தொகையே
உம்மைத் தொகையே அன்மொழித் தொகைஎன்று
அவ்வாறு என்ப தொகைமொழி நிலையே.

**நேமி.வினை.61**

வேற்றுமை உம்மை வினைபண்பு உவமையும்
தோற்றிய அன்மொழியும் தொக்கஇடத்து - ஏற்ற
இருசொல்லும் ஏற்கும் இலக்கணத்தால் பல்சொல்
ஒருசொல்லாய்ச் சேறலும் உண்டு.

**நன்னூல்.362**

வேற்றுமை வினைபண்பு உவமைஉம்மை
அன்மொழி எனஅத் தொகைஆறு ஆகும்.

**இல.விளக்கம்.335**

வேற்றுமைத் தொகைஉவ மத்தொகை வினைத்தொகை
பண்புத் தொகைஉம் மைத்தொகை அன்மொழித்
தொகைஎனக் கிளந்தஅத் தொகைஆறு ஆகும்.

**தொன்.விளக்கம்.89**

தொகைநிலை வகைப்படின் தொகும்வேற் றுமைவினை
உவமை பண்பு உம்மையோடு அன்மொழி ஆறே.

**மு.வீரியம்.ஒழிபு.85**

வேற்றுமை வினைபண்பு உவமை உம்மை
அன்மொழி எனத்தொகை அறுவகைப் படுமே.

**சாமிநாதம்.65**

முறைசொல் வேற்றுமை உவமை உம்மைவினை பண்பு
அன்மொழி என ஆறாம் தொகை.

**வீரசோழியம்.50,45**

50. வேற்றுமை உம்மை வினைபண்பு உவமையொடு
அன்மொழிஎன்று
ஆற்றும் தொகைசெந் தமிழர்கள் ஆறுஎன்பர்.

45. தற்புருடன் பலநெல் கன்மதாரயம் தாங்கியசீர்
நற்றுவிகுத்தொகை நாவார் துவந்துவம் நல்லதெய்வச்
சொற்பயன் மாந்தர்கள் அவ்விய பாவம்இது என்று
தொன்மைக்
கற்பகமாப் பகர்ந்தார் தொகை ஆறும் கனங்குழையே.

**பிரயோகவிவேகம்.20**

தற்புருடன் துவிகு பலநெல் கர்மதாரயனோடு
உற்பல வாள் நெடுங்கண் பசுந்தேமொழி ஒண்தொடியாய்
சொற்பயில் அவ்வியயீபாவம் ஏனைத் துவந்தன் எனக்
கற்பவர் கூறும் சமாசன்களே தொகைக் கட்டளையே.

**தொல்.சொல்.413**

வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல.

**நேமி.சொல்.62**

உருபு விரியின் உருபுத் தொகையாம்.

**நன்னூல்.363**

இரண்டு முதலா இடைஆறு உருபும்
வெளிப்படல் இல்லது வேற்றுமைத் தொகையே.

**இல.விளக்கம்.336**

வேற்றுமைத் தொகையே வேற்றுமை இயல.

**மு.வீரியம்.ஒழிபு.96**

நன்னூல் *363* –ஆம் நூற்பாவே.

**சாமிநாதம். 66**

வேற்றுமையின் தொகை உருபின் பொருள் காட்டும்.

**வீரசோழியம்.46**

எழுவாய்முதல் எழுவேற்றுமையோடு எழும் தடையில்
வழுவாத நஞ்ஞொடு எட்டாம் தற்புருடன்.

**பிரபோகவிபேதம்.21**

தற்புருடத்தொகை வேற்றுமை எட்டனுள் சார்ந்த நஞ்[3] ச்
சொற்பொருள் அன்மைமறை இன்மை காட்டும்.

**தொல்.சொல்.414**

உவமத் தொகையே உவம இயல.

**நேமி.சொல்.62**

உவமை விரியின் உவமைத் தொகையாம்.

**நன்னூல்.366, 367**

*366.* உவம உருபு இலது உவமத்தொகையே.

*367.* போலப் புரைய ஒப்ப உறழ
மானக் கடுப்ப இயைய ஏய்ப்ப
நேர நிகர அன்ன இன்ன
என்பவும் பிறவும் உவமத்து உருபே.

**இல.விளக்கம்.337**

உவமத் தொகையே உவம இயல.

**மு.வீரியம்.ஒழிபு.99**

உவம உருபு இலது உவமத் தொகையே.

**சாமிநாதம்.66**

உவமையேல் உருப்பண்பு ஆகிதொக்கு விரிக்கும்.

**தொல்.சொல்.415**

வினையின் தொகுதி காலத்து இயலும்.

**நேமி.சொல்.62**

ஒருகாலம் தோன்றின் வினைத்தொகையாம்.

**நன்னூல்.364**

காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

**இல.விளக்கம்.338**

வினையின் தொகுதி காலத்து இயலும்.

**மு.வீரியம்.ஒழிபு.97**

காலம் கரந்த பெயரெச்சம் வினைத்தொகை.

**சாமிநாதம்.66**

தூற்று வினைத்தொகை காலத்து இயலும்.

**தொல்.சொல்.416**

வண்ணத்தின் வடிவின் அளவின் சுவையின்என்று
அன்ன பிறவும் அதன்குணம் நுதலி
இன்னது இதுஎன வரூஉம் இயற்கை
என்ன கிளவியும் பண்பின் தொகையே.

**நேமி.சொல்.62**

பண்பும் இருபேரொட்டும்
தோன்றுமேல் பண்புத்தொகை.

**நன்னூல்.365**

பண்பை விளக்கும் மொழிதொக் கனவும்
ஒருபொருட்கு இருபெயர் வந்தவும் குணத்தொகை.

**இல.விளக்கம்.339**

தொல்.சொல்.416-ஆம் நூற்பாவே.

**மு.வீரியம்.வினை.18**

வண்ணம் சுவையே வடிவே அளவே
என்பவும் பிறவும் இதன்குணம் நுதலி
வருஉம் இயற்கை பண்பின் தொகையே.

**சாமிநாதம்.66**

பண்புத்தொகை இன்னது இது என விசேடம் ஒன்றின் காட்டும்

**வீரசோழியம்.46,48,50**

46. ........................................வளந்துவிகு
தழுவார்ந்த எண்மொழி முன்னாய்வரும்; தத்திதப் பொருள்மேல்
குழுவார் ஒருமைஒப்புப் பன்மைஒப்புக் குறியிரண்டே.

48. முன்மொழிப்பண்பு இருமொழிப்பண்பு மொழிந்தமைந்த
பின்மொழி ஒப்பொடு முன்மொழி ஒப்பும் பிணக்கொன்றிலா
முன்மொழி நற்கருத்தும் முன்மொழி நற்றுணிவும்என
நன்மொழியார் கன்ம தாரயமாறுஎன்ன நாட்டினரே.

50. பண்பில், தோற்றும் அளவு வடிவு நிறம் சுவை சொல் பிறவும் ஏற்று.

**பிரயோக விவேகம்.21,22**

21. ........................................தொகைத்துவிகு

முற்பதம்என் பிற்பதம் தத்திதார்த்தம் முடித்தும் எழூஉம்
பற்பல ஏகவற்பாவி அநேகவற் பாவி என்றே.

22. முன்மொழிப்பண்பு இருபண்பு விசேடியம்
முன்மொழிதல்
முன்மொழித் துல்லியம் பின்மொழித்துல்லியம்
மொய்குழலாய்!
முன்மொழிச் சம்பாவனை அவதாரணம் முற்றும்இவை
நன்மொழிப் பண்புத்தொகைக் கர்மதாரயன் நற்றமிழ்க்கே.

**இல. கொத்து.99,98**

99. சிலபெயர் எச்சமும் சிலவினைத் தொகையும்
இருவகை உவமையும் வண்ணச் சினைச்சொலும்
பண்புத் தொகைஎனப் பகரும் வடநூல்.

98. பண்புத் தொகைவிதி பகரின் பெருகும்
ஆயினும் சிலவிதி அறைகுவன் கேள்நீ
பண்புமுன் வருதலும் இருபண்பு அடுத்தலும்
இருபண் பொடுபொருள் இயைதலும் அவ்இரு
பண்புகள் தாமே பொருளை விளைத்தலும்
இயற்பெயர் சிறப்புப் பெயர்மா றுதலும்
பொதுச்சிறப் புப்பெயர் முறையே பொருந்தலும்
பின்மொழி ஆகு பெயராய்ப் பிறத்தலும்
முன்மொழி ஆகு பெயராய் முடித்தலும்
இருமொழி ஆகு பெயராய் இருத்தலும்
ஒருபொருட்கு இருபெயர் ஆகி ஒட்டலும்
முற்பதம் தமிழ்மொழி முற்பதம் வடமொழி
இருபதம் தமிழ்மொழி இருபதம் வடமொழி
ஆகி வருதலும் ஆதியாப் பலவே.

**தொல்.சொல்.417**

இருபெயர் பலபெயர் அளவின் பெயரே
எண்இயற் பெயரே நிறைப்பெயர்க் கிளவி
எண்ணின் பெயரோடு அவ்அறு கிளவியும்
கண்ணிய நிலைத்தே உம்மைத் தொகையே.

**நேமி.சொல்.62**

உம்மை விரியின் அடைவே உம்மைத் தொகையாம்.

**நன்னூல்.368**

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
எனுநான்கு அளவையுள் உம்இலது அத்தொகை.

**இல.விளக்கம்.340**

தொல்.சொல்.417 – ஆம் நூற்பாவே.

**மு.வீரியம்.ஒழிபு.100**

எண்ணல் எடுத்தல் முகத்தல் நீட்டல்
அளவையுள் உம்இலது அத்தொகை ஆகும்.

**சாமிநாதம்.66**

உம்மைத்தொகையின் கூற்று
இரண்டு முதல் பலபேரிடத்தும் உம்மைதொகுத்துக்
குறிக்கும் நால்வகை அளவைப் பொருள் விரித்துக்
காட்டும்.

**வீரசோழியம்.49,50**

49. ......................................துவந்துவமும்
வன்மொழியாம் இதரேதரம் வாய்ந்த சமாகாரமாம்.

50. இருபல் அளவு நிறைஎண் பெயர் உம்மையே.

**பிரயோகவிவேகம்.23**

..............................................உம்மைச் சகாரத்திலே
இன்மொழித் தொந்தன் சமாகாரத்தோடு இதரேதரமாம்.

**தொல்.சொல்.418**

பண்புதொக வருஉம் கிளவி யானும்
உம்மை தொக்க பெயர்வயி னானும்
வேற்றுமை தொக்க பெயர்வயி னானும்
ஈற்றுநின்று இயலும் அன்மொழித் தொகையே.

**நேமி.சொல்.63**

ஏனைத் தொகைச் சொற்கள் ஐந்தின் இறுதிக்கண்
ஆன பெயர்தோன்றின் அன்மொழியாம்.

**நன்னூல்.369**

ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி.

**இல.விளக்கம்.341**

வேற்றுமை முதலிய ஐந்தொகை மொழியினும்
ஈற்று நின்று இயலும் அன்மொழித் தொகையே.

**மு.வீரியம்.ஒழிபு.101**

ஐந்தொகை மொழிமேல் பிறதொகல் அன்மொழி.

**சாமிநாதம்.66**

சாற்றும் அன்மொழி, ஐந்தொகை ஈற்று அங்ஙன்
வேறு ஒருபேர்தனைக் காட்டும்.

**வீரசோழியம்.47**

இருமொழி பன்மொழி பின்மொழி எண்ணோடு
இருமொழிஎண்
மருவிவிதியா ரிலக்கணம் மற்றைச் சகமுன்மொழி
பரவும் திகந்தராளத்தொகை என்னப்பலநெல் தொகை
விரியும் ஒரு ஏழவை வேற்று மொழிப்பொருள்
மெல்லியலே.

**தொல்.சொல்.419**

அவைதாம்,
முன்மொழி நிலையலும் பின்மொழி நிலையலும்
இருமொழி மேலும் ஒருங்குஉடன் நிலையலும்
அம்மொழி நிலையாது அன்மொழி நிலையலும்
அந்நான்கு என்ப பொருள்நிலை மரபே.

**நேமி.சொல்.64**

முன்மொழியும் பின்மொழியும் மூண்ட இருமொழியும்
அன்மொழியும் என்றிவற்றின் ஆம்பொருள்கள் - முன்
மொழிதான்
காலம் இடத்தால் கருத்தொடும் சேர்ந்து அறிதல்
மேலையோர் கண்டவிதி.

**நன்னூல்.370**

முன்மொழி பின்மொழி பன்மொழி பிறமொழி
எனும் நான்கு இடத்தும் சிறக்கும் தொகைப்பொருள்.

**இல.விளக்கம்.342**

முன்மொழி பின்மொழி பன்மொழி பிறமொழி
எனும் நான்கு இடத்தும் சிறக்கும் தொகைப்பொருள்.

**மு.வீரியம்.102**

முன்மொழி பின்மொழி இருமொழி பிறமொழி
நிலைபெற அத்தொகை மரபு நான்கு ஆகும்.

**சாமிநாதம்.67**

தக்கிய முன்மொழி பின்மொழி இருமொழி அன்மொழியாய்ச்
சாற்றல் தொகை நிலையாம்.

**வீரசோழியம்.51**

.........................................முரட் பொருள்கோள்
பின்மொழி முன்சொல் பிறிதோர் மொழியொடு இருமொழியே.

**பிரயோகவிவேகம்.25**

தற்புருடன் துவிகு கர்மதாரயன் தாம் முதன்மை
பிற்பதம் ஆம்; எழுவாய் ஆம் ஒரூஉத்தொகை, பெண்
அணங்கே
முற்பதம்; அவ்வியவீபாவம் ஒப்பு முறைபிறழும்.
சொற்பதம் தொக்கவை எல்லாம் முதன்மை
துவந்தனுக்கே.

**தொல்.சொல்.420**

எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய.

**நேமி.சொல்.61**

வேற்றுமை உம்மை வினைபண்பு உவமையும்
தோற்றிய அன்மொழியும் தொக்கஇடத்து - ஏற்ற
இருசொல்லும் ஒன்றாம் இலக்கணத்தால் பலசொல்
ஒருசொல்லாய்ச் சேறலும் உண்டு.

**வீரசோழியம்.44**

நாமங்களில் பொருந்தும் பொருள் நற்றொகை.

**நன்னூல்.361**

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளின் அவற்றின் உருபுஇடை
ஒழிய இரண்டு முதலாத் தொடர்ந்து ஒரு
மொழிபோல் நடப்பன தொகைநிலைத் தொடர்மொழி.

**இல.விளக்கம்.334**

பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை
முதலிய பொருளில் முட்டுங் காலை
வேற்றுமை உருபும் உவம உருபும்
உம்மையும் தாம்இடை ஒழிய ஒட்டியும்
ஒழிவதுஒன்று இன்றி ஒன்றொடொன்று ஒட்டியும்
இரண்டும் பலவும் ஆகஒற் றுமைப்பட்டு
ஒருசொலின் இயல்வன தொகைநிலைத் தொடர்ச்சொல்.

**தொன்.விளக்கம்.88**

தொகைநிலை என்ப தொடரும் பெயரொடு
வினைபெயர் புணர்புளி வேற்றுமைமுதல் ஒழித்து
ஒருமொழி போல்பல ஒன்றிய நெறியே.

**மு.வீரியம்.ஒழிபு.103**

எல்லாத் தொகையும் ஒருசொல் நடைய.

**சாமிநாதம்.65**

செறிவில் பெயரொடு பெயரும் வினையும் வேற்றுமை ஆதிய
பொருளின் உருபு இடைநீங்குற இரண்டுமுதலாத்
துறையின் மொழிதொடர்ந்து ஒருசொல் போன்று
தொகுத்தல் தொகைநிலை.

**பிரயோகவிவேகம்.19**

ஆக்கிய சொற்கள் தகுதி அவாய்நிலை அன்மைநிலை
நோக்கிய மூன்றும் பெறச்சேர்வது தொகை.

**இல.கொத்து.96**

தொகைநிலை குணத்தைச் சொல்லுங்காலை
வேற்றுமைஉருபு முதலிய இடைநிலை
தொகுதலின் தொகைநிலை எனப்படும் என்றும்,
நிலைமொழி வருமொழி நீக்கம் இன்றி
ஈறும் முதலும் இசைந்து நின்று
விட்டிசைப்பு இன்றி ஓர் நிலைமொழி விதிபெறத்
தொகுதலின் தொகைநிலை எனப்படும் என்றும்,
பலசொல் கூடிஓர்சொல்லே ஆகி
பிளவுபட்டு இசைக்கவும் பிரிக்கவும் படாமல்
ஈறும் முதலும் இவை எனப்படாமல்
தொகுதலின் தொகைநிலை எனப்படும் எனவும்
கூறுவர்; இவர் மதம் மறுபடா,

**தொல்.சொல்.421**

உயர்திணை மருங்கின் உம்மைத் தொகையே
பலர்சொல் நடைத்துஎன மொழிமனார் புலவர்.

**நேமி.சொல்.65**

உலைவில் உயர்திணைமேல் உம்மைத்தொகைதான்
பலர்சொல் நடைத்தாய்ப் பயிலும்.

**நன்னூல்.372**

உயர்திணை உம்மைத்தொகை பலர் ஈறே.

**இல.விளக்கம்.343**

தொல்.சொல்.421-ஆம் நூற்பாவே.

**மு.வீரியம்.ஒழிபு.105**

நன்னூல்.372-ஆம் நூற்பாவே.

**தொல்.சொல்.422**

வாரா மரபின வரக்கூ றுதலும்
என்னா மரபின எனக்கூ றுதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற்று இயல்பரன்
இன்ன என்னும் குறிப்புரை ஆகும்.

**நேமி.சொல்.66**

என்றசென்ற, என்னும் அவையன்றி இட்டுரைத்தல்
எய்தப்படும் வழக்கிற்கு ஈங்கு.

**நன்னூல்.409**

கேட்குந போலவும் கிளக்குந போலவும்
இயங்குந போலவும் இயற்றுந போலவும்
அஃறிணை மருங்கினும் அறையப் படுமே.

**இல.விளக்கம்.347**

தொல்.சொல்.422-ஆம் நூற்பாவே.

**மு.வீரியம்.ஒழிபு.106,115**

106 வாரா மரபின வரஇயம் புதலும்
என்னா மரபின எனஇயம் புதலும்
அன்னவை எல்லாம் அவற்றவற்று இயல்பான்
இன்ன என்னும் குறிப்புரை ஆகும்.

115. நன்னூல். 409-ஆம் நூற்பாவே.

**தொல்.சொல்.423**

இசைப்படு பொருளே நான்குவரம்பு ஆகும்.

**நேமி.சொல்.50**

இசைநிறை நான்குவரம்பாம்.

**நன்னூல்.395**

இசைநிறைக்கு ஒருசொல்

......... நான்கு எல்லைமுறை அடுக்கும்.

**இல.விளக்கம்.346**

இசைநிறைக்கு ஒருசொல்

......... நான்கு எல்லைமுறை அடுக்கும்.

**மு.வீரியம்.ஒழிபு.107**

நிறை நான்கு அடுக்கே.

**சாமிநாதம்.67**

அடுக்கு இசைநிறை நான்கினும் ஆகும்.

**தொல்.சொல்.424**

விரைசொல் அடுக்கே மூன்று வரம்பு ஆகும்.

**நேமி.சொல்.50**

விரைசொல் வசையிலா மூன்று வரம்பாம்.

**நன்னூல்.395**

............ பொருள் நிலைக்கு ஒருசொல்

...........மூன்று எல்லை முறை அடுக்கும்.

**இல.விளக்கம்.346**

............ பொருள் நிலைக்கு ஒருசொல்

...........மூன்று எல்லை முறை அடுக்கும்.

**மு.வீரியம்.ஒழிபு.107**

விரைவு மூன்று அடுக்கே.

**சாமிநாதம்.67**

அடுக்கு பொருள்நிலைமேல் மூன்றாம்.

**தொல்.சொல்.427**

இறப்பின் நிகழ்வின் எதிர்வின் என்றச்
சிறப்புடை மரபின் அம்முக் காலமும்
தன்மை முன்னிலை படர்க்கை என்னும்
அம்மூ இடத்தான் வினையினும் குறிப்பினும்
மெய்ம்மை யானும் ஈரிரண்டு ஆகும்
அவ்வாறு என்ப முற்றியல் மொழியே.

**வீரசோழியம்.72**

முன்னிலை தன்மை இடத்தினில் காலங்கள் மூன்றையும் வைத்து
உன்னும் ஒருமை சிறப்பொடு பன்மையும் உய்த்து உணர்ந்தால்
பன்னும் தொழிற்சொல் பதினெட்டுஉள கருத்தாப் பொருள்மேல்
மன்னி நிகழ்தொகை முப்பதொடாறும் வகுத்தறியே.

**நேமி.சொல்.39**

இறப்பு நிகழ்வு எதிர்வாம் காலங்கள் ஏற்றும்,
குறிப்பும்......... முற்று மூவகைத்தாய் மூன்றிடத்தும்
நிற்கும் வினைச்சொற்கள் நேர்ந்து.

**நன்னூல்.324**

ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்
ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்
முக்கா லத்தினும் முரண முறையே
மூவைந்து இருமூன்று ஆறாய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூஒன் பானாம்.

**இல.விளக்கம்.231**

ஒருவன் முதல் ஐந்தையும் படர்க்கை இடத்தும்

ஒருமை பன்மையைத் தன்மை முன்னிலையினும்
முக்கா லத்தினும் முரண முறையே
மூவைந்து இருமூன்று ஆறாய் முற்று
வினைப்பதம் ஒன்றே மூஒன் பானாம்.

**சாமிநாதம்.49**

ஒருவன்முதல் ஐந்தினையும் படர்க்கையினும் பன்மை
ஒருமையைத் தன்மையினொடு முன்னிலையினும்
முக்காலம்
முரணி முறையே ஐம்மூன்று ஆறுஆறாய் வினையின்
முற்றுச்சொல் ஒன்றே மூவொன்பதாம் அன்றே.

**தொல்.சொல்.428**

எவ்வயின் வினையும் அவ்வியல் நிலையும்.

**நேமி.வினை.46**

சாற்றும் பெயர்வினை எச்சங்கள் தாம் அடுக்கிச்
............சொன்னாலும் - ஏற்ற பொருள், குன்றா.

**நன்னூல்.340,342**

*340.* காலமும் செயலும் தோன்றிப் பாலொடு
செய்வது ஆதி அறுபொருட் பெயரும்
எஞ்ச நிற்பது பெயரெச்சம்மே.

*342.* தொழிலும் காலமும் தோன்றிப் பால்வினை
ஒழிய நிற்பது வினையெச் சம்மே.

**இல.விளக்கம். 242, 243, 245**

*242.* பெயர்எஞ்சு கிளவியும் வினைஎஞ்சு கிளவியும்
தேருங் காலை ஐம்பால் மூஇடத்தன
அவைதாம்,
பிறிதொடு இயைந்தல்லது நிற்றலாற் றாது
குறைபட நிலைஇயும் கொள்கைய என்ப.

243. செய்வது ஆதி அறுபொருட் பெயரொடு
முடியும் முறையது பெயரெச் சம்மே.

245. செய்து செய்யூ முதலவாய் பாட்டின்
தன்வினை பிறவினை ஆயிரு வினையொடு
முடியும் முறையது வினையெச் சம்மே.

**தொல்.சொல்.429**

அவைதாம்,
தத்தம் கிளவி அடுக்குந வரினும்
எத்திறத் தானும் பெயர்முடி பினவே.

**நன்னூல்.323**

பொதுஇயல்பு ஆறையும் தோற்றிப் பொருட்பெயர்
முதல்அறு பெயரலது ஏற்பில முற்றே.

**இல.விளக்கம்.230**

மற்றுச்சொல் நோக்கா மரபின அனைத்தும்
முற்றி நிற்பன முற்றியல் மொழி அவை
எத்திறத் தானும் பெயர்முடி பினவே.

**தொன்.விளக்கம்.104**

பெயரே ஏற்றுமற்று ஒன்றனை வேண்டாது
ஏற்பது வினைவினைக் குறிப்பு முற்றே.

**சாமிநாதம்.49**

தருதொழிலின் பொருத்தமதால் பொருளாதி பெயரின்
சார்ந்து தான்தொடராய் வேற்றுமைஉருபு ஏற்பிலதாய்க்
கருவியினால் பதமுடிவின் இயல்பெற்றுத் தோற்றிக்
காலம் விளக்கியும் தொகுத்து முடிதல் முற்றாம்.

**தொல்.சொல்.430**

பிரிநிலை வினையே பெயரே ஒழியிசை
எதிர்மறை உம்மை எனவே சொல்லே

குறிப்பே இசையே ஆயீ னரந்தும்
நெறிப்படத் தோன்றும் எஞ்சுபொருட் கிளவி.

**நன்னூல்.360**

பெயர்வினை உம்மைசொல் பிரிப்பு என ஒழியிசை
எதிர்மறை இசைஎனும் சொல்ஒழிபு ஒன்பதும்
குறிப்பும் தத்தம் எச்சம் கொள்ளும்.

**இல.விளக்கம்.348**

பெயர்வினை எதிர்மறை பிரிப்புஒழிபு உம்மை
எனஎனும் சொல் ஒழிபு ஏழொடும் சொல்இசை
குறிப்புஎனும் குறிப்பு ஒழிபு உளப்படத் தொகைஇ
எஞ்சுபொருட் கிளவி ஈரைந்து ஆகும்.

**மு.வீரியம்.ஒழிபு.108**

தொல்.சொல்.430-ஆம் நூற்பாவே.

**சாமிநாதம்.68**

................................குறிப்பு இசை சொல்ஆக
மூன்றுமே குறிப்பெச்சம்; மறை பிரிவோடு ஒழிபு
இன்னிசையில் உம்மை என எள்ளல பெயர்வினையும் பிறிது
இலாது ஏழ்சொல்லெச்சம்; எச்சம் இதில் எட்டு
முன்இலகும் பெயர்வினை எச்சங்களைப்போல் குறிப்பு
மொழியும் எச்சம் விளக்கும். முன்னம் உணர்வின் அளந்து
அறியே.

**தொல்.சொல்.431**

பிரிநிலை எச்சம் பிரிநிலை முடிபின.

**இல.விளக்கம். 350**

பிரிநிலை எச்சம் பிரிநிலை கோடலும்.

**மு.வீரியம்.109**

தத்தம் எச்சமொடு சார்ந்து நின்று இயலும்.

**தொல்.சொல்.432**

வினைஎஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றும் முடிபுஆ கும்மே
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே.

**இல.விளக்கம்.249**

வினைஎஞ்சு கிளவிக்கு வினையும் குறிப்பும்
நினையத் தோன்றும் முடிபுஆ கும்மே
ஆவயின் குறிப்பே ஆக்கமொடு வருமே.

**தொல்.சொல்.433**

பெயரெஞ்சு கிளவி பெயரொடு முடிமே.

**இல.விளக்கம். 349**

முன்னவை இரண்டும் சொன்னவை ஆகும்.

**தொல்.சொல்.434**

ஒழியிசை எச்சம் ஒழியிசை முடிவின.

**இல.விளக்கம்.350**

ஒழியிசை எச்சம் ஒழியிசை கோடலும்.

**தொல்.சொல்.435**

எதிர்மறை எச்சம் எதிர்மறை முடிபின.

**இல.விளக்கம்.350**

எதிர்மறை எச்சம் எதிர்மறை கோடலும்.

**தொல்.சொல்.436**

உம்மை எச்சம் இருவீற் றானும்
தன்வினை ஒன்றிய முடிபுஆ கும்மே.

**இல.விளக்கம். 350**

உம்மை எச்சம் இருவீற் றானும்.
தன்வினை ஒன்றிய முடிபுஆ கும்மே.

**தொல்.சொல். 437**

தன்மேல் செஞ்சொல் வருஉங் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

**இல.விளக்கம்.352**

தன்மேல் செஞ்சொல் வருஉங் காலை
நிகழும் காலமொடு வாராக் காலமும்
இறந்த காலமொடு வாராக் காலமும்
மயங்குதல் வரையார் முறைநிலை யான.

**தொல்.சொல். 438**

எனஎன் எச்சம் வினையொடு முடிமே.

**இல.விளக்கம். 350**

எனஎன் எச்சம் வினையொடு முடிதலும்.

**தொல்.சொல். 439**

எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலஎன மொழிப.

**இல.விளக்கம். 350**

எஞ்சிய மூன்றும் மேல்வந்து முடிக்கும்
எஞ்சுபொருட் கிளவி இலவாம்.

**தொல்.சொல்.440**

அவைதாம்,
தத்தம் குறிப்பின் எச்சம் செப்பும்.

**இல.விளக்கம். 350**

அவைதாம்,
தத்தம் குறிப்பின் எச்சம் செப்பலும்
இயல்பு எனமொழிப இயல்பு உணர்ந்தோரே.

**தொல்.சொல். 441**

சொல்என் எச்சம் முன்னும் பின்னும்
சொல் அளவு அல்லது எஞ்சுதல் இன்றே.

**இல.விளக்கம். 351**

சொல் அளவு அல்லது எஞ்சுதல் இன்றே.

**தொல்.சொல். 442**

அவைஅல் கிளவி மறைத்தனர் கிளத்தல்.

**நன்னூல்.267**

இடக்கர் அடக்கல்.......வழக்கியல்.

**இல.விளக்கம்.168**

இடக்கர் அடக்கல்.......வழக்கியல்.

**மு.வீரியம்.ஒழிபு.55**

தகுதியும் வழக்கும் தக்கோர் வரையார்.

**தொல்.சொல். 444**

ஈதா கொடுஎனக் கிளக்கும் மூன்றும்
இரவின் கிளவி ஆகிடன் உடைய.

**நன்னூல். 407**

ஈதா கொடுஎனும் மூன்றும் முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை.

**தொன்.விளக்கம்.115**

ஈதா கொடுஎனும் மூன்றும் முறையே
இழிந்தோன் ஒப்போன் மிக்கோன் இரப்புரை.

**மு.வீரியம்.ஒழிபு.110**

ஈதாகொடு இரப்பு உரையா கும்மே.

**தொல்.சொல். 445**

அவற்றுள்,
ஈஎன் கிளவி இழிந்தோள் சற்றே.

**மு.வீரியம்.ஒழிபு.111**

ஈஎன் கிளவி இழிந்தோன் இரப்புரை.

**தொல்.சொல்.446**

தாஎன் கிளவி ஒப்போன் கூற்றே.

**மு.வீரியம்.ஒழிபு. 112**

தாஎன் கிளவி சமானன் மேற்றே.

**தொல்.சொல்.447**

கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே.

**மு.வீரியம்.ஒழிபு.113**

கொடுஎன் கிளவி உயர்ந்தோன் கூற்றே.

**தொல்.சொல்.449**

பெயர்நிலைக் கிளவியின் ஆஅகுநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅகுநவும்
தொன்னெறி மொழிவயின் ஆஅகுநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅகுநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே.

**இல.விளக்கம்.370**

பெயர்நிலைக் கிளவியின் ஆஅகுநவும்
திசைநிலைக் கிளவியின் ஆஅகுநவும்
தொள்னெறி மொழிவயின் ஆஅகுநவும்
மெய்ந்நிலை மயக்கின் ஆஅகுநவும்
மந்திரப் பொருள்வயின் ஆஅகுநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே.

**மு.வீரியம்.ஒழிபு.116**

ஒருதிணைப் பெயர்ஒரு திணைக்காய் வருநவும்
திசைச்சொல் வாய்பாடு திரிந்து வருநவும்
இயைபுஇல் லனஇயைந் தனவாய் வருநவும்
திணைமுத லாயின திரிந்து வருநவும்
அன்றி அனைத்தும் கடப்பாடு இலவே.

**தொல்.சொல்.450**

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே.

**இல.விளக்கம்.353**

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே.

**மு.வீரியம்.ஒழிபு.117**

செய்யாய் என்னும் முன்னிலை வினைச்சொல்
செய்என் கிளவி ஆகிடன் உடைத்தே.

**தொல்.சொல்.451**

முன்னிலை முன்னர் ஈயும் ஏயும்
அந்நிலை மரபின் மெய்ஊர்ந்து வருமே.

**நேமி.சொல்.49**

முன்னிலைமுன் ஈஏயும்
எய்தும் கடப்பாட் டின.

**நன்னூல்.336**

தொல்.சொல்.451.

**இல.விளக்கம்.358**

தொல்.சொல்.451.

**மு.வீரியம்.ஒழிபு.118**

தொல்.சொல்.451.

**தொல்.சொல். 452**

கடிசொல் இல்லைக் காலத்துப் படினே.

**நன்னூல். 462**

பழையன கழிதலும் புதியன புகுதலும்
வழுவல கால வகையி னானே.

**இல.விளக்கம்.371**

பழையன கடிதலும் புதியன புணர்த்தலும்
வழுவல கால வகையி னானே.

**தொல்.சொல்.453**

குறைச்சொற் கிளவி குறைக்கும்வழி அறிதல்.

**நேமி.சொல்.67**

குறைச்சொல் வந்திடினும் உண்மை
தெரிதலாம் கற்றோர் செயல்.

**நன்னூல்.156**

ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே.

**இல.விளக்கம்.58**

ஒருமொழி மூவழிக் குறைதலும் அனைத்தே.

**மு.வீரியம்.ஒழிபு.119**

ஒருமொழி மூவழிக் குறைதலும் வரையார்.

**தொல்.சொல். 454**

குறைந்தன ஆயினும் நிறைப்பெயர் இயல.

**மு.வீரியம்.ஒழிபு.120**

குறைந்தன ஆயினும் நிறைந்தன ஆகும்.

**தொல்.சொல்.455**

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

**இல.விளக்கம்.359**

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

**மு.வீரியம்.ஒழிபு.121**

இடைச்சொல் எல்லாம் வேற்றுமைச் சொல்லே.

**தொல்.சொல்.456**

உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.

**இல.விளக்கம். 360**

உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.

**மு.வீரியம்.ஒழிபு. 122**

உரிச்சொல் மருங்கினும் உரியவை உரிய.

**தொல்.சொல்.457**

வினைஎஞ்சு கிளவியும் வேறுபல் குறிய.

**நன்னூல். 346**

சொல் திரியினும் பொருள் திரியா வினைக்குறை.

**இல.விளக்கம். 248**

................................பிறவினை பிறவினை,
முதலொடு முடிதலும் முன்னினர் கொளவே.

**மு.வீரியம்.ஒழிபு. 123**

தொல்.சொல்.457–ஆம் நூற்பாவே.

**தொல்.சொல்.459**

முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே
இன்ன என்னும் சொல்முறை யான.

**நேமி.சொல்.66**

இன்னரென முன்னத்தான் சொல்லுதல்......
எய்தப்படும் வழக்கிற்கு ஈங்கு.

**நன்னூல். 408**

முன்னத்தின் உணரும் கிளவியும் உளவே.

**இல.விளக்கம். 354**

தொல். சொல். *459*-ஆம் நூற்பாவே.

**மு.வீரியம். ஒழிபு. 124**

நன்னூல் *408* - ஆம் நூற்பாவே.

**தொல்.சொல்.460**

ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்.

**நன்னூல்.398**

ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ.

**இல.விளக்கம். 356**

ஒருபொருட் பன்மொழி சிறப்பினின் வழாஅ.

**மு.வீரியம்.ஒழிபு.125**

ஒருபொருள் இருசொல் பிரிவில வரையார்.

**தொல்.சொல்.461**

ஒருமை சுட்டிய பெயர்நிலைக் கிளவி
பன்மைக்கு ஆகும் இடனுமார் உண்டே.

**நன்னூல். 380**

ஒருமையின் பன்மையும் பன்மையின் ஒருமையும்
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.

**இல.விளக்கம்.300**

ஒருமை பன்மையும் பன்மை ஒருமையும்
ஓரிடம் பிறவிடம் தழுவலும் உளவே.

**தொன்.விளக்கம்.81**

நன்னூல் *380*-ஆம் நூற்பாவே.

**மு.வீரியம்.ஒழிபு.126**

தொல்.சொல்.*461*-ஆம் நூற்பாவே.

**தொல்.சொல்.463**

செய்யுள் மருங்கினும் வழக்கியல் மருங்கினும்
மெய்பெறக் கிளந்த கிளவி எல்லாம்
பல்வேறு செய்தியின் நூல்நெறி பிழையாது
சொல்வரைந்து அறியப் பிரித்தனர் காட்டல்.

**நேமி.சொல்.71**

மொழிந்த மொழிப்பகுதிக் கண்ணே மொழியாது
ஒழிந்தனவும் சார்த்தி உரை.

**நன்னூல்.461**

சொற்றவற்று இயலான் மற்றைய பிறவும்
தெற்றென உணர்தல் தெள்ளியோர் கடனே.

**இல.விளக்கம். 372**

சொற்றவற்று இயலான் மற்றைய பிறவும்
தெற்றென உணர்தல் தெள்ளியோர் கடனே.

# இடையியல் முதலாய இறுதி மூன்று இயல்களிலும் நிகழும் நூற்பாக்களின் முதற்குறிப்பு அகரவரிசை

(எண், இளம்பூரணம், சேனாவரையம், நச்சினார்க்கினியம், தெய்வச்சிலையார், கல்லாடனார் இவர்கள் தம் உரை தொடங்கும் பக்க எண்ணைக் குறிக்கும்)

| | | | | | |
|---|---|---|---|---|---|
| யாணுக் கவின் | 41 | 145 | 292 | 444 | |
| வடசொல் கிளவி | 51 | 157 | 308 | 457 | |
| வண்ணத்தின் வடிவின் | 61 | 171 | 327 | 471 | |
| வம்பு நிலையின்மை | 30 | 136 | 270 | 432 | |
| வயவலி ஆகும் | 38 | 143 | 287 | 441 | |
| வயாஎன் கிளவி | 39 | 143 | 288 | 442 | |
| வறிது சிறிது | 31 | 137 | 273 | 434 | |
| வார்தல் போகல் | 27 | 133 | 266 | 430 | |
| வாரா மரபின | 68 | 179 | 338 | 478 | |
| வாள்ஒளி ஆகும் | 38 | 143 | 287 | 441 | |
| வியல்என் கிளவி | 39 | 142 | 287 | 440 | |
| விரைசொல் அடுக்கே | 69 | 180 | 339 | 480 | |
| விழுமம் சீர்மையும் | 35 | 140 | 281 | 439 | |
| விழைவின் தில்லை | 6 | 107 | 229 | 401 | |
| விழைவே காலம் | 3 | 102 | 222 | 395 | 509 |
| விறப்பும் உறப்பும் | 34 | 139 | 278 | 436 | |
| வினையின் தொகுதி | 61 | 170 | 325 | 470 | |
| வினையெஞ்சு கிளவிக்கு | 75 | 190 | 348 | 483 | |
| வினையெஞ்சு கிளவியும் | 89 | 207 | 372 | 498 | |
| வினையே குறிப்பே | 5 | 106 | 227 | 400 | 512 |
| வினையொடு நிலையினும் | 18 | 124 | 252 | 417 | |
| வெம்மை வேண்டல் | 31 | 136 | 272 | 433 | |
| வெளிப்படு சொல்லே | 23 | 129 | 259 | 425 | |
| வேற்றுமைத் தொகையே | 59 | 166 | 319 | 462 | |
| வையே கூர்மை | 43 | 147 | 295 | 446 | |








